டாக்டர் தெ. தேவகலா M.A., M.Phil., Ph.D.,



# இந்தியா

## தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே... எவ்வாறு?

கிறிஸ்தவ ஊழியருக்கான சுருக்கக் கையேடு

# இந்தியா

## தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே... எவ்வாறு?

கிறிஸ்தவ ஊழியருக்கான சுருக்கக் கைபேடு

டாக்டர் தெ. தேவகலா, M.A. M.Phil., Ph.D.

| | | |
|---|---|---|
| | : | **India is a St. Thomas Dravidian Christian Nation....How? ( in Tamil ) India Thoma Vazhi Dravida Chiristhava Nadae - Yevvaru?** |
| | : | Dr. D. Devakala M.A., M.Phil., Ph.D., |
| irst Edition | : | October 2004 |
| Second Edition | : | November 2004 |
| Third Edition | : | January 2005 |
| Fourth Edition | : | December 2005 |
| Publisher | : | **Meipporul Publishers** |
| Printer | : | **Meipporul Printers**<br>278, Konnur High Road,<br>Ayanpuram, Chennai - 600 023<br>E-mail : jdcalendars@ilovejesus.net |
| Price | : | Rs. 150/- |





**Meipporul Publishers**

278, Konnur High Road,

Ayanpuram, Chennai - 600 023

☎ : 044 - 26449032, E-mail : dravida@eth.net

Website : http://www.geocities.com/dravidian_religion

திராவிட ஆன்மீக இயக்க இறைபணியில் தம்மை ஈடுபடுத்தி,
28 : 06 : 1998 அன்று சங்கரமடத்தின் சதியால் கொல்லப்பட்ட,
திராவிட ஆன்மீக இயக்க இளைஞரணி செயலாளர்
*வழக்கறிஞர் தெ. தேவஇரக்கம் சாமுவேல்* அவர்களை
அன்புடன் நினைவு கூர்கின்றோம்.
(விவரம் பக். 325 - 346)



**இந்நூல்**
**திராவிட ஆன்மீக இயக்கத்தின்**
**முதல் இரத்தசாட்சியான**
**இயக்க இளைஞரணி செயலாளருக்குக்**
**காணிக்கை.**

# நமது ஆய்வைப் பற்றி

## கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் கருத்து



**சென்னை - மயிலை கத்தோலிக்கப் பொறுப்புப் பேராயர் டாக்டர் லாரன்ஸ் பயஸ் அவர்கள் :**

- டாக்டர் தெய்வநாயகம் அவர்களை 1982ஆம் ஆண்டிலிருந்தே நன்கு அறிந்திருக்கிறேன்.
- 1982ஆம் ஆண்டில் நான் புதிய குருவாக, வரலாற்றுச் சிறப்புமிக்க தோமையர் குன்றில் அமைக்கப்பட்ட ஆலயத்திலே உதவி பங்குத் தந்தையராகப் பணிபுரிந்தேன்.
- அப்போது, எங்கள் குருவானவர் இல்லத்தின் அருகில் இருந்த பெரிய அறையில், அந்தக் காலத்திலேயே டாக்டர் தெய்வநாயகம் என் அழைப்பை ஏற்று வகுப்புகள் நடத்தினார்.
- அதன் பின்பு அவருடைய வெளியீடான திராவிட சமய இதழைப் படித்தேன்.
- அவருடைய கருத்துகளையும் ஆய்வுகளையும் என்னோடு பகிர்ந்து கொள்வார்.
- 'இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே' என்பதை டாக்டர் தெய்வநாயகம் ஆணித்தரமாக நிலைநாட்டியுள்ளார்.

❖ அவரிடம் எனக்கு மிகவும் பிடித்தது என்னவென்றால், அவருடைய கருத்துகளையும் எண்ணங்களையும் ஆய்வுகளையும் எந்த ஒரு கூட்டத்திலும் விவாதிக்க, பதில் சொல்ல, நிலைநாட்ட தயாராக இருக்கின்றார் என்பதே.

❖ ஆகவே, எந்தவொரு கூட்டமாக இருக்கட்டும், பிராமணர்களின் கூட்டமாக இருக்கட்டும்; அங்கேயும் அவர்களுடைய புதிய ஆராய்ச்சிக் கருத்துகளை யார் மீதும் திணிக்காமல் ஆய்வு பூர்வமாக, விவாத பூர்வமாகவே நிலைநாட்டியுள்ளார். இதுவே, அவர்களிடம் எனக்குப் பிடித்த அம்சம். ஆகவே, என்னால் இயன்றவரை உற்சாகப்படுத்துகின்றேன்.

❖ அவரும் அவருடைய மகள் முனைவர் கலா அவர்களும் புதிய புதிய உண்மைகளைக் கண்டுபிடித்துள்ளார்கள்.

❖ இயேசு கிறிஸ்துவின் செய்தி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே இந்தியாவிற்கு வந்துவிட்டது. ஆனால் கிறிஸ்தவர்கள் 2.3 சதவிகிதம்தான் இருக்கின்றார்கள். அப்படியானால், தோமா வழி கிறிஸ்தவத்தை மக்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும்.

❖ சைவர், வைணவர் அனைவரும் மறைமுகக் கிறிஸ்தவர்கள்.

❖ ஐயா தெய்வநாயகம் அவர்களுடைய ஆராய்ச்சியும் இந்தப் புதிய கண்டுபிடிப்புகளும் இந்தக் கால கட்டத்திற்கு மிக மிக அவசியம். நம் அனைவருக்கும் தேவையானது.

❖ "உலகெங்கும் சென்று நற்செய்தியை அறிவியுங்கள்" எனும் அறிவிப்பிற்கு, ஐயா தெய்வநாயகம் அவர்களின் புதிய ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகள், இந்தக் காலத்தில் மிகவும் தேவையானது.

❖ ஆகவே, திருத்தூதர் தோமா வழி பரவிய இந்தக் கிறிஸ்தவம் வளர வேண்டும் என்று ஜெபிக்கின்றோம்.

❖ இந்தப் பயிற்சி வகுப்புகளில் பயிற்சி பெற்றோருக்கு வாழ்த்துக்கள்.




**இந்திய சுவிசேஷ திருச்சபைப்**

**பேராயர்**

## டாக்டர் எஸ்றா சற்குணம் அவர்கள் :

- ❖ டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் 30, 40 ஆண்டுகளாகத் தொடர்ந்து சொல்லி வருகின்ற ஆய்வுக் கருத்துகள் இவை.

- ❖ அவருடன் இணைந்து அவர் மகள் டாக்டர் தேவகலாவும் இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கின்றார்கள்.

- ❖ ஐயா தெய்வநாயகம் அவர்கள் முதலில் திருவள்ளுவர் கிறிஸ்தவரே என்று தமது புதிய ஆய்வைக் கூறினார்.

- ❖ இதன் பின்பு சைவமும் வைணவமும் (மகாயான) பௌத்தமும், ஆதி இந்தியக் கிறிஸ்தவம்தான் எனும் ஆராய்ச்சி உண்மையைக் கண்டறிந்து இவர் நிலைநாட்டியுள்ளார். இவர் மகளும் இவ்வாறே ஆராய்ச்சிப் பணியில் தந்தையாரோடு இணைந்து செய்து வருகின்றார்.

- ❖ பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு மாதிரி, பௌத்தம் கிறிஸ்தவத்தின் தாக்கத்தால், ஹீனயானம், மகாயானம் என்று பிரிந்தது என்கின்றனர்.

- ❖ டாக்டர் தெய்வநாயகத்தின் ஆராய்ச்சிக் கருத்துகள், பேராயர் லாரன்ஸ் பயஸ் அவர்கள் கூறியதுபோன்று, உலகெங்கும் சென்று நற்செய்தியை அறிவிக்கும் நல்லதொரு கருவியாக உள்ளன.

- ❖ பழமையான சைவ, வைணவ சமயங்களுக்கு அடிப்படையான ஐந்து கோட்பாடுகளும் [ 1) மூவொருமை, 2) அவதாரம், 3) பலிநிறைவேற்றம், 4) பாவமன்னிப்பு, 5) விசுவாசத்தின் வழி மீட்பு ] கிறிஸ்தவக் கோட்பாடுகள் என்கின்றார் டாக்டர் தெய்வநாயகம்.

- ❖ கிறிஸ்தவத்தில் பிதா, பரிசுத்த ஆவி, குமாரன் என்பது சைவத்தில் அப்பன், அம்மை, மகன் என்றும் வைணவத்தில் மும்மூர்த்தி என்றும் விளக்கப்பட்டுள்ளது எனும் டாக்டர் தெய்வநாயகத்தின் ஆராய்ச்சிக் கருத்துகள் இப்புத்தகத்தில் விளக்கப்பட்டுள்ளன.

❖ இவரும் இவருடைய மகளும் இந்த விதமான ஆராய்ச்சிப் பணியில் ஆழமாக ஈடுபட்டுள்ளார்கள். இவருடைய அருமை மகள் விவாகம் செய்துகொள்ளாமல், கிறிஸ்துவுக்கென்று தம் வாழ்க்கையையே அர்ப்பணித்து, ஆராய்ச்சி ஊழியம் செய்வதை நாம் பாராட்ட வேண்டும்.

❖ மேலும் இவர், [ சாதி ஏற்றத்தாழ்வை உருவாக்கிய ] சங்கரமடத்திற்கு 108 கேள்விகளை, முன்பே கேட்டுள்ளார். இவருடைய 108 கேள்விகளுள், ஒரு கேள்விக்காவது சங்கராச்சாரியார் பதில் சொல்லியிருந்தால் இன்றைக்கு “உள்ளே” போயிருக்க மாட்டார்.

மொத்தத்தில் இவர்களுடைய சிறந்த, இந்த ஆராய்ச்சிப் பணி தொடர வாழ்த்து தெரிவிக்கின்றேன். இதற்காக ஜெபிக்கின்றேன்.

**சி.எஸ்.ஐ. சென்னை, திருமண்டலப் பேராயர் அம்மா**

**மறைதிரு ஜோன் தேவசகாயம் அவர்கள் :**

❖ இயேசு கிறிஸ்துவை உலகெலாம் அறிவிக்க வேண்டும் எனும் கட்டளைக்கேற்ப, இந்நற்செய்திப் பணியை, ஆராய்ச்சி அடிப்படையில் மிகுந்த அர்ப்பணிப்புடன் செய்பவர்கள் வேறு யாருமல்லர், ஐயா தெய்வநாயகம் அவர்களும் அவருடைய அருமைப் புதல்வி தேவகலாவும் ஆவர்.

❖ பொதுவாக நாம் அறிந்தது, காண்பது ஐரோப்பிய வழிக் கிறிஸ்தவம்தான். ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு, இயேசு கிறிஸ்துவோடு உண்டு, உறங்கி, உறவாடி, அவரிடம் அன்பாயிருந்தவர் இந்நாட்டிற்கு வந்து, இங்குள்ள மக்களை இறைவன்பால் வழி நடத்தினார். அவருடைய ஆழமான பணிகளை, புதையலைத் தோண்டி எடுப்பதுபோல் ஆழ்ந்த ஆய்வு செய்து உண்மைகளைக் கண்டு பிடித்து எடுத்துரைத்தவர் ஐயா அவர்களும், அவருடன் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள அன்புத் தங்கை தேவகலாவும் என்பதை இங்கு மிகவும் மகிழ்வோடு கூறுகிறேன்.

❖ அருமைத் தங்கை தேவகலா அவர்கள், தாம் கண்டறிந்த உண்மைகளைத் தம்மோடு வைத்துக் கொள்ளாமல், தன் தந்தையாரோடு இணைந்து, அவருடைய அரிய ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகளை நம்மோடு பகிர்ந்து கொள்வதற்காக நூல் வடிவில் வெளிக்கொண்டு வந்திருப்பது மிகவும் மகிழ்ச்சியாகவும், கிறிஸ்தவ உலகிற்கே சவாலாகவும் உள்ளது.

❖ மிகுந்த அர்ப்பணிப்புடனும் ஆழ்ந்த ஆராய்ச்சியுடனும் இவர்கள் வெளிப்படுத்தும் சிந்தனைத் துளிகள் ஓரளவிற்காவது நம் திருச்சபை மக்கள் மத்தியிலே பரவ வேண்டுமே எனும் ஆதங்கத்தில், ஏறக்குறைய 2000 சகோதரிகள் கலந்து கொண்ட மாநாட்டிலே, 'இந்தியக் கலாச்சாரமும் கிறிஸ்தவ மார்க்கமும்' எனும் தலைப்பில் 3 நாட்கள் சிறப்புரையாற்றுமாறு தங்கை தேவகலாவை அழைத்திருந்தேன்.

❖ நம் திருச்சபைக்குக் கடவுள் இவர்களைக் கொடுத்திருப்பதன் மூலம், இவர்களுடைய அர்ப்பணிப்புடன் கூடிய ஆராய்ச்சியின் மூலம், நம்மிடையே உள்ள மத பேதங்கள், காழ்ப்புணர்வு, சாதிப் பிரிவுகள், பெண்ணடிமைத்தனம் போன்றவை களைந்தெறியப்படுவதற்கு கடவுள் வழி வகுத்துள்ளார்.

❖ எனவே, மறைந்து கிடக்கும் உண்மைகள் பலவற்றை முழுமையான உண்மைகளை மேலும் மேலும் வெளிக்கொண்டுவர, வாழ்த்து தெரிவிக்கின்றேன்.

❖ இவ்வாறு வெளிக்கொண்டு வரும்போது, எவ்வளவோ எதிர்ப்புகளும், விவாதங்களும் ஏற்படுவது இயல்பே. எத்தனை பேர் இதை மறைக்க முயன்றாலும், எவ்வளவுதான் காரிருள் சூழ்ந்து கொண்டாலும், சந்திரன் தன் முழு வடிவுடன், முழு ஒளியுடன் வீசுவதுபோல இந்த ஆராய்ச்சிப் பணியும் ஒளியுடன் உலகம் முழுவதும் வீச, வாழ்த்து தெரிவிக்கின்றேன்.

❖ இந்த அரிய ஆராய்ச்சிப் பணிக்கு நான், இவர்களுக்குத் தோள் கொடுக்கிறேன். இதற்காகத் தொடர்ந்து ஜெபிப்பேன் என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.



**சென்னை, அப்போஸ்தலக் கிறிஸ்தவ சபை தலைமைப் போதகர்**
**பாஸ்டர் M.K. சாம் சுந்தரம் அவர்கள் :**

- டாக்டர் தெய்வநாயகம் அவர்களை முன்பிருந்தே அறிந்திருக்கிறேன். சிறப்புத் தன்மை வாய்ந்த ஒரு தேவ மனிதன் அவர். அவருடைய மகளும் அப்படியே. அவரையும் பார்த்து பேசியிருக்கிறேன்.
- இப்படிப்பட்ட தேவ மனிதர்கள் நமக்கு இந்தக் காலத்தில் நம் இந்தியாவிற்குத் தேவை.
- அவருக்குக் கொடுக்கப்பட்ட ஞானம் மற்றும் சிறந்த அறிவு வேதத்தில் மாத்திரமல்ல. மற்ற நூல்களிலும்தாம். நன்கு கற்றறிந்த, சிறப்புத் தன்மை வாய்ந்த தேவ மனிதன் அவர்.
- எங்களைப் போல் இருப்பவர்கள் சபை ஊழியம்தான் செய்கிறோம். ஆனால், இந்திய நாட்டில் சரித்திர பூர்வமாக, இந்த நாடு ஒரு கிறிஸ்தவ நாடாக இருக்கிறது என்பதை ஆழ்ந்த ஆராய்ச்சி அடிப்படையில், இந்த நூலில் எழுதியிருக்கிறபடி, தெளிவாகக் கூறியுள்ளார். இதில் எங்களுக்குச் சந்தேகம் இல்லை.
- இந்த ஆழ்ந்த உண்மையை எங்களைப் போன்றோர் தெளிவாக விளக்குவது கடினம். ஐயாவைப் போல, மகளைப் போல, ஆராய்ச்சி அடிப்படையில் நிரூபித்து எழுதும்போது யாரும் எதிர்க்க முடியாது.
- அவருடைய அறிவு, ஞானம் இவற்றை யோசித்துப் பார்க்கும்போது, மிகப் பெரிய கிருபையை ஆண்டவர் அவருடைய தாசனுக்குக் கொடுத்திருக்கிறார் என்று உள்ளத்தின் ஆழத்திலிருந்து, கர்த்தருக்கு நன்றி செலுத்துகிறேன்.
- அது மாத்திரமல்ல. தொடர்ந்து இந்த அரிய ஊழியத்திற்காக ஜெபிப்பேன் என்று வாக்குறுதி அளிக்கின்றேன். இதற்காகக் கர்த்தரில் மகிழ்கிறேன்.

❖ இந்த தேசத்தின் அதிகாரிகளுக்கு இவை தெரியப்படுத்தப்பட வேண்டும். யாரும் எதிர்பேச முடியாத அளவிற்கு, நிரூபித்து, உறுதிபடுத்தி பேசக்கூடிய திறமையை, தேவன் அவர்களுக்குக் கொடுத்திருக்கின்றார்.

❖ இந்த இயக்கம் தொடர்ந்து வெற்றியோடு, சிறப்பாகச் செயல்பட வேண்டும் என்று விரும்புகிறேன். இந்த இயக்கத்திற்கு என் ஆசி எப்பொழுதும் உண்டு.

❖ ஐயா அவர்களின் புதிய கண்டுபிடிப்புகளை, ஆராய்ச்சி உண்மைகளை விளக்கிக் கூறும் பயிற்சி வகுப்புகளில் பயிற்சி பெற்று சான்றிதழ் பெறும் அன்பர்கள் அனைவரும் ஊழியத்தில் ஓங்கி வளர ஆசீர்வதிக்கின்றேன்.



**குருகுல் லூத்தரன் இறையியல் கல்லூரி முதல்வர்**
**மறைதிரு டாக்டர் மானி சாக்கோ அவர்கள் :**

❖ பொதுவாக, தமிழர் கூட்டங்களில் நான் கலந்து கொள்வதில்லை. மற்றவர்கள் தமிழில் பேசும்போது புரிந்து கொள்வேன். ஆனால் எனக்குத் தமிழ் பேசத் தெரியாது. ஆனால், இங்கு முக்கியமாக நான் வந்ததற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

❖ ஒன்று, அருமை நண்பர் டாக்டர் தேவகலாவிற்கு நான் 'எபிரேயம்' ( Hebrew ) சொல்லிக் கொடுத்தபோது, எதையும் கேள்விகள் மேல் கேள்விகள் கேட்டு, ஆழ்ந்த ஆராய்ச்சி அடிப்படையிலேயே ஏற்றுக்கொள்ளும் ஒரு பெண்மணி என்பதை அறிந்து பெருமகிழ்ச்சியடைந்தேன்.

❖ இவர்கள் இக்கல்லூரிக்கு (குருகுல் லூத்தரன் இறையியல் கல்லூரி, சென்னை) வருமுன் இவர்களைப் பற்றியோ, இவர்களின் தந்தையார் டாக்டர் தெய்வநாயகத்தைப் பற்றியோ எனக்குத் தெரியாது. ஆனால், மிகுந்த அர்ப்பணிப்புடன் இவர்கள் செய்யும் ஊழியத்தின் ஆழத்தைப் பற்றி அறிந்தபோதோ மிகுந்த மகிழ்ச்சி கொண்டேன். எனவே, அவர்கள் அழைத்தவுடன் மகிழ்வோடு இங்கு வந்தேன்.

❖ இரண்டாவதாக, நான் பிறந்த கேரளாவிற்குப் புனித தோமா வந்து விதைத்த கிறிஸ்தவத்தைவிட, தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவம் / திராவிடக் கிறிஸ்தவம் மிகப் பழமையானது என்பதை அறிந்தபோது மிகுந்த வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

❖ தோமா விதைத்த விதையால் இந்தியா கிறிஸ்தவ நாடாக வளர்ந்துள்ளது என்று இவர்கள் கூறுவது சாதாரணமான ஒரு 'Statement' (கூற்று) அல்ல. இது ஒரு 'Joke' ('ஜோக்'கும்) அல்ல. ஆழ்ந்த ஆராய்ச்சியின் அடிப்படையில் நிலைநாட்டிய உண்மையாக இருக்கின்றது. ஏனெனில், இது தொடர்பாக இவர்கள் கொடுத்த வெளியீடுகள் சிலவற்றைப் படித்து பார்த்தபோதுதான் இதை என்னால் அறிந்துகொள்ள முடிந்தது.

❖ எனவே, இந்தியா கிறிஸ்தவ நாடாக வளர்ந்து உள்ளது எனும் இவர்களுடைய புதிய ஆராய்ச்சி அடிப்படையிலான கண்டுபிடிப்பு, சாதாரணமான கூற்று அல்ல. மிக ஆழ்ந்த ஆராய்ச்சியில் இவர்கள் நிலைநாட்டியுள்ள, மறுக்க முடியாத, சான்றுகளுடன் கூடிய, ஏற்றுக்கொள்ள ஏதுவான உண்மைகளாகும்.

❖ இந்துமதமும் பௌத்தமும் [ மகாயானம் ] தோமா வழி கிறிஸ்தவத்தின் கிளைகள் என்பதைச் சான்றுகளுடன் கூடிய அவர்களின் ஆராய்ச்சி அடிப்படையில் அறியும்போது மிகவும் ஆச்சரியப்பட்டேன். இவர்கள் இருவருக்கும் கொடுக்கப்பட்ட ஞானத்திற்காக, அர்ப்பணிப்பிற்காக, கடவுளுக்கு நன்றி தெரிவிக்கின்றேன்.

❖ இந்தியா ஒரு கிறிஸ்தவ நாடாக மாறப் போகின்றது என்பதை நான் ஜெபத்தோடு உறுதியாகச் சொல்லுகிறேன்.

❖ நான் இவர்களுக்காகத் தொடர்ந்து ஜெபிப்பேன். கடவுள் இவர்களை ஆசீர்வதிப்பாராக. இவர்களுடைய ஊழியத்தை அதிகமாய் ஆசீர்வதிப்பாராக.

❖ தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ பயிற்சி வகுப்பில் படித்து, சான்றிதழ் பெறுகின்ற அனைவருக்கும் வாழ்த்து தெரிவிக்கின்றேன்.

❖ அவர்கள் அனைவரும் இந்தியா ஒரு தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே என்பதைக் கூறி, நற்செய்தி அளிக்க வாழ்த்துகிறேன்.

******

# இந்தியா

## தோமா வழி திராவிடக்

# கிறிஸ்தவ நாடே...

என்ற தமது புதிய ஆய்வுக் கண்டுபிடிப்பை

இந்து மதத் தலைவர்கள்

மற்றும்

இந்து மத அறிஞர்களிடையே நிலைநாட்டியதைக் காட்டும்

**வீடியோ**

**பேராசிரியர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின்**

**'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு'**

எனும் டாக்டர் பட்ட ஆராய்ச்சி நூலின் மீது,

தருமை ஆதீனம், அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம், இந்து சமய மடாதிபதிகள் மற்றும் பல்கலைக் கழகங்களின் சைவ சித்தாந்தத் துறை அறிஞர்களை ஒன்றுகூட்டி, விவாதம் நடத்தியது. காலஞ்சென்ற தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில், 1986 டிசம்பர் 6, 7 தேதிகளில் டாக்டர் தெய்வநாயகம் அவர்களை அழைத்து, அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனத்தில் இது விவாதத்தை நடத்தியது. விவாதத்தில் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள்,

★ திராவிட வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட பைபிளை மையமாகக் கொண்டு எழுந்ததே திருக்குறள் என்றும்,

★ திருக்குறளை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததே சைவம், வைணவம் என்னும் பக்தி இயக்கம் என்றும்,

★ 'இந்துமதம்' எனப்படும் சைவ, வைணவ சமயங்கள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளே என்றும்,

நிலைநாட்டினார்.

**தருமை ஆதீனத்தில் நடைபெற்ற ஆய்வரங்க நிகழ்ச்சிகள் வீடியோ செய்யப்பட்டுள்ளன.** விரும்புகின்றவர்கள் பெற்றுக் கொள்ளலாம்.

பகுதி - 1

# முன்னுரை

## இன விடுதலையும் ஆன்மீக விடுதலையும்

### *கடவுளின் வெளிப்பாடும் கட்டளையும்*

பெரும்பான்மையினரான இந்தியரின் மதம் 'இந்து மதம்' எனும்போது, இந்தியாவை, "தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடு" என்பது வரலாற்றில் எப்படி பொருந்தும்?

இதற்கு விடை காண வேண்டுமெனில் 'இந்து மதம்' என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்வது மிகவும் அடிப்படையான ஒன்றாகும்.

பொதுவாக,

**'இந்து'**
**'இந்திய மதங்கள்'**
**'இந்துத்துவம்'**
**'இந்து மதம்'**

என்றெல்லாம் சொல்லப்படுகின்றனவே, இவை அனைத்தும் ஒன்றா? வேறு வேறானவையா? என்பதைப் புரிந்து கொள்ளும்போது தான், உண்மையான இந்திய சமய வரலாற்றை அறிய முடியும்.

இது ஒருபுறமிருக்க,

இந்தியாவில் "கிறிஸ்தவம்" என்று சொன்னாலே, அது
'சீரியக் கிறிஸ்தவத்தையும்'
'ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவத்தையும்' தாம்
குறிக்கும் என்பது பொதுவான நிலை.

ஆனால், "தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்" என்றால் என்ன என்பதை அறியாத நிலையில், இந்தியாவின் சமய வரலாற்றையும் திராவிடரின் ஆன்மீக வரலாற்றையும் புரிந்து கொள்வது மிகமிகக் கடினம்.

புரிந்து கொள்வதில் சிக்கல் ஏற்படும்போது, மனித உறவுகளிலும் சிக்கல் ஏற்படுவது இயல்பே.

*'கடவுள் அனைவருக்கும் உரியவர்'*

என்பது உண்மையாக இருந்தபோதிலும், மதங்களின் பெயரால் மனிதரைப் பிளவுபடுத்தி, அடிமைப்படுத்துவது காலந்தோறும் நடைபெறும் நிகழ்ச்சியாய் இருக்கிறது. எனவே, மனிதரை மதத்தின் பெயரால் அடிமைப்படுத்தும் சக்திகளிடமிருந்தும் பிளவு படுத்தும் சக்திகளிடமிருந்தும் சமுதாயத்தை மீட்க வேண்டியது உண்மையான இறை பணியாளர்களின் கடமையாகும்.

## மெய்ப்பொருள் ஒன்றே :

ஒரே கடவுளையே வெவ்வேறு மொழிகளில் வெவ்வேறு பெயர்களில் மனிதர் கண்டு போற்றியுள்ளதால், சமயங்கள் பலவாக இருந்திடினும் உண்மையில் அவை கூறும் மெய்ப்பொருள் ஒன்றே என்பதை அண்மைக்கால ஆராய்ச்சிகள் தெளிவுபடுத்துகின்றன.

திருக்குறளையும், விவிலியத்தையும், சைவசித்தாந்தத்தையும் ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்த டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள், அடிப்படையில் அவை ஒரே கடவுளை வெவ்வேறு பெயர்களில் விளக்கியுள்ளமையை இலக்கிய, தத்துவ, வரலாற்று ஆதாரங்களுடன் எடுத்துக்காட்டுகிறார்.

திராவிட வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட விவிலியத்தை மையமாகக் கொண்டு எழுந்ததே திருக்குறள் என்றும், திருக்குறளை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்ததே சைவம், வைணவம் என்னும் **'இந்து மதம்'** என்றும் ஆராய்ச்சி அடிப்படையில் நிலைநாட்டியுள்ளார்.

ஆனால், பிற்காலத்தில் இச்சமயங்கள் ஆரியரின் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப்பட்டதால் இந்தியரும் அடிமைத்தளைக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர். எனவே இன்றைய இந்து மதமும், இந்தியரும் அடிமைத்தளையிலிருந்து விடுவிக்கப்பட வேண்டியது காலத்தின் கட்டாயமாக உள்ளது. இந்தியரின் ஆன்மீக விடுதலைக்குப் பாடுபட வேண்டியது இறை பணியாளரின் இன்றியமையாத கடமையாக இருக்கின்றது.

## விடுதலைப் பணி:

இறை பணியாளர்களுக்குக் கடவுளால் கொடுக்கப்படும் கட்டளைகளும் பணிகளும் வெவ்வேறு கோணங்களில் அமைவது இயல்பே.

அவ்வகையில் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களுக்குக் கடவுள் கொடுத்த கட்டளை, இன விடுதலையோடு கூடிய ஆன்மீக விடுதலைப் பணி ஆகும்.

*1979இல்,*

> *"தமிழ் இனம் எனும் திராவிட இனத்திற்குப் புத்துயிர் கொடுக்கப் போகின்றேன். இதைச் செயல்படுத்தும் கருவியாக நீ பயன்படுவாய், உடனே இதை எழுதி வைத்துக்கொள்"*

என்று டாக்டர் தெய்வநாயகத்திடம் கடவுள் தெளிவாகவே தம் திட்டத்தை வெளிப்படுத்தியுள்ளார். கடவுளின் வெளிப்பாட்டையும் தரிசனத்தையும் அப்படியே அவர் எழுதி வைத்துள்ளதால் இன்றைக்கும் அவற்றை எழுத்துருவில் காணலாம்.

திராவிட இன விடுதலை என்பது டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்கு அளிக்கப்பட்ட கடவுளின் திட்டவட்டமான வெளிப்பாடு என்பதால், திராவிடர்களின் ஆன்மீக விடுதலைப் பணியில் அவர் தொடர்ந்து ஈடுபட்டு வருகின்றார். திராவிடர்களின் உயரிய ஆன்மீகச் சிந்தனைகளைத் தன்னால் இயன்ற அளவு உலகுக்கு வெளிக்காட்டி வருகின்றார்.

திராவிடரின் மேலான சிந்தனைகளைத் தெள்ளத் தெளிவாகக் காட்டும் பழமையான தமிழ் நூல்களுள் ஒன்று திருக்குறள். இது திராவிடச் சிந்தனைகளின் அடிப்படையில் எழுந்த தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே என்பதை, முதன் முதல் ஆராய்ச்சி அடிப்படையில் விளக்கிக் காட்டியுள்ளார் டாக்டர் தெய்வநாயகம் என்பதை ஆராய்ச்சி உலகம் அறியும்.

## திருக்குறள் ஆராய்ச்சி:

இந்த ஆராய்ச்சியின் தொடக்கக் காலங்களில், 'திருவள்ளுவரைப் போய் கிறிஸ்தவர்' என்று சொல்லுகிறாரே என்று கூறி, ஒரு பைத்தியக்காரனைப் பார்ப்பது போல் அவரைப் பார்த்த பார்வைகள் பல, பல.....

ஆனால், கடவுளுக்காக உண்மைக்காகப் போராடும் அவர், இறையருளால் மேலும் மேலும் பல நூல்களை எழுதி இன்றைக்கு, **'திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே'** என்பதைப் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர்களே ஏற்றுக் கொள்ளும் நிலைக்கு, கடவுள் அவரை வழி நடத்தி வருகின்றார்.

இதை, திருக்குறள் மீது டாக்டர் பட்டத்திற்கான ஆய்வு செய்த தி.சு. சத்தியம் என்பவர், தமது பிஎச்.டி. ஆய்வேட்டில் தெளிவாகக் குறிப்பிடுகிறார். அது பின்வருமாறு :

*'கிறித்தவ சமய ஆய்வில் மு. தெய்வநாயகம் மிகுதியான ஆய்வு நூல்களைப் படைத்தவராகக் காணப்படுகின்றார். இவர், தம் சமயமான கிறித்துவ சமயத்தின் விவிலியக் கோட்பாடுகளே திருக்குறளுக்கு உட்கிடக்கை என்னும் கருத்தை நிலைநிறுத்துவார் போன்று, தம் ஆய்வை அமைத்துக் கொண்டு உள்ளார். இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் திருக்குறளின் உட்கிடக்கை சைவசித்தாந்தமே என்று எழுந்த ஆய்வுப்போக்கு, இன்றைய காலகட்டத்தில் கிறித்தவமே குறளின் உட்கிடக்கை என்ற கருத்துப் போக்கைப் பெற்று முடிந்துள்ளது.*

(தி.சு. சத்தியம், இருபதாம் நூற்றாண்டில் திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி, 1979, பக். 192-193)

## இந்து மதம் - ஆராய்ச்சி :

இவ்வாறே, இந்து மதம் என்பது ஆரியர்களுக்கு உரியது அன்று; அது ஆரியச் சிந்தனையின் உருவாக்கம் அல்ல, திராவிட வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட பைபிளை அடிப்படையாகக் கொண்டதே சைவம், வைணவம் என்னும் 'இந்து மதம்'. ஆரியரின் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கும் 'இந்து மதம்' எனப்படும் உண்மையான சைவ, வைணவக் கொள்கைக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இந்து மதம் என்பது தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமே என்பதை, ஆராய்ச்சி அடிப்படையில் முதன் முதல் எடுத்துக் காட்டியவர் டாக்டர் மு. தெய்வநாயகம்.

இந்த ஆய்வுகளைக் குறித்து ஆசியவியல் இயக்குநரான டாக்டர் ஜி. ஜான் சாமுவேல் பின்வருமாறு கூறுகிறார் :

*'இவ்வாறே சைவ சமயத்திற்குள் புகுந்த மற்றொரு கிறித்தவக் கோட்பாடாக 'திரித்துவக் கோட்பாட்டை'க் (Trinity) குறிப்பிடலாம். கிறித்தவம் ஒரே கடவுளை மூன்று கோணத்தில் திரியேக மூர்த்தியாகக் கண்டது. தந்தை, மகன், தூய ஆவி என்ற மூன்று நிலைகளாகத் திரித்துவக் கோட்பாடு அமைந்துள்ளது. இந்தச் சிந்தனை கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பின் சைவத்தில் ஆழமாக வேரூன்றத் தொடங்கியது.*

*தந்தைவழிச் சமுதாயமான யூதச் சமுதாயத்திலிருந்து கிறித்தவம் தோன்றியதால் தொடக்க நிலையில் தாய்த்தெய்வ வழிபாட்டிற்கு அங்கு அதிக இடமில்லாமல் இருந்தது. திரித்துவக் கோட்பாட்டில் தந்தையும், மகனும் ஆண்களாகவே அமைந்தனர். தூய ஆவி ஆணா, பெண்ணா என்பது தெளிவாக அங்கு வரையறுக்கப்படவில்லை. கி.பி. 2-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் திரித்துவக் கோட்பாடு சைவத்தில்*

*புகுந்தபோது சிவபெருமான் தந்தையாகவும், முருகப் பெருமான் மைந்தனாகவும் கருதப்படும் நிலை தோன்றியது.*

*கிறித்தவத் திரித்துவக் கோட்பாட்டின் வெளிப்பாடே இந்த சோமாஸ்கந்த வடிவங்களும், அம்மையப்பன் குமரன் கோட்பாடு என்பதும் தெள்ளத் தெளிவு. தொடக்கக் காலத்தில் முருகக் கடவுளுக்குத் தந்தை இல்லை என்பதும் இங்கு சுட்டத்தக்கது. திரித்துவக் கோட்பாடு சைவ சமயத்தில் ஏற்படுத்தியுள்ள பாதிப்புகள் குறித்து முதன்முதலாக விரிவாக ஆய்வு செய்த பெருமை முனைவர் மு.தெய்வநாயகம், முனைவர் தேவகலா ஆகியோரைச் சாரும்.*

*-(டாக்டர் ஜி. ஜான் சாமுவேல், தமிழகம் வந்த தூய தோமா, 2001, பக்.58-60).*

## மடத்தில் நிலைநாட்டியமை :

திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூல் என்பதுடன், இந்து மதம் எனப்படும் சைவ, வைணவ சமயங்கள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளே என்று டாக்டர் அவர்கள், தமது பிஎச்.டி. ஆய்வில் நிலைநாட்டியதால் தமிழகத்தில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது.

எனவே, காலஞ்சென்ற தவத்திரு. குன்றக்குடி அடிகளார் தலைமையில், இந்து சமய மடாதிபதிகள் மற்றும் பல்கலைக் கழகங்களின் சைவ சித்தாந்தத் துறை அறிஞர்கள் ஒன்றுகூடி டாக்டர் தெய்வநாயகம் அவர்களை அழைத்து, ஐயாவின் நூலின் மீது விவாதம் நடத்தினர். விவாதத்தில் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள், திராவிட வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட பைபிளை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததே திருக்குறள்; திருக்குறளை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததே சைவம், வைணவம் எனப்படும் பக்தி இயக்கம்; எனவே சைவம், வைணவம் என்னும் 'இந்து மதம்' என்பது தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமே என்று நிலை நாட்டினார்.

தருமை ஆதீனத்தில் நடைபெற்ற ஆய்வரங்க நிகழ்ச்சிகள் வீடியோ செய்யப்பட்டுள்ளன. வேண்டுவோர் அதற்கான தொகையைச் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

இந்தியாவில் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து வளர்ந்த தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் கி.பி. 9ஆம் நூற்றாண்டிலிருந்து ஆரியரால் அடிமைப்படுத்தப்பட்டு உள்ளதை அவர் தம் ஆய்வில் கண்டார். இந்தியர்களும், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாகிய இந்து மதமும் இன்று வரை அடிமைத் தளையிலிருப்பதால், நம் இந்தியர்கள் ஆன்மீக விடுதலை பெற, டாக்டர் அவர்கள் போராட வேண்டியதாயிற்று. யாருடன்?.......

திராவிடர்களுக்கு எதிரான - தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்திற்கு எதிரான சங்கரமடத்தோடு தொடர்ந்து பல வழிகளில் போராட்டம் நடத்தினார்.

*இதைப் பற்றிய விவரங்கள்*

*'சங்கரமடத்திற்கு ஒரு சவால்'*

எனும் நூலில் உள்ளன.

விளைவு.......... கிறிஸ்துவிற்கு எதிரான சிந்தனையாளர்களின் சதியால் சென்னை உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராக இருந்த தன் அன்பிற்குரிய இளைய மகனை 28 ஜுன் 1998இல் இழந்தார்.........

இருப்பினும் சோர்வடையாமல், தொடர்ந்து நல்லதொரு போராட்டத்தை இறையருளால் போராடிக் கொண்டே வருகிறார். எவ்வளவோ நிந்தைகள், இழிச்சொற்கள், நம்பிக்கை துரோகங்கள், பாடுகள் மத்தியிலும் இந்த இறை பணியைத் தொடர்ந்து வல்லமையாகச் செய்ய கடவுள் அருள்புரிந்து வருகிறார்.

திராவிட இன விடுதலை என்பது கடவுளின் வெளிப்பாடாகவும் கட்டளையாகவும் இருப்பதால், ஆன்மீக விடுதலைக்கு வழி வகுக்கும் நோக்குடன் பயிற்சி வகுப்புகளும் கருத்தரங்குகளும் இந்து சமய, கிறிஸ்தவ சமய அன்பர்களுக்குத் தொடர்ந்து நடத்தி வருகின்றார். திராவிட இன விடுதலை என்பது கடவுளின் கட்டளையாக இருப்பதால், திராவிட இனம் ஆன்மீக விடுதலை அடையப் போவது உறுதியே.

சங்கர மடத்துப் பிராமணர் மனம் திருந்தவும், இந்தியாவிலிருந்து சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கை நீங்கவும் ஒவ்வொரு மாதமும் இரண்டாம் வெள்ளிக்கிழமை இரவு 10.00 மணிமுதல் காலை 5.00 மணிவரை முழு இரவு பிரார்த்தனை டாக்டர் அவர்களால் நடத்தப்பட்டது. முழு இரவு பிரார்த்தனையின் பயனை 24.05.04இல் நடந்த நிறைவு விழாவில் காண முடிந்ததை, பின்னிணைப்பு - III விளக்குகிறது.

இவ்வாய்வை அடிப்படையாகக் கொண்டு நற்செய்திப் பணி செய்வதற்கு ஏற்றவாறு, 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்' என்ற தலைப்பில் ஆறு மாத டிப்ளமோ பயிற்சி வகுப்புகளை டாக்டர் மு. தெய்வநாயகம் நடத்தினார்.

பயிற்சி வகுப்புகளில் பயின்ற மாணவர்கள் 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்' பற்றிய கருத்துச் சுருக்கம் தேவை என்று கேட்டுக் கொண்டனர்.

இப்பயிற்சி வகுப்பில் படித்து வந்த மாணவர்களில் ஒருவரான திரு. சி. சந்திரசேகரன் என்பவர், நாங்கள் (டாக்டர் மு. தெய்வநாயகம், டாக்டர் தெ. தேவகலா) எழுதிய "Hindu Religion is the offshoot of St. Thomas Dravidian Christianity" எனும் நூலின் கருத்துச் சுருக்கத்தை ஆர்வத்துடன் மொழிபெயர்த்துள்ளார். அவருடைய சுருக்க மொழிபெயர்ப்பும், டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களுடைய வகுப்பில் திரு. சி. சந்திரசேகரன் எடுத்த குறிப்புகளின் பகுதிகளும் திருத்தம் செய்யப்பட்டு, வேண்டிய மாற்றங்களுடன் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. அவருக்கு எங்களுடைய நன்றியைத் தெரிவிப்பதில் மிகவும் மகிழ்ச்சி அடைகின்றோம். மேலும் அவர் இந்நூலின் கணிப்பொறி படிவத்தை மீண்டும் மீண்டும் பொறுமையாகப் படித்து, திருத்திக் கொடுத்தமைக்கு மிகுந்த நன்றி கூறுகின்றோம்.

இந்நூலில் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் டாக்டர் பட்ட ஆய்வேட்டின் சுருக்கம், அவர் பயிற்சி வகுப்பில் நடத்திய பாடங்களின் சுருக்கம், அவரது பிற ஆய்வுகளின் சுருக்கம் ஆகியவற்றோடு எனது டாக்டர் பட்ட ஆய்வேட்டின் சுருக்கமும் இடம் பெற்றுள்ளன. பார்வை நூல்களின் தொகுப்பு, பின்னிணைப்பு-V இல் இடம் பெற்றுள்ளது.

பயிற்சி வகுப்புகளில் பங்கு பெறும் இறை பணியாளருக்குப் பயன்படும் நோக்கில் கிறிஸ்தவ ஊழியருக்கான சுருக்கக் கையேடாக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.

*- டாக்டர் தெ. தேவகலா.*

# பொருளடக்கம்

## பகுதி – 1



## பகுதி – 2

*பகுதி – 3*

விளக்க அட்டவணைகள்



*பகுதி – 4*



*பகுதி – 5*



*பகுதி – 6*



## பின்னிணைப்புகள்

*பின்னிணைப்பு –I*

டாக்டர் மு. தெய்வநாயகத்தின் ஆய்வுகள் மீது நடந்த விவாதங்களும் வெற்றியும்

## ஆய்வைப் புரிந்து கொள்ள அடிப்படையான சில குறிப்புகள் - குறிப்பு-i

| நிகழ்வு | காலம் |
|---|---|
| சிந்துவெளி–திராவிட நாகரிகம் – கி.பி.1920ல் சிந்துவெளி நாகரிகம் கண்டுபிடிப்பு– | கி.மு. 2500 |
| வடமேற்கில் பெர்சிய செல்வாக்கு –சொராஷ்டிரம்– பௌத்தம், சமணம் | கி.மு. 600 |
| உரோமப் பேரரசுடன் தென் இந்தியா கடல் வழி வணிக உறவு. வடமேற்குப் படையெடுப்பு | கி.மு. 400 |
| தமிழ்ச் சங்க இலக்கியங்கள் – சாதி ஏற்றத்தாழ்வு அற்ற சமுதாயம் | கி.மு. 300 |
| புஷ்யமித்திரன் திராவிட ஆட்சியை சூழ்ச்சியாகக் கைப்பற்றல் – சுங்க வம்சம் நிறுவுதல் – ஆரிய வழிபாடு | கி.மு. 183 |
| இந்தியாவில் புனித தோமாவின் வருகையும் நற்செய்திப் பணியும் | கி.பி. 1ஆம் நூற்றாண்டு |
| கிறிஸ்தவத்தால் பௌத்தத்தில் – மகாயான பௌத்தம் உருவாதல். சமணத்தில்– சுவேதாம்பர சமணம் உருவாதல் | |
| முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு (கி.பி.150) – வடக்கில் சிற்பங்கள் | கி.பி. 2ஆம் நூற்றாண்டு |
| தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ முதல் நூல் திருக்குறள் | |
| வியாசர் : வேதங்கள் தொகுத்தல் – தெற்கில் சீரியக் கிறிஸ்தவம் | கி.பி. 400 |
| புனித தோமா அடக்கம் செய்யப்பட்ட மயிலையிலிருந்து தமிழ் பக்தி இயக்கம் உருவாதல் – தெற்கில் சிற்பங்கள் – | கி.பி. 500 |
| ஆரிய ஆட்சி – 'ஆரியவர்த்தம்' உருவாக்கப்படல் – 'மனுநூல்' – | கி.பி.700 – கி.பி.900 |
| சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை – ஆதிசங்கரர் — அத்வைதம் – சங்கரமடம் | |
| தெற்கில் சோழ ஆட்சி –திராவிட நூல்களுக்கு ஆரிய நோக்கில் தவறான உரைகள். | கி.பி. 1200 – கி.பி.1400 |
| தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இறையியல் நூல்கள் – சைவ சித்தாந்தம் – குகையிடி கலகம் – சிவஞானபோதம் | |
| ஐரோப்பியப் பேரரசு – சர். வில்லியம் ஜோன்ஸ் 'மனுநூலை', கி.பி.1794 இல், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தல் 'இந்துத்துவமும்', 'இந்து மதமும்', - ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம் | கி.பி.18.நூற்., கி.பி.20.நூற்., |

(விளக்கம் இயல் 14இல் காணலாம்.)

# குறிப்பு - ii

## இந்து - இந்திய மதங்கள் - இந்துத்துவம் - இந்துமதம்

### இந்து :

சிந்து நதிபாயும் பகுதியிலுள்ளோர் எனும் பொருளில் 'சிந்து' என்ற சொல்லைப் பாரசீகர் 'இந்து' என்று உச்சரித்தனர். சிந்து நதியைச் சுற்றிலும் வாழ்ந்த திராவிட மக்களை அச்சொல் குறித்தது. இந்து என்ற சொல் மதத்துடன் தொடர்புடையதன்று.

### இந்திய மதங்கள் :

இந்தியாவில் தோன்றிய மதங்கள் அனைத்தும் இந்திய மதங்கள் ஆகும். அவை சமணம், பௌத்தம், சைவம், வைணவம், சீக்கியம் ஆகும்.

### இந்துத்துவம் (இந்துயிஸம்) :

'இந்துத்துவம்' - என்பது ஒரு மதம் இல்லை. இது ஆரிய வாழ்க்கை முறையைக் குறிப்பது. அதாவது, ஆரிய வாழ்க்கை முறையாகிய சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையே 'இந்துத்துவம்' அல்லது 'இந்துத்துவா' ஆகும்.

### இந்துமதம் :

இந்துமதம் என்பது சைவம், வைணவம் என்ற இரண்டை மட்டுமே குறிக்கின்றது.

'இந்துமதம்' எனப்படும் சைவ, வைணவ சமயங்களுக்கான அடிப்படைக் கோட்பாடுகள் :

1. மூவொருமைக் கோட்பாடு
2. அவதாரக் கோட்பாடு
3. பலிநிறைவேற்றக் கோட்பாடு
4. பாவ மன்னிப்புக் கோட்பாடு
5. விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு

மேற்கண்ட ஐந்து கோட்பாடுகளும் கிறிஸ்துவிற்கு முற்பட்ட வழிபாடுகளான

1. சிந்துவெளி வழிபாடு
2. பழந்திராவிட வழிபாடு
3. ஆரிய வழிபாடு

இவற்றில் காணப்படவில்லை. கிறிஸ்துவிற்கு முற்பட்ட சமயங்களான

1. சமணம்
2. பௌத்தம்

ஆகியவற்றிலும் இக் கோட்பாடுகள் காணப்படவில்லை.

இந்த ஐந்து கோட்பாடுகளும் கிறிஸ்தவத்திற்கேயுரிய கோட்பாடுகளாதலால், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளைச் சார்ந்த சமயங்களான - தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைச் சமயங்களான சைவ, வைணவ இலக்கியங்களின் அடிப்படைக் கோட்பாடுகளாகக் காணப்படுகின்றன.

## குறிப்பு - iii

**சமஸ்கிருதம் :**

- சமஸ்கிருதம் ஆரிய மொழி என்றும், உலகின் முதல்மொழி என்றும் பரப்பியவர்கள் 18,19ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த சர்.வில்லியம் ஜோன்ஸ் மற்றும் மாக்ஸ்முல்லர் ஆவர்.
- சமஸ்கிருதம் என்பது ஆரியர்களின் மொழி அன்று.
- கி.பி. 150இல் தான் முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு காணப்படுகிறது.
- கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன் இந்தியாவிலுள்ள கல்வெட்டுகளில் தமிழ், பாலி, அர்த்தமாகதி, கிரேக்கம், அரமேயம் போன்ற மொழிகள் காணப்படுகின்றனவே தவிர, சமஸ்கிருதம் காணப்படவில்லை.
- இந்தியாவின் பழமையான இதிகாசங்களான இராமாயணத்தையும், மஹாபாரதத்தையும் எழுதியோர் திராவிடரே. மற்றும் பிரம சூத்திரம், பகவத்கீதை முதலியவற்றை இயற்றியவரும் உபநிடதங்களைத் தொகுத்தவருமான வேதவியாசர் திராவிடரே. எனவே, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவர்களால் கிறிஸ்தவக் கருத்துகளை இந்தியா முழுவதும் கூற, பயன்படுத்தப்பட்ட கருவியே சமஸ்கிருதம் என்பது வரலாறு காட்டும் உண்மை ஆகும்.

## குறிப்பு - iv

**தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் :**

- தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் வேறு; ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம் வேறு.
- 'தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவர்' என்றால் அது தமிழ் நாட்டில் உள்ள தோமா வழி கிறிஸ்தவர்களை மட்டுமே குறிக்கும். ஆனால்,
- 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவர்' என்றால் அது இந்தியா முழுவதும் உள்ள தோமா வழி கிறிஸ்தவர்களைக் குறிக்கும்.

**விவிலிய நோக்கில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்:**

பொதுவாக, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்ளுவதில் ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவர்களுக்குச் சிக்கல் உள்ளது. ஏனென்றால், ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவர், விவிலிய நோக்கில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிய முயற்சிக்காமல் ஐரோப்பிய நோக்கில் பார்ப்பதால், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்ளுவது கடினமாக உள்ளது.

**யூதனுக்கு யூதன், கிரேக்கனுக்கு கிரேக்கன்:**

எனவேதான், யூதனுக்கு யூதன், கிரேக்கனுக்கு கிரேக்கன் என்ற முறையில் இந்தியருக்கு இந்தியராக, திராவிடருக்கு திராவிடராக நற்செய்தி சொல்லும் விவிலிய முறையை ஐரோப்பியக் கிறிஸ்தவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

விவிலிய அடிப்படையில், கிறிஸ்துவின் ஒளியில், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் பார்க்கும்போது தான், அதன் ஆழத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

## குறிப்பு - V

### ஐந்து நோக்குகளில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்:

படித்தவர்கள், பொதுமக்கள் அனைவருக்கும் நற்செய்தியைக் கூறுவதற்காக, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் வெவ்வேறு நோக்குகளில் (Aspects) விளக்கப்பட்டுள்ளது.

1. புராண நோக்கு (Mythical aspect)
2. இலக்கிய நோக்கு (Literary aspect)
3. இறையியல், தத்துவ நோக்கு (Theological / Philosophical aspect)
4. சிற்பவியல் நோக்கு (Iconographic aspect)
5. வரலாற்று நோக்கு (Historical aspect)

பல பெயர்களில் கூறப்பட்டாலும் கடவுள் ஒருவரே என்பதை, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியங்களும், தத்துவங்களும் தெளிவாக விளக்குகின்றன.

மனிதனாக வந்த கடவுளையும் பிதாவாகிய கடவுளையும் தூய ஆவியாகிய கடவுளையும் பல்வேறு கோணங்களில் பல்வேறு பெயர்களில் மொழி பெயர்த்துள்ளமையையும், விளக்கி உள்ளமையையும், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவப் புராணங்களும் இலக்கியங்களும் காட்டுவதை நூலில் காணலாம்.

## குறிப்பு - vi

**திராவிடர் :**

இந்தியாவின் மண்ணின் மைந்தர்கள் - பூர்வீகக் குடிகள்;

**ஆரியர் :**

1. பாரசீகர்
2. கிரேக்கர்
3. சகர்
4. ரோமர்
5. குஷானர்
6. ஹுனர்

இந்தியாவின் மீது வெவ்வேறு காலங்களில் படையெடுத்துவந்த வெளி நாட்டவர்களான இவர்களுக்குக் (வணிகத்தின் பொருட்டு வந்த ரோமர் உட்பட) கொடுக்கப்பட்ட பொதுவான பெயர்தான் ஆரியர் என்பதாகும்.

**சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை-மனுநூல்-மனுதர்மசாஸ்திரம்:**

இந்தியாவில் கி.பி. 7 ஆம் நூற்றாண்டிற்கு முன் சாதி ஏற்றத்தாழ்வு காணப்படவில்லை.

1. பாரசீகர் 2. கிரேக்கர் 3. சகர் 4. ரோமர் 5. குஷானர் 6. ஹுனர் ஆகிய இவர்கள் ஆரியர் என்ற பெயரில் ஒன்றிணைந்து, கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திராவிட அரசனாகிய ஹர்ஷரை சூழ்ச்சியாகக் கொன்று, ஆட்சியைப் பிடித்தனர். ஆரியவர்த்தம் அமைத்தனர்.

"ஆரியவர்த்தம்' ' - என்பதை உருவாக்கிய பிறகு, சட்டப் புத்தகமாகிய மனுநூலை உருவாக்கினார்கள். இந்த மனுநூலுக்கு, கி.பி. 9ஆம் நூற்றாண்டில், ஆதிசங்கரரால் போலி ஆன்மீக விளக்கம் கற்பிக்கப்பட்டு, மனுதர்ம சாஸ்திரம் ஆக்கப்பட்டது. இந்த மனுதர்ம சாஸ்திரமே சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு அடிப்படையான நூலாகும்.

## குறிப்பு - vii

# கடவுளின் பெயர் என்ன ?

பொதுவாக, பெயர்களை இரண்டாகப் பிரிக்கலாம்.

1. இடுகுறிப் பெயர் (Arbitrary name)
2. காரணப் பெயர் (Logical name)

**இடுகுறிப் பெயர் :**

எந்தவிதக் காரணமும் இன்றி இடுகின்ற பெயர்

**காரணப் பெயர் :**

ஏதாவது ஒரு காரணம் கருதி வைக்கப்படும் பெயர்

**ஒலித் திரிபு :**

மொழிக்கு மொழி ஒலி மாற்றமடைந்து காணப்படுவது 'ஒலித் திரிபு'.

இந்த மூன்று வகைப் பெயர்களில், கடவுளின் பெயர்களை எடுத்துக் கொள்வோமானால், அவை பெரும்பாலும் 'காரணப் பெயர்களாகவே இருப்பதைக் காணலாம். 'காரணப் பெயர்கள்' பலவாக இருப்பதோடு அவை மொழி பெயர்க்கப்படும். சில பெயர்கள் 'ஒலித் திரிபாய்' க் காணப்படுவதுமுண்டு.

**மொழி பெயர்ப்பு :**

எபிரேயம் - மேசியா; கிரேக்கம் - கிறிஸ்டாஸ்; தமிழ் - இறைவன். இவ்வாறு 'மேசியா' என்னும் காரணப் பெயர், 'கிறிஸ்டாஸ்' என்றும், 'இறைவன்' என்றும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

**ஒலித் திரிபு :**

எபிரேய்த்தில் - ஜோசுவா என்பதுகிரேக்கத்தில் - ஈசுஸ்;

ஆங்கிலத்தில் - ஜீசஸ்; அரபியில் - ஈசா; தமிழில் - ஈசன் என ஒலி மாற்றம் பெற்றுள்ளது. எனவே, கடவுளின் பெயர்களை நோக்கும்பொழுது அவை, பலவாக இருப்பதை அறிந்து, அவை மொழி பெயர்ப்பா, ஒலித் திரிபா என்பதைக் கண்டறியும் போதுதான், அப்பெயர்களின் பொருளின் முழுமையான ஆழத்தை உணர முடியும்.

பகுதி - 2

# 1. இந்துமதம் என்பது என்ன?

இந்து, இந்திய மதங்கள், இந்துத்துவம் (இந்துயிஸம்), இந்துமதம் இவை அனைத்தும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்துள்ளன போல் காணப்படுகின்றன. ஆனால் கவனமாய் ஆராய்ந்து பார்த்தால் இவை ஒவ்வொன்றும் ஒன்றிலிருந்து மற்றொன்று வேறுபட்டது என்பதை அறியலாம். (பேராசிரியர் டாக்டர் மு. தெய்வநாயகம், இந்துத்துவாவின் பிடியிலிருந்து இந்து மதத்தை விடுவிப்பது எவ்வாறு? ஜனவரி 2004)

## இந்து :

'இந்து' என்ற சொல்லை ஆராய்ந்து பார்த்தால், 'சிந்து' என்ற சொல்லைப் பாரசீகர் 'இந்து' என்று உச்சரித்தனர் என அறியலாம். சிந்து நதியைச் சுற்றிலும் வாழ்ந்த திராவிட மக்களை அச்சொல் குறித்தது. இந்து என்ற சொல் மதத்துடன் தொடர்புடையதன்று.

## இந்திய மதங்கள் :

இந்தியாவில் தோன்றிய மதங்கள் அனைத்தும் இந்திய மதங்கள் ஆகும். அவை,

1. பௌத்தம் 2. சமணம் 3. சைவம்
4. வைணவம் 5. சீக்கியம்

ஆகியன. இவை அனைத்துமே திராவிடர்களால் உருவாக்கப் பட்டவை ஆகும்.

## இந்துத்துவம் (இந்துயிஸம்) :

'இந்துத்துவம்' - என்பது ஒரு மதம் இல்லை. இது ஒரு வாழ்க்கை முறை. கடவுள் கொள்கைக்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் கிடையாது' என்று முன்னாள் இந்தியப் பிரதமர் வாஜ்பாய் தெளிவாகக் கூறியுள்ளார். இந்தியாவின் உச்சநீதிமன்றமும் இதை உறுதிப்படுத்தியுள்ளது.

அப்படியானால் 'வாழ்க்கை முறை' - என்றால் என்ன?

'ஆரியர் பிறப்பால் உயர்ந்தவர், திராவிடர் பிறப்பால் தாழ்ந்தவர்' என்பதை ஏற்றுக்கொண்டு வாழும் ஆரிய வாழ்க்கை முறையாகிய சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையே 'இந்துத்துவம்' அல்லது 'இந்துத்துவா' என்று குறிக்கப்படுகிறது.

'Hinduism' அல்லது 'இந்துத்துவம்' அல்லது 'இந்துத்துவா' என்பது ஒரு மதம் அல்ல. இது ஒரு வாழ்க்கை முறை. ஆரிய வாழ்க்கை முறை.

'இந்துத்துவா' என்பது ஆரியர்களால் உருவாக்கப்பட்ட மனுநூல் அடிப்படையிலான சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை.

இந்தியாவின் மீது படையெடுத்து வந்த.....

1. பாரசீகர் (கி.மு. 6ஆம் நூற்றாண்டு)
2. கிரேக்கர் (கி.மு. 4ஆம் நூற்றாண்டு)
3. சகர் (கி.மு. 2ஆம் நூற்றாண்டு)
4. குஷானர் (கி.பி. 1ஆம் நூற்றாண்டு)
5. ஹுனர் (கி.பி. 4ஆம் நூற்றாண்டு)

மற்றும் வணிகத்திற்காக வந்த

6. ரோமர் (கி.மு. 4ஆம் நூற்றாண்டு)

ஆகிய இவர்கள் 'ஆரியர்' என்னும் பொதுப் பெயரில் ஒன்றிணைந்தனர். இவர்கள் தங்களுக்கென்று ஒரு மதம் இல்லாதவர்கள். ஆரியர் என்பது எந்த ஓர் இனத்தின் பெயரும் அல்ல. இவர்கள் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் வட இந்தியாவில் 'மவுண்ட் அபு'வில் ஒன்றிணைந்து, திராவிட அரசனாகிய ஹர்ஷவர்த்தனைக் கொன்று, திராவிடரின் ஆட்சியைக் கைப்பற்றினர். கி.பி. 7 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரை, வட இந்தியாவின் பெரும்பகுதியைக் கைப்பற்றி ஆட்சி செய்தனர். அவர்கள் கைப்பற்றிய பகுதி 'ஆரியவர்த்தம்' அல்லது 'ஆரியநாடு' என்று குறிப்பிடப்படுகிறது.

இந்த வெளிநாட்டுப் படை எடுப்பாளர்களை ஒன்றுசேர்த்த பொதுவான காரணங்கள் :

1. அவர்கள் அனைவரும் வெள்ளை நிறத்தவர்.
2. அவர்கள் அனைவரும் வெளிநாட்டினர்.
3. தங்களால் படை எடுக்கப்பட்ட மக்களைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள்ளேயே வைத்திருக்க வேண்டிய நிர்ப்பந்தம் உடையவர்கள்.

இவ்வாறு இவர்கள் 'ஆரியவர்த்தம்' என்பதை உருவாக்கிய பிறகு, சட்டப் புத்தகமாகிய மனுநூலை உருவாக்கினார்கள். இந்த மனுநூலுக்கு, கி.பி. 9ஆம் நூற்றாண்டில், ஆதிசங்கரரால் போலி ஆன்மீக விளக்கம் கற்பிக்கப்பட்டு, மனுதர்ம சாஸ்திரம் ஆக்கப்பட்டது. இந்த மனுதர்ம சாஸ்திரமே சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு அடிப்படையான நூலாகும்.

கி.பி. 1750க்குப் பின்னர் ஆங்கிலேயர் இந்தியாவின் சில பகுதிகளைப் பிடித்து ஆளத் தொடங்கினர். அப்போது ஆங்கிலேயர்களின் பிடியில் இருந்த இந்தியப் பகுதிகளுக்குத் தலைநகராக கல்கத்தா விளங்கியது.

ஆங்கிலேயரின் ஆட்சிக்கு உட்பட்ட இந்தியப் பகுதியில் வாழ்ந்த மக்களுக்கு, நீதி வழங்க வேண்டிய கடமை ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்டது. அதனால் நீதிமன்றங்களை அமைத்தார்கள். நீதிமன்றங்களில் நீதி வழங்க சட்டம் தேவைப்பட்டது.

ஆங்கிலேயர் ஆட்சி செய்த பகுதியில் வாழ்ந்த இந்தியர்களில், கிறிஸ்தவர்களுக்கு நீதி வழங்க 'பைபிள்' அடிப்படையிலான கிறிஸ்தவச் சட்டம் (Christian Law) இருந்தது.

இஸ்லாமியர்களுக்கு நீதி வழங்க, 'குரான்' அடிப்படையிலான இஸ்லாமியச் சட்டம் (Islamic Law) இருந்தது.

ஆனால் இந்திய மக்களில் கிறிஸ்தவர், இஸ்லாமியர் அல்லாத மக்களுக்கு நீதி வழங்க, சட்டப் புத்தகம் எதுவும் இல்லை. இதனால் நீதி வழங்குவதில் பல இடையூறுகள் ஏற்பட்டன.

இந்த நிலையில் கல்கத்தாவின் உச்சநீதிமன்றத்திற்கு நீதிபதியாக, ஆங்கிலேயரான சர். வில்லியம் ஜோன்ஸ் நியமிக்கப்பட்டார்.

கல்கத்தாவிலிருந்த பிராமணர்கள், தந்திரமாக, மனுநூலை, ஜோன்ஸிடம் கொடுத்து, அதுவே இந்திய மக்களின் சட்டநூல் என அவரை ஏமாற்றி நம்ப வைத்தார்கள்.

அவர், சமஸ்கிருதத்திலிருந்த மனுநூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். மனுநூலின் அடிப்படையில், கிறிஸ்தவர், இஸ்லாமியர் அல்லாத இந்திய மக்களுக்கான சட்டத்தை உருவாக்கி, அதற்கு, 'Hindu Law' (இந்துச் சட்டம்) எனப் பெயரிட்டார்.

இந்துச் சட்டம் தயாரிப்பதற்கு உதவிய மனுநூலின் கொள்கைகளுக்கு 'Hinduism' என்ற பெயரைக் கொடுத்தார். மனுநூலின் அடிப்படைக் கொள்கை சாதி ஏற்றத்தாழ்வு ஆகும். சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு, ஜோன்ஸ் கொடுத்த பெயரே 'Hinduism' என்பது. 'Hinduism' என்பதே தற்காலத்தில் 'இந்துத்துவம்' அல்லது 'இந்துத்துவா' என்று அழைக்கப்படுகிறது. 'Hinduism' அல்லது 'இந்துத்துவம்' அல்லது 'இந்துத்துவா' என்பது ஒரு மதம் அல்ல. இது ஒரு வாழ்க்கை முறை. ஆரிய வாழ்க்கை முறை.

சைவம், வைணவம் என்ற இரண்டை மட்டுமே 'இந்துமதம்' என்ற பெயர் குறிக்கின்றது. 'இந்துமதம்' எனப்படும் சைவம், வைணவம் என்பவை தமிழர்களின் அல்லது திராவிடர்களின் மதம் என்பதையும், இவை ஆரியர்களின் மதம் அல்ல என்பதையும் சமய வரலாறு காட்டுகிறது.

1. ஆரியர் பிறப்பால் உயர்ந்தவர்.
2. ஆளுகை செய்வதற்கென்றே பிறந்தவர் ஆரியர்.
3. ஆரியர்களுக்குச் சேவை செய்வதையே தங்கள் பிறவிக் கடமையாகக் கொண்டவர் திராவிடர்.
4. ஆரியர்களை எதிர்க்கும் திராவிடர்கள் ஆரியரின் எதிரிகள் அல்லது தீண்டத்தகாதவர்கள்.

என்பவற்றை ஏற்றுக் கொள்ளும் வாழ்க்கை முறையை நிலைநாட்டுவதற்கென்றே ஆரியர்களால் உருவாக்கப்பட்ட மனுநூலின் கொள்கைக்கு ஆங்கிலேயர்கள் கொடுத்த பெயர்தான் 'இந்துயிஸம்'.

## இந்துமதம் :

இந்துமதம் என்ற பெயர் எல்லா இந்திய மதங்களையும் குறிக்க வேண்டும். ஆனால், செய்தித் தாள்களில்,

> **'இந்து மதத்தினர் பௌத்த மதத்தினராக மதம் மாறினார்கள்'**

எனும் தலைப்பைப் பார்க்கிறோம். இதில் இந்துமதம் என்பதில் பௌத்தம் அடக்கப்படாமையை உணரலாம். அவ்வாறே,

> **'குஜராத்தில் இந்து மதத்தினருக்கும் சமண மதத்தினருக்கும் சர்ச்சை'**

> **'பஞ்சாபில் இந்து மதத்தினருக்கும் சீக்கிய மதத்தினருக்கும் சண்டை'**

எனும் தலைப்புகளையும் பார்க்கிறோம். இவை, சமணமும் சீக்கியமும் இந்தியாவில் உருவாகிய இந்தியச் சமயங்களாக இருந்தபோதிலும் அவையும் 'இந்துமதம்' எனும் பெயரில் குறிக்கப்படாமையைத் தெளிவாகக் காட்டுகின்றன.

சைவம், வைணவம் என்ற இரண்டை மட்டுமே 'இந்துமதம்' என்ற பெயர் குறிக்கின்றது. 'இந்துமதம்' எனப்படும் சைவம், வைணவம் என்பவை தமிழர்களின் அல்லது திராவிடர்களின் மதம் என்பதையும், இவை ஆரியர்களின் மதம் அல்ல என்பதையும் சமய வரலாறு காட்டுகிறது.

## 'இந்துமதம்' என்பது தமிழர் மதமே:

'தமிழர்' என்ற தமிழ்ப் பெயரை, சமஸ்கிருதத்தில் கூறினால், (தமிழர்-திரமிளர்-திரமிடர்-திரவிடர்-திராவிடர்) 'திராவிடர்' என்று ஆகிறது. 'தமிழ் மொழி' என்பது சமஸ்கிருதத்தில் 'திராவிட பாஷா' என்று குறிக்கப்படுகின்றது.

சைவ சமயத்தை உருவாக்கிய 63 நாயன்மார்களும், வைணவ சமயத்தை உருவாக்கிய 12 ஆழ்வார்களும், தமிழ்நாட்டில் மட்டுமே பிறந்தவர்கள். சைவ சமய இலக்கியங்களான பன்னிரு திருமுறையும், வைணவ சமய இலக்கியங்களான நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் தமிழ் மொழியில் மட்டுமே இருக்கின்றன. இந்தியாவிலுள்ள பழமையான சைவக் கோவில்கள் 270இல் 230 சைவக் கோவில்களும், பழமையான 108 வைணவத் திருப்பதிகளில் 96 திருப்பதிகளும் தமிழ்நாட்டில் இருக்கின்றன. ஆகவே, சைவமும் வைணவமும் தமிழர் சமயங்கள் அல்லது திராவிட சமயங்கள் என்பதில் எவ்வித ஐயத்திற்கும் இடம் இல்லை. (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் - ஒப்பாய்வு, 1985, ப.7)

## 'இந்து மதம்' எனப்படும் சைவ, வைணவத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் :

கீழ்க்காணும் ஐந்து கோட்பாடுகளும் கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பின் உருவான சைவ, வைணவ இலக்கியங்களின் அடிப்படைக் கோட்பாடுகள் ஆகும்.

1. **மூவொருமைக் கோட்பாடு**
2. **அவதாரக் கோட்பாடு**
3. **பலிநிறைவேற்றக் கோட்பாடு**
4. **பாவ மன்னிப்புக் கோட்பாடு**
5. **விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு**

'இந்துமதம்' என்று அழைக்கப்படும் சைவம், வைணவம் இரண்டும் இக்கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றன.

சைவ, வைணவ சமய இலக்கியங்களுக்கு அடிப்படையாக உள்ள இக்கோட்பாடுகளை, கிறிஸ்தவத்திற்கு முன் இந்தியாவில் இருந்த வழிபாடுகள் மற்றும் சமயங்களில் காண முடியுமா?

# 2. கிறிஸ்துவிற்கு முற்பட்ட இந்திய வழிபாடுகளும் சமயங்களும்

கிறிஸ்துவிற்கு முற்பட்ட இந்திய வழிபாடுகள் மற்றும் சமயங்களைப் பின்வருமாறு காணலாம்.

| *வழிபாடுகள்* | *சமயங்கள்* |
|---|---|
| 1. சிந்துவெளி வழிபாடு | 1. பௌத்தம் |
| 2. பழந்திராவிட வழிபாடு | 2. சமணம் |
| 3. ஆரிய வழிபாடு | |

இவற்றைக் கீழ்க்காணுமாறு மீண்டும் பிரிக்கலாம்.

### 1. பலிக் கோட்பாட்டு வழிபாடுகள்

சிந்துவெளி வழிபாடு,
பழந்திராவிட வழிபாடு,
ஆரிய வழிபாடு.

### 2. பலி மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கள்

சமணம்,
பௌத்தம்.

### 1. சிந்துவெளி வழிபாடு :

சிந்துவெளி நாகரிகத்தில் மக்கள் கீழ்க்காணுமாறு கடவுளை வணங்கினர்.

1. அருவுருவ நிலை (நினைவுக்கல் வழிபாடு)
2. உருவ நிலை (பெண் தெய்வம், ஆண் தெய்வம், கலப்புருவம்...)

மற்றும் 'சின்னங்கள்' வழியேயும் கடவுளை வழிபட்டனர்.

'சிவலிங்கம்' எனப்படும் நினைவுக்கற்கள், ஸ்வஸ்திக் போன்ற சின்னங்கள், வளைகற்கள் போன்றவை ஹரப்பா, மொஹஞ்சதாரோவில் அகழ்ந்தெடுக்கப் பட்டுள்ளன. தாய்த் தெய்வ வழிபாடு அல்லது பெண் தெய்வ வழிபாடு (தெய்வங் கள்அனைத்தும் தாய்த் தெய்வங்களே என்று கூற இயலா நிலையில், கன்னி தெய்வங்களாக உருவங்கள் காணப்படுவதும் நோக்கற்குரியது.) சிந்து

சமவெளியில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது. பெண் தெய்வங்களின் தலைகளில் கொம்புகள் காணப்படுகின்றன. (P.K.Agarwala, Mother Goddesses in Ancient India, 1984; Ernest Mackay-Early Indus Civilization, 1976, P.29, எ-ர். டாக்டர் தெ. தேவகலா, 'தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்') ஆண் தெய்வங்கள் சிலவற்றின் தலைகளிலும் கொம்புகள் காணப்படுகின்றன. சிந்துவெளி வழிபாட்டில் விலங்குகளைப் பலியிட்டுக் கடவுளை வணங்கினர். எருது, மரம் போன்ற முத்திரைகள் காணப்படுகின்றன. (Jitendra Nath Banerjea, The Development of Hindu Iconography, P.173; John Marshall, Mohenjo-daro and the Indus Civilization, P,64 Quoted by டாக்டர் தெ. தேவகலா, 'தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்' , பக்.14-48.)

வேதங்களில் விஷ்ணு என்பது கடவுளால் படைக்கப்பட்ட பொருள்களில் ஒன்றான சூரியனைக் குறிக்கிறது. ஆனால் வைணவத்தின் விஷ்ணு முழு முதற்கடவுளாவார்.

## 2. பழந்திராவிட வழிபாடு :

பழந்திராவிடரின் வழிபாடு முறை பற்றி சங்க இலக்கியங்கள் தெளிவாகத் தெரிவிக்கின்றன. பத்துப் பாட்டும் எட்டுத்தொகையும் சங்க இலக்கியங்கள் ஆகும்.

ஏறக்குறைய கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்கும், கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தைச் சங்க இலக்கியக் காலம் என்று அழைக்கின்றனர்.

## சங்க இலக்கியங்கள் :

| *எட்டுத்தொகை* | *பத்துப்பாட்டு* |
|---|---|
| நற்றிணை | திருமுருகாற்றுப்படை |
| குறுந்தொகை | பொருநராற்றுப்படை |
| ஐங்குறுநூறு | சிறுபாணாற்றுப்படை |
| பதிற்றுப்பத்து | பெரும்பாணாற்றுப்படை |
| பரிபாடல் | மதுரைக்காஞ்சி |
| கலித்தொகை | முல்லைப்பாட்டு |
| அகநானூறு | குறிஞ்சிப்பாட்டு |
| புறநானூறு | நெடுநல்வாடை |
| | மலைபடுகடாம் |
| | பட்டினப்பாலை. |

சங்க இலக்கியம் மூலம் அறியப்படும் பழந்தமிழர் வழிபாட்டில், நினைவுக்கற்கள் 'கந்து' என்றழைக்கப் படுகின்றன. (பட்டினப்பாலை 246-249) ஆண், பெண் வடிவில் கடவுளை வழிபட்டனர். வழிபாட்டில் பலி செலுத்தி வந்தனர்.

வெற்றியைத் தரும் தெய்வம் எனப்படும் கொற்றவை சங்க இலக்கியங்களில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. மக்கள் அதற்குப் பலி கொடுத்தனர்.

காளிக்குப் பலி கொடுப்பதும், வழிபடுவதும் பழந்திராவிட வழிபாட்டில் குறிப்பிடப்படுகிறது. மற்றும் வேலன் வழிபாடு முக்கிய இடம் பெற்றுள்ளது.

பழந்தமிழர் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்தனர். கடவுளை, ஒவ்வொரு நிலத்திலும் ஒவ்வொரு பெயரில் குறிப்பிட்டு வழிபட்டுள்ளனர்.

## நானிலப் பிரிவின் தெய்வங்கள்:

**'மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே.'**

*(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகம், 5)*

எனும் தொல்காப்பியச் சூத்திரம், ஒவ்வொரு நிலத்திலும் தெய்வம் ஒவ்வொரு பெயரில் வழிபடப்பட்டதைக் காட்டுகிறது.

## ஆதன் - அவ்வை வழிபாடு :

பழந்தமிழ் இலக்கியங்களில் ஆதன் என்ற பெயர் பல இடங்களில் காணப்படுகிறது.

பழந்தமிழ் இலக்கியங்களில் (தொல்காப்பியம் I-349; ஐங்குறுநூறு 1a 10-1; பதிற்றுப்பத்து 4-1, 63-21; புறநானூறு 29-2, 154-4, 389-13.) காணப்படும் அவ்வை என்ற சொல் மூத்த தாயைக் குறிக்கும். ஆதன், அவ்வை இருவரும் மனுக்குலத்தின் பெற்றோர் என்று வழிவழியாகக் கருதப்படுகிறது.

'ஆதன் தந்தை' எனும் பொருள் தரும் 'ஆந்தையார்' எனும் பெயரைத் தமிழ் இலக்கியங்களில் மட்டுமே காண முடிகிறது. தந்தையின் பெயரை முதலில் கூறி அதன் பின்பு அவர் மகனின் பெயரைக் கூறும் வழக்கத்திற்கு மாறாக, இங்கு 'ஆதன் தந்தை' என மகன் பெயரைக் கூறி அதன் பின் 'அவன் தந்தை'யைக்

குறிப்பிடுவதால் இது முதல் மனிதனின் தந்தையாகிய கடவுளைக் கொள்ள வழிவகுக்கின்றது. (மு. தெய்வநாயகம் - நேரில் கூறியவை) சமயத்தோடு தொடர்புடைய பெயர்கள் மக்களிடையே நிலவி வருவது போல் சமயத்தோடு தொடர்புடையதாகக் காணப்படும் இந்த 'ஆதன்' எனும் பெயர் சங்க இலக்கியத்தில் சேரலாதன், ஆதனழிசி, பெருஞ்சேரலாதன், உதியஞ்சேரலாதன் என வருவது குறிப்பிடற்குரியது.

கீழே சொல்லப்பட்டுள்ள ஆதன், அவ்வை பற்றிய பாரம்பரிய குறிப்புகள் ஆழ்ந்து நோக்கத்தக்கன.

1. இவன் முதல் மனிதன்
2. பெற்றோர்களிடத்தில் பிறக்காத 'பிறவா யாக்கைப் பெரியோன்'.
3. இவனது ஆடை விலங்கின் தோலால் ஆனது.
4. இவனுடைய மூன்றாம் கண் திறக்கப்பட்டுள்ளது.
5. இவன் உடலின் ஒரு பகுதியே இவன் மனைவி.
6. இவன் மனைவி 'உலகின் தாய்' (லோகமாதா) என்று சொல்லப்படுகிறாள்.
7. இவனும் இவன் மனைவியும் 'அம்மையப்பர்' எனப்படுகின்றனர்.
8. இவன் குடும்பத்தின் குழப்பத்திற்கு மூல காரணம் ஒரு பழமே ஆகும்.
9. ஒரு பாம்போடு இவன் தொடர்பு படுத்தப்படுகின்றான்.
10. எல்லாப் படைப்புகளும் இவன் ஆளுகைக்கு உட்பட்டவையே.
11. உலகில் உள்ள அனைத்து நன்மை தீமைகளுக்கும் இவனே மூலகாரணன்.
12. இன்றுவரை இவனது பாதங்களை இலங்கையில் சிறப்பிக்கின்றனர்.

*(மு.தெய்வநாயகம், 'சிந்தனைக்கு விருந்து-1, 'வாயில், ஜூன் 1976.)*

இந்தக் குறிப்புகளைக் காணும் சைவர்கள் இவனைச் 'சிவன்' என்றும், கிறிஸ்தவர்கள் 'ஆதாம்' என்றும் கூறுவர்.

கடவுளால் படைக்கப்பட்ட முதல் ஆணையும், பெண்ணையும் தமிழ் மொழியில் ஆதன், அவ்வை என்று குறிப்பிடுகின்றனர். இங்கே குறிக்கப்பட்டுள்ள 'சிவன்' வேறு; 'பரமசிவன்' வேறு; இங்கே கூறப்பட்டுள்ள 'சிவன்' கடவுளால் படைக்கப்பட்ட முதல் மனிதனைக் குறிக்கின்றது. ஆனால், சைவத்தில் கூறப்படும் 'சிவன்' என்பதோ அன்பே உருவான கடவுளாகிய பரம்பொருளைக் குறிக்கின்றது. முதல் மனிதனை 'ஆதி சிவன்' என்றும், அன்பே உருவான கடவுளை, 'பரமசிவன்' என்றும் கூறுவது இங்கு குறிப்பிடற்குரியது. பரம்பொருளைக் குறிக்கும் 'சிவன்' என்னும் பெயரால், கடவுளால் படைக்கப்பட்ட முதல் மனிதனும் பின்னர் குறிக்கப்படுவதால், பெயர் ஒப்புமையை மட்டும் நோக்காமல், அப்பெயர் விளக்கும் பொருளைக் காண்பது முக்கியமானது.

இலங்கையிலுள்ள பாதத்தைச் சைவர்கள் 'சிவனடி' பாதம் என்றும் கிறித்தவர்களும் இசுலாமியர்களும் 'ஆதாம் பாதம்' என்றும் கூறிச் சிறப்பிப்பது இன்றளவும் உள்ளது. இதுதான் மனிதன் முதன் முதல் தோன்றிய இடம் எனக் கூறப்படுவதும் நோக்கற்குரியது.

சிந்துவெளி முத்திரைகள் சிலவற்றில் சிவன் ஆடையின்றியும், வேறு சில முத்திரைகளில் தழையாடை உடுத்தியும் காணப்படுவதும் விவிலியத்தில் ஆதாம் குறிப்பிட்ட பழம் ஒன்றை உண்ணுமுன் ஆடையின்றியும் பழம் உண்டபின் தழையாடையுடுத்தியும் இருந்ததாகக் கூறப்படும் நிகழ்வுகளும் ஒப்பிடற்குரியன.

ஆதாம் பழம் உண்டபின் 'மூன்றாம் கண்' திறக்கப்பட்ட தாகக் கூறப்படுவதும் தமிழ் இலக்கியங்களில் முக்கண்ணுடைய வனாகச் சிவன் குறிக்கப்படுவதும் ஒப்பு நோக்கத்தக்கவை.

முக்கட் செல்வன் சிறப்பிக்கப்பட்டதையும் வழிபடப்பட்டதையும்,

*'......நின் குடையே முனிவர், முக்கட் செல்வர்*
*நகர்வலஞ் செயற்கே இறைஞ்சுக'* *(புறம். 6 : 19-21)*
*'முக்கட் பகவனடி தொழாதார்க்கின்னா'* *(இன்.நாற்.1)*
*'கடந்தடு முன்பொடு முக்கண்ணான்'* *(கலி. 2)*
*'முக்கணா போற்றி'* *(தேவா. 968.10)*
*'முனியே நான்முகனே முக்கண்ணப்பா'* *(திவ்.திருவாய்10-10-1)*
*'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்'* *(சிலம்பு 5 : 169)*

என வரும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன.

கடவுளால் படைக்கப்பட்ட முதல் மனிதன், தெய்வமாக வழிபடப்பட்ட நிலையை மேற்கண்டவை காட்டுகின்றன.

### 3. ஆரிய வழிபாடு :

ஆரியர்களுக்கென்று மதம் எதுவும் கிடையாது. அவர்களுக்கென்று வழிபாடுதான் உண்டு. அவர்கள் விலங்குகளை பலியிட்டு, அவற்றின் புலாலை உண்டு, சோமபானம் - சுராபானம் என்னும் மதுவகைகளை உட்கொண்டு வந்தனர்.

வேதங்கள் சமஸ்கிருதத்தில் உள்ளன. முதல் சமஸ்கிருதக் கல்வெட்டே கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் தான் காணப்படுகிறது. (Nirad C. Chaudhuri, Hinduism, 1979, Pp. 38,39 quot.by Dr.Alexander Harris, The Development of Civilization and Religion in India and its Influence on the World Society, 2001, Pp. 39-41) எனவே,

வேதங்களின் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலம். ( Dr.Alexander Harris, Ibid, ;http://www.geocities.com/appiusforum/book.pdf), (http://www.geocities.com/appiusforum)

கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் திராவிடரான வேதவியாசர் ஆரியரின் நாடோடி வழிபாட்டுப் பாடல்களுக்கு எழுத்து வடிவம் கொடுத்து, தொகுத்தார். அவரே அவற்றைத் தொகுத்து, ஒழுங்குபடுத்தி, வேதங்களாகப் பிரித்தார்.

வேதங்களைப் பொறுத்தவரை அவை மிகப் பழமையானவை என்றும், சைவம், வைணவம் உருவாவதற்கு அவையே அடிப்படையாய் இருந்தன என்றும் பொதுவான ஒரு கருத்து நிலவி வருகிறது.

சைவ, வைணவத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் வேதங்களில் காணப்படவில்லை. சைவ சித்தாந்தத்தின்படி மனிதனாக அவதரித்து, மனுக்குலத்தை மீட்பதற்காகப் பாடுபட்ட முழு முதல் அன்புக் கடவுள் தான் சிவன் ஆவார். ஆனால் வேதங்களில் காணப்படும் ருத்ரன் சிறுதெய்வங்களில் ஒருவரும், புயல்காற்றின் தெய்வமும் ஆவார். புயல் தெய்வமான ருத்ரனுக்கும் சிவனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.

இதைப் போல் வைணவத்தில் கூறப்படும் விஷ்ணுவிற்கும் வேதங்களில் கூறப்படும் விஷ்ணுவிற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. வேதத்திலுள்ள விஷ்ணு என்பது கடவுளால் படைக்கப்பட்ட பொருள்களில் ஒன்றான சூரியனைக் குறிக்கிறது. ஆனால் வைணவத்தின் விஷ்ணு முழு முதற்கடவுளாவார். வேதங்களில் காணப்படும் ருத்ரன், விஷ்ணு இருவரும் சிறுதெய்வங்களே அன்றி, முழு முதல் கடவுளர் அல்லர். (டாக்டர் தெ. தேவகலா, 'தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்,ப.129)

கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் இந்தியாவில் இருந்த வழிபாட்டு வடிவங்களான சிந்துவெளி வழிபாடு, பழந்திராவிட வழிபாடு, ஆரிய வழிபாடு ஆகியவற்றில்

1. மூவொருமைக் கோட்பாடு
2. அவதாரக் கோட்பாடு
3. பலிநிறைவேற்றக் கோட்பாடு
4. பாவ மன்னிப்புக் கோட்பாடு
5. விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு

எனும் ஐந்து கோட்பாடுகளையும் காணமுடியாது. ஏனென்றால் அவை வழிபாடுகளே அன்றி சமயங்களாக வளர்ச்சி பெற்றவை அல்ல.

அடுத்ததாக, இம்மூன்று வழிபாடுகளிலும் பலி உண்டு. ஆனால் மேற்குறிப்பிடப்பட்ட ஐந்து கோட்பாடுகளில் ஒன்று பலி நிறைவேற்றக் கோட்பாடு.

## சமணமும், பௌத்தமும் (கி.மு. ஆறாம் நூற்றாண்டு):

சமண, பௌத்த சமயங்களில் விலங்குகளைப் பலியிட்டு, கடவுளை வழிபடும் முறையைக் காண முடியாது. ஏனெனில் அவற்றில் கடவுள் கோட்பாடு கிடையாது. அவை இரண்டும் பலி மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கள்.

சமணத்திலும், பௌத்தத்திலும் நினைவுக்கல் வழிபாடு 'ஸ்தூபி' என்றழைக்கப்படுகிறது. புத்தர், மகாவீரர் மற்றும் பௌத்த, சமண குருமார்களின் நினைவாக, ஸ்தூபிகளை நிறுவி, அவர்கள் வழிபட்டனர்.

சமணம், பௌத்தம் இரண்டிலும் ஸ்தூபிகளைத் தவிர, சக்கரம், குடை, சங்கு, பாத அடையாளம், மீன்கள், ஸ்வஸ்திக் போன்றவை காணப்படுகின்றன. (டாக்டர் தெ. தேவகலா, 'தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்', பக்.88-94)

கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலங்களில், பௌத்தத்தில் புத்தரின் உருவம் காணப்படவில்லை.

சமணத்திலும் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலங்களில் தீர்த்தங்கரர் உருவங்கள் காணப்படவில்லை.

சமணத்தில் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலங்களைச் சேர்ந்ததாகக் கருதப்படும் தீர்த்தங்கரரைப் போல் தோற்ற மளிக்கும் சிதைந்து போன வடிவம் ஒன்று லோஹானிபூரில் காணப்பட்டாலும், சமண தீர்த்தங்கரர்கள், புத்தரின் உருவங்கள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளிலேயே அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளைச் சார்ந்த சமயங்களான பௌத்தத்திலும் சமணத்திலும் மேற்கண்ட ஐந்து கோட்பாடுகளைக் காண முடியாது. காரணம் அவற்றில் கடவுள் கொள்கையே கிடையாது.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளைச் சார்ந்த இரண்டு சமயங்கள் மற்றும் மூன்று வழிபாடுகளில் இந்த ஐந்து கோட்பாடுகளும் காணப்படவில்லை என்றால், இவை எங்கிருந்து வந்திருக்கக் கூடும்?

# 3. யவனர் வழித் தமிழகத்தில் கிறிஸ்தவம்

**பண்பாட்டுத் தொடர்புகளின் முன்னோடி வாணிபம் :**

வணிகத் தொடர்புகள் சமய, பண்பாட்டுத் தொடர்புகள் ஏற்பட வழிவகுத்துள்ளமை இங்கே சுட்டிக் காட்டப்படுகின்றது. (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு,1975, இயல் 3 இன் சுருக்கம் இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.)

"ஒரு நாட்டிற்கும் இன்னொரு நாட்டிற்கும் இடையில் நிகழும் வணிகத் தொடர்பினால், பண்பாட்டு இலக்கியத் தொடர்புகள் ஏற்படுகின்றன. இலக்கிய பண்பாட்டுத் தொடர்புகளின் முன்னோடி வாணிபத் தொடர்பாகும்." (அந்தனி ஜான், வள்ளுவரும் விவிலியமும்–ஓர் ஒப்பாய்வு, ஆய்வேடு, 1979, பக். 09.)

சுமேரியா, பாபிலோன், கிரேக்கம், சிரியா போன்ற நாடுகளுக்கும் இந்தியாவிற்கும் இடையே உள்ள வணிகத் தொடர்பினால் சமய, பண்பாட்டுப் பரிமாற்றம் உருவானது.

**யவனர் :**

இந்தியாவுடன் வணிகம் செய்த பிற நாட்டவரான கிரேக்கர், ரோமர், யூதர், சீரியர் அனைவரும் பொதுவாக 'யவனர்' என்றழைக்கப் பெற்றனர்.

"கிரேக்க நாட்டவர் தம் மொழியை 'அயோவானேஸ்' (laovanes) என்றுதான் குறித்தனர். யவனர் என்ற பெயர் இதன் திரிபே" என்பார் வி. கனகசபை. (வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், பக். 69.)

யூதர், உரோமர், கிரேக்கர், சீரியர் ஆகிய நான்கு பிரிவினருக்கும் கிரேக்க மொழி பொது மொழியாக விளங்கியிருக்கிறது.

*'ரோமர்கள் மட்டுமன்றிக் கிரேக்கரும் சீரியரும் யூதரும், தமிழகத்துடன் வணிகத் தொடர்பை வளர்த்துக் கொள்ளலானார்கள். தமிழகத்தில் ரோமபுரி மக்கள் குடியேறி வாழ்ந்து வந்த இடங்களில் எல்லாம், அவர்களும் இணைந்து வாழலானார்கள். அவர்களுள் பலர்*

*தமிழகத்திலேயே நீண்ட காலம் தங்கிவிட்டனர்' என்பார் கே.கே. பிள்ளை. (கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு – மக்களும் பண்பாடும், பக். 53.)*

## ரோம நாணயப் புதையல்களும் அச்சுச்சாலையும் :

*"இந்தியாவில் கிடைத்துள்ள உரோமானியக் காசுகளின் புதையல்களுள், 57 புதையல்கள் விந்திய மலைக்குத் தெற்கே கிடைத்துள்ளன. இவை நான்கு முதல் நூறு ஆயிரம் காசுகள் வரை கொண்ட தனித்தனியான புதையல்களாக அகப்பட்டுள்ளன. இக் காசுகளில் பெரும்பான்மையானவை உரோமாபுரியை ஆண்ட அரசர்களான அகஸ்டஸ் ( கி.மு.29 – கி.பி.14) டைபீரியஸ் (கி.பி. 14–37) ஆகியோர் காலத்தவை." (கே.ஏ. திருஞான சம்பந்தம், சங்ககாலப் பண்டமாற்று நெறியும் காசுகளின் புழக்கமும், 1980, பக். 99.)*

*"மதுரையில் ரோம நாணய அச்சுசாலை ஒன்று நடைபெற்றிருக்க வேண்டுமென யூகிக்க வேண்டியுள்ளது. அகஸ்டஸ் பேரரசனின் கோயில் ஒன்று, வழிபாட்டில் இருந்து வந்ததாக பியூட்டிங்கரின் அட்டவணைகளிலிருந்து அறிகின்றோம்." (கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு–மக்களும் பண்பாடும், பக். 54.)*

*"மதுரையில் வையையாற்றுக் கரை பகுதியிலும் பிற இடங்களிலும் கணக்கற்ற ரோமப் பொன் – வெள்ளி – செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன. இவை மதுரையில் யவனர் குடியிருப்பை உணர்த்துகின்றன. இன்றுள்ள புதுச்சேரிக்கு அண்மையில் ரோமர் தொழிற்சாலை ஒன்று இருந்தமைக்குரிய சான்றுகள் கிடைத்துள்ளன. சேரநாட்டுக் கடற்கரைப் பகுதியில், யவனர் குடியிருப்பும் அகஸ்டஸ் கோவிலும் இருந்தமைக் குரிய அடையாளங்கள் கண்டறியப்பட்டன." (மா. இராசமாணிக்கனார், தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்,1974, பக். 43–44.)*

## பண்டைத் தமிழ் இலக்கியங்களில் யவனர்:

யவனர் என்பது முதலில் கிரேக்கர்களையும், பின்பு உரோமர், யூதர், சீரியர் ஆகியோரையும் குறித்தது என்பதையும், யவனர்களுடைய குடியிருப்புகள் பாண்டிய நாட்டிலும் சேர நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் இருந்தன என்பதையும், யவனப் பேரரசன் அகஸ்டசுக்குத் (Augustus) தமிழகத்தில் கோயில்கள் இருந்தமையையும், யவனக் காசுகள் தமிழகத்தில் ஏராளமாகக் கிடைத்தமையையும் பார்த்தோம்.

அகநானூறு, புறநானூறு, நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான பண்டைத் தமிழ் இலக்கியங்களில், யவனர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

இந்தியச் சமயச் சிந்தனைகள் எவ்வாறு யவனர்களிடையே காணப்படுகின்றனவோ, அவ்வாறே யவனச் சிந்தனைகள் இந்திய இலக்கியங்களில் காணப்படுகின்றமையைச் சமய வரலாறு காட்டுகிறது.

*'யவனர் தந்த வினைமாண் நன்கலம்.'*
*(அகம். 149)*

*'யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல்.'*
*(புறம். 56)*

*'யவனர் இயற்றிய வினைமாண் பாவை.'* *(நெடுநல்வாடை. 101)*

*'வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்.* *(முல்லைப்பாட்டு. 61)*

*'யவனர் ஓதிம விளக்கு.'* *(பெரும்பாண். 316, 317)*

*'யவனத் தச்சர்.'* *(மணிமேகலை. 19:108)*

*'யவனர் இருக்கை.'* *(சிலப்பதிகாரம் 5:10)*

*'அடல் வாள் யவனர்.'* *(சிலப்பதிகாரம் 14:67)*

*'வன்சொல் யவனர்'* *(சிலப்பதிகாரம் 28:141, 29:25)*

யவனர்கள் தமிழகத்தில் ஒரு பகுதியில் அரசு அமைத்து ஆண்டு வந்தனர். யவனர்களுக்குத் தனிநாடு இருந்தது என்னும் குறிப்பு,

*'வன்சொல் யவனர் வளநா டாண்டு*
*பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்'* *(சிலப்பதிகாரம், 28:141, 142.)*

*'வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்*
*தென்குமரி யாண்ட செருவில் கயல்புலியான்'* *(சிலப்பதிகாரம், 29:25-26.)*

என்னும் சிலப்பதிகார அடிகளால் விளங்குகின்றது.

## யவனக் குடியிருப்புகளும் யவன அரசர்களும்:

வட இந்தியாவில் யவனக் குடியிருப்புகள் இருந்தன என்றும், வட இந்தியாவின் சில பகுதிகளை யவன அரசர்கள் ஆளுகை செய்ததாகவும் அசோகரது கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. (B.N. Mukherjee, Studies in the Aramaic Edicts of Asoka, P.47) வடஇந்தியாவில் கண்டெடுக்கப்பட்டுள்ள கிரேக்க, அரமேயக் கல்வெட்டுகள் அசோகர் காலத்தைச் சேர்ந்தவை ஆகும்.

யவன அரசர்கள் அசோக மன்னரின் கீழ் ஆளுகை செய்தனர். (B.N. Mukherjee, Studies in the Aramaic Edicts of Asoka, 1984, P.47) அரமேய மொழி இயேசு கிறிஸ்துவால் பேசப்பட்ட மொழி என்பது கவனத்தில் கொள்ள வேண்டியதாகும்.

சங்க இலக்கியத்தில் யவனர்களைப் பற்றியும் பாண்டிச்சேரியில் யவனக் குடியிருப்புகள் (B.N. Mukherjee, Studies in the Aramaic Edicts of Asoka, P.47) இருந்தது பற்றியும் பல குறிப்புகள் காணப்படுவது நோக்கற்குரியது. தமிழ்நாட்டில் ஏராளமான யவனர் கால நாணயங்கள் கண்டெடுக்கப் -பட்டுள்ளமையும் (மயிலை சீனி வேங்கடசாமி, பழங்காலத்துத் தமிழர் வாணிபம், ப.57) மற்றும் தென்னிந்தியாவின் பல பகுதிகளிலும் யவனர் கால நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளமையும் குறிப்பிடத்தக்கன. இந்தியச் சிற்பக்கலையில் யவனக் கலையின் பாதிப்பு இருக்கிறது. இந்தத் தொடர்பானது பண்பாட்டு, சமய உறவிற்கு வழிவகுத்தது. இந்திய நம்பிக்கை, சமயச் சிந்தனைகள் ஆகியவை யவன நம்பிக்கை மற்றும் இலக்கியங்களிலும் அவர்களுடையவை இந்தியச் சிந்தனைகள் மற்றும் இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

## வணிகத் தொடர்பினால் உண்டான பண்பாட்டு, சமய செல்வாக்குகள் :

தமிழகத்திலேயே நீண்ட காலம் தங்கிய யவனர் மூலமாக அவர்களுடைய நாகரிகம் தமிழகத்தில் பரவியிருத்தல் இயல்பே.

இந்திய நம்பிக்கை, சமயச் சிந்தனைகள் யவன இலக்கியங்களிலும், அவர்களுடையவை இந்தியச் சிந்தனையிலும் காணப்படுகின்றமைக்கு ஓர் எடுத்துக்காட்டு:

பிறவிக் குருடனைக் கண்ட இயேசுவின் சீஷர்கள்

> ***'இவன் குருடனாகப் பிறந்தது இவன் செய்த பாவமா?***
> ***இவன் பெற்றோர் செய்த பாவமா? '*** *(அருளப்பர் 9:1-2)*

என்று கேட்கின்றனர்.

இரண்டாவது கேள்வி யூதர்களது பாரம்பரிய நம்பிக்கையைக் காட்டுகிறது. ஆனால் முதல் கேள்வி ஆழ்ந்த ஆராய்ச்சிக்குரியது. அவன் பிறவிக் குருடனாய் இருப்பதினால் 'இது அவனுடைய பாவமா?' என்றால், அவன் முன் பிறவியில் செய்த பாவமா? என்று தானே பொருள் ஆகும். யூத மத நம்பிக்கையில் இல்லாத இது சமண, பௌத்தத்தின் கர்மக் கொள்கை மற்றும் பிறவி சுழற்சிக் கொள்கையின் செல்வாக்கைக் காட்டுகின்றது.

இந்தியச் சமயச் சிந்தனைகள் எவ்வாறு யவனர்களிடையே காணப்படுகின்றவோ, அவ்வாறே யவனச் சிந்தனைகள் இந்திய இலக்கியங்களில் காணப்படுகின்றமையைச் சமய வரலாறு காட்டுகிறது.

ஐரோப்பியர் எண்ணிக்கையில் கவனம் வைத்தனரே தவிர, கிறிஸ்தவர்களாக மாறின இந்தியர்களுக்குச் சம உரிமை கொடுக்க மறுத்தனர். அவர்கள் நோக்கமெல்லாம் எண்ணிக்கையே தவிர, மனமாற்றமல்ல.

திராவிடப் பண்பாட்டையுடைய ஆபிரகாமின் மரபில் தோன்றிய யூதர் வழியில் பிறந்த இயேசுவின் நற்செய்தியை, தோமாவாகிய யூதர் தமிழகத்திற்குக் கொண்டு வந்தபோது, சங்க இலக்கியக் குறிப்பின்படி தோமா ஒரு யவனராகவும், தோமாவின் நற்செய்தி யவன நாகரிகத்தில் தோன்றிய நற்செய்தியாகவும் தமிழ் மக்களுக்குக் காட்சியளித்திருத்தல் இயல்பே.

கடவுள் மனிதனாக உருவெடுத்து, இவ்வுலகிற்கு வந்து, தன்னைப் பலியாகக் கொடுத்தமை கிறிஸ்தவத்திற்கே உரிய அடிப்படைக் கோட்பாடு என்பதும், இக்கோட்பாடு யவனர்களின் வருகையால் அதிலும் குறிப்பாக நற்செய்திப் பணியாற்றுவதற்காகவே இந்தியாவிற்கு வந்த யவனரான தூய தோமாவினால், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் உருவான இந்தியச் சமயங்களில் முக்கியமான இடம் பெற்றுள்ளது என்பதும் சமய வரலாறு காட்டும் உண்மை ஆகும்.

எனவே, யவனராகிய தூய தோமா மூலம் பரவிய திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்துகொள்வதற்கு முன் ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவத்திற்கும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்திற்கும் உள்ள வேற்றுமைகளைப் புரிந்து கொள்வது இன்றியமையாதது. வரும் இயலில் இதைக் காண்போம்.

# 4. ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவமும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும்

இந்தியாவில் கிறிஸ்தவத்தைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்.
2. சீரியக் கிறிஸ்தவம்.
3. ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம்.

இந்தியத் திருச்சபை வரலாறு சீரியக் கிறிஸ்தவம், ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம் பற்றித் தெரிவிக்கின்றதே தவிர, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பற்றி எதுவும் தெரிவிப்பதில்லை. வரலாற்றாசிரியர்கள் இது பற்றி அறியாததே இதற்குக் காரணமாகும். (டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் பயிற்சி வகுப்பில் எடுத்த பாடத்தின் சுருக்கம் இங்கே தரப்பட்டுள்ளது.)

**சீரியர் :**

இவர்கள் அ்டைக்கலம் தேடி இந்தியாவிற்கு வந்தனர். சுவிசேஷ ஊழியம் செய்வதற்காக வரவில்லை. அவர்கள் நாட்டில் உண்டான துன்பத்திலிருந்து விடுபட்டு, சேர நாட்டில் தஞ்சமாகக் குடியேறினர். அது தமிழ்நாட்டின் ஒரு பகுதியாக இருந்தது. இவர்கள் பிழைப்பிற்காக இந்தியா வந்தனர். இவர்கள் நற்செய்தி ஊழியம் எதுவும் செய்யவில்லை. தனிக் கூட்டமாக வாழ்ந்தனர். இதன் காரணமாக, பின்பு உருவான சாதி ஏற்றத்தாழ்வு பிரிவில் இவர்கள் தனி சாதியாகக் கருதப்பட்டனர்; ஆக்கப்பட்டனர். இன்றும் சீரியக் கிறிஸ்தவர் என்போர் தனி சாதியாக, கூட்டமாக வாழ்கின்றனர்.

இவர்கள் வெளிநாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்ததால், உள்ளூர் திராவிட இனத்தவர்களுடன் தங்களை இணைத்துக் கொள்ளாமல், தங்களைப் போலவே வெளிநாட்டிலிருந்து வந்து, ஆரியர் என்ற பெயரில் இருப்பவர்களுடன் தங்களை இணைத்துக் கொண்டனர்.

எனவே, ஆரியர்கள் இவர்களைத் திராவிடர்களைவிட மேலானவர் களாகவும், தங்களைவிடக் கீழானவர்களாகவும் எண்ணுகின்றனர்.

**ஐரோப்பியர் :**

ஐரோப்பியர்களில் இறை பணியாளர்களின் (மிஷனரி) நிலை வேறு; ஐரோப்பிய அரசியல்வாதிகளின் நிலை வேறு; ஐரோப்பிய இறை பணியாளர்கள் தமிழின் சிறப்பு, திராவிட இனத்தின் சிறப்புகள், திராவிடப் பண்பாட்டின் சிறப்புகளை வெளிக் கொண்டு வந்தமை வரலாற்றில் குறிப்பிடற்குரியது. ஐரோப்பியர்களில் வியாபாரம் செய்யவும், நாடுபிடிக்கவும் வந்தவர்களின் நிலை வேறு; இவர்கள் இந்தியாவைச் சுமார் 150 ஆண்டுகள் ஆளுகை செய்தனர்.

வலது கன்னத்தில் அறைந்தால்
இடது கன்னத்தைக்
காட்டுவது கிறிஸ்தவம்.
இறக்கின்ற தருவாயிலும்,
பிதாவே இவர்களுக்கு மன்னியும்
என வேண்டுவது கிறிஸ்தவம்.
சபிக்கிறவர்களை
ஆசிர்வதிப்பது கிறிஸ்தவம்.
நிந்திப்பவர்களுக்காக ஜெபிப்பது
கிறிஸ்தவம்.

இவர்களது ஆட்சிக் காலத்தின்போது கி.பி. 1535 - 1540க்குள் சுமார் 10,000 பேர் திருச்சபையில் இணைக்கப்பட்டனர். தூத்துக்குடி முதல் கன்னியாகுமரி வரை இது நடந்தது. என்ன காரணம்?

இவ்வாறு கிறிஸ்தவராக மாறியவர்கள் முத்துக் குளிப்பவர்கள். நாயக்கர் மற்றும் இஸ்லாமிய ஆட்சியாளர்களால் கொடுமைப்படுத்தப்பட்டனர், சுரண்டப்பட்டனர். போர்ச்சுகீசியர் இந்தியாவிற்கு வந்தவுடன், துப்பாக்கி, பீரங்கிகளை அவர்கள் வைத்திருப்பதைப் பார்த்து, தங்களை நாயக்கர், இஸ்லாமியரிடமிருந்து காக்க வேண்டினர். ஆனால் அவர்களோ, தங்கள் குடிமக்களாக (Citizen) மாறினால் மட்டுமே தங்களால் இவர்களுக்கு உதவ முடியும் என்றனர். குடிமக்களாக மாறுவதற்கு முதலில் இவர்கள் கிறிஸ்தவராக மாற வேண்டும் என்றனர்.

எனவே, இம்மக்கள் கிறிஸ்தவர்களானார்கள். ஞானஸ்நானம் என்ற பெயரால், வாளியில் தண்ணீரை வைத்துக்கொண்டு, ஒரே சமயத்தில் அனைவர் மேலும் தெளித்து, பெயர் மாற்றம் செய்தனர்.

10,000 பேர் ஒரே நேரத்தில் மத மாற்றம் செய்யப்பட்டனர். ஆனால் இவர்களுக்குச் சம உரிமை கொடுக்கப்படவில்லை; இயேசுவே இரட்சகர் என்று பெரும்பான்மையோர் உணரவில்லை.

ஆனால் பின்பு வந்த சவேரியார், கிறிஸ்தவத்தைக் குறித்து ஒன்றுமே தெரியாதிருந்த இவர்களுக்குப் பரமண்டல ஜெபத்தை மட்டும் சொல்லிக் கொடுத்தார்.

இவர்கள் வழி வந்தவர்கள் ஐரோப்பியக் கிறிஸ்தவர்கள். இவ்வாறு மதம் மாற்றப்பட்ட கிறிஸ்தவர்களில் புறக்கணிக்கப்பட்டவர்கள், ஒடுக்கப்பட்டவர்கள், நசுக்கப்பட்டவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள்தாம் அதிகம் இருந்தனர். இதனால் இவர்களுக்குப் படிப்பு வசதி, மருத்துவ வசதி கிடைத்தன. ஆனால் விசுவாசக் கிறிஸ்தவர்கள் உருவாகவில்லை.

அடிமைகளாகவே இருப்பதில் சுகம் காணும் மக்களாக, மேன்மை பாராட்டும் மக்களாக இவர்களை உருவாக்கினர். எனவே, மற்ற இந்தியர்கள் இவர்களை இந்தியர் என்று ஏற்றுக் கொள்ளாமல், வெளி நாட்டவர் என்று கூறினர்.

ஐரோப்பியர் எண்ணிக்கையில் கவனம் வைத்தனரே தவிர, கிறிஸ்தவர்களாக மாறின இந்தியர்களுக்குச் சம உரிமை கொடுக்க மறுத்தனர். அவர்கள் நோக்கமெல்லாம் எண்ணிக்கையே தவிர, மனமாற்றமல்ல.

## ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம் :

உலகம் முழுவதும் ஐரோப்பிய அரசாட்சி பரவுவதற்கு, தூய வேதாகமம் பயன்படுத்தப்பட்டு வந்தது. சிலுவை அதன் அடையாளமாயிற்று. சிலுவை அடையாளம் அநேகரைக் கொலை செய்யவும் பயன்படுத்தப்பட்டதை, கிறிஸ்தவத் திருச்சபை வரலாறு காட்டுகிறது.

வலது கன்னத்தில் அறைந்தால் இடது கன்னத்தைக் காட்டுவது கிறிஸ்தவம்.

இறக்கின்ற தருவாயிலும், பிதாவே இவர்களுக்கு மன்னியும் என வேண்டுவது கிறிஸ்தவம்.

சபிக்கிறவர்களை ஆசிர்வதிப்பது கிறிஸ்தவம்.

நிந்திப்பவர்களுக்காக ஜெபிப்பது கிறிஸ்தவம்.

ஆனால், கிறிஸ்தவர்கள் என்ற பெயரில், சிலுவையை வைத்துக் கொண்டே, அடுத்தவர்களைக் கொலை செய்யத் தூண்டியவர் கான்ஸ்டன்டைன். சிலுவைப் போரில் ஏராளமானோரை வெட்டினர். மற்றும் ஆசிய சமயமான கிறிஸ்தவம், கான்ஸ்டன்டைன் காலம் முதல் ஐரோப்பிய அரசாட்சி பரவுவதற்கு ஏற்ற ஐரோப்பியக் கிறிஸ்தவமதமாக மாற்றப்பட்டது.

- இயேசு கிறிஸ்து ஆசியாவில் பிறந்த ஆசியர்
- இயேசு கிறிஸ்துவின் பன்னிரெண்டு சீஷர்களும் ஆசியாவில் பிறந்த ஆசியர்களே

❁ கிறிஸ்துவின் நற்செய்தியை எழுத்து வடிவில் விளக்கும் தூய வேதாகமம் ஆசியர்களாலேயே எழுதப்பட்டது ஆகும்.

| |
|---|
| தமிழர் தமிழ்நாட்டில் |
| மட்டுமே உள்ளனர். |
| ஆனால் திராவிடர் |
| (தமிழ் இனத் தோன்றல்) |
| இந்தியா முழுவதும் |
| உள்ளனர். |

இயேசு கிறிஸ்துவும், இயேசு கிறிஸ்துவின் சீஷர்களும், இயேசு கிறிஸ்துவின் அடியவர்களும் கொலை செய்யப்பட்டது ரோம அரசாட்சியில் ஆகும். (W.H.C. Frend, Martyrdom and Persecution in the Early Church, 1965; F.W. Clayton, CQ 41, 1947, Pp.83ff; Cf. New Bible Dictionary, Inter-varsity Press, 1996, Pp.913-914)

ஆசியக் கிறிஸ்தவம் கான்ஸ்டன்டைன் கால முதல் ஐரோப்பியக் கிறிஸ்தவ மதமாக ஆக்கப்பட்டதுடன் அதில் புதிய மாற்றங்களும் செய்யப்பட்டன.

1. மரியாள் வணக்கம்
2. டிசம்பர் 25ஆம் நாளை, கிறிஸ்மஸ் நாளாகச் சிறப்பித்தல்
3. சிலை வழிபாடு
4. சிலுவை சிறப்பிக்கப்படுதல்
5. அரசர், பிரபுக்கள், பணக்காரர் ஆசிர்வதிக்கப்பட்டவர் என்ற கொள்கை

போன்றவை புகுத்தப்பட்டன.

இதைப் போன்று ஆதிக் கிறிஸ்தவத் திருச்சபையை ஏறத்தாழ 300 ஆண்டுகள் துன்பப்படுத்தியது ஐரோப்பிய ரோமப் பேரரசே ஆகும். ஐரோப்பியர்கள் தங்களை ஆரிய இனத்தவர் என்று உரிமை பாராட்டுகின்றார்கள். தங்களை ஆரிய இனத்தவர் என்று உரிமை பாராட்டுகின்ற ரோமப் பேரரசு, கி.பி. 4ஆம் நூற்றாண்டில் கிறிஸ்தவத்தைத் தங்கள் 'அரசு சமயமாக' அறிவித்தது. அது முதல் ஆசியாவில் உருவாகிய கிறிஸ்தவம், ஐரோப்பிய ஆரியக் கிறிஸ்தவமாக மாற்றப்பட்டது என்பதை வரலாறு காட்டுகின்றது.

## தூய தோமாவும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும்:

தூய தோமா கி.பி. 52ஆம் ஆண்டு இந்தியா வந்து, கி.பி. 52 முதல் கி.பி. 72 வரை சுமார் 20 ஆண்டுகாலம் இந்தியாவில் ஊழியம் செய்தார். குறிப்பாகத் தமிழ்நாட்டில் ஊழியம் செய்தார்.

தூய தோமாவின் இந்திய வருகையை மறுப்பவர்கள் கூறும் காரணங்களுள் முக்கியமானவை :

1. தூய தோமா அவ்வளவுதூரம் பயணம் செய்து இந்தியாவிற்கு வந்திருக்க முடியாது.

2. தூய தோமா தட்சசீலத்தில் கொண்டோபோரஸ் மன்னனைச் சந்தித்து அவரைக் கிறித்தவத்திற்கு வழி நடத்தினார் என்று கூறப்படுகிறது. 'கொண்டோபோரஸ்' என்பவர் ஒரு கற்பனை பாத்திரமே. எனவே, தோமாவின் வருகையும் கற்பனையே.

3. தூய தோமா இந்தியா வந்திருந்தாரானால், அதன் விளைவுகள் காணப்பட வேண்டும். ஆனால், இந்தியச் சமய வரலாற்றில் விளைவுகள் என்று ஏதும் குறிப்பிடப்பிட முடியவில்லை.

எனவே, தூய தோமாவின் வருகை ஒரு கற்பனையே என்கின்றனர்.

இந்தியர் வெளிநாட்டுடன் கொண்டுள்ள வணிகத் தொடர்புகள் மிகப் பழங்காலத்திலிருந்தே காணப்படுவதற்கு ஏராளமான சான்றுகள் இருப்பது இயல் 3ல் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. உலகில் வேறு எங்கும் சொல்லப்படாத தூய தோமாவின் கல்லறை மயிலாப்பூரில் இருப்பதும், இதற்கு ஆண்டாண்டு காலமாய் வெளியிடங்களிலிருந்தும் வந்து சிறப்பு செய்வதும் ஆழ்ந்து நோக்குதற்குரியன.

அண்மைக்காலம் வரை கொண்டோபோரஸ் ஒரு கற்பனை பாத்திரம் என்று கருதப்பட்டது. ஆனால் அண்மைக் காலத்தில் தட்சசீலத்தில் நடந்த அகழ்வாராய்ச்சியில் கொண்டோபோரஸ் நாணயங்கள் பல கண்டெடுக்கப்பட்டுள்ளன. ( Jitendra Nath Banerjea, The Development of Hindu Iconography, 1974, P.118 ) எனவே, கொண்டோபோரஸ் ஒரு கற்பனை பாத்திரம் என்பதும் இதனால் தோமாவின் இந்திய வருகையும் கற்பனையே என்பதும் தவறான கருத்துகளே என்பதை அண்மைக்கால வரலாற்றுச் சான்றுகள் தெளிவாகக் காட்டுகின்றன.

தூய தோமா இந்தியாவில் ஆற்றிய பணிகளின் விளைவே தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாக வளர்ந்துள்ளது. எனவே, தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தை அறியாதவர்களால், தோமாவின் வருகையையும் புரிந்து கொள்ள இயலாது.

ஏறக்குறைய கி.பி.250 இல் சீரியா நாட்டில் எழுதப்பட்ட அப்போஸ்தலரின் அறவுரை எனும் நூல், இந்தியாவில் தோமையர் பற்றிக் குறிப்பிடுவதாக, சிரில் புருஷ் பெர்த் கூறுகிறார். (சிரில் புருஷ் பெர்த், இந்தியத் திருச்சபை வரலாறு, சென்னை - 1961, ப.11)

தோமா,

தனி மனிதராகவே வந்தார்;

கூட்டமாக வரவில்லை;

வியாபார நோக்கிலும் வரவில்லை.

ஐரோப்பியக் கிறிஸ்தவத்தில் கிரேக்க மொழிக்குப் பின் இலத்தீன் மொழி வந்ததைப் போன்று, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தில் தமிழைப் பின் தொடர்ந்து சமஸ்கிருத மொழி வந்தது.

தோமையர் இந்தியாவின் வடக்கிலும் தெற்கிலும் ஆற்றிய பணிகள் குறித்துச் சொல்லப்படுபவை வரலாற்றில் ஏற்கத்தக்கதாக உள்ளன. இந்தியாவில் முற்காலக் கிறிஸ்தவம் பற்றிய அறிவும் தொடர்பும் இருந்தமைக்குச் சான்றுகள் தெளிவாகவே உள்ளன என்று ஜாக் பினிகன் கூறுவது இங்கு கவனிக்கத்தக்கது. (Jack Finegan, The Archaeology of World Religions, p.150)

## தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் என்று கூறுவது ஏன்?

அண்மைக்கால தொல்பொருள் துறை அகழ்வாராய்ச்சிகளும், சமய சிற்பங்களின் வரலாற்று ஆராய்ச்சியும், தோமா வழி பரவிய திராவிடக் கிறித்தவத்தின் வளர்ச்சியைத் தெளிவாகக் காட்டுகின்றன.

1. 'தோமா வழிக் கிறிஸ்தவம்' என்று சொன்னால் அது சீரியர்களைக் குறிப்பதாகிவிடும். ஏனென்றால் அவர்கள் தங்களைத் தோமா வழிக் கிறிஸ்தவர்கள் என உரிமை பாராட்டுகின்றனர்.
2. 'தோமா வழித் தமிழ்க் கிறிஸ்தவம்' என்றால், தற்காலத்தில் அப்பெயர் தமிழ்நாட்டில் உள்ளவர்களை மட்டுமே குறிக்கும்.

ஆனால் கிறிஸ்தவமோ அக்காலத்தில் இந்தியா முழுவதும் வளர்ந்திருந்தது. ஆனால் தமிழ்க் கிறிஸ்தவம் என்றால் அது தமிழ்நாட்டில் உள்ளதை மட்டுமே குறிக்கும். தமிழிலிருந்து தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு என்று சுமார் 33 மொழிகளும், கிளை மொழிகளும் தோன்றியுள்ளன. தமிழன் என்பது சமஸ்கிருதத்தில் திராவிடன் என்று மருவி வந்துள்ளது.

தமிழ்க் கிறிஸ்தவர் என்றால் அது தமிழரை மட்டுமே குறிக்கும். ஆனால் திராவிடன் என்பது இனப் பெயராய் உள்ளது. 33 மொழி பேசுபவர் அனைவரையும் இது குறிக்கும். இவர்கள் தென்னிந்தியாவில் பெரும்பான்மையோராய் உள்ளனர். இந்தியா முழுவதும் பார்த்தால் சுமார் 90% மக்கள் திராவிடராய் உள்ளனர். அதாவது சுமார் 90 கோடி மக்கள் திராவிடராவர்.

இவர்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. திராவிட மொழி பேசும் திராவிட இன மக்கள்.
2. திராவிட மொழிகள் பேசாத, அல்லது பேச மறந்த திராவிட இனமக்கள்.

வட இந்தியாவில் உள்ள திராவிட இனத்தவர் - திராவிட மொழி பேசாமல், மற்ற மொழிகள் பேசுகின்றனர்.

(எடுத்துக்காட்டு) ஏறக்குறைய 120 ஆண்டுகளுக்கு முன்னால் தென்னாப்பிரிக்காவில் குடியேறிய தமிழர்களில் மிகவும் வயது முதிர்ந்தவர்களைத் தவிர, மற்றவர்களுக்குத் தமிழ் தெரிவதில்லை.

அவர்கள் இனத்தால் திராவிடர்; ஆனால் தங்கள் தாய்மொழியை மறந்துவிட்டு, வட்டார மொழிகளைப் பேசுகின்றனர். ஆனால், தமிழ்ப் பெயர்களை வைத்துக் கொள்கின்றனர். தேவாரம், திருவாசகம் போன்ற சைவ சமயப் பாடல்களை ஆங்கிலத்தில் எழுதி தமிழில் அரைகுறையாக உச்சரிக்கின்றனர்.

தமிழர் தமிழ்நாட்டில் மட்டுமே உள்ளனர். ஆனால் திராவிடர் (தமிழ் இனத் தோன்றல்) இந்தியா முழுவதும் உள்ளனர்.

எனவே,

- 'தோமா வழிக் கிறிஸ்தவர்' என்றால் அது சீரியக் கிறிஸ்தவர்களைக் குறிக்கும்.
- 'தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவர்' என்றால் அது தமிழ்நாட்டில் உள்ள கிறிஸ்தவர்களைக் குறிக்கும். ஆனால்,
- 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவர்' என்றால் அது இந்தியா முழுவதும் உள்ள கிறிஸ்தவர்களைக் குறிக்கும்.

சீரியர்கள் தாங்கள் வெள்ளை நிறத்தவர் என்பதால் தங்களைத் திராவிடர்களோடு இணைத்துக் கொள்ளாமல், தங்களைப் போன்ற வெள்ளை நிறத்தவர்களான ஆரியர்களோடு தங்களை இணைத்துக் கொள்வதையே விரும்பி, அப்படியே செய்தனர்.

எனவே, திராவிடப் பண்பாட்டில் திராவிட இனத்திடையே வளர்ந்த தோமா வழிக் கிறிஸ்தவத்தை 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்' என்று இனத்தின் பெயரால் குறிப்பிடுவது வரலாற்றில் பொருத்தமாக உள்ளது.

இந்திய மண்ணிலும், இந்திய மொழிகளிலும் திராவிடப் பண்பாட்டு அடிப்படையில் கி.பி. முதல் நூற்றாண்டு முதல் இந்தியாவில் வளர்ச்சியுற்ற கிறிஸ்தவம்தான் தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் ஆகும்.

ரோம அரசாட்சியில் உருவான ஆதி கிறிஸ்தவ இலக்கியங்கள் கிரேக்க மொழியில் இருப்பதைப் போன்று, தமிழ்நாட்டில் உருவான தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ ஆதி இலக்கியங்கள் தமிழ் மொழியிலேயே இருக்கின்றன.

ஐரோப்பியக் கிறிஸ்தவத்தில் கிரேக்க மொழிக்குப் பின் இலத்தீன் மொழி வந்ததைப் போன்று, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தில் தமிழைப் பின் தொடர்ந்து சமஸ்கிருத மொழி வந்தது.

யவனரான தூய தோமா தட்சசீலத்திலிருந்து கேரளா வழியாக, தமிழ் மண்ணிற்கு வந்தார் என்பது பாரம்பரியம் ஆகும். அவர் தமிழ் மண்ணில் கொலை செய்யப்பட்டார் என்பதும், தமிழ் மண்ணில் திருமயிலையில் அடக்கம் செய்யப்பட்டார் என்பதும் பாரம்பரியம் ஆகும்.

தமிழ் மண்ணில் தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட திருமயிலையில் இருந்துதான் முதல் தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவ நூலான திருக்குறள் மலர்ந்தது. அதன் பின் தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம், தூய தோமா இறை பணியாற்றி, இன்னுயிர் ஈந்த அதே தமிழ் மண்ணில் பக்தி இயக்கமாகப் பரிணமித்தது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின் தமிழ் பக்தி இயக்கம் சைவ, வைணவ சமயமாக வளர்ச்சியுற்றது. எனவே, தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவம் என்றாலும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் என்றாலும் பொருள் ஒன்றே.

- ஏறக்குறைய 47 உலக மொழிகளுக்கு மேல் மொழி பெயர்க்கப்பட்டுள்ள பழந்தமிழ் இலக்கியமான திருக்குறள் தமிழ் மொழியிலேயே உள்ளது.
- சைவத்தின் 63 நாயன்மார்களும் தமிழ்நாட்டையே சார்ந்தவர்கள்.
- வைணவத்தின் 12 ஆழ்வார்களும் தமிழ் நாட்டையே சார்ந்தவர்கள்.
- சைவத்தின் புனித நூல்களான பன்னிரு திருமுறைகளும் தமிழ் மொழியிலேயே உள்ளன.
- திராவிட வேதம் எனப்படும் வைணவத்தின் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் தமிழ் மொழியிலேயே உள்ளது.
- இந்தியாவின் 275 பழமையான சிவன் கோயில்களில் 230 தமிழ்நாட்டிலேயே இருக்கின்றன.

❋ இந்தியாவின் பழமையான 108 வைணவத் திருப்பதிகளில் 96 தமிழ்நாட்டிலேயே இருக்கின்றன.

❋ சைவத்தில் கோயில் என்று சொன்னாலே அது சிதம்பரத்தையே குறிக்கும். இது இருப்பது தமிழ்நாடே.

❋ வைணவத்தில் கோயில் என்றாலே அது திருவரங்கத்தைக் குறிக்கும். அதுவும் தமிழ்நாட்டிலேயே உள்ளது.

தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் இலக்கியங்கள் தமிழிலேயே இருப்பதினால் கடந்த காலத்தில் அவற்றிற்கு உரிய முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை.

ஏற்கெனவே கூறியபடி, ரோம அரசாட்சியில் உருவான ஆதி கிறிஸ்தவ இலக்கியங்கள் கிரேக்க மொழியில் இருப்பதைப் போன்று, தமிழ்நாட்டில் உருவான ஆதி இந்தியக் கிறிஸ்தவ இலக்கியங்கள் தமிழ் மொழியிலேயே இருக்கின்றன.

ஐரோப்பியக் கிறிஸ்தவத்தில் கிரேக்க மொழிக்குப் பின் இலத்தீன் மொழி வந்ததைப் போன்று, இந்தியக் கிறிஸ்தவத்தில் தமிழைப் பின் தொடர்ந்து சமஸ்கிருத மொழி வந்தது. இந்தியாவில் கிறிஸ்தவம் பற்றிய வரலாறு எழுதும் ஆசிரியர்கள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பற்றி அறிந்து கொள்ள இயலாமைக்குக் காரணம் பழங்கால, இடைக்கால தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ மூல இலக்கியங்கள் தமிழிலேயே இருந்தமை ஆகும். எனவே, தமிழ் தெரியவில்லை என்றால் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தை அறிய முடியாது.

# 5. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்ளும் முறை

பொதுவாக, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்ளுவதில் ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவர்களுக்குச் சிக்கல் உள்ளது. ஏனென்றால், ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவர், விவிலிய நோக்கில் புரிந்து கொள்ள முயற்சிக்காமல் ஐரோப்பிய நோக்கில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் பார்ப்பதால், அதைப் புரிந்து கொள்ளுவது கடினமாக உள்ளது.

**நற்செய்திப்பணி :**

நற்செய்திப்பணி என்பது

எந்த இடத்தில் நற்செய்திப் பணி ஆற்றுகிறோமோ, அந்த இடத்திலுள்ளோரின் நம்பிக்கை, வழிபாடு, மதம், நாகரிகம், பண்பாடு பற்றித் தெரிந்துக் கொண்டு அவற்றின் அடிப்படையில் செய்ய வேண்டும் என்பது பைபிள் கூறும் முறை ஆகும். (அப்போஸ்தலர் 17:16)

*அவர்களைத் தேடிச் செல்ல வேண்டும் அவர்களின் நம்பிக்கை அடிப்படையில் 'கிறிஸ்துவிற்குள் யூதனென்றும் இல்லை; கிரேக்கனென்றும் இல்லை' என்ற நிலையில் அவர்களுக்குச் சுவிசேஷம் சொல்ல வேண்டும்.*

*(அப்போஸ்தலர் 10:13-15)*

*தூய பவுல், அத்தேனே பட்டணத்தில் காத்துக் கொண்டிருந்த போது, அந்தப் பட்டணம் விக்கிரகங்களால் நிறைந்திருக்கிறதைக் கண்டு, அவர்கவைத் திட்டாமல், அவர்களை வெறுக்காமல், 'அத்தேனரே நீங்கள்...மிகுந்த தேவதா பக்தியுள்ளவர்களென்று காண்கிறேன்' என்று அவர்களைப் பாராட்டி, நல்லதொரு உறவை வளர்த்துக் கொண்டு, அதன் பின் நற்செய்தியைக் கூறுகிறார்.*

*(அப்போஸ்தலர் 17:22)*

*அப்போஸ்தலர் 17 ஆம் அதிகாரத்தின் படி, பிற சமயத்தவர் வழிபாடுகளை இழிவுபடுத்தாமல், அவர்களை வெறுக்காமல்,*

*அவர்களைக் கடவுளுக்குள் வழிநடத்தும்படியாக, அவர்களிடத்தில் நல்ல முறையில் பேசி, நற்செய்தியைக் கூற வேண்டும்.*

*பிற சமயத்தவர் கோவிலுக்குள் சென்று, தூய பவுலடிகள் செய்தது போல், அவர்கள் ஆராதனைக்கு உரியவைகளை உற்று கவனிக்க வேண்டும்.*

*(அப்போஸ்தலர் 17 : 23)*

*அவர்கள் நூல்களை, தூய பவுலடிகள் படித்து நற்செய்தி கூறியது போல், நற்செய்தி பணிபுரிவோர் பிற சமயத்தவர் நூல்களைப் படிக்க வேண்டும்.*

*(அப்போஸ்தலர் 17 : 28)*

இவ்வாறு, யூதருக்கு யூதராக, கிரேக்கருக்கு கிரேக்கராக, அவரவர் பண்பாட்டு அடிப்படையில் நற்செய்தி அறிவிக்க வேண்டும். பிற சமயத்தாரின் கோவிலுக்குள் சென்று, அவர்கள் வழிபாட்டு முறையைக் கண்டு... அவர்கள் இலக்கியங்கள், நூல்களைப் படித்து, அவர்களின் வழிபாடு, நம்பிக்கை இவற்றைப் புரிந்து கொண்டு, ரோமர் 10 : 2 இல் கூறியவாறு, அறிவுக்கேற்ற பக்தி வைராக்கியத்தோடு, நற்செய்தி கூற வேண்டும். இதுதான் 'பைபிள்முறை

இதற்கு மாறான சுவிசேஷ முறை ஐரோப்பிய முறை.

'அது சாத்தான், அதைத் தொடாதே, அதைப் படிக்காதே, அங்கு செல்லாதே' என்று சொல்லி, ஐரோப்பியர் இந்தியரைத் தம்முடைய அடிமைகளாகவே வைத்துக் கொண்டனர்.

ஐரோப்பியர் ஆட்சியில் இருந்ததால், அதிகாரமுடையோர் ஆசிர்வதிக்கப்பட்டோர் என்று கூறுகின்ற, கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட பழைய ஏற்பாட்டு பகுதிகளுக்குச் சிறப்பு கொடுத்தனர். ஆனால், கிறிஸ்துவுக்காக எல்லாவற்றையும் குப்பையாகத் தள்ளுவதே ஆசிர்வாதம்; ஒடுக்கப் -பட்டோருக்காக, ஏழை எளியோருக்காகத் தம்மை ஒடுக்கி வாழும் நிலையே (லூக்கா 4 : 18, 19) ஆசிர்வாதம் எனக் கூறும் கிறிஸ்து வந்தபின் உள்ள புதிய ஏற்பாட்டுக்குச் சிறப்பு கொடுக்கவில்லை.

அவ்வாறே, நற்செய்திப் பணி புரியும் முறையிலும் 'பைபிளுக்கு' வேறுப்பட்ட முறையையே ஐரோப்பியர் கையாண்டனர்.

எனவேதான், யூதனுக்கு யூதன், கிரேக்கனுக்கு கிரேக்கன் என்ற முறையில் இந்தியருக்கு இந்தியராக, திராவிடருக்கு திராவிடராக நற்செய்தி சொல்லும் விவிலிய முறையை ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

எனவே, விவிலிய அடிப்படையில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்வது மிகவும் அவசியம்.

விவிலியத்தில், கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட நிலைக்கும் கிறிஸ்து வந்தபின் உள்ள நிலைக்கும் உள்ள வேறுபாடுகளை உணர்ந்து கொள்ளும்போதுதான் கிறிஸ்துவின் ஒளியில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்ள முடியும். இந்த வேறுபாடுகளைப் பின்வருமாறு காணலாம்.

கிறிஸ்துவிற்கு முன்
ஆசீர்வாதம் என்பது பணம்,
செழுமை, நீண்ட ஆயுசு
உபா. 28 : 2-14
கிறிஸ்துவிற்குப் பின்
கிறிஸ்துவுக்காக
எல்லாவற்றையும் குப்பையாகத்
தள்ளுவதே ஆசீர்வாதம்.
பிலி. 3 : 7-11

| *கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட நிலை (பழைய ஏற்பாடு)* | *கிறிஸ்து வந்தபின் உள்ள நிலை (புதிய ஏற்பாடு)* |
|---|---|
| 1. விருத்தசேதனம் உண்டு. ஆதி. 17 : 7-13 | விருத்தசேதனம் இல்லை. கலா. 5 : 2-4 |
| 2. பெண்களுக்கு விருத்தசேதனம் கிடையாது. | கிறிஸ்துவுக்குள் ஆண் என்றும் இல்லை; பெண் என்றும் இல்லை; அனைவருக்கும் ஞானஸ்நானம். யோ.3 : 5 |
| 3. பலி உண்டு. ஆதி.8 : 20, 21 | பலி நிறைவேறிவிட்டது. எபே. 5 : 2 |
| 4. ஓய்வுநாளில் வேலை செய்யக் கூடாது; உபா. 5 : 15 | மனிதனுக்காகவே ஓய்வு நாள்; ஓய்வுநாளுக்காக மனிதன் அல்ல; மாற். 2: 26, 27 |
| 5. கண்ணுக்குக் கண்; பல்லுக்குப் பல். உபா. 19 : 21 | வலது கன்னத்தில் அறைந்தால் இடது கன்னத்தைக் காட்ட வேண்டும். மத். 5 : 39 |
| 6. ஆசீர்வாதம் என்பது பணம், செழுமை, நீண்ட ஆயுசு உபா. 28 : 2-14 | கிறிஸ்துவுக்காக எல்லாவற்றையும் குப்பையாகத் தள்ளுவதே ஆசீர்வாதம். பிலி. 3 : 7-11 |
| 7. யூதர், புறசாதி எனும் ஏற்றத்தாழ்வு யாத். 12 : 17 | அனைவரும் கிறிஸ்துவுக்குள் ஒரே சரீரத்தின் அங்கங்கள். எபே: 3:3 |

| | |
|---|---|
| 8. அந்நிய தெய்வம் உண்டு. சங். 16 : 4 | அந்நிய தெய்வம் என்பதற்கே இடமில்லை. ஒரே கடவுள் ஒரே மந்தை ஒரே மேய்ப்பன். I கொரி. 8 : 4 |
| 9. புறசாதியார் யூதக் கோவிலுக்குள் வரக் கூடாது. அப். 21 : 26 | அனைவருக்கும் கோவிலில் இடமுண்டு. ரோ. 3 : 29, 30, மத். 11 : 28 |
| 10. அந்நிய தெய்வத்தின் பெயரைக் கூடச் சொல்லக் கூடாது. அந்நிய தெய்வத்தின் கோவிலுக்குள் செல்லக் கூடாது. சங். 16 : 4 | அந்நிய கோவில்களுக்குச் சென்று, அவர்கள் வழிபாட்டு முறை, நம்பிக்கைகளை அறிந்து, அவர்களுடைய நம்பிக்கை, தத்துவ அடிப்படையில் நற்செய்தி கூறுதல், யூதனுக்கு யூதன், கிரேக்கனுக்கு கிரேக்கன். I கொரி. 9 : 20, 21 |

எனவே, கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட நிலைக்கும் கிறிஸ்து வந்தபின் உள்ள நிலைக்கும் உள்ள வேறுபாடுகளை உணர்ந்து, கிறிஸ்துவின் ஒளியில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைப் புரிந்து கொள்ள முயற்சிக்கும்போது அதை நன்கு புரிந்து கொள்ளலாம்.

## ஐந்து நோக்குகளில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் :

பல பெயர்களில் கூறப்பட்டாலும் கடவுள் ஒருவரே என்பதைத் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியங்களும், தத்துவங்களும் தெளிவாக விளக்குகின்றன.

படித்தவர்கள், பொதுமக்கள் அனைவருக்கும் நற்செய்தியைக் கூறுவதற்காக, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் வெவ்வேறு நோக்குகளில் (Aspects) விளக்கப்பட்டுள்ளது.

1. புராண நோக்கு (Mythical Aspect)
2. இலக்கிய நோக்கு (Literary Aspect)
3. இறையியல், தத்துவ நோக்கு (Theological / Philosophical Aspect)
4. சிற்பவியல் நோக்கு (Iconographic Aspect)
5. வரலாற்றுநோக்கு (Historical Aspect)

எளிய மக்களுக்கு நற்செய்தியைப் போதிப்பதற்குப் புராண நோக்கு மற்றும் சிற்பவியல் நோக்கு பயன்பட்டன. படித்த மக்களுக்கு இலக்கிய நோக்கு மற்றும் தத்துவ / இறையியல் நோக்கு பயன்பட்டன. தோமா வழிக் கிறிஸ்தவம் தமிழ் பேசும் தமிழ் மக்கள் மத்தியிலே தமிழிலும் தமிழ் பேசாத பிற மக்கள் மத்தியிலே சமஸ்கிருதத்திலும் பரவியது.

மனிதனாக அவதரித்த
கடவுளை,
'இயேசு' என்கின்றனர்
கிறிஸ்தவர்.
'ஈசன்' என்கின்றனர்
சைவர்.

எனவே, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தை, விவிலிய அடிப்படையில், கிறிஸ்துவின் ஒளியில் பார்க்கும்போதுதான், அதன் ஆழத்தைப் புரிந்து கொள்ள முடியும்.

# 6. கடவுளின் பெயர் என்ன?

பொதுவாக, பெயர்களை இரண்டாகப் பிரிக்கலாம்.

1. இடுகுறிப் பெயர் (Arbitrary Name)
2. காரணப் பெயர் (Logical Name)

**இடுகுறிப் பெயர் :**

பெற்றோர் பிள்ளைகளுக்கு எந்தவிதக் காரணமும் இன்றி இடுகின்ற பெயர் இடுகுறிப் பெயர். ஏழைப் பெற்றோர் தம் பிள்ளைகளுக்கு, 'கோடீஸ்வரன்' என்றும் பெயர் வைக்கின்றனர். இதற்குத் தகுந்த காரணம் எதுவும் இல்லை. இது இடுகுறிப் பெயர். பொதுவாக இடுகுறிப் பெயர் மொழி பெயர்க்கப்படாது.

**காரணப் பெயர் :**

ஏதாவது ஒரு காரணம் கருதி வைக்கப்படும் பெயர் காரணப் பெயர். கடவுளுக்கு மனிதர் வைத்த பெயர்கள் அனைத்தும் காரணப் பெயர்களாகவே உள்ளன. கடவுளின் பெயர்கள் பலவாக உள்ளன. அவை பொதுவாக மொழி பெயர்க்கப்படும்.

**ஒலித் திரிபு :**

இடுகுறிப் பெயர், காரணப் பெயர் தவிர மூன்றாவதாக, ஒலி மாற்றமடைந்து காணப்படும் 'ஒலித் திரிபை' க் கொள்ளலாம்.

இந்த மூன்று வகைப் பெயர்களில், கடவுளின் பெயர்களை எடுத்துக் கொள்வோமானால், அவை பெரும்பாலும் 'காரணப் பெயர்'களாகவே இருப்பதைக் காணலாம். எனவே, கடவுளின் பெயர் பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு இருப்பதைக் காணலாம். சில பெயர்கள் 'ஒலித் திரிபாய்'க் காணப்படுவதுமுண்டு.

கடவுளின் பெயர் என்ன என்று கேட்டால், கிறிஸ்தவர்கள், பொதுவாக 'யேகோவா' என்று கூறுவார்கள். ஆனால், புதிய ஏற்பாட்டில் ஓர் இடத்தில் கூட 'யேகோவா' எனும் பெயரால் கடவுள் ஏன் குறிக்கப்படவில்லை என்பது ஆழ்ந்து நோக்கற்குரியது.

'முற்பிதாக்கள்' எனப்படும் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோருக்கு 'யேகோவா' எனும் பெயரால் கடவுள் அறியப்படவில்லை என்பதை யாத் 6:3 தெளிவாகக் காட்டுகிறது.

> ஈசன் எனும் சொல்லை, கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலுள்ள இந்திய இலக்கியங்கள் எவற்றிலுமே காண இயலாது.

*'அங்கே கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டான்'*

*(ஆதி: 12.8)*

எனும் வசனத்தில் வரும் 'நாமம்' என்பது குறிப்பிட்ட ஒரு பெயரைக் குறிக்காமல், ஆபிரகாம் கடவுளைத் தொழுது கொண்டதையே குறிக்கின்றது. இவ்வசனத்தில் இடம் பெற்றுள்ள 'நாமம்' என்பது குறிப்பிட்ட பெயரைக் குறித்திருந்ததானால், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு ஆகியோருக்கு 'யேகோவா' எனும் பெயரால் கடவுள் அறியப்படவில்லை என்னும் யாத் 6:3 வசனம் பொருளற்றதாகிவிடும்.

மற்றும், இவ்வசனத்தில் (ஆதி: 12.8) இடம் பெற்றுள்ள 'நாமம்' என்பது குறிப்பிட்ட பெயரைக் குறித்திருந்ததானால், மோசே, கடவுளை நோக்கி 'உம் நாமம் என்னவென்று அவர்கள் கேட்டால் என்னவென்று அவர்களுக்குச் சொல்ல வேண்டும்? என்று கேட்டிருக்க மாட்டார். எனவே, ஆபிரகாம், கர்த்தரின் நாமத்தைத் தொழுது கொண்டான் என்பது இவ்வசனத்தில் கடவுளைத் தொழுது கொள்வதையே தெளிவாகக் குறிப்பிடுகிறதே தவிர அவருடைய பெயர் என்று குறிப்பிட்ட எந்த ஒரு பெயரையும் குறிக்கவில்லை.

கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட பழைய ஏற்பாட்டில் 'யேகோவா' எனும் பெயர், 'கடவுள் குறிப்பிட்ட ஓர் இனத்திற்கு மட்டுமே உரியவர்' (குலதெய்வம்) எனும் பொருளில் ஆளப்பட்டுள்ளதாலும் 'அனைவருக்குமே கடவுள் உரியவர்' எனும் பொருளில் அப்பெயர் ஆளப்படாததாலும், கிறிஸ்து வந்த பின் உள்ள புதிய ஏற்பாட்டில் கடவுளுக்கு 'யேகோவா' எனும் பெயரைக் காண முடியவில்லை.

கடவுளின் பெயர் என்ன?

மோசேயிடம் கடவுள் தன்னுடைய பெயர் யாது என்று கூறும்போது, 'இருக்கிறவராகவே இருக்கிறேன்' என்று கூறுகிறார்.

'இருக்கிறவராகவே இருக்கிறேன்' என்பது ஒரு காரணத்தோடு அமைந்த காரணப் பெயரே தவிர இடுகுறிப் பெயர் கிடையாது என்பதை அப்பெயரே வெளிப்படுத்துகின்றது. இடுகுறிப் பெயர் மொழி பெயர்க்கப்படாது. ஆனால், காரணப் பெயர் மொழி பெயர்க்கப்படும் என்பது ஏற்கெனவே குறிப்பிடப்பட்டது.

## மொழி பெயர்க்கப்படும் காரணப் பெயர்கள் :

'கிறிஸ்து' எனும் பெயர் ஒரு காரணப் பெயர். எபிரேயத்தில் 'மேசியா' என்பது கிரேக்கத்தில் 'கிறிஸ்டாஸ்' என்று மொழி பெயர்க்கப்பட்டது. (தோ.சா.காரட், கிறிஸ்து, மேசியா – திருமறைச் சொற்பொருள், ப.107)

இது காரணப் பெயராய் இருப்பதால், மொழி பெயர்க்கப்பட்டது. 'மேசியா' என்பதற்கு 'எண்ணெய் ஊற்றப்பட்டவர்' என்று பொருள். இக் காரணப்பெயர் மொழி பெயர்க்கப் பட்டதைப் பின்வருமாறு காணலாம்.

## மொழி பெயர்ப்பு:

| | | |
|---|---|---|
| எபிரேயம் | – | மேசியா |
| கிரேக்கம் | – | கிறிஸ்டாஸ் |
| தமிழ் | – | இறைவன் (பக். 163 – 165) |

இவ்வாறு, 'மேசியா' என்னும் காரணப் பெயர், 'கிறிஸ்டாஸ்' என்றும், 'இறைவன்' என்றும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

***'அவருடைய நாமமே அல்லாமல்'***

எனும் வசனம் குறிப்பிடுகின்ற 'நாமம்' எது?

திருமறையில்,

***'ஆமென்' என்பவர்*** *(வெளி 3:14)*

***'இயேசு'*** *(மத் 1:21)*

***'இராஜாதி ராஜா', 'கர்த்தாதி கர்த்தா'*** *(வெளி 19:16)*

***'இம்மானுவேல்'*** *(மத் 1:23)*

***'கர்த்தர்'*** *(ஆதி 2:7)*

**'அல்பா, ஓமேகா'** (வெளி 22:13)

எனப் பல பெயர்களில் கடவுள் குறிப்பிடப்படுகிறார். எனவே, கடவுளின் நாமம் அல்லது பெயர் என்பது, குறிப்பிட்ட ஒரு பெயரைக் குறிக்கவில்லை என்பதை மேற்குறிக்கப்பட்ட 'பெயர்கள்' காட்டுகின்றன.

இப் பெயர்களை ஆழ்ந்து நோக்கினால், இவை அனைத்துமே, காரணத்தோடு வைக்கப்பட்ட காரணப் பெயர்களே தவிர இடுகுறிப் பெயர்கள் அல்ல என அறியலாம்.

காரணப் பெயர்கள் பொதுவாக மொழி பெயர்க்கப்படும். எனவேதான், எபிரேயத்தில் – 'மேசியா' என்பது கிரேக்கத்தில் – 'கிறிஸ்டாஸ்' என்றாகி தமிழில் – 'இறைவன்' என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இது மொழி பெயர்ப்பு.

**ஒலித் திரிபு :**

பெயர்கள் மொழிக்கு மொழி ஒலி மாற்றம் அடைவது இன்னொரு நிலை. இது 'ஒலித் திரிபு' ஆகும்.

'இயேசு' என்னும் பெயரை எடுத்துக் கொண்டோமானால், இது மொழிக்கு மொழி ஒலி மாற்றம் பெற்றுள்ளதைப் பின்வருமாறு காணலாம்.

| | | |
|---|---|---|
| எபிரேயத்தில் | – | ஜோசுவா |
| கிரேக்கத்தில் | – | ஈசுஸ் |
| ஆங்கிலத்தில் | – | ஜீசஸ் |
| அரபியில் | – | ஈசா |
| தமிழில் | – | ஈசன் / இயேசு |

என ஒலி மாற்றம் பெற்றுள்ளது.

*'ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்*
*எழுந்து உயிர்த்தனன் நாள் ஒரு மூன்றில்*
*நேசமா மரியா மகதலேனா*
*நேரிலே இந்தச் செய்தியைக் கண்டாள் '*

என்கிறார் பாரதியார்.

ஈசன் எனும் சொல்லை, கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளிலுள்ள இந்திய இலக்கியங்கள் எவற்றிலுமே காண இயலாது.

மனிதனாக அவதரித்த கடவுளை, 'இயேசு' என்கின்றனர் கிறிஸ்தவர். 'ஈசன்' என்கின்றனர் சைவர்.

இதைப் போன்றே,

| | | |
|---|---|---|
| கிரேக்கம் | – | 'கிறிஸ்டாஸ்' |
| ஆங்கிலம் | – | 'கிறைஸ்ட்' (Christ) |
| தமிழ் | – | 'கிறிஸ்து' |

என்பதில் 'கிறிஸ்டாஸ்' என்பது 'கிறிஸ்து' என்று திரிந்துள்ளதே தவிர, இது மொழி பெயர்ப்பு ஆகாது.

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ முதல் இலக்கியமான திருக்குறளில், கடவுளின் பெயர்கள் காரணப் பெயர்களாகவும் மொழிபெயர்ப்புப் பெயர்களாகவும் இருப்பதைக் காணலாம்.

திருக்குறளை அடுத்த பிற தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியங்கள் பலவற்றில், 'யோசுவா', 'இயேசு', 'ஈசுஸ்' என்பவற்றின் ஒலித் திரிபான 'ஈசன்' எனும் பெயரைக் காணலாம்.

பெரும்பாலும், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவப் புராணங்களும் இலக்கியங்களும் இறையியல் நூல்களும் பிதாவாகிய கடவுளையும் தூய ஆவியாகிய கடவுளையும் மனிதனாக வந்த கடவுளையும் பல்வேறு கோணங்களில் பல்வேறு பெயர்களில் மொழி பெயர்த்துள்ளமையையும், விளக்கியுள்ளமையையும் காணலாம்..

எனவே, கடவுளின் பெயர்களை நோக்கும் பொழுது அவை,

மொழி பெயர்ப்பா

ஒலித் திரிபா

என்பதைக் கண்டறியும் போதுதான், அப்பெயர்கள் உணர்த்தும் ஆழமான பொருளை உணர முடியும்.

# 7. கிறிஸ்தவத்தினால் இந்தியாவில் ஏற்பட்ட மாற்றங்கள்

இந்தியாவில் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் இருந்த வழிபாடுகளிலும் சமயங்களிலும் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் புதிய கொள்கைகளும் மாற்றங்களும் ஏற்பட்டதைச் சமய வரலாறு காட்டுகிறது.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட கால கடவுள் நம்பிக்கையுள்ள வழிபாடுகள், சமயங்களில் எல்லாம் கடவுளுக்குப் பலி கொடுத்து வந்த செய்தியை உலக சமயங்களின் வரலாறு தெரியப்படுத்துகிறது.

கிறிஸ்து தன்னைத் தானே பலியாகக் கொடுத்ததினால், பலி கிறிஸ்துவில் நிறைவேறிவிட்டதால், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட கால சமயங்கள் பலி நிறைவேற்றக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு உருவாயின. இதன் காரணமாக விலங்கு பலி நிறுத்தப்பட்டது.

கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் கடவுளையும் வழிபடலாம்; அதே சமயம் விலங்கு பலியும் தேவையில்லை என்ற விலங்கு பலியற்ற புதுவித கடவுள் வழிபாட்டைக் கிறிஸ்தவம் உலக சமய வரலாற்றில் அறிமுகப்படுத்தியது. (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் - ஒப்பாய்வு, 1985, ப.15.)

கிறிஸ்துவிற்கு முற்பட்ட சமண, பௌத்த சமயங்களை எடுத்துக் கொண்டோமானால், பூரணத்தை அடைதல், பூரண புருஷன் ஒருவரை எதிர்பார்த்தல் என்பவை அவற்றின் முக்கிய நோக்கங்களாகும். கிறிஸ்தவத்தில் 'மனுஷகுமாரன்' எனப்படும் கிறிஸ்து, பூரண மனிதனாக நோக்கப்படுகிறார். இவர் மனுஷ குமாரனாகவும், அதே நேரத்தில் கடவுளின் குமாரனாகவும் அறியப்படுகிறார். அவர் மனிதப் பண்பு, கடவுள் பண்புகளின் தொகுப்பாக விளங்குகிறார். அவர் நூறு விழுக்காடு கடவுளாகவும், நூறு விழுக்காடு மனிதனாகவும் இருப்பதே இதற்குக் காரணமாகும். எனவே கிறிஸ்தவத்தின் மனுஷகுமாரன் என்னும் கருத்து, சமண, பௌத்த சமயங்களின் முக்கிய நோக்கமான பூரண மனிதன் பற்றிய எதிர்பார்ப்பின் நிறைவேறுதலாகக் கொள்ளலாம்.

எல்லாவற்றையும் துறந்துவிடுதல் என்பது இச்சமயங்களின் அடிப்படைக் கருத்துகளில் ஒன்றாகும். ஒருவனின் சொந்த நலனிற்காக, எல்லாவற்றையும் துறந்துவிடுதல் என்பதற்கு, சமண, பௌத்தத்தில் அதிக முக்கியத்துவம் கொடுக்கப் பட்டுள்ளது.

ஆனால், பிறர் நன்மைக்காக, மேன்மைக்காக எல்லாவற்றையும் துறந்துவிடுதலே உண்மையான துறவாகக் கிறிஸ்தவம் கருதுகிறது. கிறிஸ்தவத்தில் முழு மனுக் குலத்தையும் மீட்பதற்காகக் கிறிஸ்து எல்லாவற்றையும் துறந்தார். அவர் தனக்கென்று எதையும் வைத்திருக்கவில்லை. (Dr.M.Deivanayagam & Dr.D.Devakala, Christianity in Hinduism, 1997, Pp.52-54).

தனக்கென்று சொந்தமில்லாத ஒன்றில் பிறந்தார். தனக்குச் சொந்தமில்லாத ஒரு கல்லறையில் அடக்கம் பண்ணப்பட்டார். 'நரிகளுக்குக் குழிகளும், ஆகாயத்துப் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு; ஆனால் மனுஷகுமாரனுக்கோ தலை சாய்க்க இடமில்லை' என்று மத்தேயு 8:20-ல் கிறிஸ்துவே கூறுகிறார். இது அவரது பூரண துறவு வாழ்வைக் காட்டுகிறது. (Dr.M.Deivanayagam & Dr.D.Devakala, Christianity in Hinduism, 1997, P.53).

சமணத்தின் திகம்பரப் பிரிவில் சொல்லப்பட்டுள்ளது போன்று ஒரு துண்டு துணி கூட இல்லாமல் அவர் சிலுவையில் தொங்கி, தன்னைப் பலியாக்கினார். எனவே பூரண துறவு வாழ்வு என்பதைக் கிறிஸ்துவின் வாழ்வில் காணலாம். திகம்பரர் ஆடை அணிவதில்லை. தாங்கள் 'நிர்வாண நிலை' அடைவதற்கே அவர்கள் தியானித்து, நோன்பு நோற்பார்கள். திகம்பரப் பிரிவைச் சேர்ந்த அனைத்துச் சிற்பங்களும் மூடிய கண்களுடனும், ஆடையற்ற உடல்களுடனும் அமைக்கப்பட்டுள்ளன. கிறிஸ்துவின் சிலுவை மரணம் திகம்பர நிலையில் அதாவது, ஆடை ஏதுமற்ற நிலையில் நிறைவேறியமை ஆழ்ந்து கவனிக்கத் -தக்கது. (Dr.M.Deivanayagam & Dr.D.Devakala, Christianity in Hinduism, 1997, Pp.52-54).

## சுவேதாம்பர சமணம் :
## (கிறிஸ்தவத்தின் செல்வாக்கு பெற்ற சமணம்)

கிறிஸ்தவத்தினால், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் சமணத்தில் உருவான புதிய பிரிவே சுவேதாம்பரம் ஆகும்.

திகம்பர நிலையில் கிறிஸ்து எல்லாவற்றையும் துறந்து, தன்னையே பலியாகக் கொடுத்ததாலும், மற்றவர்களுக்காக அவர் பெரிதும் கரிசனை

உள்ளவரானதாலும், ஒருவர் மற்றவர் மேல் கரிசனை கொள்ள வேண்டும் என்ற புதிய கருத்து கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட காலத்தில் சுவேதாம்பர சமணத்தில் உருவானது. எனவேதான், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட கால சமண சிற்பங்கள் ஆடையுடனும், மற்றவர் மேல் கொள்ளும் கரிசனையின் அடையாளமாகத் திறந்த கண்களுடனும் காணப்படுகின்றன. இப்படியாகக் கிறிஸ்துவில் சமணம் நிறைவேறுகிறது. (டாக்டர் தெ. தேவகலா, 'தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்',1997,பக்.143-144)

மரணத்தின்
ஆளுகையிலிருந்து,
மாமிசத்தின் கர்ப்பத்திலிருந்து
இப்பிரபஞ்சத்தை
மீட்கவே விரும்புகிறேன்.
- போதிசத்துவர்

[வட இந்தியாவில் இவர்கள் திகம்பரர், ஸ்வேதாம்பரர் என்று சொல்லப் படுகின்றனர். திகம்பரர் = திக் + அம்பரம் = திசை + ஆடை; அதாவது திசைகளையே ஆடையாக அணிபவர்கள். இவர்கள் ஆடை ஏதுமின்றி இருப்பவர்கள். ஸ்வேதாம்பரர் - ஸ்வேத் + அம்பரம் = வெள்ளை ஆடை அணிபவர்கள்]

## மஹாயான பௌத்தம் :
## (கிறிஸ்தவத்தின் செல்வாக்கு பெற்ற பௌத்தம்)

தூய தோமாவழி திராவிடக்கிறிஸ்தவத்தின் கிளைதான் மஹாயான பௌத்தம். தேரவாதத்தின்படி (கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில்) எதுவுமே கடவுளால் படைக்கப்படவில்லை. தன் சொந்த முயற்சியினாலோ அல்லது மற்றவர்களால் வழி நடத்தப்பட்டோதான் ஒருவன் நிர்வாண நிலை அடைய முடியும்.

ஆனால், மஹாயான பௌத்தம் என்பது தேரவாத பௌத்தத்திற்கு முற்றிலும் மாறுபட்டது ஆகும். மஹாயான பௌத்தத்தின்படி சகலமும் கடவுளால் படைக்கப்பட்டன. கடவுள் மனித வடிவம் எடுத்து இவ்வுலகத்திற்கு வந்தார். தன்னையே பலியாகக் கொடுத்து, மனுக்குலத்திற்கு மீட்பு கொடுத்தார் என்ற கருத்து மஹாயான பௌத்தத்தின் அடிப்படைக் கோட்பாடு ஆகும்.

மஹாயானம் என்றால் பெரிய வாகனம் என்று பொருள்.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட கால பௌத்தம் 'ஹீனயானம்' என்று குறிக்கப்பட்டது. ஹீனயானம் என்றால் சிறிய வாகனம் என்று பொருள். அவரவரே முயன்று நிர்வாண நிலை அடைய வேண்டும் என்பதால் இது சிறிய வாகனம் அல்லது ஹீனயானம் என்று குறிப்பிடப்பட்டது. ஆனால் கிறிஸ்துவிற்கு முற்பட்ட கால பௌத்தர்கள் தங்களைத் தேரவாத பௌத்தர் என்றுதான் குறிப்பரே தவிர, ஹீனயான பௌத்தர் என்று கூறப்படுவதை விரும்ப மாட்டார்கள்.

நானே அனைத்திற்கும் மேலான கடவுளாக இருக்கிறேன். இவ்வுலகினை மீட்கும்படியாகத் தோன்றினேன். (Susmita Pande, Op.Cit.,P.76) என்றும் புத்தர் கூறுவதாக மகாயான நூல்கள் கூறுகின்ற பகுதிகளும் அவருடைய அவதாரத்தைத் தெரிவிக்கின்றன.

மற்றும் முத்திருமேனிக் கோட்பாட்டிலுள்ள 'படைக்கப்பட்ட திருமேனி' என்பது புத்த அவதாரத்தைத் தெளிவாகக் காட்டுகிறது.

'ஆதிபுத்தர், மன்னுயிர்களின் பொருட்டு அவதாரம் எடுத்ததாகக் கூறப்படும் இக்கொள்கை, கிறித்தவக் கொள்கையை ஒத்தே உருவாகியுள்ளது' (Geoffrey Parrinder, Avatar and Incarnation, 1970, P.117) என்பது குறிப்பிடற்குரியது.

மஹாயான பௌத்தத்திற்கு அடிப்படையே கடவுள் கோட்பாடாக இருப்பதால், கடவுளின் மீது நம்பிக்கை வைத்தால், கடவுளே நன்னிலைக்கு வழி நடத்துவார் என்பதால், இது ஒரே நேரத்தில் பலரை நன்னிலைக்கு வழி வகுக்கின்றது எனும் பொருளில் 'மஹாயானம்' எனக் குறிக்கப்படுகிறது.

மஹாயான பௌத்தத்திற்கும் கிறிஸ்தவத்திற்கும் ஒப்புமைகள் பலவுள்ளமையைச் சுட்டிக் காட்டுகின்றனர். (Har Dayal, The Bodhisattva Doctrine in Buddhist Sanskrit Literature, 1978, p.43)

மஹாயான பௌத்தத்தில் திரித்துவக் கோட்பாடு பின்வருமாறு விளக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| தர்ம காயா | – | பிதாவாகிய கடவுள் |
| சம்போக காயா | – | தூய ஆவியாகிய கடவுள் |
| நிர்மாண காயா | – | குமாரனாகிய கடவுள் |

B.L. Susuki என்பவர் தன்னுடைய மகாயான பௌத்தம் என்ற நூலில் 'திரிகாயா' என்ற கருத்தைக் கிறிஸ்தவத்தின் திரித்துவக் கொள்கையுடன் ஒப்பிடுகிறார். (B.L. Suzuki, Mahayana Buddhism, Pp.101-102, "Quoted by Susmita Pande, Birth of bhakti in Indian religions and art, 1982, Pp.87,88)

தர்மகாயாவைப் பரப்பிரம்மத்திற்கும்
சம்போககாயாவை ஈஸ்வரனிற்கும்
நிர்மாணகாயாவை அவதாரங்களுக்கும்

ஒப்பிடலாம் என்கிறார்.

மனவுருக்கம் மட்டுமல்லாமல், பாடு அனுபவிப்பவராகவும் உள்ள கிறிஸ்து,

மகாயான பௌத்தத்தில் 'போதிசத்துவர்' ஆகக் குறிக்கப்படுகிறார். அவரைப் பற்றி விளக்க முற்படும் போது கிறிஸ்தவ அடிப்படையில் விளக்குகின்றனர்.

போதிசத்துவர் நிர்வாண நிலையை அடையக் கூடியவராக இருந்தபோதிலும் அநேகரை மீட்கும் பொருளாகப் பாடுகள் வழி தன் ஜீவனைக் கொடுக்கின்ற கருத்து மஹாயான பௌத்தத்தில் முக்கிய இடம் பெற்றுள்ளது.

(எச்.சி.ரோலின்சன், இந்தியா ஒரு பண்பாட்டு வரலாற்றுச் சுருக்கம், ப.101) ,

* கிறிஸ்தவம் தோன்றுவதற்கு முன்னர், கடவுள் கோட்பாடு உடைய எவரும் பலியிடாமல் இருந்ததில்லை. கிறிஸ்தவம் புதிய ஒரு கோட்பாட்டை உலகுக்கு அறிமுகப்படுத்தியது.

சுசுகி இதைப் பின்வருமாறு விளக்குகிறார்: பாடு அனுபவிக்கும் இரட்சகர் பற்றிய கருத்து சில மத்திய கிழக்கு நாடுகளில் கிறிஸ்தவம் தோன்றுவதற்கு முன்பு இருந்திருக்கக் கூடும். கிறிஸ்துவின் காலம் தொடங்குவதற்கு முன் இது போன்ற கருத்துகள் பௌத்தத்தில் காணப்படவில்லை / ஏற்றுக் கொள்ளப்படவில்லை. போதிசத்துவரின் பாடுகள் அநேகரை மீட்கும் பொருளாகத் தன் ஜீவனைக் கொடுக்கின்ற கருத்து, கிறிஸ்தவத்திலிருந்து பௌத்தம் பெற்றுக் கொண்ட ஒரு கோட்பாடு ஆகும் என்கிறார்.

*'எல்லோருடைய கிரியைகளையும்.... நரகத்தில் உள்ளவர்களு-டையதையும்.... மற்ற உலகங்களில் உள்ளவர்களுடையதையும்..... தண்டனை அடையும் பிராந்தியத்தில் உள்ளவர்களுடையதையும்..... நான் என்மேல் சுமந்து கொள்கிறேன். அவர்கள் பாடுகளை என்மேல் ஏற்றுக்கொள்கிறேன்..... நான் அதைச் சுமக்கிறேன்..... நான் அதிலிருந்து பின்வாங்குவதில்லை.... அவைகளால் நடுங்குவ தில்லை.... அவற்றினால் நான் பயப்படுவதில்லை..... நான் மனந் தளருவதில்லை..... பிறப்பு, மூப்பு, வியாதி, மரணம், மறுபிறப்பு என்னும் காட்டினூடாய் அவர்களைப் பாதுகாப்பாய்க் கொணர்ந்து, எல்லாரையும் இரட்சிக்க உறுதி பூண்டுள்ளேன்.*

*நான் என்னுடைய சொந்த இரட்சிப்பை விரும்பாமல், எல்லாருக்கும் அந்த மேலான ஞானமாகிய உரிமையை அளிக்கப் பாடுபடுகிறேன்..... எனவே அனைவரது துக்கத்தையும் நான் என்மேல் ஏற்றுக் கொள்கிறேன். இப்பிரபஞ்சத்தின் வாதைகளைச் சுமக்க விரும்புகிறேன். அனைவரும் பாதிக்கப் படுவதைவிட, நான் ஒருவனே பாடு அனுபவிக்க விரும்புகிறேன். நான் என்னையே பணயமாகக் கொடுக்கிறேன். மரணத்தின் ஆளுகையிலிருந்து, மாமிசத்தின் கர்ப்பத்திலிருந்து இப்பிரபஞ்சத்தை மீட்கவே விரும்புகிறேன்.*

*எல்லாவற்றையும் மீட்கும் பொருளாக, எல்லாருக்காகவும் நான் பாடு அனுபவிக்க ஒப்புக்கொள்கிறேன். நிச்சயமாகவே நான் அவர்களைக் கைவிட மாட்டேன்.'* *(Vajradhvaja sutra quoted Santideva's Siksasamuccaya, tr. Bendall and Rouse/ P.256f - Quoted by A.L.Basham. வியத்தகு இந்தியா, 1956, ப.384. )*

எனும் பகுதிகள் கிறிஸ்துவை, பௌத்தர்கள் "போதிசத்துவர்" எனும் பெயரில் கண்டதைத் தெளிவாக விளக்குகின்றன.

மக்களை நியாயந்தீர்த்து, உலகில் நீதியை நிலைநாட்ட இறைவன் மீண்டும் வருவார் என்பதையே,

| | | |
|---|---|---|
| கிறித்தவம் | - | இரண்டாம் வருகை எனவும் |
| பௌத்தம் | - | மைத்திரேய புத்தர் எனவும் |
| வைணவம் | - | கல்கி அவதாரம் எனவும் குறிப்பிடுகின்றன. |

கிறித்தவத்திலும் வைணவத்திலும் பௌத்தத்திலும் இன்னும் நிறைவேறாமலிருக்கும் பகுதியே இவைதாம். பத்தாவது அவதாரம், வெண்புரவி மீது வருபவர், கிறித்துவின் இரண்டாம் வருகை, மைத்திரேய புத்தர் எனச் சொல்லப்படும் இவை நிறைவு பெற்றால்தான் சமயங்கள் ஒரு முழுமையடையும் (Arthur Osborne - Buddism and Christianity in the Light of Hinduism, F.P.1959, P.143) என்று கூறப்படுவதும் நோக்கற்குரியது.

பௌத்தத்தில் பாலி மொழி இலக்கியங்களில் காணப்படாத இக்கொள்கை, கிறித்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் உருவான மகாயான பௌத்தத்தில் காணப்படுவதால், கிறித்தவத்திலிருந்து இக்கொள்கை பெறப்பட்டிருக்கின்றது என்பது பெறப்படுகிறது.

கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் கிறிஸ்தவத்தினால் சமண, பௌத்த சமயங்கள் எவ்வாறு பெரும் மாற்றங்கள் அடைந்தனவோ, அவ்வாறே பழந்திராவிட வழிபாட்டிலும் பெரும் மாற்றங்களையும் புதிய கோட்பாடுகளையும் காண்கிறோம்.

## பழந்திராவிட வழிபாடு :

கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட காலத்தில் பழந்திராவிட வழிபாட்டில் புதிய மாற்றங்கள், கருத்துகள், சிந்தனைகள் தோன்றின. பழந்திராவிட வழிபாடு கிறித்துவிற்குப் பிற்பட்ட காலங்களில் பக்தி இயக்கமாக வளர்ந்தது. பழந்திராவிட வழிபாட்டில் கடவுளுக்குப் பலி செலுத்தி வழிபட்டனர். பழந்திராவிட வழிபாட்டிலிருந்து வளர்ந்த பக்தி இயக்கச் சமயங்களான சைவ, வைணவ

சமயங்களில் பலி கொடுப்பது கிடையாது. ஏனென்றால், அவை, கடவுளே மனிதனாக வந்து பலியாகிவிட்டார் எனும் கொள்கையுடைய பலி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயங்கள்.

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் திருக்குறளாகவும் சைவ, வைணவ சமயங்களாகவும் வளர்ந்தது.

பக்தி இயக்கச் சமயங்களான சைவ, வைணவ சமயங்களில் காணப்படும் பக்தி, அருள் என்பவை கிறித்தவத்தோடு ஒத்துள்ளன என்றும், இச்சமயங்களுக்கும் கிறித்தவத்திற்கும் ஒப்புமைகள் பல உள்ளன என்றும் அறிஞர்கள் (Sudhakar Chattopadhyaya, Evolution of Hindu Sects, 1970, P.60, Krishna Sharma, Bhakthi and Bhakthi Movement, 1987, Pp.80, 81) கூறுகின்றனர்.

பக்தி இயக்கச் சமயங்களில் புதிதாக இடம் பெற்ற இப்புதிய அன்பு நெறி குறிப்பிடற்குரியதாய் இருப்பதுடன், தமிழ் இலக்கியங்கள் கூறும் இவ்வன்பு என்பது கிறித்தவர் கூறும் அன்பு எனும் பண்போடு ஒத்திருப்பது பின்வருமாறு காட்டப்படுகிறது.

'தமிழ்ச் சொல்லாகிய அன்பு கிறித்தவர் கூறும் அன்பெனும் பண்பை ஓரளவு ஒத்துள்ளது.

> *"தமிழ் இலக்கியங்களில் முதன்முதல் இப்பேரன்பு நெறி காணப்படுவது கி.பி.7ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாய் திருமுருகாற்றுப்படையில் என்றும், பின்னர் நாயன்மார், ஆழ்வார் பாடல்களில் இக்கொள்கை முதன்முதலாய் முழுமையாய்த் தோன்றுகிறது" என்றும் அறிஞர் எடுத்துக் கூறுவன சிந்தனைக்குரியன. (A.L.பசாம், வியத்தகு இந்தியா, ப.414)*

கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில், பழந்திராவிட வழிபாட்டிலிருந்து வளர்ச்சி பெற்ற சைவ, வைணவ சமயங்களில் பலியிடும் வழக்கம் இடம் பெறவில்லை. எனவே சைவ, வைணவக் கோவில்களில் 'பலிபீடம்' காணப்படினும் பலி செலுத்தப்படும் நிலையில்லை. ஆனால், பழந்திராவிட வழிபாட்டில் இறைவனுக்குப் பலியிட்டு வந்தனர். எனவே, இன்றளவும் கிறிஸ்துவின் பலியை ஏற்றுக் கொள்ளாத அல்லது புரிந்துகொள்ளாத பழந்திராவிட வழிபாட்டினர் பலி செலுத்துகின்ற நிலை உள்ளது.

சைவ, வைணவ சமயங்களில் 'பலி' செலுத்தப்படா நிலைக்குக் காரணம் 'கிறித்தவமே' என்பதை அறிஞர் பின்வருமாறு விளக்கிக் காட்டுவர்.

*"கிறிஸ்தவம் தோன்றுவதற்கு முன்னர், கடவுள் கோட்பாடு உடைய எவரும் பலியிடாமல் இருந்ததில்லை. பலி அல்லது வேள்வியின் சிறப்பை இகழ்ந்தவர் எவருமிலர். கிறித்தவம் புதிய ஒரு கோட்பாட்டை உலகுக்கு அறிமுகப்படுத்தியது. கடவுள் கோட்பாடும் வேள்வி மறுப்புக் கோட்பாடும் இணைந்த வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயமாக அது அறிமுகமாகியது. கடவுள் இயேசுவாகிய மனிதனாக, இவ்வுலகில் தோன்றிச் சிலுவையில் தம்மைப் பலியாக்கினார் என்ற நிலையில், வேள்வியின் சிறப்பை ஏற்ற வேள்விக் கோட்பாடாகவும், இயேசு கிறிஸ்துவின் பலிக்குப் பின்னால் ஆடு, மாடு போன்ற உயிர்களைக் கொன்று செய்யும் பலி தேவையற்றது என்ற நிலையில், வேள்வி மறுப்புக் கோட்பாட்டுச் சமயமாகவும் உலகிற்கு அறிமுகமாகியது. கிறிஸ்தவம் தோன்றுவதற்கு முன்னர், கடவுளை வணங்கும் எவரும் வேள்வி செய்யாதிருத்தல் இயலாது என்ற நிலை இருந்தது" . (மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் - ஒப்பாய்வு, ப.15)*

*"இந்து மதத்தை முதலிற் கற்ற மேலைநாட்டு ஆசிரியன்மார் இந்துமதத் திரிமூர்த்திக் கோட்பாட்டுக்கும் கிறிஸ்து மதத் திரித்துவத்துக்குமிடையே ஒற்றுமை கண்டு வியந்தனர்". (A.L. பசாம், வியத்தகு இந்தியா, ப. 126) என்று கூறுவது நோக்கற்குரியது.*

கடவுள் திரிமூர்த்தியாக அதாவது மூவொருவராக விளங்குகிறார் எனும் கருத்தின் தோற்றத்திற்குக் கிறிஸ்தவத்திலுள்ள திரிமூர்த்தி ஒரு காரணமாக இருக்கலாம். காலமுறைப்படிப் பார்த்தாலும் இந்தியாவில் இம்மும்மூர்த்திக் கோட்பாடு கேட்கப்படுவதற்கு முன்பே கிறிஸ்தவம் இந்தியாவில் வேரூன்றியிருந்தது. (George Foot Moore, History of Religion, Vol.I, 1914, P.345) என்று கூறப்படுவது குறிப்பிடற்குரியது.

## கிறிஸ்தவத்தில் மூவொருமைக் கோட்பாடு :

தந்தை, மகன், தூய ஆவி எனும் மூன்று நிலைகளில் ஒரே கடவுள் விளங்குகிறார் எனும் கொள்கையுடையது கிறிஸ்தவம்.

*"தூய அன்புடையவராகிய கடவுளை நாம் தந்தை எனக் குறிப்பிடுகிறோம். நம்முடைய மீட்புக்காகக் குறிப்பிட்ட ஒரு வடிவில் தோன்றி, அன்பின் தியாகமாக வெளிப்பட்ட, நிலைபேறுடைய அதே கடவுளை நாம் மகன் எனக் குறிப்பிடுகிறோம். அவருக்கு மகனாக வெளிப்பட்டு நம் உள்ளங்களில் புது வாழ்வை நிரப்பிய அதே கடவுளை நாம் (தூய) ஆவி என்கிறோம்". (H.R. Mackintosh, The Doctrine of the Person of Jesus Christ, May 1956, P.526)*

கிறித்தவத்திற்கே அடிப்படையான மூவொருமைக் கோட்பாடு, அவதாரக் கோட்பாடு போன்றவை இந்தியச் சமயங்களில் எவ்வெவ்வாறு காணப்படுகின்றன என்பவை வரும் இயல்களில் ஆயப்படுகின்றன.

## அடிப்படைக் கோட்பாடுகள் :

கி.பி. முதல் நூற்றாண்டில் கிறிஸ்தவம் இந்தியாவிற்கு வந்ததினாலும், இந்திய மொழி மற்றும் பண்பாட்டில் வளர்ச்சியடைந்ததாலும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் திருக்குறளாகவும் சைவ, வைணவ சமயங்களாகவும் வளர்ந்தது.

1. மூவொருமைக் கோட்பாடு
2. அவதாரக் கோட்பாடு
3. பலிநிறைவேற்றக் கோட்பாடு
4. பாவ மன்னிப்புக் கோட்பாடு
5. விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு

போன்ற கிறிஸ்தவத்தின் கோட்பாடுகள், தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியமான திருக்குறளிலும் தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ சமயங்களான சைவ, வைணவ சமயங்களிலும் அடிப்படைக் கோட்பாடுகள் ஆயின. இன்றைக்கு இவை 'இந்து மதம்' எனும் பெயரில் குறிப்பிடப்படுகின்றன.

தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் விளைவான திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே என்பது இயல் 15 இல் சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளது.

தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளை சமயங்களான சைவ, வைணவ சமயங்கள் அல்லது பக்தி இயக்கத்தின் தோற்ற வளர்ச்சி குறித்து இனி காணலாம்.

# 8. இன்றைய 'இந்து மதம்' எனப்படும் சைவம், வைணவம் / பக்தி இயக்கம்

'பக்தி' என்பதற்குப் பல பொருள்கள் சொல்லப் பட்டாலும் இறைவன் மீது கொண்ட 'மரியாதையுடன் கூடிய ஆழ்ந்த அன்பு' எனும் பொருளே இங்கு அடிப்படையாகக் கொள்ளப்படுகிறது.

'இயக்கம்' என்பதற்குக் கூறப்படும் பல பொருட்களுள் இயங்குகை, வழி, இசைப்பாட்டு வகை (சுருக்கத் தமிழ் அகராதி, மு.ப. மார்ச்சு, 1955) எனவும்

(மாற்றத்தை அல்லது பாதிப்பை ஏற்படுத்தும்படியான) கூட்டுச் செயல்பாடு (க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, மு.ப. 1992) எனவும் பொருள்கள் கூறப்படுகின்றன.

தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட மயிலாப்பூர் மற்றும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் இருந்த தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவர்கள், கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலங்களில், தங்கள் பக்தியைப் பாடல்கள் வழியாக வெளிப்படுத்தினர். இவர்களுள் தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட மயிலாப்பூர் பகுதியைச் சார்ந்த பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் முதன்மையானவர்கள். கடவுளைப் பக்திப் பாடல்கள் வழியாகப் போற்றிப் பாடி மகிழ்ந்தனர். இவ்வாறு, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவர்கள், கோவில் கோவிலாகச் சென்று, பக்திப் பாடல்கள் பாடி, மக்களிடையே பக்தியுணர்வை ஊட்டியமை, 'பக்தி இயக்கம்' என்று குறிக்கப்படுகின்றது.

'தமிழ் பக்தி இயக்கம்' என்பது தமிழில் அமைந்துள்ள இறை பக்திப் பாடல்களான பன்னிரு திருமுறையையும் (சைவம்) நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தையும் (வைணவம்) குறிக்கிறது. இந்த பக்தி இயக்கப் பாடல்களின் காலம் கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது. (ஔவை சு. துரைசாமி பிள்ளை, சைவ இலக்கிய வரலாறு, 1958, பக். 2, 3)

கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் இருந்த திராவிட வழிபாடுகளின் கருப்பொருள் / மூலப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு தோமா வழித்

திராவிடக் கிறிஸ்தவம், 'தமிழ் பக்தி இயக்கமாக' அதாவது சைவம், வைணவமாக வளர்ந்தது.

கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பின் சைவ, வைணவ பக்தி இயக்கம் தென்னிந்தியாவில் வளர்ந்து, பின்னர் வட இந்தியாவிற்குப் பரவியது.

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட தமிழகத்திலிருந்து உருவானதால், பக்தி இலக்கியங்கள் தமிழ் மொழியில் உருவாயின.

இப்பொழுது, பக்தி இயக்கச் சமயங்களான சைவம், வைணவம் ஆகியவை 'இந்து மதம்' என்ற பெயரில், பிராமணக் கொள்கைகளால் முற்றிலுமாக மறைக்கப்பட்டுள்ளதால், பக்தி இயக்கத்திற்குக் காரணம் வேதங்களே என்ற தவறான கருத்து பொதுவாக நிலவுகிறது.

வேதத்திலுள்ள உருத்திரனே சைவத்தின் சிவன் என்றும்

வேதத்திலுள்ள விஷ்ணுவே வைணவத்தின் விஷ்ணு என்றும்

பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனால் வேதங்களை ஆழ்ந்து ஆராய்ந்தால், சைவம், வைணவம் இரண்டும் வேதத்திலுள்ள உருத்ரன், விஷ்ணுவுடன் எந்த விதத்திலும் தொடர்புடையவை அல்ல என்ற உண்மை வெளிப்படும்.

வேதத்தில் வருகின்ற 'உருத்திரன்' என்பது கடும்புயலின் தெய்வமாகக் கருதப்பட்டது. (Chhanda Chakrabarty, COMMON LIFE IN THE RGVEDA AND ADTHARVAVEDA an account of the folklore in the vedic period, 1977, P.54) எந்த இடத்திலும் இது பரம்பொருளைச் சுட்டவில்லை.

இவ்வாறே, வேதத்தில் சொல்லப்பட்டுள்ள விஷ்ணு என்பது சூரியனையே குறிக்கின்றது. இதன் எழுகை, உச்சிச் செலவு, விழுகை ஆகிய மூன்றே இதன் மூன்று அடிகளாகக் கூறப்படுகின்றன. (Sudhakar Chattopadhyaya, Evolution of Hindu Sects, p.25)

ஆனால், வைணவத்தில் கூறப்படும் 'விஷ்ணு' என்பவர் முழு முதற் கடவுள். பெயரொப்புமையை மட்டும் கொண்டு, வேதத்தில் கூறப்பட்ட 'விஷ்ணு' வே பின்னர் வைணவத்திற்கு அடிகோலியது என்பது முற்றிலும் பொருத்தமற்றதாக உள்ளது. (டாக்டர் தெ. தேவகலா, 'தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்', ப.129)

தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட பகுதியில் உருவான பக்தி இயக்கச் சமயங்களான சைவ, வைணவ சமயங்கள் பரவுவதற்குக் காரணமாயிருந்த

63 நாயன்மார்கள், 12 ஆழ்வார்கள் ஆகியோர், தமிழ்நாட்டைச் சார்ந்தோர் என்கிற குறிப்பு ஆழ்ந்த சிந்தனைக்குரியது. சைவ, வைணவ சமயங்கள் வடநாட்டிலிருந்து தென்னாட்டிற்குப் பரப்பப்பட்டவையல்ல. தென்னாட்டில் தோன்றி வட நாட்டிற்குப் பரவியவை. சைவ, வைணவ சமயங்களின் தொகுப்பு நூல்களாக விளங்கும் பன்னிரு திருமுறையும் நாலாயிர திவ்வியப்பிரபந்தமும் தமிழ்மொழியில் 'மட்டும்' தோன்றியவை என்பதும், வடமொழிக்கும் இவற்றிற்கும் தொடர்பில்லை என்பதும் ஆழ்ந்து நோக்க வேண்டிய கருத்துகளாகும்.

சைவ, வைணவ சமயக் கருத்துகள் முதலில் தமிழகத்தில் தோன்றி, பின்னர் மற்ற இடங்களிலும் பரவும்படியாக, வடமொழியிலும் எழுதப்படலாயின. இச்சமயங்களுக்கு மூலம், தமிழ் மொழியேயன்றி வடமொழியன்று. தமிழ் மொழியிலிருந்து வடமொழிக்குச் சென்ற கருத்துகளேயன்றி, வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்த கருத்துகள் அல்ல. (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு, ப.137)

வேதங்களின் செல்வாக்கு எதுவுமே இல்லாமல்தான் சைவம், வைணவம் தோன்றி வளர்ந்தமை பின்வருமாறு விளக்கப்படுகிறது. (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு, பக். 10,11)

1. சைவ, வைணவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளின் தோற்றம் ஆரியத்தையோ, வேதங்களையோ சார்ந்ததல்ல.
2. இந்தக் கோட்பாடுகளின் வளர்ச்சி வேதங்களில் காணப்படவில்லை.
3. கோயில் கட்டுதல், வழிபாடு போன்ற ஆகம முறைகளின் தோற்றம் வேதத்திற்கு முற்றிலும் மாறானவை.
4. கோயில் வழிபாட்டின் தோற்றம் வேதத்திற்குப் புறம்பானது.
5. சிவன், விஷ்ணு மேல் துதிப்பாடல்கள் இயற்றிய நாயன்மார்கள், ஆழ்வார்கள் வேத சமயத்தைச் சார்ந்தவர்கள் அல்லர்.
6. திராவிட சமய இலக்கிய விளக்க உரையாளர்களான சங்கரர், ராமானுஜர், மாத்வர் ஆகியோரது கோட்பாட்டு விளக்கங்கள் வேதங்களின் கோட்பாட்டு விளக்கத்திற்கு மாறானவை.
7. கடவுளின் பெயர்களான சிவன், சக்தி, குமரன் போன்ற பெயர்களைக் கூட வேதங்களில் காண முடியாது.
8. திரித்துவ வடிவத்தில் கடவுளை வழிபடுவது வேத வழிபாட்டில் இல்லாதது.

நான்கு வேதங்களுக்குத் தொடர்பற்ற, பக்தி இயக்கம், தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட தமிழகத்திலிருந்து உருவான தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் விளைவாக இருப்பதால், கிறிஸ்தவத்தின் அடிப்படைக் கொள்கைகளே பக்தி இயக்கச் சமயங்களான சைவ, வைணவ சமயங்களின் அடிப்படைக் கோட்பாடுகளாக உள்ளன. அவை

1. கடவுளை மூவொருவராகக் காணும் மூவொருமைக் கோட்பாடு (Doctrine of Trinity)
2. கடவுள் குருவாகிய மனிதனாக அவதாரம் எடுத்தார் என்னும் அவதாரக் கோட்பாடு (Doctrine of Avatar)
3. அவதாரம் எடுத்த கடவுள் மனிதனை மீட்க, தன்னையே பலியாக்கினார் என்னும் பலி நிறைவேற்றக் கோட்பாடு. (Doctrine of Fulfilment of Sacrifice)
4. மனிதருக்காகப் பலியான கடவுள், மனிதருக்குப் பாவங்களிலிருந்து விடுதலை தருகிறார் என்னும் பாவ மன்னிப்புக் கோட்பாடு (Doctrine of Forgiveness of Sins)
5. கடவுளை நம்பி கடவுளிடம் சரணடைந்தால் மீட்பு அடையலாம் என்னும் விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு (Doctrine of Salvation by faith)

எனவே, பக்தி இயக்கத்தின் வளர்ச்சி வேதங்களிலிருந்து அல்ல. இந்தப் புதிய கோட்பாடுகளின் தோற்றம் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்திலிருந்தே காணப்படுகிறது என்பதைச் சமய வரலாறு காட்டுகிறது.

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் தூய தோமா அடக்கம் செய்யப்பட்ட தமிழகத்திலிருந்து உருவானதால், பக்தி இலக்கியங்கள் தமிழ் மொழியில் உருவாயின. பக்தி இயக்கம் தமிழகத்திலிருந்து வட நாட்டிற்குச் சென்றதால், தமிழ் மொழியைத் தொடர்ந்து சமஸ்கிருதத்தில் பக்தி இலக்கியங்கள் உருவாயின. சமஸ்கிருதம் பற்றி சற்று ஆழமாக ஆயும்போது இவ்வுண்மை புலப்படும்.

# 9. சமஸ்கிருதமும் தோமா வழிக் கிறிஸ்தவமும்

சமஸ்கிருதத்தில் இந்திய சமய இலக்கியங்கள் ஏராளமாக உள்ளன. சமஸ்கிருதம் பொதுவாக ஆரியர்களின் மொழியாகக் கருதப்படுகிறது. ஆனால் வரலாறு காட்டுவது என்ன என்பதைப் பின்வருமாறு காணலாம்.

**சமஸ்கிருதம் பற்றிய விளக்கங்கள் :**

- சமஸ்கிருதம் என்பது ஆரியர்களின் மொழி என்று பொதுவாக நம்பப்படுகிறது. சமஸ்கிருதம்தான் உலகின் முதல் மொழி - மிகப் பழமையான மொழி என்று பரப்பியவர்கள் 18, 19ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த சர்.வில்லியம் ஜோன்ஸ் மற்றும் மாக்ஸ்முல்லர்ஆவர்.
- ஆனால், கி.மு. 3 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அசோக மன்னனின் கல்வெட்டுகள், விலங்கு பலி தடை குறித்து எழுதப்பட்டபோது அக்காலத்தில் வழக்கில் இருந்த இந்திய மொழிகளிலும், அவரது அரசாட்சியில் இருந்த வெளிநாட்டு மொழிகளான கிரேக்கம், அராமிக் மொழிகளிலும் எழுதப்பட்டு உள்ளன. ஆனால் அசோகரின் கல்வெட்டுகள் ஒன்றுகூட சமஸ்கிருதத்தில் காணப்படவில்லை.
- கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் சமஸ்கிருதம் இருந்திருந்தால், அது ஆரிய மொழியாகவும் இருந்திருந்தால், ஆரிய வழிபாட்டில் முக்கியமாக இடம்பெறும் 'விலங்கு பலி தடை செய்யப்பட்டது' என்ற செய்தியை, கல்வெட்டுகளில் எழுதுவதற்கு அசோக மன்னன் சமஸ்கிருதத்தையும் பயன்படுத்தியிருக்க வேண்டும். ஆனால் சமஸ்கிருதத்தில் காணப்படாமை நோக்கற்குரியது.
- கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் சமஸ்கிருதக் கல்வெட்டுகள் காணப்படவில்லை. கி.பி. 150இல் தான் முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு காணப்படுகிறது.
- கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன் இந்தியாவிலுள்ள கல்வெட்டுகளில் தமிழ், பாலி, அர்த்தமாகதி, கிரேக்கம், அராமிக் போன்ற மொழிகள் காணப்படுகின்றனவே தவிர, சமஸ்கிருதம் காணப்படவில்லை.

✦ சமஸ்கிருதம் மக்களின் பேச்சு மொழியாக இருந்ததில்லை.

'சமஸ்கிருதம்' - என்றால் 'நன்றாகச் செய்யப்பட்டது' அல்லது 'செம்மை செய்யப்பட்டது' என்பது பொருள்.

கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் சமஸ்கிருதக் கல்வெட்டுகள் காணப்படவில்லை. கி.பி. 150இல் தான் முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு காணப்படுகிறது. 'சமஸ்கிருதம்' - என்றால் "நன்றாகச் செய்யப்பட்டது'' என்பது பொருள்.

வேதங்கள் சமஸ்கிருதத்தில் உள்ளன. சமஸ்கிருதக் கல்வெட்டு முதன்முதல் கி.பி. 150-இல் தான் காணப்படுகிறது. [Dr.Alexander Harris, The Development of Civilization and Religion in India and its Influence on the World Society, Pp. 39-41; http://www.geocities.com/appiusforum/book.pdf; http://www.geocities.com/appiusforum] எனவே, வேதங்களின் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலம். [Dr.Alexander Harris - Ibid]

சமஸ்கிருதக் கல்வெட்டுக்கு முதல் சான்றாக விளங்கும் கி.பி. 150-ல் உள்ள பிராமி எழுத்துக்களால் எழுதப்பட்ட கல்வெட்டில் சந்திரகுப்த மௌரியர் கட்டிய அணையொன்று பழுதுபார்க்கப்பட்ட செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இது, கத்தியவாரில் உள்ள கிர்னார் என்ற இடத்தில் உஜ்ஜயினியின் சிற்றரசனான சக வம்சத்தைச் சார்ந்த ருத்ர தமனா என்பவனால் நிறுவப்பட்டதாகும். இதே பாறையில் அசோகரது 14 கல்வெட்டு சாசனங்கள் காணப்படுகின்றன. (Nirad C. Chaudhuri, Hinduism, 1979, Pp. 38,39 quot.by Dr.Alexander Harris,- Ibid]

சர். வில்லியம் ஜோன்ஸ் (Sir. William Jones) என்ற ஆங்கிலேயர் சமஸ்கிருதத்தில் இருந்த மனுதர்ம சாஸ்திரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அதில் உள்ள லத்தீன், கிரேக்கச் சொற்களைக் கண்டவுடன் சமஸ்கிருதம் தான் கிரேக்கம், லத்தீன் இவற்றிற்கெல்லாம் தாய்மொழி என்றும், இதிலிருந்து தான் ஐரோப்பிய மொழிகள் எல்லாம் உருவாயின என்றும் ஒரு தவறான முடிவிற்கு வந்தார். இது ஆரியர் மொழி என்றும் தீர்மானித்தார்.

இந்தியாவிலுள்ள தூய தோமா வழிக் கிறிஸ்தவர்கள் தமிழர்களுக்கு மத்தியில் நற்செய்தியைக் கூறுவதற்குத் தமிழைப் பயன்படுத்தினர். தமிழ் பேசாத பிற மக்கள் மத்தியிலே நற்செய்தி கூறுவதற்காக ஒரு பொதுமொழியை உருவாக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

எனவே, கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளின் தொடக்கக் காலத்தில் இந்தியாவில் இருந்த இந்திய மொழிகளாகிய

தமிழ்
பாலி
அர்த்தமாகதி மற்றும்
அயல் மொழிகளாகிய
பாரசீகம்
கிரேக்கம்
இலத்தீன்
அரமேயம்

ஆகிய மொழிகளைக் கலந்து உருவாக்கிய மொழியே சமஸ்கிருதம்.

பழமையான சமஸ்கிருத இலக்கியங்களின் முக்கியக் கோட்பாடுகளாக

1. மூவொருமைக் கோட்பாடு
2. அவதாரக் கோட்பாடு
3. பலிநிறைவேற்றக் கோட்பாடு
4. பாவ மன்னிப்புக் கோட்பாடு
5. விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு

ஆகியவை விளங்குகின்றன.

இக்கோட்பாடுகள் கிறிஸ்தவத்திற்கேயுரிய கோட்பாடுகளாதலால் இக்கோட்பாடுகளை இந்திய மக்கள் எல்லோருக்கும் விளக்குவதற்காகச் செய்யப்பட்ட மொழி 'சமஸ்கிருதம்'.

இந்தியாவின் பழமையான இதிகாசங்களான இராமாயணத்தையும், மஹாபாரதத்தையும் எழுதியோர் திராவிடரே. மற்றும் பிரம சூத்திரம், பகவத்கீதை முதலியவற்றை இயற்றியவரும் உபநிடதங்களைத் தொகுத்தவருமான வேதவியாசர் திராவிடரே. எனவே, தோமா வழிக் கிறிஸ்தவர்களால் கிறிஸ்தவக் கருத்துகளை இந்தியா முழுவதும் கூற, பயன்படுத்தப்பட்ட கருவியே சமஸ்கிருதம் என்பது வரலாறு காட்டும் உண்மை ஆகும்.

நாட்டில் பல்வேறு மொழி பேசுவோருக்கும் கருத்தினைப் பரப்புவதற்காக அறிஞர்களால் உருவாக்கப்பட்டதே சமஸ்கிருத மொழி. இந்தியாவில் அப்போது வழக்கத்திலிருந்த சமணர்களின் மொழியாகிய அர்த்தமாகதி, பௌத்தர்களின் மொழியாகிய பாலி, திராவிட மொழிகளின் மூல மொழியாகிய தமிழ்,

இந்தியாவிற்கு வெளி நாடுகளிலிருந்து வந்தவர்களின் மொழிகளாகிய பாரசீகம், இலத்தீன், அரமேயம் மற்றும் கிரேக்க மொழிகள் போன்றவற்றின் கலப்பு மொழியாக – சமயக் குறியீட்டு மொழியாக (Code Language) உருவாக்கப்பட்டதே சமஸ்கிருதம். எனவே இது செயற்கை மொழியே அன்றி இயற்கை மொழி அன்று.

தோமா வழிக் கிறிஸ்தவத்தை அறிவிக்க தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ அறிஞர்கள் இம்மொழியைப் பயன் படுத்தியுள்ளனனர் என்பதற்கு – பழமையான சமஸ்கிருத இலக்கியங்களின் முக்கியக் கோட்பாடுகளாக, கிறிஸ்தவக் கோட்பாடுகளாகிய மூவொருமைக் கோட்பாடு, அவதாரக் கோட்பாடு, பலிநிறைவேற்றக் கோட்பாடு, பாவ மன்னிப்புக் கோட்பாடு, விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு ஆகியவையே விளங்குகின்றமை இதைத் தெளிவாகக் காட்டும்.

இயேசு கிறிஸ்து தம் கருத்துகளை சாதாரண மக்களுக்கு உவமைகள் வழியாக விளக்கியதைப் போன்று, வெவ்வேறு மக்களுக்கு வெவ்வேறு நோக்குகளில் விளக்கப்பட்ட தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம், சாதாரண மக்களுக்கு, கதைகள், புராணங்கள் வழி எவ்வாறு விளக்கப்பட்டது என்பதை இனி காணலாம்.

# 10. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் - புராண நோக்கு

புராணம் என்பது வேறு; வரலாறு என்பது வேறு; புராணக் கதைகளில் முழு வரலாற்றையும் எதிர்பார்க்க முடியாது. எனவே, புராணம் முழு வரலாற்றையும் விளக்காமல், அதன் கூறுகளை மட்டும் எளிய மக்களுக்குப் புரியும்படியாய் விளக்கியுள்ளமை இவ்வியலில் காட்டப்படுகிறது.

மனிதனாக வந்த கடவுளையும் பிதாவாகிய கடவுளையும் தூய ஆவியாகிய கடவுளையும் பல்வேறு கோணங்களில் பல்வேறு பெயர்களில் மொழி பெயர்த்துள்ளமையையும் விளக்கியுள்ளமையையும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவப் புராணங்களும் இலக்கியங்களும் காட்டுகின்றன.

இந்தியாவில் கிறிஸ்தவம் வளரும்போது, திரித்துவக் கோட்பாடு பல்வேறு கோணங்களில் புராணங்களில் விளக்கப்பட்டது. (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் - ஒப்பாய்வு, பக்.130 - 137) பிதா, தூயஆவி, குமாரனாக, திரித்துவம் விளக்கப்படும் போது, சிலர் தூய ஆவியைப் பெண் வடிவத்தில் காணத் தொடங்கினர். இக்கூட்டத்தாரின் எண்ணப்படி, ஒரு குடும்பத்தில்,

அப்பா (பிதா),
மகன் (குமாரன்) இருக்கும் போது,
அவர்களுக்கு இடையில்

ஒரு தாய் இருந்ததாக வேண்டும்.

எனவே, அவர்கள் தூய ஆவியைத் தாய் ஆகக் கண்டு, திரித்துவத்தை

அப்பன் (பிதா),
அம்மை (தாய் - சக்தி),
மகன்
என்று விளக்கினர்.

தூய ஆவியைப் பெண்ணாக ஒரு பிரிவினர் எண்ணியபோது, அதற்கு எதிர்ப்பு உருவாகி, மற்றொரு பிரிவு உருவாயிற்று. அக்கருத்தின்படி, ஒரு கன்னிகை

தூய ஆவியினால் ஒரு குமாரனைப் பெற்றெடுத்ததினால், தூய ஆவி ஆண் வடிவிலேயே இருக்க வேண்டும் என்று கருதி, தூய ஆவியை ஆணாக உருவகித்தனர்.

அவர்கள் திரித்துவத்தில் மூவரையுமே ஆணாக உருவகித்தனர்.

கிறிஸ்தவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை எளிய மக்களும் புரிந்து கொள்ளும் முறையில், கதை வடிவில் - புராண நோக்கில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவப் புராணங்கள் விளக்கியுள்ளன.

பிதா,
தூய ஆவி,
குமாரன் மூவருமே ஆண் என்ற
நிலையில்
'மும்மூர்த்தி' (அ) திரிமூர்த்தி கொள்கையான வைணவமாக அது வளர்ந்தது.

இவ்வாறு, தூய ஆவியைப் பெண்ணாகக் கண்ட நிலையில் சைவம் வளர்ந்தது. ஆணாகக் கண்ட நிலையில் வைணவம் வளர்ந்தது.

இவ்வாறு, தூய ஆவியை, பெண் அல்லது சக்தி என்று விளக்கியது சைவமாகவும், தூய ஆவியை ஆண் அல்லது விஷ்ணு என்று விளக்கியது வைணவமாகவும் வளர்ந்தன. இந்த இரண்டு கோட்பாடுகளின் அடிப்படையில் சைவ, வைணவத்தை நோக்கும்பொழுது, தூய ஆவி பெண் (சக்தி) என்னும் நிலையில் குமரன், பிள்ளையார் என்று இரு பிள்ளைகள் கூறப்படுவதையும் தூய ஆவி, ஆண் (விஷ்ணு) என்னும் நிலையில் 'பிரமன்' , 'ஐயப்பன்' என்னும் இரு பிள்ளைகள் கூறப்படுவதையும் நோக்கலாம்.

அம்மைக்கு இரு குழந்தைகள் என்னும் நிலையில், அப்பன் சிவனாகவே விளங்குகிறார். அதைப் போன்று விஷ்ணுவிற்கு இரு குழந்தைகள் என்னும் நிலையில், விஷ்ணுவின் கணவனாகச் சிவன் கூறப்பட்டிருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது.

விஷ்ணு என்பதன் வேர்ச்சொல் 'விண்' ஆகும். விண் என்பது 'விண்ணு' , 'விட்டுணு' , 'விஷ்ணு' என மாறியுள்ளது. எனவே, 'விண்' என்பதன் சமஸ்கிருத வடிவமே 'விஷ்ணு' ஆகும். 'விண்' , 'வான்' இரண்டும் ஆகாயம் என்பதைக் குறிக்கும்.

வைணவத்தில் சிவன், விஷ்ணு, பிரமா என்று மும்மூர்த்தியாகத் திரித்துவம் விளக்கப்படுகிறது.

சைவரும், வைணவரும் புராண நோக்கில் பிதாவாகிய கடவுளை 'சிவன்' என்ற ஒருவராகவே குறிக்கின்றனர். 'சிவம்' என்றால் 'அன்பு' என்று பொருள். அன்பே உருவானவர் 'சிவன்' என்று குறிக்கப்படுகிறார். தூய ஆவியாகிய கடவுளை, 'சக்தி' என்று பெண் வடிவில் சைவர்களும், 'விஷ்ணு' என்று ஆண் வடிவில் வைணவர்களும் குறிப்பிடுகின்றனர். (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் - ஒப்பாய்வு, பக்.130-137)

சிவனின் உடம்பின் இடப்பாகம் பெண் வடிவாக (சக்தி) விவரிக்கப்பட்டால், அது 'அர்த்தநாரீஸ்வரர்' எனப்படுகிறது.

அர்த்தம் = பாதி, நாரி = பெண், ஈஸ்வரர் = கடவுள்; அதாவது, தன் உடம்பின் இடப் பகுதியைப் பெண்ணாகக் கொண்ட கடவுள் என்று பொருள்.

சிவனின் உடம்பில் இடப் பாகம் ஆண் வடிவாக (விஷ்ணு) விவரிக்கப்பட்டால், அது ஹரிஹரன் எனப்படும்.

ஹரி = விஷ்ணு, ஹரன் = சிவன்; தன் உடம்பின் இடப்பகுதியை ஆணாகக் கொண்ட கடவுள்.

சிவனுடைய உடம்பின் இடதுபாதி ஆண் வடிவமாகவும், பெண் வடிவமாகவும் சித்தரிக்கப்படுவதால், இடதுபாதி ஓர் உருவகமே என்பது பெறப்படுகிறது. அதாவது, அன்பே உருவான சிவனின் (பிதாவாகிய கடவுளின்) உடம்பின் இடப்பாகம் தூய ஆவியை இரண்டு நோக்கில் சித்தரிக்கும் (metaphorism) உருவக நிலையை உணரலாம்.

தந்தை, தூய ஆவி, மகன் என்னும் நிலையில்,

சிவன் தந்தையாகவும்
சக்தி தூய ஆவியின் பெண் தன்மையாகவும்,
விஷ்ணு தூய ஆவியின் ஆண் தன்மையாகவும்

காட்டப்படுவதுடன், மகனாகிய இயேசு கிறிஸ்து நான்கு கோணங்களில் விளக்கப்படுகிறார்.

சாத்தானை (அ) தீமையை வென்றவர்
என்கிற தன்மையை விளக்கிக் குமரக் கடவுளும்
இறந்து உயிர்பெற்றவர்
என்னும் தன்மையை விளக்கிப் பிள்ளையாரும்
உலகப் படைப்புக்குக் காரணமானவர்
என்னும் தன்மயை விளக்கிப் பிரமனும்

சூரியனைப் போன்றே ஒளிமயமானவர் என்கிற தன்மையை விளக்கி ஐயப்பனும் காட்டப்படுகின்றனர்.

இவ்வாறு, குமாரனாகிய கடவுள் சைவ, வைணவ நோக்கில் நான்கு கோணங்களில் விளக்கப்படுகிறார். (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு, பக்.130 – 137) சுருக்கமாக இதனைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

தூய ஆவியை, பெண் அல்லது சக்தி என்று விளக்கியது சைவமாகவும், தூய ஆவியை ஆண் அல்லது விஷ்ணு என்று விளக்கியது வைணவமாகவும் வளர்ந்தன.

1. சாத்தானை வென்றவர் = குமரக்கடவுளாகவும்
2. இறந்து, உயிர்த்தெழுந்தவர் = பிள்ளையார் (அ) கணபதியாகவும் (பிள்ளை = குமாரனாகிய கடவுள்; 'ஆர்' சிறப்பு விகுதி
3. படைப்புக் கடவுள் = பிரமனாகவும்
4. உலகத்தின் ஒளி என்னும் கருத்து = ஐயப்பனாகவும்

நான்கு கோணங்களில் விளக்கப்படுகிறார்.

எனவே, 'சிவக் குடும்பம்' என்பது அன்பே உருவான கடவுளின் மகனாகிய இயேசு கிறிஸ்து அளவற்ற அன்பினால் தாமே பலியாகி, நமக்கு மீட்பை ஈட்டியமையை விளக்குவது ஆகும்.

| பிதா | தூயஆவி | குமாரன் |
|---|---|---|
| சிவன் | சக்தி | 1. குமரன் |
| | | 2. பிள்ளையார் |
| | விஷ்ணு | 3. பிரமன் |
| | | 4. ஐயப்பன் |

இவ்வாறு, ஏழு கடவுளர் பெயர்கள் கூறப்பட்டுள்ள போதிலும், இவை ஓரிறைக் கோட்பாட்டையுடைய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் விளக்கங்களாகவே காணப்படுகின்றன.

பல பெயர்களில் கூறப்பட்டாலும் கடவுள் ஒருவரே என்பதை, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியங்களும், தத்துவங்களும் தெளிவாக விளக்குகின்றன.

சைவ, வைணவ சமயங்களில் குமாரனாகிய கடவுள் புராண நிலையில் எவ்வாறு விளக்கப்படுகிறார் என்பதைப் பின்வருமாறு காணலாம்.

## (I) குமரன் / முருகன் :

மனிதக் குமாரனாக அதாவது கடவுளின் குமாரனாக வந்த இயேசு இளமைப் பருவத்திலேயே பலியானார். நல்ல அழகான இளமைப் பருவம், 'குமரப் பருவம்' எனப்படுகிறது.

எனவே, மனிதனாக வந்து இளமையிலேயே தன்னை பலியாக்கிய கடவுளை தமிழில், 'முருகன்' என்று அழைத்தல் இயல்பு.

'அழகு' எனும் பொருள் தரும் 'முருகு' எனும் தமிழ்ச் சொல்லிலிருந்து 'முருகன்' என்ற பெயர் உருவானது. 'முருகன்' என்றால் 'அழகன்' என்று பொருள்.

'தீமை' பல்வேறு நிலைகளில் உருவகிக்கப்படுகிறது. கிறிஸ்தவத்தில் தீமை சாத்தானாக உருவகிக்கப்பட்டு இயேசு கிறித்து சாத்தானை வென்றதாகக் கூறப்படுகிறது.

> 'இயேசு கிறிஸ்து சாத்தானை வென்றார்' என்பது தமிழ்ப் பண்பாட்டில், தமிழ் மொழியில்,
> 'முருகன் சூரபத்மனை வென்றார்' என்று கூறப்படுகிறது.
> தீமையாகிய சாத்தான் (அ) சூரபத்மன் மாமரமாக மாறினான்.
> 'சூர்' என்றால் தீமை; 'சூரபதுமன்' என்றால் தீமையே உருவானவன்.
> முருகன், மாமரமாகி நின்ற சூரபதுமனை வேல் கொண்டு பிளந்தார்.
> அதின் ஒரு பாதி மயிலாகவும் மறு பாதி சேவலாகவும் மாறின.
> சேவல் கொடியாகவும், மயில் வாகனமாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.
> தீமையை அல்லது சாத்தானைத் தன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்ததை இவ்வாறு விளக்குகின்றனர்.
> இதில், மாமரம் சிலுவை மரத்திற்கு அடையாளமாக இருக்கிறது. இயேசு கிறிஸ்து சாத்தானை அழிக்க வில்லை. ஆனால் சாத்தானை வென்றார். சூரபத்மனும் அழியவில்லை.

முருகன் சாத்தானை வேல் கொண்டு வென்றார். தீமையை வெல்லும் அந்த வேல், சக்தி (தூய ஆவி) யிடமிருந்து பெறப்பட்டது.

இதைப் போல் ஆவியானவரின் பெலத்தினால் இயேசு கிறிஸ்து சாத்தானை வென்று உயிர்த்தெழுந்தார்.

மயில் காலின் கீழ் உள்ள பாம்பு, தீமையை அல்லது சாத்தானை வென்ற நிலையைக் குறிக்கும்.

மயிலின் மேல் முருகன் சவாரி செய்கின்றார். மயில் 'ஆணவத்'தைக் குறிக்கிறது. இயேசுவின் கட்டுப்பாட்டின் கீழ் சாத்தான் கொண்டு வரப்பட்டதை இது குறிக்கும்.

'அழகு' எனும் பொருள் தரும் 'முருகு' எனும் தமிழ்ச் சொல்லிலிருந்து 'முருகன்' என்ற பெயர் உருவானது. 'முருகன்' என்றால் 'அழகன்' என்று பொருள்.

முருகன் சூரபதுமனை வென்றவுடன் தேவேந்திரன் (தேவர்களின் தலைவன்) தன் மகள் தெய்வயானையை முருகனுக்கு மனைவியாகக் கொடுத்தார். ஆனால் முருகன் வள்ளியைத் தானாகவே தேடிச் சென்று அடைந்தார்.

இதைத் தமது தமிழ் இலக்கியங்களில் மூவொருமைக் கோட்பாடு என்னும் ஆய்வேட்டில் பின்வருமாறு விளக்குகிறார் தங்கையா. வள்ளி திருமணத்தில் குமரக் கடவுளாகிய முருகப் பெருமான் அளவில்லா கருணையினால் தாழ்விடத்தில் தோன்றிய அப்பெருமாட்டியை வலிய ஆட்கொண்டு மணந்தார் என்று புராணம் கூறுகிறது.

*"ஒரு வகையில் ஆன்மாக்கள் யாவும் நாயகிகளே. பிரபஞ்சம் என்பது பெருங்காடு. இங்கே காமம் முதலிய பொல்லாத விலங்குகள் உழல்கின்றன. மாயை என்னும் இருள் படர்ந்திருக்கிறது. உணர்ச்சியற்ற மக்களாகிய மரங்கள் அடர்ந்துள்ளன.*

*இங்கே ஐம்பொறிகளாகிய வேடர்கள் உலவுகிறார்கள். அவர்களுக்குத் தலைவன் மனமென்னும் நம்பிராசன். அந்த மனத்தோடு இணைந்து ஆன்மாவாகிய வள்ளி வாழ்கிறாள். தினை புன்செய் தானியம். அது சிற்றின்பத்தைக் குறிப்பது. அற்ப போகத்தைப் பாதுகாப்பதே தொழிலாக வாழ்நாளைக் கழிப்பது ஆன்மா. வள்ளி புன்செய் தானியத்தைக் காவல் புரிவதே தொழிலாக வாழ்கிறாள்.*

*குருநாதன் மனிதனைப் போன்ற கோலத்தில் வருவான். அவனை இனம் கண்டு கொள்ளாமல் புறக்கணித்தால் பயன் கிடைக்காது. ஆயினும் அவன் விடமாட்டான். பல சோதனைகள் செய்து ஆட்கொள்வான். வள்ளி நாயகியையும் வேறுவேறு கோலம் புனைந்து வந்து சோதித்துப் பிறகு ஆட்கொண்டவன் இறைவன்."* (கி.வா. ஜகந்நாதன், 1978, ப.295, எ-ர். ஜான்சன் தங்கையா, தமிழ் இலக்கியங்களில் மூவொருமைக் கோட்பாடு, பக்.188, 189,)

மண்ணுலகில் உள்ள உயிர்களைத் தன் பேரருளால் ஆட்கொள்வார் இறைவன் என்பதையே மேற்கண்டவை உணர்த்துகின்றன.

அது மட்டுமின்றி வள்ளி நாயகி அவனை நாடி, கெஞ்சி, தவமிருந்து அருளைப் பெற்று இருக்க வேண்டும். அதற்கு மாறாகத் தானே வலியச் சென்று அவளிடம் கெஞ்சி ஏங்கி நின்றார். இது அடியவர்களுக்கு அருள் வழங்க இறைவன் கையாண்ட முறையை விளக்குகிறது. (ஜான்சன் தங்கையா, தமிழ் இலக்கியங்களில் மூவொருமைக் கோட்பாடு, பக்.188, 189)

தெய்வயானை யூதத் திருச்சபைக்கு அடையாளமாய் இருக்கிறார். ஆனால் முருகன் வள்ளியைத் தானாகவே தேடிச் சென்று அடைந்தார். இது புறசாதி திருச்சபையைக் குறிக்கும்.

யூதரை விடத் தாழ்ந்த சாதியினராகக் கருதப்பட்ட கொர்நேலியுவின் வீட்டிற்கு, பேதுரு அனுப்பப்பட்ட நிகழ்ச்சி (அப்போஸ்தலர் 10 ஆம் அதிகாரம்) இங்கு குறிப்பிடற்குரியது.

யூதரை விடத் தாழ்ந்த புறசாதியினராகக் கருதப்பட்ட சமாரியரை, இயேசு கிறிஸ்து தேடிச் சென்று, (யோவான் 4ஆம் அதிகாரம்) அவர்களோடு தங்கி, (யோவான் 4:40) உரையாடி, நற்செய்தி கூறி, மணவாட்டித் திருச்சபையாகச் சேர்த்தமை (யோவான் 4:42) இங்கு குறிப்பிடற்குரியது.

இயேசு கிறிஸ்து மணவாளனாக விளங்க, நம் அனைவரையுமே கிறிஸ்துவின் மணவாட்டியாக, அவர் அன்பைப் பொழிந்து ஆட்கொள்ளும் நிலை, கதை வடிவில் இவ்வாறு கூறப்படுகிறது.

முருகனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தும் பிள்ளைகள் கிடையாது. முருகனுக்கு இன்னொரு பெயர் கோவணத்தாண்டி என்பதும் ஆழ்ந்து கவனிக்கத்தக்கது. எனவே, அவருக்குக் கூறப்பட்டுள்ள இரண்டு மனைவியர் என்பதும் 'உருவகமே' என்பதை, 'கோவணத்தாண்டி' எனும் பெயர் காட்டுகிறது.

முருகனுக்கு 12 கைகள் என்றாலும் கால்கள் இரண்டுதான். எனவே 12 கைகள் என்பது உருவகமே. 12 சீஷர்களைக் குறிப்பதற்கு 12 கைகள் காட்டப்பட்டுள்ளன.

**காவடி:**

காவடி = காவு + தடி

காவு = பலி

காவுதடி = பலிக்குரிய தடி

இயேசு கிறிஸ்து முழு சிலுவையைச் சுமந்து கொண்டு செல்லவில்லை. குறுக்குத் தடியை மட்டும் தான் எடுத்துக் கொண்டு சென்றார் என்பது நோக்கற்குரியது. அந்தக் குறுக்குத்தடி அவருடைய பலிக்குரிய தடியாக இருக்கின்ற காரணத்தால் காவுதடியாகிறது.

இப்போது நாம் காணும் சிலுவை உண்மையில் வேறு வடிவில் இருந்தமையும் இயேசு கிறிஸ்து சுமந்து கொண்டு சென்றது ஒரு தடியை மாத்திரம் அதாவது, "சித்திரவதை செய்வதற்குப் பயன்படுத்தும் தடி" (torture stake) என்பதும் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

> *The shape of the original crucifixion device is a matter for speculation. Sometimes, the Romans executed people on a Tau cross, sometimes on a Roman cross and sometimes* ***on a simple stake.*** *The gospels were originally written in Greek. They state that Jesus was crucified on a* ***"stauros'*** ***(Mark 18:21, Matthew 27:32, Luke 23:26, John 19:17)****. The New World Translation, translates the word as* ***"torture stake.'*** ***(http://www.csn.net/advent/fathers/0304.htm).***

மற்றும்,

> "நீங்கள் மரத்திலே தூக்கிக் கொலை செய்த இயேசுவை நம்முடைய பிதாக்களின் தேவன் எழுப்பி.........." (அப்.5: 30)

எனும் திருமறை வசனம், இயேசு கிறிஸ்து மரத்தில் இறந்ததைத் தெளிவாகக் காட்டுகிறது.

கிறிஸ்தவத்தில் இயேசு கிறிஸ்து சுமந்து கொண்டு சென்றது ஒரு தடியை மாத்திரம் என்று குறிப்பிடப்படுவதுடன் மனிதனாக வந்த கடவுள், மரத்தில் இறந்ததாகக் கூறப்படுவதும் புராணத்தில் கிருஷ்ணன் மரத்தில் இறந்ததாகக் கூறப்படுவதும் நோக்கற்குரியன. மனிதனாக வந்த கடவுள் மரத்தில் பலியானதன் அடையாளமாக, மரத்தாலான சாவிற்கு (காவு) உரிய தடியை - காவு+தடி = காவடியைத் தமிழகத்தில் பக்தர்கள் எடுத்துச் செல்வதை இன்றளவும் காணலாம்.

## (II) பிள்ளையார் :

மனிதனாக அவதரித்த கடவுளை, புராண நோக்கில் 'பிள்ளையார்' என்கின்றனர் சைவர். அவர் கடவுளுக்குப் பிள்ளையாக இருப்பதால் 'பிள்ளை' என்பதுடன் 'ஆர்' எனும் மரியாதைப் பன்மை விகுதியை இணைத்து, 'பிள்ளையார்' என்கின்றனர்.

- பிள்ளையாரை அழுக்கு உருண்டைப் பிள்ளையார் என்பது ஏன்?
- பிள்ளையார் தலையை அவருடைய தந்தையாகிய சிவனே வெட்டுவதாகக் கூறுவது ஏன்?
- பிள்ளையார் யானைத் தலையுடன் காணப்படுவது ஏன்?
- பிள்ளையார் ஊர்வல இறுதியில் பிள்ளையாரை, தண்ணீரில் கரைப்பது ஏன்?
- பிள்ளையார் மட்டும் ஏன் 'வினை தீர்க்கும் விநாயகர் என்று குறிக்கப்படுகிறார்?

என்பவற்றை இங்குக் காணலாம்.

## (i) அழுக்குருண்டைப் பிள்ளையார்:

பிள்ளையாரை, 'அழுக்கு உருண்டைப் பிள்ளையார்' என்று கூறக் காரணம் என்ன?

பிள்ளையாரைப் பற்றிய கதையில், அவர், தாயின் அழுக்கினால் உருவாக்கப்பட்டவராகக் காட்டப்படுகிறார். இதற்குக் காரணம் பாவ அழுக்காகிய சகசமலத்தில் (Original sin) உள்ள நம்மை மீட்பதற்காக, கடவுள் தாமே தம்மைப் பாவம் நிறைந்த மனித நிலைக்கு உட்படுத்தினார் என்பதை, சைவத்தில் புராணம் இவ்வாறு விளக்குகிறது.

விவிலியத்தில் 2 கொரி. 5:21 ன்படி,

> *'மனிதர் அனைவரும் கடவுளின் நீதியுள்ள பிள்ளைகளாகும்படி,*
> *பாவம் அறியாத அவரை நமக்காகப் பாவம் ஆக்கினார்'*

என்று கூறப்படுகிறது.

## (ii) பிள்ளையார் தலையை அவருடைய தந்தையே வெட்டியது ஏன்?

பிள்ளையார் கதையில் அவருடைய தந்தையே, பிள்ளையார் தலையை வெட்டியதாகவும் பின்னர், யானைத் தலையை ஒட்டியதாகவும் கூறப்படுவது நோக்குதற்குரியது. திருமறையின் பின்வரும் பகுதிகள் ஆழ்ந்து சிந்தித்தற்குரியன.

> ***"என் உயிரை என்னிடமிருந்து யாரும் பறித்துக் கொள்வதில்லை. நானாகவே அதைக் கொடுக்கிறேன். உயிரைக் கொடுக்கவும் எனக்கு***

*அதிகாரம் உண்டு; அதை மீண்டும் பெற்றுக் கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு; என் தந்தையின் கட்டளைப்படியே நான் இப்படிச் செய்கிறேன்"* (யோவான் 10:18)

*...இறந்த அவரை (இயேசு கிறிஸ்துவை) உயிர்த்தெழச் செய்த தந்தையாம் கடவுளாலும்...*
(கலாத்தியர் 1:1-2)

மனிதனாக வந்த கடவுள் மரத்தில் பலியானதன் அடையாளமாக, மரத்தாலான சாவிற்கு (காவு) உரிய தடியை- காவு+தடி=காவடியைத் தமிழகத்தில் பக்தர்கள் எடுத்துச் செல்வதை இன்றளவும் காணலாம்.

மக்களை விடுவிப்பதற்காக, மனிதனாக அவதரித்த கடவுள், தனது தந்தையாரின் திட்டப்படி, இவ்வுலகில் குருவாக வந்து, பலியாகி, மீண்டும் உயிர்த்தெழுந்தார் என்பதையே புராணத்தின் வழி தந்தையே பிள்ளையின் தலையை வெட்டி ஒட்டுவதாக விளக்குகின்றனர் சைவர்.

## (iii) யானைத் தலை ஏன்?

பலியானபோதிலும் அவர் அப்படியே அழிந்துவிட வில்லை; மீண்டும் உயிர்தெழுந்தார் என்பதை விளக்கவே யானைத் தலை ஒட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. உயிர்தெழுவதற்கு முன்புள்ள உடல் வேறு; உயிர்த்தெழுந்த பின்புள்ள மறு ரூபமாக்கப்பட்ட உடல் வேறு. அது மகிமைக்குரிய உடல் என்பதை விளக்க, விலங்குகளிலேயே மிகப் பெரியதும், சிறப்பாகக் கருதப்படுகிறதுமான யானையின் தலை ஒட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது.

## (iv) பிள்ளையார் ஊர்வலத்தின் இறுதியில் பிள்ளையாரை, தண்ணீரில் கரைப்பது ஏன்?

மக்களை விடுவிப்பதற்காக மனிதனாக அவதரித்த கடவுள், தூய ஆவியினால் அவதரித்தமையைத் திருமறை விளக்குகிறது. தூய ஆவியை, திருவள்ளுவர் 'வான்சிறப்பு' எனும் அதிகாரத்தில் வாழ்த்துகிறார்.

தூய ஆவி மழையாகவும் அருள் மாரியாகவும் கிறிஸ்தவத் திருமறையிலும் சைவத் திருமுறையிலும் விளக்கப்படுவதைக் காணலாம்.

*தாகமுள்ளவன் மேல் தண்ணீரையும், வறண்ட நிலத்தின் மேல் ஆறுகளையும் ஊற்றுவேன்...* (ஏசாயா 44:3)

*இதோ இறுதி நாட்களில் எல்லார் மேலும் என் ஆவியைப் பொழிவேன்.*
(அப்போஸ்தலர் 2:17)

*ஆவியை மழைபோல ஊற்றுவேன்*

*ஆவி அருள்மாரி பொழியவே*

என இறையருள், தூய ஆவி, அருள்மாரி என்று துதிபாடல்களில் பாடப்படுவது குறிப்பிடுதற்குரியது.

தூய ஆவியினால் உற்பவித்து அவதரித்தவர் கடவுளின் பிள்ளை என்பதால், தூய ஆவியினிடத்திற்கே சென்று, நமக்கு, தூய ஆவியை அனுப்புகிறார் என்பது பின்வருமாறு விளக்கப்படுகிறது.

*'தந்தை அனைத்தையும் தம் கையில் ஒப்படைத்துள்ளார் என்பதையும் தாம் கடவுளிடமிருந்து வந்தது போல் அவரிடத்திற்கே திரும்பச் செல்ல வேண்டும் என்பதையும் அறிந்தவராய்'*

*(யோவான் 13:3)*

*'நான் போகாதிருந்தால் தேற்றரவாளன் உங்களிடத்தில் வாரார்...'*

*(யோவான் 16:7)*

தூய ஆவியால் உற்பவித்து, அவதரித்தவர், அவதாரம் எடுக்கக் காரணமாய் இருந்தவரிடத்திலேயே செல்வதையும் அவர் சென்ற பின் தூய ஆவியை நம்முடைய தேற்றரவாளனாக அனுப்புவதையும் விளக்குவதற்காக, பிள்ளையார் ஊர்வல இறுதியில் தூய ஆவியின் உருவகமாகிய தண்ணீரில் கரைக்கப்படுவதன் வழி விளக்குகிறார்கள்.

## சிற்பங்களில் பிள்ளையார்:

பிள்ளையார் சிற்பங்கள் அனைத்தும் கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவையே.

தமிழகத்தில் திருவாரூர் மாவட்டத்தில் பிள்ளையார் உருவம் மனித முகத்துடன் காணப்படுகிறது.

இதனை 'ஸ்ரீ ஆதி விநாயகர்' எனும் பெயரில் குறிப்பிடு கின்றனர். திருஞான சம்பந்தர் பாடல் பெற்ற இடம் இது. திலதர்ப்பணபுரி (செதலபதி) ஸ்ரீசுவர்ணவல்லி அம்பிகா சமேத ஸ்ரீமுக்தீஸ்வரர் ஆலயத்தில் வடகிழக்கு பாகத்தில் இவ்வுருவம் உள்ளது. (தினமணி 15, பிப்ரவரி 2003) இது, மனிதனாக வந்த கடவுள் பலியாவதற்கு முந்திய நிலையைக் காட்டுவதாக உள்ளது. திருநெல்வேலி மாவட்டம் கடைய நல்லூர் அருகில் தலையின்றிக் காணப்படும் பிள்ளையார் உருவம், மனிதனாக வந்த இறைவனின் இறப்பினைக் காட்டுவதாகக் கொள்ள இடம் தருகின்றது.

மனிதனாக வந்த கடவுள் மனிதரை மீட்க, தாமே பலியானதை மேற்கண்டவை காட்டுகின்றன. பலியான கடவுள் பின்னர் உயிர்த்தெழுந்ததையே, வெட்டப்பட்ட தலை பின்னர் ஒட்டப்பட்டதன் வழி புராண நிலையில் விளக்கப்படுகிறது.

## (v) வினை தீர்க்கும் விநாயகர்:

ஏன் பிள்ளையாரை வினை தீர்ப்பவராகக் கூறுகின்றனர்? அவர் யாருடைய வினையை எவ்வாறு தீர்த்தார்?

இதைக் குறித்து 'விநாயகர் அகவலில்', கடவுள் மனிதனாகி, குருவாக இவ்வுலகில் வந்து, மனிதரின் கொடிய பாவ வினையைத் தீர்த்தார் என்று ஔவையார் கூறுகிறார். இதைப் பின்வருமாறு பாடுகின்றார்.

*'குருவடி வாகிக் குவலயம் தன்னில்*
*திருவடி வைத்துத் திறம் இது பொருள் என*
*வாடாவகைதான் மகிழ்ந்து எனக்கு அருளிக்*
*கோடு ஆயுதத்தால் கொடுவினை களைந்தே'*

*(ஔவையார், விநாயகர் அகவல்)*

இப்பாடலில் மனிதரின் கொடிய வினை அல்லது கொடுவினை என்பது, பிறக்கும்போதே வருகின்ற வினையாகிய ஜென்ம பாவத்தையும் (Original sin, சைவத்தில் சகசமலம்), அவரவர் செய்கின்ற வினையாகிய கர்ம பாவத்தையும் (Individual Sin) குறிக்கின்றது. இவை இரண்டும் மனிதனைக் கொடிய நிலைக்குத் தள்ளுவதால் இந்தக் கொடுவினையிலிருந்து மனிதரை மீட்க, கடவுள் குருவாக அவதரித்தார்.

குருவாக அவதரித்த கடவுள், கோடு ஆயுதத்தின் மூலம் ('கோடு' என்றால் மரக்கொம்பு என்று பொருள்.) அதாவது, மரக் கொம்பாலான ஆயுதத்தின் மூலம் கொடிய வினையைத் தீர்த்தார் என்று கூறப்படுகிறது.

குருவாக அவதரித்து, மரக் கொம்பாலான ஆயுதத்தின் மூலம் பாவ வினைகளைத் தீர்த்த கடவுள் யார்? என்பதை வரலாற்று வழியில் நோக்கினால், அது மனிதராக வந்து, மரக் கொம்பாலான சிலுவையில் பலியாகிய இயேசு கிறிஸ்துவையே குறிக்கிறது.

சிலுவையில் கொலை செய்யும் வழக்கம் இந்தியாவில் இல்லாததால், மரக் கொம்பாலான அக் கருவி 'கோடு ஆயுதம்' எனும் சொற்றொடரால் குறிக்கப்படுகிறது.

திருக்குறளில் இவ்வாயுதம் 'பொறி' எனும் சொல்லால் குறிக்கப்படுவதும் இங்கு கவனிக்கத்தக்கது.

பொதுவாக, நாம் பயன்படுத்தும் 'கருவி'யை, 'பொறி' எனும் சொல்லால் குறிப்பிடுவது வழக்கம். 'அவர் சிலுவையில் பலியானார்' என்பதை, திருவள்ளுவர்,

*'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்'*

*(திருக்குறள் - 6)*

எனும் குறளில் விளக்குகிறார். மனிதனாக வந்த கடவுள், பொறியாகிய 'சிலுவை'யில் ஐம்புலனாகிய முழு உடலையும் அவித்தார்; அதாவது பலியாக்கினார் என்பதையே இக்குறள் காட்டுகிறது. இவ்வாறு மனிதனாக வந்த கடவுள் தன்னையே பலியாக்கி, நமக்குக் காட்டிய வழியில் நிற்பவரே நீடு வாழ்வை அடைவர் என்று கூறுகிறார்.

அவர் பலியாகி, மனிதரைப் பாவத்திலிருந்து விடுவித்ததால், அவருடைய பலியை,

*'கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்'* *(திருவுந்தியார் 3)*

அதாவது, கண்டமாகிய சாவைக் கொண்டு, (தம்மையே பலியாக்கி), கருமமாகிய நம் வினையை முடித்தவர் என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது.

கடவுளுடைய பிள்ளை, இவ்வாறு மக்களுக்காகப் பலியானதையே, திராவிடச் சிந்தனையில், புராண நோக்கில் பிள்ளையாராகக் குறிப்பிடுகின்றனர்.

## (III) பிரமன் :

இவர் 'படைப்புக் கடவுள்' என்று கூறப்படுவது குறிப்பிடற்குரியது. இந்தக் கருத்து,

*'சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று, உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை'* *(யோவான் 1:3)*

என்று கிறிஸ்துவின் படைப்பு நிலையை விளக்குவதாக உள்ளது.

ஆனால், பிற்காலத்தில் 'பிரமன்' கருத்து திரிக்கப்பட்டதையும் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலை நிறுத்த, ஆரியர் 'பிரமன்' கொள்கையைத் திரித்து பயன்படுத்தியதையும் சமய வரலாற்றில் காணலாம்.

## (IV) ஐயப்பன்:

ஐயப்பன் - ஐயன் / அப்பன்

18 படியேறி சென்று 'ஒளி'யைக் காண்கின்றனர்.

'நான் உலகிற்கு ஒளியாயிருக்கிறேன்' என்பதை இது காட்டுகிறது.

*இப்படி முக்கியமான நிகழ்ச்சிகளை விளக்குவதற்காக வைக்கப்பட்ட உருவங்களை, பின்னாட்களில் வழிபடத் தொடங்கினர்.*

## (V) நடராஜர் தத்துவம்:

கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் சிவபெருமானின் இடுகாட்டு நடனமாகக் காட்டப்படுகின்றது.

*'மாண்டார்சுட லைப்பொடி பூசி மயானத்*
*தீண்டாநட மாடிய வேந்தன்'*

*( திருஞானசம்பந்தர் - தேவாரம்-ப.46-9 )*

*'கறையணி மாமிடற்றன் கரிகாடரங் காவுடையான்'*

*( திருஞானசம்பந்தர் - தேவாரம்-ப.614-1 )*

எனும் பாடலடிகளும் சிவபெருமானை, அச்சந்தரக் கூடிய சாவினை வென்ற இடுகாட்டு ஆடலரசனாகக் காட்டுகின்றன.

*சிவன் சுடுகாட்டில் நடனம் ஆடுகிறார்.*
*நடனம் ஆடுதல் மகிழ்ச்சிக்கு அடையாளம்.*
*மகிழ்ச்சிக்குக் காரணம் வெற்றியாகும்.*

ஏன் மயானத்தில் ஆடினார்? மயானம் என்பது மரணத்தைக் குறிக்கும் இடம். மரணத்தை வென்ற நிலையே மயானத்தில் நடனம் ஆடுவதின் வழி விளக்கப்படுகிறது. மயானத்தில் பெற்ற வெற்றி என்ன?

சிலுவையில் பலியான இயேசு கல்லறையில் அடக்கம் பண்ணப்பட்டார். மூன்றாம்நாள் உயிர்த்தெழுந்தார். இது மகிழ்ச்சிக்குரியது - மகிழ்ச்சிக்குரிய வெற்றி ஆகும். வெற்றி கிடைக்கும்போது பொதுவாக, கூத்தாடுவது இயல்பு. எனவே மயானத்தில் பெற்ற வெற்றி மரணத்தை வென்ற வெற்றிக் கூத்தாக விளங்குகிறது. பக்தி இயக்கத்தின் முன்னோடியான காரைக்காலம்மையார் ஈமப் புறங்காட்டை இறைவனுடைய நடன அரங்காகக் கண்டமை இங்கு குறிப்பிடற்குரியது. (ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.76)

வெற்றி கொள்ளப்பட்டது யார்? தீமை (அ) பிசாசு; அவர் காலடியில் தீமை - பிசாசு உள்ளது. அதாவது, தீமையை வென்ற வெற்றிக்கூத்தே இந்த நடனம். இது ஒழுங்கோடு அமைந்திருக்கும்.

மனிதனாக வந்த கடவுள், தன்னையே பலியாக்கி, தீமையை வென்ற நிலையில் அவர் வெறும் மனிதர் மட்டுமே என்று நினைத்துவிடக் கூடாது என்பதற்காகவும் 'அவர் மனிதராக வந்த கடவுள்' என்பதைக் காட்டுவதற்காகவும் 4 கைகளுடன் வடிவமைத்துள்ளனர்.

4 கைகளில் ஒரு கை உடுக்கையுடன் காணப்படுகிறது. 'உடுக்கை' (ஒலி / சப்தம் / வார்த்தை) உலகைப் படைத்த வார்த்தையைக் குறிப்பதாக உள்ளது. ஒரு கையில் நெருப்பு உள்ளது. தீமையை (அ) இருளை வென்றவர். ஒளி வடிவமானவர் என்பதைக் குறிப்பது.

ஒரு கை - வருத்தப்பட்டுப் பாரஞ்சுமக்கிறவர்களே... என்றழைத்து அடைக்கலம் கொடுப்பதாய்க் காணப்படுகிறது. மற்றொரு கை, தம்மை அண்டியவர்களுக்கு எந்தத் தீவினையும் அண்டாது என்பதை உணர்த்த, திருவடிகளைக் காட்டுகிறதாய் இருக்கின்றது.

1. உடுக்கை – 'ஓம் , 'ஆம்' – 'ஆமென்' எனும் வார்த்தையால் கடவுள் உலகைப் படைத்ததைக் காட்டுகிறது.
2. அக்னி (நெருப்பு) – தீமையை அழிக்கிறது.
3. ஒரு கை வருத்தப்படுபவர்களுக்கு அடைக்கலம் கொடுக்கிறது.
4. திருவடிகளைக் காட்டும் கை ஆன்மாக்களுக்கு இறைவன் பாதத்தில் அடைக்கலம் உண்டு என்பதைக் காட்டுகிறது.

ஒரு கால் மனிதருக்குத் துன்பத்தைத் தரும் தீமையாகிய சாத்தான் மேல் நின்று கொண்டிருக்கிறது. இது தீமையை (அ) சாத்தானை வென்ற நிலை. மற்றொரு கால் – ஆடிய பாதம் – தூக்கிய திருவடி.

எனவே, நடராஜரின் சிவநடனம் (Dance of Siva) என்பது, அன்பின் நடனத்தைக் குறிக்கிறது. அது வெற்றியின் நடனம். தீமையை வென்ற நடனம்.

| | | |
|---|---|---|
| (சிதம்பர) ரகசியம் | - | அருவம் |
| சிவலிங்கம் | - | அருவுருவம் |
| நடராஜர் | - | உருவம் |

இம்மூன்றும் உள்ள இடம் சிதம்பரமாகும்.

| | | |
|---|---|---|
| சிதம்பர இரகசியம் | - | யூத மதம். |
| சிவலிங்கம் | - | இஸ்ரவேல் மதம் |
| நடராஜர் | - | கிறிஸ்தவம் |

நான்கு வேதங்களில் நடராஜப் பெருமான் குறித்து ஏதும் குறிப்பு கிடையாது.

இவ்வாறு, உயிர்த்தெழுந்த இயேசுகிறிஸ்து, சைவப் புராண நோக்கில் நடராஜப் பெருமானாக விளக்கப்படுகிறார்.

## (VI) இயற்கையிறந்த பிறப்பு:

மனிதனாக வந்த இறைவனின் பிறப்பு இயற்கையிறந்த பிறப்பாகவே பல்வேறு சமயங்களிலும் கூறப்படுகின்றமை நோக்கற்குரியது.

கிறிஸ்தவத்தில், கிறிஸ்துவின் பிறப்பு, தூய ஆவியினால் கன்னிக்குப் பிறந்த தன்மையைக் காட்டுவதாக உள்ளது. இஸ்லாமிய சமயத்திலும் இது சிறப்பித்துப் பேசப்படுகிறது. சைவ, வைணவ சமயங்களிலும் இந்நிலை காணப்படுகிறது. குமரக் கடவுளாகிய முருகன், பிள்ளையார் சாதாரண ஆண், பெண் உறவினால் பிறந்ததாகக் கூறப்படாமை நோக்கற்குரியது.

பொய்கையில் பிறந்தவராக 'முருகன்' குறிக்கப்படுவதும், சக்தியாகிய பெண் ஒருத்தியின் மூலமாகவே 'பிள்ளையார்' உருவானதாகக் கூறப்படுவதும் நோக்கற்குரியன.

வைணவத்தில் 'பிரமன்' விஷ்ணுவின் உந்திக் கமலத்திலிருந்து வருவதாகக் கூறப்படுவது நோக்கற்குரியது.

ஐயப்பன், சிவன் – விஷ்ணுவின் இணைப்பினால் பிறந்ததாகக் கூறப்படினும் விஷ்ணு, ஆண் தன்மையிலிருந்து விடுபடாதவராகக் காட்டப்படுவதும் நோக்கற்குரியது.

பௌத்தத்தில் போதிசத்துவர்கள், சாதாரணமான ஆண், பெண் உறவினால் பிறக்காமல் இயற்கைக்கு அப்பாற்பட்ட பிறப்பினை உடையவர்கள் அல்லது உடலினை உடையவர்கள் (Mahavatsu. Vol.I-P.201- Quoted by Susmita Pande - Op.Cit.,-P.74) எனக் கருதப்படுவதும் நோக்கற்குரியது.

## கண்ணன்:

வைணவத்தில் கண்ணன் வழிபாடு குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது. மனிதனாக இவ்வுலகில் அவதரித்த கடவுளை, குழந்தை வடிவில் கண்ட நிலையை, கண்ணன் வழிபாடு காட்டுகிறது.

*"கண்ணன் வழிபாடு உலக முழுவதும் உள்ள நாடுகளில் பக்தர்களால் பெரிதும் வணங்கப்பட்ட வளத்தெய்வ (Vegetation deity) வழிபாட்டின் வளர்ச்சியாக இருக்கக்கூடும். (Hemachandra Raychaudhuri, Materials for the Study of the Early History of the Vaishnava Sect., 1920, P.25)*

என்பதால் வீரனாகவும் தலைவனாகவும் இருந்த கண்ணன் பின்னர்த் தெய்வமாக்கப்பட்டமையும் வாசுதேவனோடு இணைக்கப்பட்டு, அவதாரமாகச் சிறப்பிக்கப்பட்டமையும் பெறப்படுகின்றன.

குழந்தைக் கண்ணன் வழிபாடு பிற்பட்ட காலத்தைச் சார்ந்ததாக இருப்பதோடு, மேலை நாட்டினரான கிறித்தவரின் கதைகளைத் தழுவியதாக இருக்கக் கூடுமென்பதைப் பின்வரும் பகுதி எடுத்துக் காட்டுகிறது.

*" கண்ணன் கதையின் மூன்றாவது அம்சம் குழந்தைக் கண்ணன் வடிவமாகும். கண்ணன் வழிபாட்டோடு தொடர்புபடுத்தப்பட்டவைகளில் இது மிகப் பிந்தியதென்பது தெளிவு; எவ்வாறு இக்கதை உண்டாகியது என்பது இன்றுந் தெரியவில்லை. இடைக்காலத் தொடக்கத்தில் இந்தியாவின் மேற்குக் கரையில் கிறித்தவ வணிகர் அல்லது நெசுத்தோரிய சமயத் தூதர் கொணர்ந்த கதைகளைத் தழுவி எழுந்திருக்கலாமோ?*

*அறிஞர் பலர் இதை மறுக்கலாம்; ஆனால் இது நிகழக் கூடியதொன்றென்பதை நாம் ஒதுக்கிவிட முடியாது. எவ்வாறாயினும் பிற்காலச் சிற்பங்களில் பெரும்பாலும் காணப்படும் கொழு கொழுப்பான தவழும் குழந்தை வடிவம், கண்ணன் வழிபாட்டிற்கு ஒப்பற்றவோர் முழுமையைக் கொடுக்கின்றது. வீரத் தலைவனான கண்ணனை அடியார் தம் தெய்வத் தந்தையாகவும் ஐயனாகவும் வழிபட்டனர்; இடைக் குமரன் வடிவிலே அவனைக் காதலனாய்த் தொழுதனர்; குழந்தைக் கண்ணனை மகனாய்த் துதித்தனர்' (A.L. பசாம். வியத்தகு இந்தியா, மே.ப. பக். 421 –422)*

கண்ணனைக் குழந்தை வடிவில் செதுக்கிய சிற்பங்களுள் பழமையானதாகத் தியோகரிலுள்ள புடைப்படிமம் விளங்குகிறது. குழந்தை தாய் தந்தையுடன் காணப்படுவதுடன் தாய் மேனாட்டு உடையுடன் காணப்படுவது ஆழ்ந்து நோக்கற்குரியது. இஃது இந்தியாவிற்கு வெளியிலிருந்து கொண்டு வரப்பட்டது என்பதை நிறுவுவதாக உள்ளது. கல்கத்தாப் பல்கலைக் கழகத்திலுள்ள அஸ்தோசு அருங்காட்சியகத்திலுள்ள (Plate XXVI) (Asutosh Museum) தியோகரின் இப்புடைப்படிமம் பின்வருமாறு விளக்கப்படுகிறது.'

'கண்ணனையும் பலராமனையும் அவர்கள் இடைக்குல வளர்ப்புப் பெற்றோரான நந்தனும் யசோதையும் தழுவியவாறு நிற்கின்றனர். பின்புலம் முல்லை நிலக் காட்சியுடன் காணப்படுகிறது. யசோதை அணிந்துள்ள நீளமான பாவாடையும் தலையையும் தோளையும் மூடியுள்ள நீண்ட முகமறைப்புத் திரையும் நோக்கற்குரியவை. இவ்வாடை வெளிநாட்டு உடையமைப்போடு கூடியது. அதில் பிற்காலக் காந்தாரக் கூறுபாடும் சற்றே கலந்துள்ளது. இதில் ஆநிரையும் பின்புலக் காட்சியும் ஆபிரர்களின் இனத்திற்குச் சொந்தமானது என மரபாகச் சொல்லப்படுகிறது. (Jitendra Nath Banerjea, The Development of Hindu Iconography, 1983, P.422)

மயானத்தில் நடனம் ஆடும் நடராஜரின் சிவநடனம் என்பது, அன்பின் நடனத்தைக் குறிக்கிறது. அது தீமையை வென்ற நடனம். கல்லறையில் இருந்து உயிர்த்தெழுந்த இயேசுகிறிஸ்து, சைவப் புராண நோக்கில் நடராஜப் பெருமானாக விளக்கப்படுகிறார்.

வெளிநாட்டு உடையமைப்புடன் காந்தாரக் கூறுபாடுகளையும் கொண்டதாய் விளங்கும் இப்படிமம் ஆபிரர்களின் இனத்திற்குச் சொந்தமானது என்று கூறப்படுவது நோக்கற்குரியது. இவற்றைப் போன்ற காட்சிகள் பல பதாமியிலுள்ள இரண்டாம், நான்காம் குகைகளில் காணப்படுவதாக, பானர்ஜி குறிப்பிடுகிறார். *(Jitendra Nath Banerjea, The Development of Hindu Iconography, 1983, P.422)*

குழந்தைக் கண்ணன் வழிபாடு ஆபிரர்களின் இனத்திற்குச் சொந்தமானது என்ற பானர்ஜியின் கருத்தை வலியுறுத்துவதாய்ப் பண்டார்க்கரின் பின்வரும் பகுதியும் அமைந்துள்ளது.

*" ஆபிரர்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிறுதியிலும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலும் இந்தியாவில் குடியேறியிருக்கலாம். குழந்தைக் கடவுள் வணக்கத்தையும் இவர்கள் கொண்டு வந்திருக்க வேண்டும். அவனுடைய எளிமையான பிறப்பு, அவன் தன் மகன் அல்லன் என அறிந்திருந்த போற்றற்குரிய தந்தை, ஒன்றுமறியா இளஞ்சிறார் கொலை போன்ற கதைகளையும் அவர்கள் கொண்டு வந்திருக்க வேண்டும். கடைசி இரண்டு கருத்துகளும் கண்ணனை வளர்த்த நந்தனின் கதையோடும் குழந்தைகளைக் கொன்ற கம்சனின் கதையோடும் பொருந்துவனவாயுள்ளன.................. கிறித்து என்னும் பெயரைக் கூட இவர்களே இங்குக் கொண்டு வந்திருக்கலாம். இவர்களின் குழந்தைக் கடவுள் வணக்கம் வாசுதேவக் கண்ணனோடு*

*தொடர்புபடுத்தப்பட்டிருக்கலாம். கோவா மக்களும் வங்காளிகளும் 'கிருஷ்ணா' என்னும் பெயரைக் 'குஷ்டோ' என்றும், 'கிருஷ்டோ' என்றும்தான் உச்சரிக்கிறார்கள்.'* (R.G. Bhandarkar, Vaisnavism Saivism and Minor Religious Systems, 1983, P.53)

*'' கிறித்தவத் திருமொழியிலுள்ள (கொசுபல்)* கதைகளைப் போன்ற பல கதைகள் கண்ணனைப் பற்றி உள்ளன. இந்திய ஏரடுவாக+ விளங்கிய கம்சன் கண்ணனைக் கொலை செய்ய முயன்றாலும் கண்ணன் தப்பியோட முயன்றதும் பற்றி அக்கதைகள் கூறுகின்றன.*

* Gospel + Herod

எனக் கிறிஸ்தவத்திற்கும் கண்ணன் கதைகளுக்குமுள்ள தொடர்புகள் குறிப்பிடப்படுகின்றன.

## (VII) இறைவனும் இறைமகனும்:

மனிதனாக வந்த கடவுள், கடவுளினின்று வேறுபடினும் அவர் கடவுளின் அவதாரமாக விளங்குவதால் இருவரும் ஒன்றன், வெவ்வேறு வடிவங்களாயுள்ள தன்மையைச் சமயங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

விவிலியத்தில்

*'என்னைக் கண்டவன் பிதாவைக் கண்டான் '* (யோவான் 14:9)

*'நான் பிதாவிலும் பிதா என்னிலும் இருக்கிறதை....'* (யோவான் 14:10)

என, மனிதனாக வந்த கடவுள் கூறும் பகுதிகள் இதனைத் தெளிவுபடுத்தும்.

பௌத்தத்தில்,

*'நானே அனைத்திற்கும் மேலான கடவுளாக இருக்கிறேன். இவ்வுலகினை மீட்கும்படியாக வந்தேன்.'* (Susmita Pande, BIRTH OF BHAKTI IN INDIAN RELIGIONS AND ART, 1982, P.76)

என்று புத்தர் கூறுவதாக அமைந்துள்ள பகுதியும் இதனைத் தெளிவுபடுத்தும்.

*'அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்தது... '* (திருவுந்தியார் – 1)

எனும் சைவ சித்தாந்தப் பகுதியும்

வைணவத்தில் விஷ்ணுவின் அவதாரங்களும் இதற்குச் சான்றுகளாய் உள்ளன.

சிவபெருமானைக் குறிக்கும் பல பெயர்களுள் ஒன்று 'நடராசன்' என்பது. இப்பெயர் பரம்பொருளைக் குறிக்கும் அதே வேளையில், மனிதனாக வந்த கடவுளையும் குறிப்பது நோக்கற்குரியது.

## (VIII) மனிதனாக வந்த கடவுள்:

மனிதனாக வந்த கடவுளைச் சமயங்கள் பல்வேறு கோணங்களில் கண்டுள்ளமையைப் பல்வேறு சமயங்களும் காட்டுகின்றன.

குருவாகவும் அரசராகவும் மன்னுயிர்க்காகத் துன்பம் அடைந்தவராகவும் சாவை வென்றவராகவும் தீமையை வென்றவராகவும் கண்டுள்ளமையைப் பல்வேறு சமயங்களும் எடுத்துக் காட்டுவதிலும் ஓர் ஒற்றுமை புலப்படுகிறது.

உலகிலேயே, மன்னிப்பு
என்ற தெளிவான கருத்தை -
கடவுள் மன்னிக்கிறார் -
மன்னிப்பைக் கொடுத்து விட்டார்
என்ற ஆழமான கருத்தை
உடையது கிறிஸ்தவம்
மட்டுமே ஆகும்.

## (IX) குரு:

மனிதனாக வந்த இறைவன் குருவாக, அறிவுரைகள் பல கூறிச் சென்றமையைக் குருக் கோட்பாடு விளக்குகிறது.

கிறிஸ்தவத்தில், 'கிறிஸ்து' என்பதற்கு, குரு எனும் பொருளும் இருப்பது குறிப்பிடற்குரியது.

> *'மேசியா', 'கிறிஸ்டாஸ்' என்னும் சொற்கள், 'எண்ணெய் வார்க்கப்பட்டவர்' என்னும் பொருளை யுடைய எபிரேய, கிரேக்கச் சொற்களாகும். 'எண்ணெய் வார்த்தல்' என்பது ஒருவரைத் தீர்க்கராகவோ, குருவாகவோ, அரசராகவோ நியமிப்பதற்கு இசுரவேல் மக்கள் கையாண்ட ஒரு சடங்கு ஆகும். எண்ணெய் வார்க்கப்பட்டவர் என்னும் பொருள் கொண்ட 'மேசியா' அல்லது 'கிறிஸ்டாஸ்' அல்லது 'கிறித்து' என்றால் தீர்க்கர், குரு, அரசர் என்னும் பொருளை உணர்த்தும். வரப்போகும் காரியங்களை உலகிற்கு முன்னறிவிக்கும் தீர்க்கராகவும் மாணவர்களுக்குக் குருவாகவும் அவர் போதித்த இறையரசுக்கு அரசராகவும் இயேசு விளங்கினார்.'* (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு,1975, ப.256.)

எனும் பகுதிகள் மேற்கூறியதைத் தெளிவுபடுத்தும்.

பௌத்தத்தில் புத்தரைத் தெய்வமாகக் காணும் வடிவங்கள் பலவற்றில், அவரைக் குரு வடிவில் காண்பதும் நோக்கற்குரியது. சைவத்தில் தட்சிணாமூர்த்தியின் உருவம் இத் தன்மையைக் காட்டும். ஆலமர் செல்வனாக, குருவாக அமர்ந்து, விளக்கும் நிலை இதில் காட்டப்படுகிறது.

*' ஒருவராயிரு மூவருமாயவன் குருவதாய குழகன் '*

*(திருநாவுக்கரசர் - பன்னிரு திருமுறை - முதற் பகுதி - ப.43(1))*

*' குருவே சிவமெனக் கூறினன் நந்தி '*

*(திருமந்திரம் 1586)*

எனும் பாடலடிகளும் இறைவனின் குரு தன்மையைக் காட்டுகின்றன.

*' வணங்குவாய் செகசோதி ஒருவனாகி........*
*குணமான மனிதரைப் படைத்த பின்பு*
*குவலயத்தில் தானுதித்துக் குருவாய் வந்து'*

*(அகத்தியர் ஞானம் 21)*

எனும் பாடலும் இங்கு நோக்கற்குரியது. இப்பாடல்கள் இறைவன் குருவாக வந்து ஆன்மாக்களுக்கு உணர்த்திச் சென்றமையைத் தெற்றெனக் காட்டுகின்றன.

இவ்வாறு, கிறிஸ்தவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை எளிய மக்களும் புரிந்து கொள்ளும் முறையில், கதை வடிவில் - புராண நோக்கில் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவப் புராணங்கள் விளக்கியுள்ளமையை மேற்கண்டவற்றால் அறியலாம்.

[ஆனால், பிற்காலத்தில் ஆரியரால் தவறான கருத்துகள் திணிக்கப்பட்டு, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் கறைபடுத்தப்பட்டமை (பகுதி - 5 (i), (ii) இல் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.) ]

இவ்வாறு புராணம் முழு வரலாற்றையும் விளக்காமல், அதன் கூறுகளை மட்டும் எளிய மக்களுக்குப் புரியும்படியாய் விளக்கியுள்ளதை மேற்கண்டவை காட்டுகின்றன.

# 11. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் - இலக்கிய நோக்கு

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியங்கள் கிறிஸ்தவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைத் தெளிவாகக் காட்டுகின்றன.

### மூவொருமைக் கோட்பாடு :

ஒருவராக இருக்கின்ற கடவுளே மூவராக, அஃதாவது மூவொருவராக விளங்குகின்றார். "One Essence Three Persons' ("homoousius') என்று கிறிஸ்தவ இறையியலில் விளக்கப்படுவதை, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பின்வரும் பாடல்களில் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது.

*'ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க' (திருவாச.சிவ.5)*

எனும் திருவாசகப் பாடலடி விளக்குகிறது.

வைணவ அடியார்களின் பின்வரும் பாடலடிகளும் இதற்குச் சான்றுகளாயுள்ளன.

*'மூவராகிய மூர்த்தியை' (நம்மாழ்.திருவாய். 3-6-2)*

*'உடம்பு உருவில் மூன்றொன்றாய் மூர்த்தி வேறாய*
*உலகுய்ய நின்றவன்' (திருவாய். 1-9-1)*

*'மூவராகிய ஒருவனை' (திருமங்கை. 3-1-10)*

*'யாவருமா யாவையுமா யெழில் வேதப் பொருள்களுமாய்*
*'மூவருமாய் முதலாய மூர்த்தி' (திருமங்கை. 4-1-2)*

*'தன்னாலே தன்னுருவம் பயந்த தானாய்த்*
*தயங்கொளிசேர் மூவுலகும் தானாய் வானாய்த்*
*தன்னாலே தன்னுருவில் மூர்த்தி மூன்றாய்த்*
*தானாய னாயினான் சரணென் றுய்வீர்' (திருமங்கை. 6-6-6)*

*'அருவமோ உரூவாரூபம் ஆனதோ அன்றிநின்ற*
*உருவமோ உரைக்கும் கர்த்தா வடிவெனக் குணர்திங் கென்னின்*
*அருவமும் உரூவாரூபம் ஆனதும் அன்றிநின்ற*
*உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக் குள்ளலாமே'*

*(சிவஞானசித்தியார் 1:38)*

எனும் சிவஞானசித்திபார் பாடலும் இதனைத் தெளிவுபடுத்துகின்றன.

## அவதாரக் கோட்பாடு :

கடவுள் ஏன் மனிதனாக அவதரித்தார் எனும் அவதாரத்தின் நோக்கம் சைவத்தில் கீழ்க்காணுமாறு விளக்கப்படுகிறது.

*'அருபரத் தொருவன் அவனியில் வந்து*
*குருபரன் ஆகி அருளிய பெருமையைச்*
*சிறுமை என்றிக ழாதே'*

*(திருவாசகம் - போற்றித் திரு அகவல் 75-77)*

எனும் திருவாசகப் பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

பாவ இயல்பிலிருந்து மனிதனை விடுவித்து, புதிய வாழ்வு கொடுப்பதற்கு, கடவுள் பிறந்ததாக வைணவம் கூறுகிறது.

*பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும்*
*அழுக்குடம்பும்*
*இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமை*
*உயிர் அளிப்பான்*
*எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்*
*இமையோர் தலைவா.*

*(நம்மாழ்வார் திருவிருத்தம் 1 - 3580)*

பாவக்கட்டிலிருந்து மனிதனை விடுவித்து, நித்திய பேரின்பத்தை அளிப்பதற்குக் கடவுள் அவதாரம் எடுத்தார்.

## பலி நிறைவேற்றக் கோட்பாடு:

### பலி / தவம்

எல்லா மனிதர்களும் பாவ இயல்புடன் பிறக்கின்றனர் என்று சைவம், வைணவம் இரண்டுமே ஏற்றுக் கொள்கின்றன. ஆனால் கடவுள் கோட்பாட்டிற்கு முற்றிலும் முரண்பட்ட கோட்பாடை உடைய 'அத்வைதிகள்' பாவம் என்ற கருத்து மாயை (அ) பொய்த் தோற்றம் என்கின்றனர். பிறகு ஒவ்வொருவரும் 'நானே கடவுள்' என்று உரிமை பாராட்டி, தாமே கடவுளுக்குச் சமமாகலாம் என்கின்றனர். இது கடவுள் கொள்கைக்கு எதிரான 'போலி ஆத்திகக் கொள்கை' அல்லது 'நய வஞ்சக நாத்திகக் கொள்கை' ஆகும். இது, கிறிஸ்தவத்தில் கூறப்படும் 'அந்திக் கிறிஸ்து கொள்கை' ஆகும்.

பாவ இயல்புடன் பிறந்த மனிதன் விடுதலை அடைவது எவ்வாறு?

செம்பில் களிம்பு சேரக் கூடாது என்றால் களிம்பே சேர இயலாத தங்கத்துடன் அதைச் சேர்த்து உருக்கி, இரண்டையும் ஒன்று கலக்க வேண்டும். அதன் பின்

அது களிம்பால் பாதிக்கப்படாது. அதைப் போன்று, தாம் ஒருவரே தூயராய் இருக்கும் கடவுள் மட்டுமே பிறப்பிலேயே பாவ இயல்பைப் பெற்ற மனுக்குலத்தை விடுவிக்க இயலும்.

எனவே, கடவுள் மனிதனாக வந்து, தம்மையே பலியாக்கி, நம்மைப் பாவத்திலிருந்து விடுவித்ததைப் பின்வரும் பாடல்கள் காட்டுகின்றன.

சைவ, வைணவ சமயங்களில் பிரமன் என்பது மனிதனாக வந்து, தன்னையே பலியாக்கிய கடவுளாகிய கிறிஸ்துவைக் குறிக்கிறது.

***அவியாய் அவியுமாகி அருக்கமாய் பெருக்கமாகிப்***
***பாவியர் பாவம் தீர்க்கும் பரமனாய்ப் பிரமனாகி'***

***(திருநாவுக்கரசர் தேவாரம் 320)***

| | | |
|---|---|---|
| அருக்கமாய் | = | ஒருவராய் இருந்த கடவுள் |
| பெருக்கமாகி | = | மூவராகி |
| பரமனாய் | = | பரமன் |
| பிரமனாகி | = | பிரமனாகி (இயேசுவாகி) |
| பாவியர் பாவம் தீர்க்கும் | = | பாவியர் பாவத்தைத் தீர்ப்பதற்காக |
| அவியாய் | = | பலி என்பதற்கு இலக்கணமாய் |
| அவியுமாகி | = | தானே பலியாகி விட்டார். |

அதாவது, பாவியர் பாவத்தைத் தீர்ப்பதற்காகப் பரம்பொருள் பிரமனாகி, பலி என்பதற்கு இலக்கணமாய்த் தானே பலியானார்.

சைவ, வைணவ சமயங்களில் பிரமன் என்பது மனிதனாக வந்து, தன்னையே பலியாக்கிய கடவுளாகிய கிறிஸ்துவைக் குறிப்பதை, இப்பாடலடிகள் தெளிவாகக் காட்டுகின்றன.

***பவம் அறுப்பார்*** ***(சடகோபர் அந்தாதி - 8)***
***அவன் கண்டாய் நன்னெஞ்சே***
***ஆரருளும் கேடும்***
***அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான்***
***அவன் கண்டாய்....***

***(நாலாயிர திவ்வியப் பிரபந்தம் இயற்பா இரண்டாந் திருவந்தாதி (24) 3307)***

இவ்வாறு, கடவுள் ஐம்புலன்களை உடைய மனிதனாக வந்து, தன்னையே பலியாக்கி, பாவத்தின் வல்லமையை அழித்ததாக மேற்கண்ட பாடல்கள் தெளிவாகத் தெரிவிக்கின்றன.

அறுவகைச் சமயங்களும் வெளிப்படுத்தும் மையக் கருத்து - கடவுள் எல்லா ஆசிர்வாதங்களுக்கும் மூலகாரணன்; தொடக்கம், முடிவு அற்றவன்; தன்னுடைய பாடுகள் என்ற தவத்தால் அதாவது பாடு மரணமாகிய தவத்தை ஏற்றுக் கொண்டு, தன்னையே பலியாகக் கொடுத்து, மற்றவர்கள் நீடுவாழ்வு பெற வழிவகுத்தார் என்பதாகும். இதைக் கீழ்க்காணும் பாடல்கள் விளக்குகின்றன.

*பிணக்கற அறுவகை சமயமும் நெறியுள்ளிவுரைத்த,*
*கணக்கறு நலத்தன்; அந்தமில் ஆதியம் பகவன்*
*வணக்குடை தவநெறி... வழிநின்று;*

*(நம்மாழ்வார் திருவாய்மொழி - 1-3-5 (2108) )*

*'அவியுமாகி'* *(அப்பர் 307 -8)*

## பாவ மன்னிப்புக் கோட்பாடு :

சமண, பௌத்த மதங்களில் அவரவர் செய்த தீமைக்கு மன்னிப்பு, கிடையாது. காரணம், அம்மதங்களில் கடவுள் கொள்கை கிடையாது.

எனவேதான், இளங்கோ அடிகள் சிலப்பதிகாரத்தில் 'ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்' என்கிறார். அதாவது, அவரவர் செய்த வினைக்கு உரிய பலனை அவரவரே அனுபவிக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

உலகிலேயே, மன்னிப்பு என்ற தெளிவான கருத்தை - கடவுள் மன்னிக்கிறார் - மன்னிப்பைக் கொடுத்து விட்டார் என்ற ஆழமான கருத்தை உடையது கிறிஸ்தவம் மட்டுமே ஆகும்.

*கடவுள் மன்னிப்பு கொடுத்துவிட்டார்;*
*நான் பெற்றுக் கொண்டேன்.*

என்பதுதான் சரணாகதி தத்துவம் ஆகும்.

இந்தக் கொள்கை - கடவுள் மன்னிப்பைக் கொடுக்கிறார்; கொடுத்துவிட்டார் - என்பது இஸ்ரேல், யூத சமயங்களில் கிடையாது. எனவே, இவற்றில் பலி கொடுக்க வேண்டும்; பலி கொடுக்காவிட்டால் மன்னிப்பு கிடையாது.

ஆனால், இயேசு நம் பாவங்களுக்காகத் தாமே பலியாகி விட்டார்..... கடவுள் என் பாவத்தை மன்னித்து விட்டார்; அதை ஏற்றுக் கொள்வதுதான் என் கடமை என்ற கிறிஸ்தவக் கொள்கைதான் சைவ, வைணவக் கொள்கையாகும்.

சைவ, வைணவ சமயங்களில் காணப்படும் சரணாகதி தத்துவம் என்பது பாவ மன்னிப்பு அடைந்த ஆன்மா இறைவனுடைய பாதத்தைச் சரணடைந்த நிலையைக் காட்டுகிறது.

**விசுவாசத்தினால் இரட்சிப்பு கோட்பாடு :**

**மீட்பு :**

*எல்லாப் பாவங்களில் இருந்தும் நான் உன்னை*
*விடுவிப்பேன்.* *(பகவத்கீதை 18:66)*

*செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா*
*அம்மலம் கழீஇ அன்பர்.* *(சிவஞானபோதம் - 12)*

மனிதனாக வந்து தன்னையே பலியாக்கிய கடவுளின் தியாக அன்பால் ஆன்மா தன் பாவத்திலிருந்து கழுவப் பட்டுவிட்டால், அது பாவத்திலிருந்து மீட்கப்பட்டு பின்பு கடவுளின் ஆலயமாக மாறுகிறது.

மீட்கப்பட்ட ஆன்மா கடவுள் வாழும் கோவிலாக விளங்குவதைப் பின்வருமாறு திருமூலர் கூறுகிறார் :

*உள்ளம் பெருங்கோயில்; ஊன் உடம்பு ஆலயம்.*
*(திருமூலர் திருமந்திரம் 1792)*

உள்ளம் = ஆன்மா

*வைணவத்தில் பகவத்கீதை இதையே க்ஷேத்ரம் (உள்ளமாகிய கோவில்), க்ஷேத்ரஞ்ஞன் (கடவுள்) என்கிறது.*

இவ்வாறு, மனிதனாக வந்த கடவுளின் பலியால் மனிதனின் பாவம் கழுவப்பட்டு, தான் கடவுள் வாழும் கோவிலாகின்றான் என்பதை மேற்கண்ட பாடல்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

# 12. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் இறையியல் / தத்துவ நோக்கு

தமிழ்நாட்டில் தோன்றிய சைவம், இறையியல் நோக்கில் 14 சைவசித்தாந்த சாத்திரங்களாக உருவாயிற்று. இவற்றின் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரை ஆகும். (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் - ஒப்பாய்வு, பக்..131 - 164)

## சைவ சித்தாந்தம்:

சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்லகை முப்பொருள் அநாதி என்று சைவ சிந்தாந்திகள் கூறுகிறார்கள்; அந்த மூன்று பொருள்கள்.

| பதி | பசு | பாசம் |
|---|---|---|
| கடவுள் | ஆன்மா | உலகம் |

## சிவஞான போதம்:

சைவ சித்தாந்த நூல்கள் 14இல் சிவஞானபோதம் மட்டும் சூத்திரங்களால் எழுதப்பட்டது. மற்ற 13 நூல்களும் செய்யுள்களால் எழுதப்பட்டவை ஆகும். சைவ சித்தாந்த நூல்களில் முதல் இரண்டு நூல்கள் தவிர மற்ற 11 நூல்களும் சிவஞானபோதத்திற்கு விளக்கம் கொடுக்கும்படி எழுதப்பட்ட நூல்களாகும்.

பதி, பசு, பாசம் என்பவற்றைத் தெளிவாகக் கூறுவது சிவஞானபோதம்.

மற்றும் மனிதனுடைய படைப்பு, வீழ்ச்சி, மீட்பு என்ற மூன்று பற்றியும் சிவஞானபோதம் 12 சூத்திரங்களில் தெளிவாக விளக்குகின்றது.

இந்த 12 சூத்திரங்களில், விவிலியத்தின் ஆதியாகமம் முதல் வெளிப்படுத்தின விசேஷம் வரை உள்ளவற்றைச் சாறு பிழிந்து கொடுத்திருக்கிறார் ஆசிரியர்.

## சைவ சித்தாந்தத்தில் விளக்கப்படும் அடிப்படைக் கருத்துகள் :
## படைப்பும் மனிதனின் வீழ்ச்சியும் :

சைவத்தின் அடிப்படை இறையியல் நூலான 'சிவஞானபோதம்' படைப்பைப் பற்றியும் படைக்கப்பட்ட முதல் மனிதன் எப்போது வீழ்ச்சிக்குள்ளானான் என்பதையும் தெளிவாகப் பின்வருமாறு விளக்குகின்றது.

*அவன், அவள், அது எனும் அவை மூவினைமையின்*
*தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்*
*அந்தம் ஆதி என்மனார் புலவர்.* *(சிவஞானபோதம் - 1)*

ஆதியில் கடவுள் ஆண் (அவன் - முதல் மனிதன்), பெண் (அவள் - முதல் பெண்), உலகம் (அது) இம்மூன்றையும் மூன்று வேறுபட்ட செயல்களினால் படைத்தார். அவை பரிசுத்தமாய் இருந்தன. ஆனால் பின்பு அவை பாவத்தில் (மலம்) வீழ்ந்தன. இது தூய வாழ்க்கைக்கு முடிவாயிற்று. பாவ வாழ்க்கையின் தொடக்கமாயிற்று என்று அறிஞர் கூறுகின்றனர்.

தூயப் படைப்பு பாவத்தில் விழுந்தது எவ்வாறு? இதைச் சைவ சித்தாந்தம் பின்வருமாறு விளக்குகின்றது.

*முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடி படர்ந்து*
*அத்தி பழுத்தது என்று உந்தீ பற.*
*அப்பழம் உண்ணாதே உந்தீ பற.* *(திருவுந்தியார் - 41)*

பரிசுத்தமாய் இருந்த (கொடிகளில்) படைப்புகளில் முதற்கொடியாகிய முதல் மனிதனில் பாவக் கொடி படர்ந்து, தீமையாகிய பழம் பழுத்தது. அப்பழத்தை உண்ணாதே என்கிறது சைவ சித்தாந்தம்.

இது எப்பொழுது நிகழ்ந்தது? விவிலியத்தின்படி, உண்ண வேண்டாம் என்று கட்டளையிடப்பட்ட பழத்தை முதல் மனிதனாகிய ஆதாம் உண்டான். நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்க வேண்டாம் என்ற கட்டளையிடப்பட்டிருந்தது. ஆனால் அவன் கடவுளின் கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் போனபோது, பாவம் அவனை மேற்கொண்டது. முதல் மனிதனின் சந்ததியினரும் பாவத்தில் வீழ்ந்தனர். இப்படியாக அவனது வழித் தோன்றல்களின் மீது தொடர்ந்து வரும் பாவம் 'சகசமலம்' என்று சைவத்தில் குறிப்பிடப்படுகின்றது. (டாக்டர் மு. தெய்வநாயகம், சிவஞானபோதம், 2004, பக்.10 - 14)

'சகசமலம்' அல்லது இயல்பாகவே வருகின்ற பாவத்தில் வீழ்ந்த மனிதருக்குத் தாமாக இறைவனை உணர்ந்துகொள்ளும் ஆற்றல் இல்லை என்பதையும், கடவுளே மனிதனாக - குருவாக வந்து மனிதருக்குத் தன்னை

உணர்த்தும் ஆற்றல் பெற்றவன் என்பதையும், அதாவது இரும்பை இழுக்கும் காந்தத்தைப் போல இறைவன் இருக்கின்றான் என்பதையும் 'காந்தங்கண்ட பசாசத் தவையே' (5) என்னும் சிவஞானபோதத் தொடர் விளக்குகின்றது.

## குருவாதல் :

பதினான்கு சித்தாந்த சாத்திரங்களில் முதல் சாத்திரமான திருவுந்தியார், இறைவன் குருவாக உலகில் பிறந்ததை,

*'அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்ததென் றுந்தீபற*
*தானாகத் தந்ததென் றுந்தீபற'* *(திருவுந்தியார். 1)*

என்று தெளிவாகக் கூறுகின்றது.

இறைவனோடு மகிழும் முக்தி நிலையில் தோன்றிய முதல் கொடியான ஆதாமால் ஏற்பட்ட, மோகக் கொடியாகிய பாவத்தின் காரணமாக உலகில் தீமை பழுத்தது. அந்தத் தீமையாகிய, மோகக் கொடியை அருளாகிய கத்தி கொண்டு அறுத்து, அதில் திரும்பவும் முக்திப் பழத்தைப் பழுக்க வைக்குமாறு, ஒப்பற்ற கொடியாகிய இறைக் குமரன் இவ்வுலகில் வந்தார். (டாக்டர் மு. தெய்வநாயகம், சிவஞானபோதம், பக். 30-31)

இதை,

*'முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்*
*தத்தி பழுத்த தருளென்னுங் - கத்தியினால்*
*மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்*
*ஏகக் கொடியெழுங்காண் இன்று'*

*(திருக்களிற்றுப்படியார். 93)*

எனத் திருக்களிற்றுப்படியார் கூறுகிறது. பாவத்தில் வீழ்ந்த மனிதரை மீட்க இறைவன் குருவாக வந்த தன்மையை, சிவஞானபோதம் பின்வருமாறு விளக்குகின்றது.

இறைவன் குருவாக வந்து, சிலுவைத் தவத்தினில் உலக மக்களுக்கு உணர்த்தி, மனிதரை மீட்டுக்கொண்டதை,

*' ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்*
*தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு*
*அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே'* *(சிவஞானபோதம். 8)*

எனச் சிவஞானபோதம் கூறுகிறது.

எங்ஙனம் அரசகுலத்தில் பிறந்த ஒருவன் நிலை மாறி வேடர் குலத்தில் போய்ச் சேர்ந்து தன்னுடைய உயர் நிலையை அறியாமலிருக்கின்றானோ அங்ஙனமே

கடவுளோடு இன்புற்றிருக்க வேண்டிய ஆன்மா, சகசமலமாகிய இயல்பான பாவத்தால் தன் நிலையிலிருந்து வீழ்ந்து ஐம்புல வேடராகிய ஐம்புல இச்சைகளுக்கு அடிமைப்பட்டுத் தன்னையே அறிய இயலாத நிலையில் இருக்கின்றது.

பாவத்தில் வீழ்ந்த
மனிதரை மீட்க
கடவுள்
குருவாக வந்தார்.
சிவஞானபோதம்

வேடர் குலத்தில் இருக்கும் தன் மகனை மீட்க, அரசன் எவ்வாறு எளிய வேடன் உருவெடுத்து, அவனைக் கண்டு, அறிவுறுத்தி, அவனை நன்னிலையுடையச் செய்கின்றானோ, அவ்வாறே கடவுளும் எளிய மனுவுருவெடுத்து, மனுக் குலத்திற்கு மெய்யறிவை அறிவுறுத்தி, தன்னையே அழித்து, அவர்களை நன்னிலை அடையச் செய்கின்றான்.

இறைவன் சிலுவைத் தவத்தில் சிந்திய செந்நீரால் மனிதனுடைய பாவம் கழுவப்படுகிறது. செந்நீரைச் சிந்தும் திருத்தாள்கள் 'செம்மலர் நோன்தாள்' (சிவஞானபோதம், சூத். 12) எனக் குறிக்கப்படுவதுடன், அம்மலம் கழுவிய அன்பர் எனவும் இறைவன் போற்றப்படுகின்றார்.

## தவத்தின் தலைவன் :

உலகில் துன்பங்களை ஏற்றுத் தவம் செய்யும் தவ முனிவர்களின் தவங்களில் எல்லாம், மிக உயர்ந்த தவம் இறைவனுடையதாகும் என்கிறது சைவ சித்தாந்தம்.

தன்னுயிர் தானறப் பெறுதலாகிய தவங்களில், தன் உயிரைச் சிலுவையின் சித்திரவதைக்கு ஒப்புக் கொடுத்துத் துன்பங்களின் உச்ச நிலையைத் தாங்கிக் கொண்ட அவருடைய தவம், எல்லாத் தவங்களிலும் தலைமையானதாகும். ஆன்மாக்களை, பாவமாகிய இருள் நிறைந்த மூலையிலிருந்து மீட்பாகிய ஒளி நிறைந்த முற்றத்திற்குக் கொண்டு வந்துவிட்டவராகிய அவரே தவத்தில் தலைவராகின்றார் என்பதை,

*'மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்*
*சாலப் பெரியரென் றுந்தீபற*
*தவத்தில் தலைவரென் றுந்தீபற'* *(திருவுந்தியார். 12)*

என்று திருவுந்தியார் கூறுகின்றது.

இயேசு கிறிஸ்துவின் சிலுவைப்பாடாகிய வரலாறும், அன்பே உருவான சிவபெருமான் நஞ்சுண்டதாகிய புராண விளக்கமும், மனிதர் மீது இறைவன்

கொண்ட அன்பை, அன்பால் ஏற்றுக்கொள்ளும் துன்பத்தை - தவத்தை வெளிப்படுத்திக் காட்டும் செயல்களாகும்.

அன்பின் மறுபெயரே 'சிவம்' என்று பின்வருமாறு திருமூலர் கூறுவது இங்கு குறிப்பிடற்குரியது.

*'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே'* *( திருமூலர் திருமந்திரம், 257 )*

என்னும் திருமூலர் வாக்கின் வழி, அன்பு வேறு; சிவம் வேறு அன்று என்பது தெளிவுபடுத்தப்படுகிறது.

*'அன்பேயென் அன்பேயென் றன்பால் அழுதரற்றி*
*அன்பேயன் பாக அறிவழியும் - அன்பன்றித்*
*தீர்த்தந் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை*
*சாற்றும் பழமன்றே தான்'* *(திருக்களிற்றுப்படியார், 55)*

என்னும் திருக்களிற்றுப்படியார் வாக்கின்படி, அன்பால் அழுது அரற்றல் சிறப்பிக்கப்படுகிறது.

அன்புக்கும் அழுகைக்கும் இணைப்புக் கூறுவானேன் என்கிற நோக்கில் காணும்போது, 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ், ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்' என்று திருக்குறள் விளக்கம் தருகிறது. 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாக, இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை அமைந்திருப்பதாக திரு.வி.க. கூறுகின்றார்.

## 'மனிதரே ஆலயம்' எனும் கோட்பாடு :

இடைக்காலத்தில் ஆரிய பிராமணர்களால் உருவாக்கப்பட்ட சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு மாறாக, கடவுளால் மீட்கப்பட்ட அனைவருமே கடவுள் வாழும் 'ஆலயங்கள்' என்பதைப் பின்வருமாறு விளக்குகின்றது சிவஞானபோதம்.

மனிதனாக வந்து தன்னையே பலியாக்கிய கடவுளின் தியாக அன்பால் ஆன்மா தன் பாவத்திலிருந்து கழுவப் பட்டுவிட்டால், அது பாவத்திலிருந்து மீட்கப்பட்டு, பின்பு அது கடவுளின் ஆலயமாக மாறுகிறது என்பதை,.

*செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா*
*அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ*
*மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.* *(சிவஞானபோதம் - 12)*

எனும் பாடல் விளக்குகின்றது. மீட்கப்பட்ட ஆன்மா கடவுள் வாழும் கோவிலாக விளங்குவதை இப்பாடல் தெளிவாகக் காட்டுகிறது. எனவே, சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு சிறிதும் இடமில்லாத கோட்பாட்டைக் கொண்டது உண்மையான சைவ சித்தாந்தம் என்பதைத் தெளிவாக அறியலாம்.

இறைவன் (சிலுவைத்)
தவத்தில் சிந்திய செந்நீரால்
மனிதனுடைய பாவம்
கழுவப்படுகிறது.
- சிவஞானபோதம்

## சைவசித்தாந்தத்தில் மாற்றுக் கருத்துகள் :

சைவ சித்தாந்தத்தில் 'உயிரை'ப் பற்றி விளக்காமல் விட்டுவிட்டனர். உலகம், ஆன்மா, கடவுள் என்ற மூன்று பற்றிதான் விளக்குகின்றனர்.

ஆகையினால்தான் சைவ சித்தாந்திகள் உயிருக்கும், ஆன்மாவிற்கும் உள்ள வேறுபாடு தெரியாமல், அதில் சொல்லப்பட்ட ஆன்மாவைத் தவறாக உயிர் என்று நம்பி, விளக்கம் கொடுக்கிறார்கள்.

இதனால், சைவ சித்தாந்தம் சொல்கின்ற அடிப்படை உண்மைகளை சைவ சித்தாந்திகளால் சரியாக விளக்க முடியவில்லை. (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் - ஒப்பாய்வு, இரண்டாம் பதிப்பு, செப்டம்பர், 1997, பக்.131 - 161)

இதன் காரணமாக, சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு மாறுபட்ட சைவ சித்தாந்த கருத்துகளுக்கு ஏற்ற விளக்கம் கொடுக்க முடியாமல், கொடுக்கத் தெரியாமல் - சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை ஆதரிக்கின்றவர்களாக இருக்கின்றனர். இதற்குக் காரணம், இவர்கள் ஆன்மாவை உயிர் என்று கருதுகிறார்கள்.

## இறைவன் குருவாக வந்தாரா?

இறைவன் அருள் உருவோடு மாயத் தோற்றத்தைக் கொண்டு, குரு வடிவில் காட்சியளிக்கின்றானேயன்றி, உலகில் அவன் ஒரு மனிதனாகப் பிறந்து, குருவின் தன்மையை வெளிக்காட்டியிருத்தல் இயலாது என்னும் மாற்றுக் கருத்தை எழுப்பி வெளியிடலாயினர்.

இன்றும் சைவசித்தாந்த அன்பர்களின் உள்ளங்களில் இப்படிப்பட்ட கருத்தே இடம் பெற்றிருக்கின்றது.

ஆனால், சித்தாந்த சாத்திரங்களின் விளக்கங்களில் பெரும்பகுதியை எழுதிய உமாபதி சிவாசாரியார், இறைவன் மனிதனாக இப்பூவுலகில் நம்மைப்போல்

பிறந்த தன்மையை,

> *'அருளுரு என்ற பொருளினை ஆயின்*
> *மாயா உருவினன் மாயா உருவினை*
> *ஏயான் ஏய்ந்தவர் எம்ம னோரே'*

*(சங்கற்ப நிராகரணம், சைவவாதி நிராகரணம், 25-27)*

என்று தெளிவாகக் கூறுகிறார்.

> ***இறவா இன்பத்து எமை இருத்த வேண்டிப்***
> ***பிறவா முதல்வன் பிறந்தான்.***

*(போற்றிப்பஃறொடை 69)*

நீங்காத இன்பத்தில் நாம் இருக்க வேண்டும் என்பதற்காகப் பிறவா முதல்வனாகிய கடவுள் பிறந்தான் என விளக்கமாகத் தெளிவுபடுத்தியும் உள்ளார்.

பின்னர் வந்தவர்களோ சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கையும் எழுதிய,

(1) திருவியலூர் உய்யவந்த தேவர்.
(2) திருக்கடவூர் உய்யவந்த தேவர்.
(3) மெய்கண்டார்.
(4) அருள்நந்தி சிவாச்சாரியார்.
(5) மனவாசங்கடந்தார்.
(6) உமாபதி சிவாச்சாரியார்

ஆகிய அறுவரில், முதல் இருவரையும் ஐந்தாமவரையும் நீக்கிவிட்டு மீதி மூவரை மட்டும் தனியே பிரித்து, இம்மூவருடன் எந்த நூலும் எழுதாதவரும், உமாபதி சிவாச்சாரியாரால் மனிதனாக வந்த இறைவனாகச் சொல்லப்படும் மறை ஞான சம்பந்தரை (மனிதனாக வந்த கடவுளை)யும் சந்தான குரவர்களாகக் கூறுவது பிறவா முதல்வன் பிறந்த தன்மையை மறுப்பதற்கும் மறைப்பதற்குமே எடுத்துக் கொண்ட முயற்சியாகும்.

தோமா வழியாகத் தமிழகத்திற்குக் கொடுக்கப்பட்ட நற்செய்தி, பிற்காலத்தில் வேற்று மக்களால் ஒடுக்கப்பட்டு - மறைக்கப்பட்டு - திரிக்கப்பட்டுப் பலவித மாற்றங்களுக்கு உள்ளாக்கப்பட்டது என்பதை இவை புலப்படுத்துகின்றன.

சைவ சித்தாந்தத்திற்கு முன்னுள்ள தோமா வழித் திராவிடக் கிறிஸ்தவ நூல்களாகிய பிரமசூத்திரம், பகவத்கீதை, உபநிஷத் ஆகியவற்றிற்கு உரை நூல்களாக எழுதப்பட்டவையே அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் என்பவை ஆகும். இவையும் இறையியல் கருத்துகளை உடையதாய் இருப்பதால் இவற்றின் மையக் கருத்தைப் பின்வருமாறு கோடிட்டுக் காட்டலாம்.

## அத்வைதம் - விசிஷ்டாத்வைதம் - துவைதம் :

> 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாக, இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கை அமைந்திருக்கின்றது.
>
> - திரு.வி.க.

குருவாக வந்த இறைவனுடைய வரலாற்று உணர்வு பிற்காலத்தில் மறைக்கப்பட்ட காரணத்தால், தவத்தின் தலைவனாகிய முதல்வனின் தவம் அறியப்படா நிலையில், ஆன்மாவின் தவமாகப் பொருள் கூறப்படும் நிலையை அது அடைந்தது. கடவுளுக்கு உரிய இடத்தில் கடவுளுக்குச் சிறப்பு கொடுப்பதற்குப் பதிலாக, மனிதருக்குச் சிறப்பு கொடுக்கும் நிலையைக் காணலாம்.

## அத்வைதம்:

ஆதிசங்கரரின் அத்வைதம் பௌத்தத்துடன் தொடர்புடையது ஆகும். ஆதிசங்கரரின் குருவின் குரு ஒரு பௌத்தர் ஆவார். எனவே சங்கரரின் சிந்தனைகளில் பௌத்த மதக் கருத்துகள் உள்ளன.

நான்கு அடிப்படை உண்மைகளான உடல், உயிர், ஆன்மா, கடவுள் என்பவற்றுள்* அத்வைதம் புரிந்து கொண்டது உடல், உயிர் எனும் இரண்டு மட்டும் தான்.

அத்வைதம் என்றால் இரண்டு அற்றது (non - dual) என்று பொருள். அ + த்வைதம் (இரண்டு) = இரண்டு அல்ல. எனவே அத்வைதம் என்றால் 'இரண்டு அற்றது' என்று பொருள் ஆகும்.

அதாவது சிற்றுயிர், பேருயிர் என்ற இரண்டு கிடையாது. மனிதர், கடவுள் என்ற இரண்டு கிடையாது ( உயிரைத்தான் பிரமம் என்று குறிக்கிறார்கள்.) என்கிறது அத்வைதம்.

ஆன்மாவைப் புரிய இயலாமல் சிற்றுயிரை (பிரமம் = உயிர்) மட்டுமே நம்புகிறார்கள். இதுதான் அத்வைதம்.

இதில் வரும் பிறவி சுழற்சிக் கொள்கை என்பது சமணத்திலிருந்து எடுத்துக் கொண்டது ஆகும்.

உயிருக்கும் ஆன்மாவிற்கும் உள்ள வேறுபாடு தெரியாத நிலையில், சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கையைத் தத்துவ அடிப்படையில் நியாயப்படுத்துகிறது அத்வைதம்.

## விசிஷ்டாத்வைதம் :

விசிஷ்டாத்வைதம் என்பதற்கு, சிறப்புடைய இரண்டற்றது (அ) சிறப்புடைய ஒன்று என்பது பொருள் ஆகும். நமக்கும், பிதா, குமாரனாகிய இயேசு கிறிஸ்துவிற்கும் எவ்வாறு உறவு உள்ளது? நமக்கும் கடவுளுக்கும் இடையேயுள்ள உறவு 'சுவீகாரபுத்திரர்' உறவு என்கிறார் இராமானுஜர்.

இயேசு - நம் சகோதரர்.
- பிதாவின் ஒரே பேறான குமாரர் (Only begotten son)

நாம் - பிதாவின் சுவீகார புத்திரர் (Adopted sons)

சொந்த குமாரன் - சுவீகார குமாரன் - என்ன வேறுபாடு?

சொந்த குமாரனுக்கு என்றும் உரிமை உண்டு. சுவீகாரப் பிள்ளைகளுக்குத் தகப்பன் விரும்பும்வரைதான் அந்த உறவு, உரிமை நீடிக்கும். தகப்பன் விரும்பாத அக்கணமே, அனைத்து உரிமைகளும் உறவுகளும் துண்டிக்கப்படும்.

இவ்வாறு சிற்றுயிர், பேருயிர் என்ற இரண்டிற்கும் இடையேயுள்ள விசேஷ தொடர்பை இராமானுஜர் சொல்கிறார்.

ஆயினும், உயிருக்கும் ஆன்மாவிற்கும் உள்ள வேறுபாடு தெரியாத நிலையில், சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கையிலிருந்து விசிஷ்டாத்வைதமும் விடுபடவில்லை.

## துவைதம் :

தகப்பன் - பிள்ளை என்ற உறவே கிடையாது. கடவுள் எஜமான்; நாம் வேலைக்காரர்கள். எஜமானுக்கு வேலைக்காரர்கள் சேவை செய்வதன் மூலமே அவரது அன்பைப் பெற முடியும் என்கிறார் மாத்துவர்.

உயிருக்கும் ஆன்மாவிற்கும் உள்ள வேறுபாடு தெரியாத நிலையில், சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கையிலிருந்து துவைதமும் விடுபடவில்லை.

## சைவசித்தாந்தத்தில் மறுக்கப்பட்ட மாற்றுக் கருத்துகள் :

தோமா வழிக் கிறிஸ்தவ இறையியலில் ஏற்பட்ட குழப்பங்களையும் அக்குழப்பங்கள் நீங்க ஆணித்தரமாகக் கிறிஸ்தவக் கருத்துகள் விளக்கப்பட்ட நிலையையும் பின்வருமாறு சுட்டலாம்.

எஜமானுக்கு வேலைக்காரர்கள் சேவை செய்வதன் மூலமே அவரது அன்பைப் பெற முடியும் எனும் துவைதக் கருத்துக்கு மாறாக, அன்பே உருவான கடவுள், தாமாகவே, மனித உருவில் வந்து, மனிதர் மீது அன்பு காட்டி, மனிதரை மீட்க, தம்மையே துன்பமாகிய தவத்திற்கு ஒப்புக் கொடுத்தார் என்று தெளிவுபடுத்துகிறது சைவ சித்தாந்தம். (டாக்டர் மு. தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம்-ஒப்பாய்வு, 1985, பக்.131-161)

தோமா வழியாகத் தமிழகத்திற்குக் கொடுக்கப்பட்ட நற்செய்தி, பிற்காலத்தில் வேற்று மக்களால் ஒடுக்கப்பட்டு - மறைக்கப்பட்டு - திரிக்கப்பட்டுப் பலவித மாற்றங்களுக்கு உள்ளாக்கப்பட்டது.

எனவே, சைவசித்தாந்தத்தில் 'தவம்' முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. இறைவன் மீண்டும் மீண்டும் பல அவதாரங்களை எடுத்துத் தீமையை அழிக்கின்றான் என்று கூறப்படுவதைத் தவறு என்று பின்வருமாறு விளக்குகிறது சைவ சித்தாந்தம்.

கடவுள் இந்த உலகில் மனிதனாகப் பிறந்து, சாவாகிய கண்டத்தை அதாவது, தவத்தை ஏற்று, மீட்பாகிய கருமத்தை முடித்து விட்ட காரணத்தால், திரும்ப வந்து மறுபடியும் பிறக்க வேண்டும் என்னும் அவசியம் இல்லை. ஒரே முறையில் உலக மீட்பிற்கான காரியத்தைச் செய்துவிட்டார் என்பதால், இனி இறைவன் உலகில் பிறக்கப் போவதும் இல்லை, இறக்கப் போவதும் இல்லை என்பதை,

*'கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்*
*பிண்டத்தில் வாராரென் றுந்தீபற*
*பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற'* *(திருவுந்தியார், 3)*

எனத் திருவுந்தியார் கூறுகின்றது.

குருவாக வந்த இறைவன், சிலுவைத் தவத்தில் இருந்த போது, தன்னைச் சிலுவையில் அடித்த மக்களுக்காக, 'தந்தையே இவர்களை மன்னியும்; தாங்கள் செய்வது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே' என்று அவர்களுக்காக வேண்டிக் கொண்டதுடன், அவருக்கு அருகில் சிலுவையில் அறையப்பட்ட கள்வன் ஒருவன் அவரிடத்தில் வேண்டிக் கொண்டதற்கிணங்க (லூக். 23 : 42) 'இன்று என்னுடனே மேலுலக இல்லத்தில் இருப்பாய்' (லூக். 23 : 43) என்று கூறி, அவனுக்கும் வீட்டை அருளினார்.

இப்படிப்பட்ட அருளாளராகிய அவரோடு சேருங்கால், ஒளியையுடைய வீட்டை எளிதாகப் பெறலாம் என்பதைத் திருவுந்தியார் பின்வருமாறு கூறுகின்றது.

*'கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்*
*வெள்ள வெளியாமென் றுந்தீபற*
*வீடும் எளிதாமென் றுந்தீபற'* *(திருவுந்தியார், 23)*

அந்தக் கள்வனுக்கு மட்டுமல்லாது, ஆணவ மலமாகிய இருளிலே ஆழ்ந்திருக்கும் உலகம் முழுவதையும் மீட்டு, அவர்கள் மீட்பு அடையும்படியாக, இந்த உலகில் குருவாக வந்தவருடைய திருவுரைகளை உணர்ந்தவர்களே உண்மையை உணர்ந்தவர்கள் என்பதை, திருவுந்தியார் பின்வருமாறு கூறுகிறது.

*'வைய முழுவதும் மலக்கயங் கண்டிடும்*
*உய்யவந் தானுரை யுந்தீபற*
*உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற'* *(திருவுந்தியார், 45)*

இவ்வாறு குருவாக உலகில் பிறந்து வாழ்ந்து, ஆணவ மலத்திலிருந்து, உலக மக்களுக்கு விடுதலையைத் தேடித் தந்துள்ள இறைவனாகிய வித்திலிருந்து முளைத்தெழுந்த முளையாக விளங்குபவர் அருள் குரு (கடவுளின் மகன்). அருள் குருவை அறியாது கைவிட்டு, முளை தோன்றுவதற்குக் காரணமாகிய வித்தினை மட்டுமே தேடி முளையைக் (குருவை) கைவிட்டவர்கள், பித்தர்களாக விளங்குவதுடன் அவர்கள் பெறக் கூடியது இவ்வுலகில் ஏதும் இல்லையென்பதை,

*'வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்*
*பித்தேறி னார்களென் றுந்தீபற*
*பெறுவதிங் கென்பெணே யுந்தீபற* *(திருவுந்தியார், 28)*

எனத் திருவுந்தியார் கூறுகிறது.

| **இருவினை ஒப்பு** | **- மலபரிபாகம்** | **- சத்திநிபாதம் :** |
|---|---|---|
| **(நம் தீவினை இறைவனின் நல்வினையால் நீக்கப்படல்** | **- பாவம் கழுவப்படல்** | **- இறைபாதம் சரணடைதல் )** |

முத்தி நிலையிலிருந்து ஒடுங்கி பாவமாகிய மலத்துள் ஆனதால், மனிதர்களுக்குப் பிறப்பிலேயே ஜென்ம பாவமாகிய பிறவிப்பெருங்கடல், மற்றும் கர்ம பாவமாகிய பிறவாழி ஆகிய இருளில் சேர்க்கும் இருவினைகள் இணையலாயின.

இந்த இருள்சேர் இருவினைகளையும் நீக்குவதற்கு இறைவன் சிலுவைத் தவமாகிய நல்வினையால், பொறிவாயில் ஐந்தவித்து, அதாவது தன்னையே பலியாக்கி ஈட்டியுள்ள மீட்பாகிய 'இறைவன் பொருளே' நீடுவாழ்வு அளிக்கும்.

மனிதன் பிறக்கும்பொழுதே அவனைத் தொடரும் தீவினையிலிருந்து, இறைவன் பொறிவாயில் ஐந்தவித்தலாகிய தவத்தினால், ஈட்டிய மீட்பை ('இறைவன் பொருளை') ஈவாக ஈந்து, மனிதருக்கு நீடுவாழ்வைக் கொடுத்துள்ளான்.

கடவுளால் மீட்கப்பட்ட அனைவருமே கடவுள் வாழும் 'ஆலயங்கள்'

இதனால் மனிதனைப் பிறப்பிலேயே தொடர்ந்து வருகின்ற தீவினையாகிய இருள்சேர் இருவினை, இறைவனுடைய பொறிவாயில் ஐந்தவித்த நல்வினையின் காரணமாக நீக்கப்படுகின்றது. மனிதனுடைய தீவினை இறைவனுடைய நல்வினையால் நீக்கப்படும் இந்நிகழ்ச்சி இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என விளக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| இருவினை ஒப்பு | - | நம் தீவினை இறைவனுடைய நல்வினையால் நீக்கப்படுகிறது. |
| மலபரிபாகம் | - | பாவம் கழுவப்படுகிறது. |
| சத்திநிபாதம் | - | பாவம் கழுவப்பட்ட ஆன்மா, கடவுளின் பாதம் சரண் அடைகிறது. |

இருவினை ஒப்பாவதும் மலபரிபாகம் நடைபெறுதலும் சத்திநிபாதம் சேருதலும் ஆகிய மூன்றும் ஒன்றன்பின் ஒன்றாக நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள் ஆகும்.

## தொகுப்பு :

அன்பாகிய சிவம் ஐம்புல மனிதனாகி, குருவாக இவ்வுலகிற்கு வந்து, சிலுவைப் பொறிவாயில் ஐந்தவித்த தன்மையைத் 'தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த' எனவும்

அதை உணரும் தன்மை ஆன்மாவிற்கு உண்டு என்பதை, 'இருதிறன் அறிவுள்ளது ஆன்மா', 'மாயா எந்திர தனுவினுள் உணர்த்த உணர்கின்றது' எனவும் மெய்கண்டார் கூறுகின்றார்.

தவத்தினில் உணர்த்தாவிட்டால், ஆன்மா இறைவனின் அன்பை உணர இயலாது என்பது இதன் வழி பெறப்படுகின்றது. (டாக்டர்மு.தெய்வநாயகம். ,சிவஞானபோதம், பக்.18-21)

ஆகவே, சிலுவையில் இறைமகனாம் இயேசு கிறிஸ்து பட்ட பாடுகளும் அவருடைய தியாக பலியுமே மனிதருக்கு மீட்பு அளிக்கிறது எனும் நற்செய்தி தோமா வழி இந்தியக் கிறிஸ்தவ இறையியல் நூல்களான சைவசித்தாந்த சாத்திரங்களில் ஆழமாக இடம் பெற்றுள்ளதை மேற்கண்டவை காட்டுகின்றன.

* உடல், உயிர், ஆன்மா, கடவுள் ஆகியவற்றிடையேயுள்ள வேறுபாடுகளை அறிந்து கொள்ள விரும்புவோர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின்

1. கடவுள் உண்டா?
2. புற ஒளியும் அக ஒளியும்

ஆகிய நூல்களைக் காண்க.

# 13. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் - சிற்பவியல் நோக்கு (Iconographic Aspect)

சிந்தனையின் வெளிப்பாட்டு வடிவங்களை ஆறு நிலைகளில் காணலாம்.

1. சிந்தனை வடிவம்.
2. சொல் வடிவம்.
3. எழுத்து வடிவம்.
4. ஓவிய வடிவம்.
5. புடைசிற்ப வடிவம்.
6. சிற்ப வடிவம்.

இவை அனைத்தும் கடவுளை விளக்குகின்ற கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டதை வரலாற்றில் பார்க்கலாம்.

யூத சமயத்தில் கடவுள் மனிதனாக வந்ததை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். கிறிஸ்தவத்தின்படி மனித உருவில் வந்தவர்தான் இயேசு கிறிஸ்து.

கடவுளுக்கு உருவம் கிடையாது என்பது யூத நம்பிக்கை.
கடவுள் உருவத்தில் வந்தார் என்பது கிறிஸ்தவ நம்பிக்கை.

உருவத்தில் வந்த கடவுள் தன்னைக் 'கடவுளின் குமாரன்' என்று சொல்லி, தன்னை, கடவுளுக்குச் சமமாக்கினபடியால் யூதர்கள் அவரைக் கொலை செய்தார்கள்.

எனவே,

யூத நம்பிக்கை வேறு.
கிறிஸ்தவ நம்பிக்கை வேறு.
இயேசு கிறிஸ்து மாமிசத்தில் வெளிப்பட்டார்;
குமாரன் உருவத்தில் வந்தார். இவ்வாறு 'கடவுள் உருவத்தில் வந்தார்' என்பதுதான் நற்செய்தி.

கிறிஸ்தவம் பரவிய இடங்களில் எல்லாம் உருவங்கள் வைத்து விளக்கப்பட்டன. உருவத்தில் கிறிஸ்துவை விளக்குவது வேறு; உருவ வழிபாடு என்பது வேறு. ஜெபம் செய்யும் போது கடவுளை எண்ண வடிவில் மனதில் கண்டு ஜெபிப்பது இயல்பு.

விளக்குவதற்காக உருவாக்கப்பட்ட உருவம் வேறு; உருவ வழிபாடு வேறு; ஆனால், உருவ வழிபாடு என்பது தவறான ஒன்று.

எனவேதான், நட்ட கல்லை, தெய்வம் என்று எண்ணி புஷ்பம் (பூ) தூவி வழிபடலாமோ? நட்ட கல் பேசுமா? நாதன் நம் உள்ளே அல்லவா இருக்கின்றார்? கரண்டிக்குக் கறிச்சுவை தெரியாது அல்லவா எனப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

*நட்ட கல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாற்றியே*
*சுற்றிவந்து முணுமுணென்று சொல்லும் மந்திரம் ஏதடா*
*நட்ட கல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக் கையில்*
*சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ.*

*- சிவவாக்கியார்*

கடவுள் வாழும் கோவில்கள் நாமே;

நம் உள்ளத்தில்தான் கடவுள் வாழ்கின்றார்;

எனவே, உருவ வழிபாடு என்பது தவறான ஒன்று என்பதைத் தெளிவாக இப்பாடல் காட்டுகிறது.

மனித வடிவம் எடுத்த கடவுளைப் பற்றி பொது மக்களுக்கு எடுத்துரைக்க சிற்பங்கள் வழி முயன்றனர்.

கடவுள் மனித உரு எடுத்து, இவ்வுலகிற்கு வந்து, தன்னையே பலியாகக் கொடுத்தார் என்னும் கோட்பாடு - பக்தி இயக்கம் தோன்றி வளர்வதற்கும், மனித உருவில் கடவுளின் சிற்பங்கள் காட்டப்படுவதற்கும் - காரணமாயிற்று.

மார்ட்டின் லூதர் வருகை மட்டும், கிறிஸ்தவத் திருச்சபைகளிலும் சிற்பங்கள் வழி விளக்கும் நிலை காணப்பட்டது.

இதைப் போன்று, கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் உருவான அறுவகைச் சமயங்களான சைவத்திலும் வைணவத்திலும் சிற்ப வடிவில் கடவுளை விளக்கும் முறை கிறிஸ்தவத்தின் செல்வாக்கால் உருவானது.

மூவொருமைக் கோட்பாடு, அவதாரக் கோட்பாடு போன்றவற்றை வெளிப்படுத்தும் சைவ, வைணவ சிற்பங்கள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட

காலங்களில் காணப்படுகின்றனவே தவிர கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலங்களில் காணப்படவில்லை. இந்தியாவில் காலந் தோறும் சிற்பக் கலையின் வளர்ச்சி பற்றிய ஆராய்ச்சி - சிற்பங்கள் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் இருந்த நிலையையும் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் கிறிஸ்தவத்தினால் இந்தியச் சமயங்களில் ஏற்பட்ட மாற்றங்களையும் குறிப்பாக தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாகிய சைவ, வைணவத்தின் வளர்ச்சி பற்றியும் வரலாற்று வழியில் அறிந்து கொள்ள துணைபுரிகிறது.

> கடவுள் வாழும்
> கோவில்கள் நாமே;
> நம் உள்ளத்தில்தான்
> கடவுள்
> வாழ்கின்றார்;
> - சிவவாக்கியார்

### (i) சிந்துவெளி சிற்பங்கள் :

சிந்துவெளியில் கடவுளை அருவுருவ, உருவ நிலைகளில் வழிபட்டுள்ளனர். கடவுளுக்குப் பலியிட்டு வழிபட்டுள்ளனர்.

கடவுளை அருவுருவ நிலையில் வழிபட்டுள்ளனர் என்பதற்கு, 'சிவலிங்கம்' எனப்படும் 'நினைவுக்கற்கள்' சான்றுகளாயுள்ளன. (இரா.மதிவாணன், சிந்துவெளியில் சிவலிங்கம், திராவிட சமயம், ஜுன் 1984) உருவ நிலைகளில் வழிபட்டுள்ளனர் என்பதற்கு, ஆண், பெண் உருவங்கள், கலப்புருவங்கள் போன்றவை சான்றுகளாயுள்ளன. விலங்குகள், கற்பனை உருவங்கள், மரங்கள் போன்றவை காணப்படுகின்றன. மீன், ஸ்வஸ்திக் போன்ற சின்னங்கள் முத்திரைகளில் காணப்படுகின்றன.

மொஹன்சதாரோவில் யோக நிலையில் உள்ள ஆண் உருவம் ஒன்று முற்றுப் பெறாத நிலையில் கண்டெடுக்கப் பட்டுள்ளது. சுடுமண் சிற்பத்தினாலான பெண் உருவங்கள் கிடைத்துள்ளன. சிந்துவெளியில் அதிக அளவில் நினைவுக் கற்களின் வழியும் பெண் வடிவிலும் கடவுளை வழிபட்டுள்ளனர்.

சிந்து சமவெளி நாகரிகத்திற்குப் பின், சமண, பௌத்தக் கால சிற்பங்கள் காணப்படும் வரை நீண்ட காலம் சிற்பங்கள் கிடைக்கப் பெறவில்லை.

### (ii) சிந்துவெளியிலும், பைபிளிலும் நினைவுக்கல் :

பொது நன்மையின் வடிவாக விளங்கும் இறைவனையும் பொது நன்மையின் பொருட்டுத் தன்னையே தியாகம் செய்த மனிதனையும் நினைத்துக் கல் நாட்டி வழிபடுதல் நினைவுக்கல் வழிபாடாகும். (இரா. ஜெசிந்தர் எபிநேசர், நினைவுக்கல் வழிபாடும் விவிலியமும், ப.5) கடவுளை நினைத்து வைக்கப்பட்ட

நினைவுக்கல் வழிபாடு சிந்துவெளியில் காணப்படுவதைப் போன்று இஸ்ரவேல் வழிபாட்டிலும் காணப்படுகிறது. இஸ்ரவேல் வழிபாட்டில் இது 'கல்தூண்' எனக் குறிக்கப்படுகிறது. (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம்-ஒப்பாய்வு, பக். 45-47).

## கல்தூண் :

யாக்கோபு-துன்பம், கலக்கம், குழப்பத்தோடு சென்றபோது, கடவுள் அவனுக்குக் காட்சி கொடுத்தார். (ஆதியாகமம் 28 : 17,18). கடவுள் தன் மீது காட்டிய அன்பின் வெளிப்பாடு அங்கேதான் நடைபெற்றது என்பதன் அடையாளமாக, அந்த இடத்தில் தன் தலைக்கு வைத்திருந்த கல்லை எடுத்து நட்டு வைத்தான். மீண்டும் வரும்போது, அந்த இடத்தில் வந்து வணங்குவதற்காக, அந்த இடத்தை அடையாளம் கண்டு கொள்வதற்காக அக்கல் நடப்பட்டது. கடவுள் தன் மீது காட்டிய அன்பின் வெளிப்பாட்டுக்குரிய இடம் எனும் நிலையில் அந்த இடம் ஸ்தல சிறப்பு பெற்ற இடமாக விளங்குகிறது.

ஒரு மரக்கட்டையை நட்டு வைத்தால் அது காலப் போக்கில் செல்லரித்துப் போகும். ஆனால் கல் காலங்கள் தோறும் அப்படியேயிருக்கும். அதை மற்ற கற்களில் இருந்து, வேறுபடுத்திக் காட்டுவதற்காக, அதன்மேல் எண்ணெய் பூசப்பட்டது. இது அடையாளத்திற்காகத் தானே தவிர, வணங்குவதற்காக அல்ல.

இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடைபெறும் இடங்களில் தாம் கற்களை நடுவார்கள். இஸ்ரவேல் வழிபாட்டில் கல் நட்டு கடவுளை வழிபாடு செய்யும் வழக்கம் இருந்ததைப் பின்வரும் பகுதிகள் காட்டுகின்றன.

1. யாக்கோபு / இஸ்ரேல் - பெத்தேல் - ஆதியாகமம் 28:18,19
2. லாபான் - யாக்கோபு - மிஸ்பா - ஆதியாகமம் 31:45-48. ஜெகர்சகதூதா - கலயெத்
3. மோசே - யாத்திராகமம் 24 : 4
   சீனாய் மலையின் அடிவாரம் - 12 கற்கள் - ஒரு பலிபீடம் யாக்கோபும் பலிபீடம் கட்டினான் - ஆதியாகமம் 35 : 7
4. யோசுவா - யோசுவா 4 : 20
   கில்கால் - யோர்தானைக் கடந்த உடனே 12 கற்களை எடுத்து நட்டான்.
5. யோசுவா - யோசுவா 24 : 26 - 28
   கானானை வெற்றி கொண்ட பின் சீகேம் - கர்வாலி மரத்தின் கீழ் நட்டான்.
6. சாமுவேல் - எபெனேசர் - உதவியின் கல் - I சாமுவேல் 7 :12
   கல்லை நட்டு, பலிபீடம் கட்டி, பலியிட்டு வந்தார்கள்; வழிபட்டார்கள்.

## திராவிட வழிபாட்டில் கல் நடும் வழக்கம் :

கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பின்புதான் தமிழ் இலக்கியங்களில் சிவலிங்கம் என்ற பெயர் காணப்படுகிறது. அதற்கு முன், திராவிட வழிபாட்டை எடுத்துக் காட்டும் பழமையான சங்க இலக்கியங்களில், 'கந்து' என்று வழங்கப் பெற்றது என்பது ஏற்கெனவே குறிப்பிடப்பட்டது.

சைவத்தில் இதற்குச் 'சிவலிங்கம்' என்று பெயர்.
பைபிளில் இதற்குக் 'கல் தூண்' என்று பெயர்.
இஸ்லாமில் இதற்குக் 'கருப்புக் கல்' என்று பெயர்.

## கல் நடுதல் - பலி பீடம் கட்டுதல்:

கல் நட்டு, பலியிட்டு வழிபாடு செய்யும் வழக்கம் தமிழ் நாட்டிலிருந்து இஸ்ரவேலிற்குச் சென்றதா? இஸ்ரேலிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்ததா? கல் நட்டு வழிபாடு செய்யும் வழக்கம் சிந்துவெளி வழிபாட்டில் காணப்பட்டமையும் அது நினைவுக்கல் எனக் குறிக்கப்படுகின்றமையும் முன்னர்க் குறிப்பிடப்பட்டது.

கி.மு. 2500 க்கு முற்பட்ட சிந்துவெளி நாகரிகத்தில் இருந்த சிவலிங்க வழிபாடு (அ) நினைவுக்கல் வழிபாடு பின்னர் இஸ்ரவேலில் கல் 'தூண்' என்ற பெயரில் காணப்படுகிறது.

நினைவுக்கல் வழிபாடு சிந்துவெளி திராவிட வழிபாடு ஆகும். இதில் பலி உண்டு. ஆனால், இப்பொழுது சிவன் கோவில்களில் உள்ள சிவலிங்க வழிபாட்டில் பலி இல்லை. எனவே, பலி இடுதல் இல்லாத சிவலிங்க வழிபாடு, பலியையுடைய சிந்துவெளி வழிபாட்டில் இருந்து நேரடியாக வந்த வழிபாடு அல்ல என்பதைப் பின்வருவன தெளிவுபடுத்தும்.

1. சிவலிங்க வழிபாட்டில் பலிபீடம் கட்டி பலியிட்ட வரலாறு விவிலியத்தில் மட்டுமே இருக்கிறது. இவ்வழிபாட்டை விவிலியத்தில் மேற்குறிப்பிட்ட இடங்களில் காண்கிறோம்.
2. சிவலிங்க வழிபாடு என்பது நினைவுக்கல்லாக நடப்பட்ட கல்லின் வழிபாடு அல்ல - கல்லை வழிபடுவது அல்ல என்பதும் அது நடப்பட்டுள்ள அந்த இடத்திற்கு மட்டுமே சிறப்பு அளிப்பது என்பதும் விவிலியம் தரும் விளக்கம் ஆகும்.
3. ஆகவே, கடவுளைக் காட்டுகிற கல் அல்ல அது; கடவுளின் அருள் வெளிப்பட்ட அந்த இடத்தை அடையாளம் காட்டுவதற்காக நடப்பட்ட கல் மட்டுமே அது ஆகும் என்பதும்

மற்ற கற்களில் இருந்து அந்தக் கல்லைப் பிரித்து அறிவதற்காக அக்கல்லின் (சிவலிங்கத்தின்) மீது எண்ணெய் ஊற்றப்பட்டது என்பதும் விவிலிய வழி விளக்கப்படுகின்றன.

4. இன்றைய சிவன் கோயில்களில் கருவறையில் சிவலிங்கமும், வெளியே பலிபீடமும், அவற்றோடு கன்றுக்குட்டியும் வைக்கப்பட்டு உள்ளன. கன்றுக் குட்டி (அ) காளை இறைவனுடைய வாகனம் என்று சொல்லப்படுகிறது. 'காளை' என்றால் நீண்ட கொம்பு இருக்கும். ஆனால், கன்றுக்குட்டி என்றால் 'கொம்பு' முளைத்துக் கொண்டிருப்பது போல் இருக்கும். எனவே, சிவன் கோவில்களில் சிறிய அளவிலான கொம்புடன் காணப்படுவது கன்றுக் குட்டியே தவிர காளை அல்ல. இதற்கான விளக்கம் விவிலியத்திலிருந்து கிடைக்கின்றது.

   (1 இராஜாக்கள் 12 : 28,29)

   யெரொபெயாம் : பெத்தேலில் ஒன்றும், தாணில் ஒன்றுமாக இரண்டு கன்றுக் குட்டிகளை உண்டாக்கி வைத்தான். முன்பே நினைவுக் கல்லும் பலிபீடமும் இருந்தன. இப்பொழுது பலிபீடமும், கல்லும் இருந்த இடத்தில் கன்றுக் குட்டியும் சேர்க்கப்பட்டது.

5. யூதர்கள் இஸ்ரவேலின் பத்தரை கோத்திரத்தாரையும் 'சமாரியர்' என்று அழைத்து அவர்களுடைய வழிபாட்டு இடங்களை இடித்தார்கள் என்பதை வரலாறு காட்டுகிறது. ஆகையினால், தங்களுடைய எருசலேம் கோவிலில் கடவுளுக்கு வாகனமாக வைக்கப்பட்டிருந்த கேருபீன்களைச் சிறப்பாகவும், பெத்தேலில் கடவுளுக்கு வாகனமாக வைக்கப்பட்டிருந்த கன்றுக் குட்டியை இழிவாகவும் எழுதியுள்ளனர்.

   யெரொபெயாம் சாலமோனைப் போன்று கடவுளின் வாகனத்தை கருவறையில் வைக்க வில்லை. கருவறைக்கு வெளியே வைத்தான். கன்றுக்குட்டியை வாகனமாக வைத்தான். ஆனால், பலியிட வைக்கவில்லை; இவற்றை இந்தியாவில் உள்ள சிவன் கோவில்கள் விளக்குகின்றன. எல்லா சிவன் கோவில்களிலும் கன்றுக் குட்டியை வாகனமாக வைத்துள்ளனர். ஆனால் நடைமுறையில் சொல்லும்போது 'ரிஷபம்' , 'நந்தி', 'காளை' என்னும் பெயர்களால் குறிப்பிடுகின்றனர். என்றாலும் அது உருவத்தில் கன்றுக் குட்டியாகவே கொம்பு நீளமாக வளராத நிலையில் வைக்கப்பட்டு உள்ளன.

அன்புக்குறி (சிவலிங்கம்), பலிபீடம், காளை இவை மூன்றையும் இஸ்ரவேல் வழிபாட்டில் பார்க்கின்றோம்.

பழைய ஏற்பாட்டிலுள்ள இஸ்ரவேலர் வழிபாட்டு முறையைத் தொகுத்து நோக்கினால்,

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்தல மகிமை | – | ‘ஆண்டவர் இவ்விடத்தில் இருக்கிறார்’ என்று கூறுதல். (ஆதி 28:17) |
| 2. | ஸ்தல விருட்சம் | – | கர்வாலி என்ற ஒரு மரத்தின் கீழ் நடுதல் (யோசுவா 24: 26 - 27) |
| 3. | மூர்த்தி மகிமை | – | இந்தக் கல்லே கோயில் (ஆதி 28: 22) |
| 4. | அபிஷேகம் | – | எண்ணெய் வார்த்தல் (ஆதி 35: 14) |
| 5. | வழிபாடு | – | பானபலி வார்த்தல் (ஆதி 35 : 14) |
| 6. | காணிக்கை | – | பத்தில் ஒரு பங்கு செலுத்துவேன் என்று நேர்ந்து கொள்ளல். (ஆதி 28: 22) |
| 7. | பலிபீடம் | – | ஒரு பலிபீடத்தைக் கட்டுதல் (ஆதி 35:7) |
| 8. | வாகனம் | – | பெத்தேலில் கன்றுக்குட்டியை வைத்தல் (1 அரசராகமம் 12: 29) |

ஆகியவற்றைத் தெளிவாகக் காணலாம். இவற்றை சைவ, வைணவ வழிபாட்டு முறைகளில் காணலாம்.

## இஸ்லாமில் சிவலிங்கம்:

கல் நட்டு கடவுளை வழிபடும் முறை திராவிடருக்குரியது என்பதைச் சமய வரலாறு காட்டுகிறது. சைவத்தில் இதற்குச் ‘சிவலிங்கம்’ என்று பெயர். பைபிளில் இதற்குக் ‘கல் தூண்’ என்று பெயர். இஸ்லாமில் இதற்குக் ‘கருப்புக் கல்’ என்று பெயர். இந்தக் கருப்புக்கல் பழமையான சிவலிங்கம் என்பதாக நம்பப்படுகிறது என சையத் கூறுகின்றார். "Qaaba says Syed, is believed to be an old Shivalinka' (K.R. Malkani, "Why a separate Sindh' Indian Express, February 2, 1992 )

இந்தக் கருப்புக்கல் என்பதும் இறைவனை நினைத்து வைக்கப்பட்ட குறிதான் என்றால் இதனை இஸ்லாமியர் சிறப்பிக்கின்றனரா? ஆம்; இது, திராவிட வழிபாட்டுச் சின்னமாக இருப்பதால் இதற்கு இஸ்லாமியர் மிகவும் சிறப்பு கொடுக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது.

இஸ்லாமியருக்குக் ‘கோவில்’ என்றாலே அது ஒன்றே ஒன்றைத்தான் குறிக்கும். மெக்கா என்ற இடத்திலுள்ள இந்தக் கருப்புக்கல் இருக்கும் இடத்தை மட்டுமே ‘கோவில்’ என்று குறிக்கின்றனர். மற்ற மசூதிகளெல்லாம் இதை நோக்கியே

கட்டப்பட்டிருக்கும் வழிபாட்டு இடங்கள் ஆகும். இந்தக் கருப்புக் கல்லுக்கு இன்னுமொரு சிறப்பு உண்டு. அது என்னவென்றால், இஸ்லாமியரின் முக்கியமான ஐந்து கடமைகளுள் ஒன்று கருப்புக்கல் இருக்கும் மெக்காவிற்குச் சென்று வழிபடுவது ஆகும்.

இஸ்லாமியர் ஒவ்வொருவரும் வாழ்நாளில் ஒரு முறையாவது கட்டாயம் மெக்காவிற்குச் சென்று கடவுளை வழிபட வேண்டும்.

மெக்காவிலுள்ள இந்தக் கருப்புக்கல், திராவிட இன வரலாற்றில் சிறப்பு பெற்றதற்குக் காரணமே இந்தக் கருப்புக் கல்லை அவர்கள் சிறப்பிக்கும் முறையில்தான் உள்ளது. எப்படி இதைச் சிறப்பிக்கின்றனர்?

'எங்கள் மூதாதை இப்ராகிம் நபி எப்படி இதைச் சிறப்பித்தாரோ, அப்படித்தான் நாங்கள் இன்றும் சிறப்பிக்கின்றோம்' என்கின்றனர் இஸ்லாமியர்.

காபாவை ஏழு முறை சுற்றி வந்து அந்தக் கருப்புக் கல்லைத் தொட்டு முத்தமிடுவதை, கலைக்களஞ்சியம் பின்வருமாறு கூறுகிறது.

*The Encyclopaedia Britannica elucidates ;*

*Every Muslim who makes pilgrimage is required to walk around the Ka'bha seven times, during which process he kisses and touches the black stone....... Muslims consider the Ka'bha the most sacred spot on earth and they recite their prayers looking in its direction..... ( Encyclopaedia Britannica - Vol.5, Micropaedia, 15th Ed, 1982 ).*

இவர்கள் எந்த நாட்டவராயினும் எப்படிப்பட்ட உடை உடுத்தியிருந்தாலும் அவற்றை எல்லாம் கழற்றிவிட்டு, தையலே இல்லாத வெள்ளை வேட்டியை இடுப்பில் கட்டிக் கொள்ள வேண்டும். தையலே இல்லாத வெள்ளைத்துண்டு ஒன்றை மேலே போட்டுக் கொள்ள வேண்டும். அதன்பிறகு இந்தக் கல்லை 7 முறை சுற்றி, சுற்றி வர வேண்டும். பின் அதைத் தொட்டு முத்தமிட வேண்டும்.

தையல் இல்லாத வெள்ளை வேட்டியையும் வெள்ளைத் துண்டையும் அணிந்து கொண்டு, சுற்றி வந்து, முத்தமிட்டுச் சிறப்பிக்கும் முறை எதைக் காட்டுகிறது?

தமிழன் ஒருவன் வழிபடும் முறையைக் காட்டுகிறது. இன்றைக்கும் தமிழரிடையே காணப்படும் இவ்வழிபாட்டு முறையில் அன்றைக்குச் சிறப்பித்தவர்தாம் இப்ராகிம் நபி. மற்றும் தமிழர்கள் கடவுளுக்குக் காணிக்கையாக

முடியைக் கொடுக்க மொட்டையடித்துக் கொள்வது போல், அவர்களும் செய்கின்றனர்.

> ★ கிறிஸ்தவத்தில் இயேசு கிறிஸ்துவையே ஜீவனுள்ள (உயிருள்ள) கல்லாகக் கண்டனர்.

ஆபிரகாம் சிறப்பித்த திராவிட வழிபாட்டு முறையைத்தான் இப்ராகிம் நபியின் வழித் தோன்றல்களான இஸ்லாமியரிடையே இன்றைக்கும் காணமுடிகிறது. குர்ஆனில் கூறப்படும் இப்ராகிம் நபி என்பவர் பைபிளில் ஆபிரகாம் என்று குறிக்கப்படுகிறார். இவர், திராவிடரின் சிந்துவெளி நாகரிகத்தோடு மிக நெருங்கிய தொடர்புடைய சுமேரியாவிலுள்ள 'ஊர்' என்ற இடத்திலிருந்து சென்றதாகப் பழைய ஏற்பாடு குறிப்பிடுகிறது. இவ்விடத்திலிருந்து சென்ற இவரின் நாகரிகம் திராவிட நாகரிகம் (தெ. தேவகலா-தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (விவிலிய ஒளியில்) ,1993) என்பதை அண்மைக்கால ஆராய்ச்சிகள் வெளிப்படுத்தியுள்ளன.

இப்ராகிம் நபியும் அவர் மூத்த மகன் இஸ்மவேலும் கடவுளைத் தொழுது கொள்வதற்காக, திராவிட மரபுப்படி 'கல்' ஒன்றை நாட்டிச் சிறப்பித்தனர் என்பது இஸ்லாமியர் நம்பிக்கை. அந்தக் கல்தான் 'கருப்புக்கல்' ஆகும். அந்த இடம் 'பைத்துல்லா' எனப்படுகிறது. (பைபிளில் இது 'பெத்தேல்' என்று குறிக்கப்பட்டிருக்கிறது.)

ஆபிரகாமின் திராவிட வழிபாட்டு முறையைத்தான் இப்ராகிம் நபியின் வழித்தோன்றல்களான இஸ்லாமியரிடையே இன்றைக்கும் காண முடிகிறது.

மெக்காவிலுள்ள கருப்புக்கல்லுக்கு மட்டும் ஒரு தனிச் சிறப்பு உண்டு.

இஸ்லாமில் பெண்கள் மசூதிக்குச் சென்று தொழ முடியாது. ஆனால், மெக்காவிலுள்ள கருப்புக் கல்லைப் பெண்களும் சுற்றி வந்து சிறப்பிக்கலாம். எனவே, இந்தக் கருப்புக் கல்லை, ஆண்களும் பெண்களும் சுற்றி வந்து சிறப்பிக்கின்றனர்.

இஸ்ரவேலர் வழிபாட்டிலிருந்து வளர்ந்த யூத வழிபாட்டில், பல கற்களாலாகிய 'கோவில்' கடவுளைத் தொழுது கொள்ளும் இடமாகக் கொள்ளப்பட்டது.

இஸ்ரவேலரின் 'கல்' வழிபாட்டிலிருந்து யூதரின் 'கோவில்' என்ற நிலை வளர்ச்சியடைவதற்கு இடையில் உள்ள நிலையைக் காட்டுவது இஸ்லாமின் 'கருப்புக்கல்'. 'கருப்புக்கல்' சுவற்றில் பதிக்கப்பட்டுள்ளது.

ஆக,

***கல் இஸ்ரவேல் வழிபாடு;***

***சுவற்றில் பதிக்கப்பட்ட கல் இஸ்லாமிய முறை;***

***கோவில் யூத வழிபாடு;***

என, வேறுபட்ட நிலைகளில், அடையாளமாகக் கொண்டு காணப்படுகிறது.

## உயிருள்ள கல்:

கிறிஸ்தவத்தில், அன்பின் அடையாளக் கல்லான நினைவுக் கல்லுக்குப் பதிலாக, கடவுளே இயேசு கிறிஸ்துவாகிய மனிதனாக வந்தார் என்று கருதி, இயேசு கிறிஸ்துவையே உயிருள்ள கல்லாகக் கண்டனர்.

மனிதனாக வந்த கிறிஸ்துவாகிய கடவுளை, உயிருள்ள மரம், உயிருள்ள மண் என்று குறிப்பிடாமல் 'உயிருள்ள கல்' (ஜீவனுள்ள கல்) [ 1 இராயப்பர் (பேதுரு) 2: 4 ] என்று குறித்துள்ளமை, கல் நட்டு இறைவனை வழிபடும் திராவிட வழிபாட்டின் வளர்ச்சி நிலையே ஆகும்.

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்தான் சைவம் என்றால், கிறிஸ்தவம் வந்த பிறகு பழைய இஸ்ரேல் வழிபாட்டு முறை கோயில்கள் இங்கு கட்டப்பட்டது ஏன்?

இந்தியாவிலுள்ள சிவலிங்கங்களெல்லாம், கிறிஸ்துவிற்கு முன்பே இருந்தன. பொது இடங்களில் கல் மட்டுமே நடப்பட்டு இருந்தது. ஸ்தல விருட்சம் என்று ஒவ்வொரு கோவிலிற்கும் ஒவ்வொரு சிறப்பு மரம் உண்டு. கோவில் கட்டடம் கட்டப் பெறுவதற்கு முன்பு அந்த மரத்தடியில்தான் கற்கள் நடப்பட்டிருந்தன. கட்டடம் வந்த பிறகு தான் கன்றுக்குட்டிகள் வைக்கப்பட்டன.

கிறிஸ்தவம் வந்த பிறகு, சிவலிங்க வழிபாட்டில் இருந்து வந்த பலி நிறுத்தப்பட்டுவிட்டது. ஆகவே, இந்தியாவில் உள்ள சிவன் கோவில்கள் அனைத்தும் பலிபீடங்கள் உடையனவாய் இருக்கின்றன. ஆனால் பலியில்லை.

இந்தியாவில் "Fertility Stone' எனப் பொருள் தரும் வழிபாடும், சிவலிங்க வழிபாடும் இருந்தன. இந்த இரண்டையும் சேர்த்து குழப்பிக் கொள்ளக் கூடாது. இரண்டும் வேறு வேறானவை.

இந்தியாவில் கோவில் கட்டும் முறை எல்லாம் எருசலேம் கோவில் கட்டப்பட்ட முறையில் உள்ளன. இதுதான் ஆகம முறை என்றழைக்கப்படுகிறது. சிதம்பரம், திருவரங்கம் போன்றவை இதைப் பின்பற்றியே கட்டப்பட்டுள்ளன.

தமிழகத்தின் மிகப் பழங்கோவிலாகக் கருதப்படும் தில்லையிலுள்ள கனகசபையின் கோவில் அமைப்பு, யாக்கோபு தொடங்கி வைத்த கோவில் வழிபாட்டின் விரிவே என்கிறார் கா.சுப்பிரமணியபிள்ளை. (கா.சுப்பிரமணியபிள்ளை, தமிழர் சமயம், ப.52)

கிறிஸ்தவத்தில் கூறப்படும் கடவுளின் மூவொருமைக் கோட்பாடு பற்றிய கருத்து சைவத்தில் கூறப்படும் 'சோமாஸ்கந்தர்' விளக்கத்தில் உள்ளது.

திராவிடர்களிடம் குதிரை கிடையாது; எனவே காளையை, கடவுளுக்கு வாகனமாக வைத்தனர். கல், பலிபீடம், கன்றுக்குட்டி உடைய இஸ்ரேல் வழிபாடுதான் சிவன் கோவில் வழிபாடு ஆகும்.

இயேசு உயிருள்ள சிவலிங்கம் என்று அழைக்கப்படுகிறார். 1பேதுரு 2: 4. 'ஜீவனுள்ள கல்'லாகிய (சிவலிங்கம்) 'இயேசுகிறிஸ்து' என்று அவர் குறிக்கப்படுவது ஏன்? கடவுளுடைய அன்பின் வெளிப்பாட்டை அறிந்து கொள்ள உதவியது இஸ்ரேல் வழிபாட்டில் உள்ள கல்லாகிய சிவலிங்கம் ஆகும். அதைப்போல் கடவுளுடைய அன்பின் வெளிப்பாட்டை உலகிற்கு வெளிப்படுத்தியவர் இயேசுகிறிஸ்து ஆவார். யோவான் 3:16.

## கிறிஸ்து :

கிறிஸ்து என்றால் அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்று பொருள் கூறப்படுகிறது. இயேசு கிறிஸ்துவை யாரும் அபிஷேகம் பண்ணவில்லை. அபிஷேகம் பண்ணப்படாதவர் இப்படி அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்று அழைக்கப் படுவது ஏன்?

'யாக்கோபினால் பெத்தேலில் நடப்பட்டு, எண்ணெய் அபிஷேகம் பண்ணப்பட்ட சிவலிங்கத்தை நினைவு கூர்வதற்காகவே' கிறிஸ்து என்ற பெயர் இவருக்கு உருவாயிற்று என்று வேதாகம அறிஞர்கள் கருதுகிறார்கள்.

எனவே, அவர் 'ஜீவனுள்ள கல்' எனப்படுகிறார்.

### பானபலி (wine) ஏன் ஊற்றினர்?

கல்லிற்காக அல்ல; அந்த இடத்தில் கடவுள் இருக்கிறார் என்பதை நினைவு கூர்வதற்காகவே ஆகும். சமூகத்து அப்பங்களையும் வைத்தனர். இந்நாட்டில் கோதுமை கிடைக்காத காரணத்தினால், அரிசி மட்டுமே கிடைப்பதினால் பொங்கல் படைக்கின்றனர்.

இவ்வாறு ஒரே கடவுளை வெவ்வேறு நிலைகளில் வெவ்வேறு சூழலில் வழிபட்டுள்ளமையை, சிந்துவெளியிலும் சுமேரியாவிலும் பைபிளிலும் பார்க்கலாம்.

### *(iii) சமண, பௌத்த உருவங்கள் :*

சமண, பௌத்தத்தில் ஸ்தூபிகள் காணப்படுகின்றன. சக்கரம், குடை, சங்கு, பாதச்சுவடுகள், மீன்கள், ஸ்வஸ்திக் போன்ற அடையாளங்கள் காணப்படுகின்றன.

யக்ஷன் மற்றும் யக்ஷி, லக்ஷ்மி, சரஸ்வதி போன்ற பெண் வடிவங்களின் சிற்பங்களும் அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன. (i) A. Ghosh (Editor), Jaina Art and Architecture Vol. III, 1974 (ii) Jyoti prasad Jain, Religion and Culture of the Jains, 1944; (iii) (Susmita Pande, "Birth of bhakti in Indian religion and art', Pp.87,88

பௌத்தத்தில் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் புத்தர் வடிவங்கள் காணப்படவில்லை. சமணத்தில் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் தீர்த்தங்கரர் போல் தோற்றமளிக்கும் சிதைந்த நிலையிலான உருவம் ஒன்று லோஹானிப்பூர் என்ற இடத்தில் காணப்பட்டாலும், சமணத் தீர்த்தங்கரர்கள், புத்தர் உருவங்கள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளிலேயே அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன.

### *(iv) அறுவகைச் சமயச் சிற்பங்கள் :*

மூவொருமைக் கோட்பாடு, அவதாரம் போன்றவற்றை வெளிப்படுத்தும் சைவ, வைணவ உருவங்கள் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் இந்தியாவில் காணப்படவில்லை. சிவன், முருகன், பிள்ளையார் போன்ற சிற்பங்களும் காணப்படவில்லை. இவை அனைத்தும் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளையே சார்ந்தன ஆகும். (Upendra Thakur, Some Aspects of Ancient Indian History and Culture, 1974, Pp. 246 - 247)

சைவமும், வைணவமும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைகளாதலால் சைவ, வைணவத்தின் சிற்பங்கள் மூவொருமைக் கோட்பாடு, அவதாரக் கோட்பாடு போன்றவற்றை விளக்கும் கருவிகளாகக் காணப்படுகின்றன.

அறுவகை சமயத்தில் தூய ஆவி, சைவ நோக்கில் பெண்ணாகவும், வைணவ நோக்கில் ஆணாகவும் கொள்ளப்பட்டாலும் சைவ, வைணவப் பிரிவுகளுக்கு

முற்பட்ட சமயத்தில் தூய ஆவி வேறு நிலையில் காட்டப்பட்டுள்ளது. சைவ, வைணவப் பிரிவுகளுக்கு முற்பட்ட திருக்குறளை அடிப்படையாகக் கொண்ட சான்றோர் சமயக் கோவிலில் தூய ஆவி, ஆண், பெண், தன்மையைக் கடந்தவர் என்பதை விளக்கும்வண்ணம், உருவம் ஏதுமற்ற நிலையில் காணப்படுகிறது.

'ஆம்', 'ஓம்', 'ஆமென்' என்பன மூன்று பொருள்களை உடைய மூன்று ஒலிகள் அல்ல. ஒரே பொருளையுடையனவே.

## தூய ஆவிக்கென்றே ஒரு கோவில் :

தூய ஆவிக்கென்றே கட்டப்பட்ட கோவில் தூத்துக்குடி மாவட்டம், திருவைகுண்டம் வட்டம், நட்டாத்தி என்னும் ஊரில் உள்ளது. இக்கோவிலின் பெயர் 'அருள்திரு ஆதி அடைக்கலம் காத்த அம்மையார் அம்மன் திருக்கோவில்' என்பதாகும். (சுருக்கம் - டாக்டர் மு. தெய்வநாயகம் 'அம்மன் வரலாறு')

தூய ஆவி ஆணுமல்ல, பெண்ணுமல்ல, ஆண், பெண், தன்மையைக் கடந்தவர் எனும் நிலையை இக்கோவில் விளக்குகிறது. எனவே, இங்குள்ள கருவறையில் ஆணுருவமோ, பெண்ணுருவமோ வைக்கப்படாமை ஆழ்ந்து நோக்கற்குரிய குறிப்பாகும்.

'தூய ஆவி', ஆண், பெண் தன்மைகளைக் கடந்தவர் என்பதால், தூய ஆவியைப் பெண்ணாக 'அம்மை' என்று கூறினாலும் ஆண் தன்மையையும் இணைத்து 'அம்மன்' என்று கூறுகின்றனர். இவ்வாறே தூய ஆவியை ஆணாக, 'பெருமான்' என்று கூறினாலும் பெண் தன்மையைக் காட்டும் பெண்பால் ஒருமை விகுதியை இணைத்து 'பெருமாள்' என்று கூறுகின்றனர்.

தூய ஆவி புறா வடிவில் கிறிஸ்தவத்தில் கூறப்படுவதற்கு ஏற்ப, இக்கோவில் முன்னால் வைக்கப்பட்டிருக்கும் ஆலியின் கழுத்தைச் சுற்றி, புறா வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளமை ஆழ்ந்து நோக்கற்குரியது. (இதைக் குறித்து பகுதி - 4 - 1 இல் காணலாம்.)

இது ஒருபுறமிருக்க, திருக்குறளை அடிப்படையாகக் கொண்ட சான்றோர் சமயத்திற்குப் பின் உருவான பக்தி இயக்கச் சமயங்களில் தூய ஆவி, சைவ நோக்கில் பெண்ணாகவும், வைணவ நோக்கில் ஆணாகவும் கொள்ளப்படுவதைச் சைவ, வைணவ சிற்பங்கள் பின்வருமாறு காட்டுகின்றன.

## அர்த்தநாரீஸ்வரர் :

அர்த்தநாரீஸ்வரர், ஹரிஹரன் ஆகிய இவை இரண்டும் சக்தி, விஷ்ணு இருவரும் தூய ஆவியானவரின் பெண், ஆண் உருவகங்களே என்பதைத் தெளிவாக விளக்குகின்றன.

அர்த்த = பாதி, நாரி = பெண், ஈஸ்வரர் = கடவுள். அர்த்தநாரீஸ்வரர் என்பது தன் உடம்பின் பாதியைப் பெண்ணாகக் கொண்ட கடவுள். இடப்பாகம் பெண்ணாக உள்ள கடவுள் ஆகும். அதாவது, பிதாவாகிய கடவுள், தூய ஆவியாகிய கடவுள் (பெண் நிலை) முதலியவை சைவ நோக்கில் விளக்கப்பட்டுள்ளன.

## ஹரிஹரன் :

ஹரிஹரன் : ஹரி + ஹரன். ஹரன் = சிவன்; ஹரி = விஷ்ணு; வைணவத்தின்படி விஷ்ணு சிவனின் இடப்பாகத்தில் இருக்க வேண்டும். பிதாவாகிய கடவுள், தூய ஆவியாகிய கடவுள் (ஆண் நிலை) ஆகியவை வைணவ நோக்கில் விளக்கப்பட்டுள்ளன.

சைவத்தின்படி சக்தி, சிவனின் இடப்பாகத்தில் இருக்க வேண்டும்.

வைணவத்தின்படி விஷ்ணு, சிவனின் இடப்பாகத்தில் இருக்கின்றார்.

## சோமாஸ்கந்தர் :

கிறிஸ்தவத்தில் கூறப்படும் கடவுளின் மூவொருமைக் கோட்பாடு பற்றிய கருத்து சைவத்தில் கூறப்படும் 'சோமாஸ்கந்தர்' உருவில் உள்ளது.

சோமாஸ்கந்தர் = ச + உமா + ஸ்கந்தர் = உமை, கந்தனுடன் உள்ள கடவுள்; பிதாவாகிய கடவுள் சிவனாகக் காட்டப்படுகிறார்; தூய ஆவி 'பெண்' என்ற நிலையில் உமையாகக் காட்டப்படுகிறார்; மகன் என்ற நிலையில் 'கந்தன்' ஆகக் காட்டப்படுகிறார்.

## மும்மூர்த்தி:

கிறிஸ்தவத் திரித்துவக் கருத்து வைணவத்தில் மும்மூர்த்தியாக விளக்கப்பட்டுள்ளது. கடவுள் – சிவனாகக் காட்டப்படுகிறார். வைணவத்தில், பெண் தெய்வம் உமைக்குக் பதிலாக, தூய ஆவியைக் குறிக்கும் ஆண் கடவுளாக விஷ்ணு காணப்படுகிறார். ஸ்கந்தனின் இடத்தில் பிரமனைக் காண்கிறோம் – மூவருமே ஆணாகக் காணப்படுகின்றனர். இது 'மும்மூர்த்தி ' என்று விளக்கப்படுகிறது.

எல்லோரா, காஞ்சி கைலாசநாதர் கோயில், மகாபலிபுரம் ஆகிய இடங்களில் சிவன், விஷ்ணு, பிரமன் உருவங்கள் காணப்படுகின்றன.

## மூன்று தலைகள் - ஓர் உருவம் :

கடவுளின் மூன்று ஆள்தத்துவத்திற்கும் தனித்தனியாக மூன்று பெயர்கள் இருந்தாலும், கடவுள் ஒருவரே; ஒரே ஒருவர் மட்டுமே ஆவார் என்பது

மூவொரு கடவுள் ('Triune God') 'மூன்று தலைகள் - ஒரே உடம்பு உள்ள சிவன் உருவம்' மூலம் விளக்கப்படுகிறது.

எல்லோரா, எலிபெண்டாவில் 'மூன்று தலைகள் - ஒரே உடம்பு' உள்ள சிவன் உருவம் அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றது.

சிவன், சக்தி, குமரக்கடவுள் - சிவன், விஷ்ணு, பிரமன் எனப் பல்வேறு முறைகளில் கடவுள் மூன்று வெவ்வேறு ஆள்தத்துவமாகக் காணப்பட்ட போதிலும், "அவர் மூவரல்லர் - மூன்று ஆள்தத்துவமுடைய ஒரே கடவுளே ஆவார்" என்பதையே மேற்கண்டவை காட்டுகின்றன. ஒரே கடவுளின் மூன்று வெவ்வேறு நிலைகளையே மேற்கண்டவை காட்டுகின்றன. இதை, **"One Essence Three Persons'** (homoousious) என கிறிஸ்தவ இறையியல் விளக்குவது நோக்குதற்குரியது.

## யோகம் அல்லது தவம்:

தவம் என்பதனைத் 'தன்னுயிர் தானறப் பெறுதல்' என வள்ளுவர் விளக்குகின்றார்.

தான் விடுதலை அடைய, தவம் மேற்கொள்ளப்படினும், பிற உயிர்களின் பொருட்டுத் தன்னையே அழித்துக் கொள்ளுகின்றமையே சிறந்த தவமாகக் கருதப்படுகிறது.

கடவுள் மனுவுருவில் வந்து, மன்னுயிர்க்காகத் தன்னையே அழித்தமையால் அவர் தவத்தின் தலைவனாகக் கூறப்படுகிறார். இதனை

*'அருந்தவத் தோன்'* *(புறம் க.வா.1:13)*

*'மெய்த்தவன் காண் மெய்த்தவத்தில் நிற்பார்க்கெல்லாம்'*

*(அப்பர் - 266-8, வ.சு.செங்கல்வராயபிள்ளை, தேவார ஒளி நெறிக் கட்டுரை (2 அப்பர்), கழகம், சென்னை 1.)*

*'பெருந்தவத்தெம் பிஞ்ஞகன் காண்'*

*(அப்பர் - 278-5, வ.சு.செங்கல்வராயபிள்ளை, தேவார ஒளி நெறிக் கட்டுரை (2 அப்பர்), கழகம், சென்னை 1.)*

எனும் பாடலடிகளும் தெளிவுபடுத்துகின்றன. எல்லாவற்றிற்கும் மேலான ஆற்றல்

படைத்த இறைவன் எதற்காகத் தவம் அல்லது யோகம் செய்ய வேண்டும் எனப் பொதுவாக எண்ணப்படினும், மனித உயிர்கள் நற்பேறு அடையும் பொருட்டு, இறைவன் தவம் செய்தார் என்பதை

*'யோகியாய் யோக முத்தி உதவுதல் அதுவும்ஓரார் '*

*(சிவஞான சித்தியார், சுபக்கம், செய்யுள். 73 )*

எனும் அடி காட்டுகிறது. மற்றும்

*'விரதங்கொண்டாட வல்லானும் '*

*(திருநாவுக்கரசர் தேவாரம், திருவாரூர் திருப்பதிகம், நான்காம் திருமுறை 1928 பதிகம் 4 : 2 )*

எனும் அடியும் இதைத் தெளிவுபடுத்துகிறது. இதற்கு

*'..................இருவினைப் பாசத்தாற் கட்டுண்டு மயங்கும் மாந்தரைத் தவநெறியிற் புகுத்திச் சிவஞானத்தையளித்தல் கருதி அவர் பொருட்டு எண்ணிலாத விரத நெறிகளைத் தானே மேற் கொண்டு அருள் புரியவல்ல விரதியாக விளங்குபவனும்.........'* (க. வெள்ளைவாரணன், பன்னிரு திருமுறை வரலாறு – (இரண்டாவது பகுதி), பக்.105 – 106)

எனக் கூறப்படும் பொருளும் இறைவன் விரதியாக விளங்குவதைத் தெளிவுபடுத்துகிறது.

இறைவனின் இத்தகைய தவச் சிறப்பை உணர்ந்தே அவரைத் தவத்தின் தலைவராகக் கூறுகின்றனர். கடவுளைச் சிவனாகவும் விஷ்ணுவாகவும் கண்ட நிலையில் அவரை யோகம் அல்லது தவம் செய்பவராகவும் கண்டுள்ளனர்.

யோகாசன சிவா, யோகாசன விஷ்ணு முதலிய சிற்பங்கள் இதனைத் தெளிவுபடுத்தும். இச்சிற்பங்கள் அனைத்தும் கிறித்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளைச் சார்ந்தவையாக இருப்பதும் நோக்கற்குரியது.

இறைவன், மன்னுயிர்க்காகத் தம்மையே அழித்த நிலையே, அவரைத் தவ உருவில் காண அடிப்படைக் காரணமாயிருந்தது என்பதும் நோக்கற்குரியது.

தவம் செய்யும் மரபு, திராவிடரிடையே தொண்டு தொட்டு இருந்து வருவதற்குச் சிந்து வெளியில் யோகாசன நிலையில் கிடைத்துள்ள உருவங்கள் சான்றுகளாய் உள்ளன.

சமண, பௌத்த சமயங்களிலும் யோகம் இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது.

மற்றையோரின் 'தவம்' தம்முடைய ஈடேற்றத்திற்காகச் செய்யப்பட்டது போலன்றி இறைமகனின் தவம் மன்னுயிர் ஈடேற்றத்திற்காகச் செய்யப்பட்டமையால் அவர் தவத்தின் தலைவராகக் கூறப்படுகிறார்.

சிவன், சக்தி, குமரக்கடவுள் - சிவன், விஷ்ணு, பிரமன் எனப் பல்வேறு முறைகளில் கடவுள் மூன்று வெவ்வேறு ஆள்தத்துவமாகக் காணப்பட்ட போதிலும், "அவர் மூவரல்லர் - மூன்று ஆள்தத்துவமுடைய ஒரே கடவுளே ஆவார்"

## அரசன்:

இறைவனை அரசனாகக் கண்டுள்ள தன்மையைக் கிறிஸ்தவத்திலுள்ள 'கிறிஸ்து' எனும் பெயர் காட்டுகிறது. கிறிஸ்து என்பதற்கு 'அரசன்' எனும் பொருளும் உள்ளமை முன்னரே சுட்டப்பட்டது. சிலுவையில் அறையப்பட்டபோது 'இவர் யூதருக்கு அரசன்' என்று எபிரேய, கிரேக்க, இலத்தீன் மொழிகளில் சிலுவையின் மீது எழுதப்பட்டமையும் 'யூத அரச குலச் சிங்கம்' என அவர் குறிப்பிடப்படுகின்றமையும் இதனைத் தெளிவுபடுத்தும்.

பௌத்தத்தில் மகுடத்துடனும் மீசையுடனும் பல்வேறு அணிகலன்களுடனும் காணப்படும் போதிச்சத்துவ உருவங்கள், மனிதனாக வந்த கடவுள் அரச நிலையில் காட்டப்படுகின்றமையைத் தெளிவுபடுத்துகின்றன.

சைவ, வைணவ சமயங்களில், பொதுவாக அரசனுக்குரியதாகக் கருதப்படும் மகுடத்துடனும் அணிகள் பலவற்றுடனும் காணப்படும் சிவ, விஷ்ணு உருவங்கள், கடவுளை அரசராகக் கண்ட நிலையைக் காட்டுவதாகக் கொள்ள வழிவகுக்கின்றன.

## மன்னுயிர்க்காகத் துன்புற்றவர்:

கிறிஸ்தவத்தில் கிறிஸ்துவின் சிலுவை மரணம் மன்னுயிர்க்காகத் துன்புற்ற நிலையைக் காட்டுகின்றது.

பௌத்தத்தில் போதிசத்துவர், நிர்வாண நிலையை அடையக்கூடிய நிலையிலிருப்பினும் அந்நிலையை அடையாது, மன்னுயிர் பொருட்டுத் துன்பப்படுபவராகக் காணப்படும் தன்மை இங்கு நோக்கற்குரியது. மற்றும் புத்தர், மனித குல மீட்சிக்காக 'என்னையே கொடுக்க வந்தேன்' எனக் கூறுவதாக உள்ள பகுதியும் இதனைத் தெளிவுபடுத்தும்.

சைவத்தில், சிவன் மற்றவர்கள் நீடுவாழ்வைப் பெறும்பொருட்டுத் தான் சாவாகிய நஞ்சினை உண்டதால் ஏற்பட்ட நீலகண்டன், நீலமணிமிடற்றன் எனும் பெயர்கள் இதனைக் காட்டுகின்றன. மற்றும் மன்னுயிர்க்காகத் தன்னையே பலியாக்கியவராக அவியாக – இறைவன் கூறப்படுவது ஆழ்ந்து நோக்கற்குரியது.

*'அவியுமாகி '*

*(அப்பர் - 307-8, வ.சு.செங்கல்வராயபிள்ளை, தேவார ஒளி நெறிக் கட்டுரை (2 அப்பர்), கழகம், சென்னை 1. )*

*'பொறிவாயில் ஐந்தவித்தான் '* *(திருக்குறள் 6)*

*'அவியா யவியுமாகி யருக்கமாய்ப் பெருக்கமாகி*
*பாவியர் பாவந்தீர்க்கும் பரமனாய்ப் பிரமனாகி '*

*(அப்பர் - தேவாரம் - பா.எ.320)*

எனும் அடிகள், பாவியர் பாவந்தீர்க்கும் பொருட்டு, சிவபெருமானாகிய பரம்பொருள் பிரமனாகிய மனுவுருவெடுத்துத் தம்மையே அவித்து, ஐந்தவித்தானாக விளங்கி, மன்னுயிர்க்காகத் துயருற்றமையைத் தெளிவாகக் காட்டுகிறது.

## வார்த்தை... / ஓம்....

*"ஆதிமுதல் இருந்ததை, நாங்கள் கேட்டதை, கண்ணால் பார்த்ததை உங்களுக்கு அறிவிக்கின்றோம். அதை நாங்கள் நோக்கினோம். கையால் தொட்டுணர்ந்தோம். நாங்கள் அறிவிப்பது உயிரின் வார்த்தையைப் பற்றியது. அந்த உயிர் வெளிப்படுத்தப்பட்டது. அதனை நாங்கள் கண்டோம். அதற்குச் சான்று பகர்கின்றோம்" (1 அரு. 1 : 1–2) என்று தூய அருளப்பர் மனிதனாக வந்த கடவுளை, 'ஆதிமுதல் இருந்த உயிரின் வார்த்தை' என்கிறார்.*

'உயிரின் வார்த்தை' என்பது நிறைவான இறைவனுடைய மொழியைக் குறிக்கின்றது. மனிதனுடைய மொழி குறைபாடுடைய மொழி. ஆனால் இறைவனுடையதோ நிறைமொழி அல்லது உயிரின் வார்த்தை ஆகும். (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு, இரண்டாம் பதிப்பு, செப்டம்பர், 1997, ப.260)

*ஆதியிலே வார்த்தை இருந்தது.* *(யோவான் 1 : 1)*

*அவருடைய நாமம் 'ஆமென்'.* *(வெளி 3:14)*

பிதாவாகிய தேவன் உலகைப் படைக்க சித்தம் கொண்டபோது,...ம் என்றார். இதுதான் ஆதியில் இருந்த வார்த்தை. அதிலிருந்து தான் அனைத்தும் உருவாயின. அந்த வார்த்தைதான் ஆமென். (II கொரி 1:19,20)

*'ஆதியிலே வார்த்தை இருந்தார். அவ்வார்த்தை கடவுளோடு இருந்தார். அவ்வார்த்தை கடவுளாயும் இருந்தார்.'* *(அரு.1:1)*

*வார்த்தை மனுவுருவானார்; நம்மிடையே குடி கொண்டார். அவரது மாட்சிமையை நாங்கள் கண்டோம்.* *(அரு. 1 : 14)*

எனும் விவிலியப் பகுதிகள் குறிப்பிடற்குரியன.

மனுவுருவான அவ்வார்த்தையையே திருவள்ளுவர் நிறைமொழி மாந்தர் எனக் குறிப்பிடுகிறார்.

அந்நிறைமொழி மாந்தரின் பெருமையை, மறை மொழியாகிய வேதம் காட்டும் என்பதை

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்.* *( திருக்குறள் 28 )*

என வள்ளுவர் விளக்குகின்றார்

மனிதனாக வந்த கடவுள் ஆம் என்றும், ஆமென் என்றும் இருக்கின்றார் என்பதை,

*'இறைமகனாகிய இயேசு கிறித்துவிடம் ஆம் என்பதும், இல்லை என்பதும் கலந்தில்லை. ஆம் என்பது ஒன்றே அவரிடம் இருந்து வருகிறது. ஏனெனில், கடவுளின் வாக்குறுதிகள் யாவற்றுக்கும் ஆம் என்பதே அவரிடம் இருந்தது. ஆகையால்தான் நாம் கடவுளுக்குப் புகழுரை கூறும்பொழுது, அவர் வழியாகவே ஆமென் என்கிறோம்.'* *(11 கொரி. 1 : 19 – 20)*

*'ஆமென் எனும் பெயருள்ளவர், உண்மையான சாட்சியானவர், நம்பத்தக்க சாட்சியானவர்; கடவுள் படைத்த படைப்பின் ஆதியாய் உள்ளவர்'* *(திருவெளி. 3:14)*

என்று கூறும் விவிலியப் பகுதிகள் ஆழ்ந்து கவனிக்கத்தக்கன.

'ஆம்' , 'ஓம்' , 'ஆமென்' என்பன மூன்று பொருள்களை உடைய மூன்று ஒலிகள் அல்ல. ஒரே பொருளையுடையனவே. இவை இறைவனின் உடன்பாட்டு ஒலிகளே. உலகம் படைக்கப்படுவதற்குக் காரணமான 'மூலப்பிரணவம்' எனப்படுவதும் இவ்வொலியே' என்று கூறப்படுவது நோக்கற்குரியது. (டாக்டர் மு.தெய்வநாயகம், விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் – ஒப்பாய்வு, இரண்டாம் பதிப்பு, செப்டம்பர், 1997, ப.261)

'ஆமென்' , 'ஆம்' , 'ஓம்' என்பவை கடவுளின் குமாரனாகிய இயேசு கிறிஸ்துவையும், குமரக் கடவுள் எனப்படும் முருகனையும், கடவுளின் பிள்ளை

எனப்படும் பிள்ளையாரையும் குறிக்கும் ஒரே ஒலியாகும் என விளக்கப்படுவதும் ஆழ்ந்து நோக்கற்குரியது.

'ஓம்' எனும் வடிவிற்குள் பொதுவாக முருகனையோ, பிள்ளையாரையோ காணமுடிகிறதேயன்றி, சிவனையோ விஷ்ணுவையோ காணமுடியாததும் குறிப்பிடற்குரியது.

'வார்த்தையானவர் மாந்தனானார்' என்பதன்படி இது மனிதனாக வந்த கடவுளையே குறித்தலால் 'ஓம்' என்பதற்குள் குமரக் கடவுளோ, பிள்ளையாரோ காணப்படுகின்றனர்.

வேதங்களிலும் 'வார்த்தை' எனப்படும் 'சப்த' என்பது போற்றுதற்குரியதாகக் கருதப்படுவதும் நோக்கற்குரியது. பௌத்தத்தில் 'வாக்குதேவி' என ஒன்று குறிக்கப்படுவதும் ஒப்பிடற்குரியது.

## பிற உருவங்கள் :

சைவ, வைணவ உருவங்கள் செதுக்கப்பட்ட சிவலிங்கங்கள் கிறித்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் மட்டுமே காணப்படுகின்றன.

அவதார உருவங்கள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளிலேயே காணப்படுகின்றன. குப்தர் கால கட்டத்தில் அவதாரம் பற்றிய கருத்து மிகவும் பரவிவிட்டது.

இப்படியாக, சைவ, வைணவ சிற்பங்கள் தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கோட்பாடுகளைப் பல வழிகளில் பொது மக்களுக்கு விளக்குகின்றன.

மனிதனாக வந்த இறைவனைப் பல்வேறு உருவங்களில் வடிவமைத்த போதிலும், அடிப்படையில் அவற்றிடையே ஒற்றுமை காணப்படுவதைப் பின்வரும் பௌத்த, சைவ சிற்பங்கள் காட்டுகின்றன.

## புத்தரும் சிவலிங்கமும் :

அமர்ந்த நிலையில், நெற்றியில் பொட்டுடனும் வளைவு வளைவான முடியுடனும் காணப்படும் புத்தரின் தலைமீது சிவலிங்கம் போன்றதொன்று காணப்படுவது ஆழ்ந்து நோக்கற்குரியது. ( Pl: Loriyan Tangai, Calcutta Museum, 4838/A, 23230 )

கி.பி. 9,10ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்ததாகக் குறிக்கப்படும் புத்த உருவம் ஒன்று தலையில் மகுடத்துடன் காணப்படுகிறது. நெற்றியில் பொட்டு காணப்படுகின்றது. தலைமீது ஒரு குடையும் தலையின் இரண்டு பக்கங்களிலும் ஒவ்வொரு தூபியும் உள்ளன. கீழே இரண்டு உருவங்கள் நிற்கின்றன. பீடத்தில் தாமரை மீது சிவலிங்கம் காணப்படுவது குறிப்பிடற்குரியது.
(போதிகயா அருங்காட்சியகம்(1))

திராவிடரின் கலைகளும், சொத்துகளும் பிற்காலத்தில் ஆரிய மயமாக்கப்பட்டது போல் திராவிடச் சின்னங்களும் பிற்காலத்தில் ஆரிய மயமாக்கப்பட்டன.

தூபியும் சிவலிங்கமும் ஒன்றுபோல் இருந்தமையை இது காட்டுகின்றதா? பௌத்த, சைவ இணைப்பை அல்லது பரிமாற்றத்தை இது காட்டுகின்றதா என்பது ஆராயப்பட வேண்டும்.

## புத்தரும் சிவனும் :

புத்தரின் உருவ அமைப்புகளுக்கும் சிவனின் உருவ அமைப்புகளுக்கும் ஒற்றுமைகள் பல காணப்படுவது நோக்குதற்குரியது.

"கிழக்கு இந்தியாவில், சிறப்பாக ஒரிசாவில் உள்ள 'லகுலிசா' வின் உருவம் சிராவஸ்டியில் போதித்த புத்தரின் உருவ அமைப்பாக உள்ளது. புத்தரைப்போல் ஈரிதழ் தாமரை மேல் அமர்ந்தவாறு இரண்டு நாக அரசர்களால் உயர்த்தப்பட்டதாய், கைகள் அறவாழி (தரும சக்கரம்) முத்திரையோடு காணப்படுகிறது. சிலவற்றில் அறவாழியும் இரண்டு மான்களும் பீடத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. பௌத்தத்தின் இக்கலையமைப்பு சைவர்களால் பின்பற்றப்பட்டுள்ளதை இது காட்டுகிறது. இதைப் போல் ஒன்று மற்றொன்றைப் பின்பற்றும் சமயப் பரிமாற்றத்தைச் சிற்பங்கள் பலவற்றில் காணலாம்".
( Jitendra Nath Banerjea, The Development of Hindu Iconography, 1974, P.6 )

சிவபெருமானின் 'லகுலிசக்' கோலம், பத்மாசனத்திலும் கையில் தண்டாயுதத்துடனும் முகம் பௌத்தச் சாயலிலும் காணப்படுவது குறிப்பிடற்குரியது.

எல்லோராவிலுள்ள குகை (குகை எண். 21) ஒன்றன் மண்டபத்திற்கு வெளியே, கோவிலுக்கு இடப்பக்கம், இரண்டு கைகளுடனும் தண்டாயுதத்துடனும் முகம் பௌத்த அமைப்பிலும் உருவம் ஒன்று காணப்படுவதோடு வலப்பக்கம் நான்கு கைகளுடனும் தண்டாயுதத்துடனும் உருவம் ஒன்று காணப்படுகிறது.

சிவன் சடாமுடியுடன் காணப்படுவதை ஒத்து, புத்தர் உருவம் ஒன்று நாலந்தாவில் சடாமுடி தோளில் விழக் காணப்படுவது குறிப்பிடற்குரியது. (A. Ghosh - Nalanda (No. 1-152) -P.40)

மற்றும் புத்தர் கோவிலில் புத்தர் கையில் 'திருவோடு' இருப்பதும் சிவன் கையில் 'திருவோடு' காணப்படுகின்றமையும் நோக்குதற்குரியன.

போதிசத்துவர்களுள் ஒருவர் பெயர் 'நீலகண்டலோகேசுவரா' என்றிருப்பதும், சிவன் பெயர்களுள் ஒன்று 'நீலகண்டன்' என்பதும் இங்கு குறிப்பிடற்குரியன.

. புத்தரின் பல பெயர்களுள் ஒன்று 'சிவகதிநாயகன்' என்பதும் சிவபெருமானைச் 'சிவசிவ' என்று குறிப்பதும் ஒப்பிடற்குரியன.

இவை, பௌத்தத்திற்கும் சைவத்திற்கும் உள்ள இணைப்பையும் இரண்டும் ஒன்றிணைந்து வளர்ந்த நிலைகளையும் காட்டுவனவாக உள்ளன. மனிதனாக இவ்வுலகிற்கு வந்த கடவுளாகிய கிறிஸ்துவை, பல்வேறு கோணங்களில் பல்வேறு பெயர்களில் கண்டு, மக்களுக்கு விளக்கியமையால்தான் பௌத்தத்திலும், சைவத்திலும் உருவ ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

## மீன் சின்னம் :

சிந்துவெளியில் ஏராளமான 'மீன்' சின்னங்கள் காணப்படுகின்றன.

சிந்துவெளிக்குப் பின் சமண, பௌத்தத்திலும் சைவ, வைணவத்திலும் 'மீன்' சின்னம் அதிக அளவில் காணப்படுகின்றது.

'மீன்' சின்னம் பின்வரும் இரண்டு கோணங்களில் விளக்கப்படுகின்றது.

1. 'மீன்' சின்னம் திராவிடரின் சின்னம் எனும் நிலையில் காணப்படுகிறது.
2. கடவுளோடு இணைத்துக் கூறப்படுகிறது.

## 'திராவிடர்' எனும் நிலையில் 'மீன்' சின்னம் :

பொதுவாக, மீனைச் சிறப்பிக்கும் வழக்கம் திராவிடர்களிடையே காணப்படுகிறது. எனவே, மீனைச் சின்னமாகக் கொண்டவர்கள் திராவிடர்கள் என்பது பொது நிலை. திராவிட மொழிகளில் மீன் சின்னம் சிறப்பிடம் பெற்றுள்ளது என்கிறார் ஹீராஸ் (Heras.H, Studies in Proto - Indo - Mediterranean Culture Vol.I,Pp.99-100). பாண்டியர்கள் மீனைத் தம் சின்னமாகத் தேர்ந்தெடுத்திருப்பதே அவர்கள் திராவிட மக்கள் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது எனவும்,

மீன் சின்னம் உலகில் பல்வேறு மக்களினததோடு தொடர்புடையது எனவும் பின்வருமாறு குறிப்பிடுகிறார் இராகவன். (இராகவன், அ.இ - கோ நகர் கொற்கை - திசம்பர் 1971.)

*'பாண்டியர் மீன் கொடியைத் தேர்ந்தெடுத்த பண்பே அவர்கள் திராவிட மக்கள் என்பதை நன்கு எடுத்துக் காட்டும். மீனைச் சின்னமாகக் கொண்டவர்கள் உலகில் பல நாடுகளிலும் காணப்படுகின்றனர். தமிழகத்தில் அவர்கள் மீனவர்கள் எனப்பட்டனர். இவர்கள் வேறு பல நாடுகளில் வாழ்ந்துள்ளனர். இவர்கள் மீனவன், மீனோன், மேனோன் என்றெல்லாம் அழைக்கப்பட்டு வருகின்றனர்.......... இஃதன்றிப் பாபிலோன், எகிப்து, கிரீற்றுத் தீவு முதலிய நாடுகளிலும் வாழ்ந்து வந்தனர். இந்த மீனவர்களுக்கும் கிறிஸ்தவர்களின் முன்னோடி களுக்கும் தொடர்புகள் இருக்குமோ என்ற ஐயம் எழுகிறது'.*

என்று மீனைச் சின்னமாகக் கொண்டவர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார் இராகவன்.

## கடவுளோடு இணைக்கப்பட்ட நிலையில் 'மீன்' சின்னம் :

பாண்டியர்கள் மீனைச் சின்னமாகக் கொண்டதற்குக் காரணம், கண்ணே இமைக்காத தன்மையுடைய மீனைப்போல் இமையாத தன்மையுடையவர் கடவுள் எனும் தமிழரின் நம்பிக்கையே என்றும்........ கடவுள், இமையாது காப்பதைக் குறிப்பதாக இம்மீன்களைக் கொண்டுள்ளனர் என்று கூறப்படுவதும் நோக்கற்குரியன. (இராகவன், அ.இ - மேற்படி, - ப.132.)

மீன்களைக் குறிப்பிடும் 'இக்தைசு' என்ற சொல் கிரேக்க மொழியினின்றும் வந்தது. (Ichtys - Iesous Christos Theou Hyios Soter, Jesus Christ, of God, the Son, Saviour') [New Bible Dictionary, Second Edition, 1996, p.379] அதன் பொருள் 'இயேசு கிறிஸ்து கடவுள் மகன் - மீட்பர்' (Jesus Christ the son of God - the Saviour) என்பதாகும்.

*Some Christians believe that a second link between their religion and the fish symbol is seen in the Greek word for fish (ichthus, spelled: Iota Chi Theta Upsilon Sigma). That is an acrostic for "Jesus Christ, of God, the Son, the Savior' [**I**esous (Jesus) **CH**ristos (Christ) **TH**eou (of God) **U**iou (the Son) **S**oter (the Savior)]. An acrostic is an "arrangement of words in which the first letter of each word ordinarily combines with others to form a word or words or the alphabet.' (D.T. Kauffman, Ed., "Baker's Concise Dictionary of Religion' , P. 13).*

இயேசு கிறிஸ்து தண்ணீரில் நிற்கும் காட்சி பின்வருமாறு விளக்கப்படுகிறது.

*"The depiction of Jesus standing in water confirms the metaphor of a fish drawn from the deep to bring salvation to mankind;' (The Encyclopaedia of Religion, Vol.5, p.347)*

ரோமாபுரியிலுள்ள சுரங்கக் கல்லறை எழுத்துப் பொறிப்புகளில் கிறிஸ்து 'மீன்' சின்னத்தால் அடையாளம் காட்டப்பட்டுள்ளார்.

*"Christ was symbolized by the fish, as seen in the carved inscriptions in the catacombs of Rome;' (The Encyclopaedia of Religion, Vol.5, Pp. 346 - 347)*

மூவொருமைக் கோட்பாட்டைக் குறிக்கவும் ஞானஸ்நானத்தைக் குறிக்கவும் ஒரு தலையுள்ள 3 மீன்கள் அல்லது பின்னிப் பிணைந்துள்ள 3 மீன்கள் சின்னமாகக் காட்டப்பட்டுள்ளன.

*"Three fish with one head, or three intertwined fish found in the iconography of ancient Mesopotamia, Egypt, India and Persia and even down to modern times - is a universal symbol for unity in trinity, and came to represent Christian baptism' . (The Encyclopaedia of Religion, Vol.5, p. 347)*

கிறிஸ்தவத்தில் 'மீன் சின்னம்' பல கோணங்களில் சிறப்பிக்கப்பட்டது.

'என்னைப் பின்பற்று; உன்னை மனிதரைப் பிடிக்கிறவனாக மாற்றுவேன்' என்று இயேசு கிறிஸ்து கூறியிருப்பது இவ்வுலகமே, மாற்றப்படுவதற்குரிய ஒரு மீன்கடல் என்பதை உணர்த்துவதாக அகஸ்டின் கூறுகிறார்.

*"According to Augustine,*

*Christ's exhortation, "Follow me, and I will make you fishers of men' Implied that the world is a sea of fish to be converted'. (The Encyclopaedia of Religion, Vol.5, p. 347)*

அப்போஸ்தலரைக் குறிக்கவும், திருவிருந்தைக் குறிக்கவும், கிறிஸ்தவர்கள் உரோம அரசால் துன்புறுத்தப்பட்டபோது, ஒருவரையொருவர் அடையாளம் கண்டு கொள்ளவும் பயன்படுத்தப்பட்டதைப் பின்வரும் பகுதி காட்டுகின்றது.

*The Apostles were often referred to as "fishers of men' . Followers of Christianity were called Pisciculi; the root of this Latin word is "fish' . The symbols of "sacremental fish, with wine and a basket of bread represents the Eucharist and the Last Supper in Christian art.' (J.C. Cooper, "An Illustrated Encyclopaedia of Traditional Symbols' , P. 68-69). The symbol was simple to draw and was often used among Christians as a type of password during times of persecution by the*

*Roman government. If two strangers met and were unsure whether each other was a Christian, one would draw an arc in the earth like : ) If the other were a Christian, they would complete the symbol with a reverse arc: (), forming the outline of a fish. (http://www.csn.net/advent/fathers/0304.htm).*

கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து 'மீன் சின்னம்' கிறிஸ்தவ சின்னமாகப் பயன்படுத்தப்பட்டதைப் பின்வரும் பகுதி காட்டுகிறது. ஆனால், சிலுவை கிறிஸ்தவ சின்னமாகப் பயன்படுத்தப்பட்டமை கண்டிக்கப்பட்டதையும், கி.பி. 5ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்தான் கிறிஸ்தவ சின்னமாக 'சிலுவை' பயன்படுத்தப்பட்டது என்பதையும் பின்வரும் பகுதி காட்டுகிறது.

*The fish is an ancient Christian symbol known from the 1st century catacombs in Rome. The first literary reference to a fish as a Christian symbol is from Clement of Alexandria (born c. 150) in Paedogogus, III, xi..................................*

*The use of the cross as a symbol was condemned by at least one church father of the 3rd century CE because of its Pagan origins...............The first appearance of a cross in Christian art is on a Vatican sarcophagus from the mid-5th Century...... (http://www.csn.net/advent/fathers/0304.htm)*

ஆபிரகாம் வழித் தோன்றல்களாகிய யூதர், தம் கல்லறைகளில் இரு மீன்கள் உருவம் தீட்டியுள்ளனர். இயேசுவை மக்களின் மீனவன் (The Fisher of Men) என்றும் அவர் மீனாக இருந்து மீனுக்கு நடுவே வாழ்கிறார் என்றும் பொதுவாகக் கூறுகின்றனர். வரலாற்று ஆய்வாளர் ஈராசு அடிகளாரும் பாண்டியரின் சின்னம் இரு மீன்களே என்றும் திராவிட இனத்தவர் மீனை வழிபடுவதுடன் தமிழ் மக்களில் பரவர் சுறா மீன் கொம்பை நட்டு வழிபடுவதையும் ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

*"பண்டைக் காலத்தில் நோவாவிடம் தேவன் சென்று, அவரையும் அவர் உறவினரையும் ஒரு பேழையின் மூலம் தப்புமாறு செய்ததைக் கிறிஸ்தவ மறைநூல் கூறுகிறது. அதே போல் தமிழகத்தில் வெள்ளம் வருவதைப் பாண்டியன் சத்தியவிரதன் என்னும் மன்னனிடம் ஒரு மீன் கூறி அவனையும் அவன் உறவினரையும் ஒரு தோணியிலேற்றி, தன் கொம்பால் பொதியமலை மீது சேர்த்ததாகக் கூறப்படுகிறது. திருமால் மீன் அவதாரம் என்று கூறப்படுகிறது. இத்தகைய பெரு வெள்ளம் பற்றிய கதைகளைச் சீனரும், கிரேக்கரும், கல்தேயரும் கூறி வந்துள்ளனர். மீன் சின்னம் பண்டைய திராவிட மக்களோடு இணைந்திருந்தது என்று இந்தப் பழங்கதையினின்று நாம் தெரிகிறோம். எல்லம் நாட்டின் தலைநகர் 'ஊரில்' வாழ்ந்த ஆபிரகாம் மரபில் கிறிஸ்து பெருமானும், முகம்மது எனும் தெய்வத் தூதரும்*

*தோன்றினர். எல்லமும், ஊரும் திராவிட நாட்டோடும் மக்களோடும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததாக இன்றைய அறிஞர்கள் கருதுகின்றனர். மேலும் கிறிஸ்து மீன் சின்னம் என்று கிறிஸ்தவ மறையை நன்காய்ந்தவர்கள் கூறுகின்றனர்"* . *(இராகவன், அ.இ - கோ நகர் கொற்கை - க.நூ.ப. திருநெல்வேலி - 2, திசம்பர் 1971 - ப.132.)*

புத்தரின் பாத சுவட்டில் காணப்படும் மீன் சின்னம் விடுதலையடைந்த நிலையைக் காட்டுகிறது என்று பின்வருமாறு விளக்குகின்றனர்.

*"Shown on the footprint of the Buddha, a fish meant emancipation from attachment and desire'* . *(The Encyclopaedia of Religion, Vol.5, p. 346)*

திராவிடர்களாகிய பாண்டியர் தம் திராவிடப் பண்பாட்டைக் காண்பிப்பதாய் மீன் சின்னம் விளங்குவதோடு, இமையாது காப்பவன் இறைவன் எனும் நிலையில் இச்சின்னம் காணப்படுவதை மேற்கண்டவை காட்டுகின்றன. (தெ. தேவகலா ஜோதிமணி, எம். ஃபில்., ஆய்வேடு வரலாற்று நோக்கில் திருவமுதீசுவரர் கோவில், பெருங்குளம், 1987).

**சுவஸ்திக் :**

'சுவத்திகம்' (சுவஸ்திக்) எனக் கூறப்படும் இச்சின்னத்தைப் பார்த்தவுடன் 'இது ஆரியரின் சின்னம்' எனப் பெரும்பாலோர் கூறுகின்றனர். தன்னையே ஆரியராக உரிமை பாராட்டிய 'ஹிட்லர்' இச்சின்னத்திற்கு மிகவும் சிறப்பு கொடுத்ததால், இது ஆரியருக்கே உரியது என எண்ணுபவர் பலர்.

வரலாற்றில் பார்த்தால், முதன் முதல் இச்சின்னம் சிந்துவெளி முத்திரைகளில்தான் காணப்படுகிறது. இது அரப்பா, மொகஞ்சதாரோ மற்றும் லோதலிலும் காணப்படுகிறது. சிந்துவெளி நாகரிகம், திராவிட நாகரிகம் என்பதை அண்மைக்கால ஆய்வுகள் உறுதிப்படுத்தியுள்ளதால், இச்சின்னம் திராவிடருக்கே உரியது என்பது வரலாறு காட்டும் உண்மை ஆகும்.

சிந்துவெளி முத்திரைகளில் காணப்படும் இச்சின்னத்தை 'ஓம்' என்பதாகக் குறிப்பிடுகின்றனர் அறிஞர் பலர். இதை வடமொழியாளர் மங்களச்சொல் எனும் பொருளில் 'சுவஸ்திக்' என்று பெயரிட்டுள்ளனர். (M. Ramachandran, R. Madhivanan, The Spring of the Indus Civilization, 1991, P. 48 )

இக் குறியே தமிழ் பிராமியிலும் வட பிராமியிலும் 'ஓ' என்பதைக் குறிக்க, பின்னர் வழி வகுத்துள்ளதாகவும் மதிவாணன் கூறுகிறார். ( M. Ramachandran, R. Madhivanan, Op.Cit., )

திராவிட சமயங்களான சமண, பௌத்த சமயங்களிலும் இது சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து 'மீன் சின்னம்' கிறிஸ்தவ சின்னமாகப் பயன்படுத்தப்பட்டது. கி.பி. 5ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்தான் கிறிஸ்தவ சின்னமாகச் 'சிலுவை' பயன்படுத்தப்பட்டது.

சமணத்தில் சிறப்பாக இடம் பெற்றுள்ள ஒலிகளுள் ஒன்று 'ஓம்' என்பதும், குறிகளுள் ஒன்று சுவஸ்திக் என்பதும், இதன் சிறப்பை உணர்த்தும். ( Jotiprasad Jain, Religion and Culture of Jains, 1994, P.117 )

பௌத்தத்தில், புத்தரின் கைவிரல்களிலும் பாதங்களிலும் இச்சின்னம் காணப்படுகிறது. பம்பாயிலுள்ள அருங்காட்சியகத்தில் (Museum) புத்தர் அபயமளிப்பதாகக் காட்டும் வலதுகையின் ஐந்து விரல்களிலும் இச்சின்னம் காணப்படுவதுடன், பாதங்களிலும் காணப்படுகின்றது. பம்பாயிலுள்ள 'கார்லே' (Karle) எனும் பௌத்தக் குகையின் வாசலிலுள்ள தூணில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகள் இக்குறியுடன் தொடங்கி இக்குறியுடனே முடிகின்றன.

சைவத்திலும் 'ஓம்' என்பது 'மூலப்பிரணவ மந்திரம்' அதாவது, 'உலகத் தோற்றத்திற்குக் காரணமான ஒலி' எனும் நிலையில் சிறப்பிக்கப்படுவதும், விவிலியத்தில் (Bible) உலகப் படைப்பிற்குக் காரணம் கடவுளின் வார்த்தை என்றும் மானிட உருவமெடுத்த வார்த்தை 'ஆம் என்றே இருக்கின்றார்' (II கொரிந்தியர் 1 : 19, 20) 'ஆமென் என்பவர்...' (வெளிப்படுத்தின விசேஷம் 3: 4) எனக் குறிப்பிடப்படுவதும் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டன.

'ஆம்' என்பதை யாழ்பாணத்தவர் இன்றும் 'ஓம்' என்கின்றனர்.எனவே 'ஓம்' எனும் திராவிடக் குறியானது முதல் வார்த்தை அல்லது முதல் சொல் அல்லது 'மங்களச் சொல்' என்ற நிலையில் திராவிடரின் ஆத்திக, நாத்திக சமயங்களில் சிறப்பிடம் பெற்றுள்ளது.

திராவிடரின் கலைகளும், சொத்துகளும் பிற்காலத்தில் ஆரிய மயமாக்கப்பட்டது போல் திராவிடச் சின்னங்களும் பிற்காலத்தில் ஆரிய மயமாக்கப்பட்டதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு ஆகும்.

கடவுளையும் மனிதனாக வந்த கடவுளையும் பல்வேறு கோணங்களில் பல்வேறு சமயங்களும் நோக்குகின்றன. அவை ஒரே இறைவனையே நோக்கி இருப்பதால், அவற்றிடையே ஒருமைப்பாடும் இணைப்பும் காணப்படுவதை மேற்கண்டவை காட்டுகின்றன.

சிற்பங்களின் வளர்ச்சிப் படிநிலைகளை நோக்கும்போது, வட இந்தியாவில் கிறித்துவிற்கு பிற்பட்ட நூற்றாண்டுகளின் தொடக்கக் காலங்களில் சமயச் சிற்பங்கள் காணப்படுகின்ற அளவு தென்னிந்தியாவில் காணப்படாமைக்கான காரணங்கள் ஆழ்ந்த ஆய்விற்குரியனவாகவுள்ளன.

இவ்வாறு, சிற்பங்கள், கிறிஸ்தவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளான

மூவொருமைக் கோட்பாடு
அவதாரக் கோட்பாடு
பலி நிறைவேற்றக் கோட்பாடு

முதலியவற்றை எளிய மக்கள் புரியும் வண்ணம் விளக்குவதற்காக வைக்கப்பட்டன.

கிறிஸ்தவக் கருத்துகளை விளக்குவதற்காக வைக்கப்பட்ட சிற்பங்கள் அரசியல் செல்வாக்கால் வேறு நிலைக்கு உட்படுத்தப்பட்டதை வரலாறு காட்டுகிறது.

கடவுள் மனிதனாக வந்தார் என்னும் அவதாரக் கோட்பாடு, பிற்காலத்தில் அதனுடைய, அடிப்படை நோக்கத்திற்கு வேறாக, மனிதரைக் கடவுள் நிலைக்கு உயர்த்தி அரசியல் செல்வாக்கிற்கு உட்பட்ட நிலைக்கும் பின்வரும் சிற்பங்கள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன.

**இராமன் :**

இராமனைக் காட்டும் சிற்பங்கள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளின் தொடக்கக் காலங்களில் காணப்படாமல், பிற்பட்ட காலங்களிலேயே காணப்படுகின்றமையும் குறிப்பிடற்குரியது.

மனிதராக இருந்த இராமன் பின்னர் அவதாரமாக்கப்படும் நிலை காணப்படுகிறது. (Sudhakar Chattopadhyaya, Evolution of Hindu Sects Up to the time of Samkaracarya, 1970, Pp. 58-59)

இராமன் நல்ல உயர்ந்த உள்ளங்கொண்ட தலைவர்......விட்டுணுவின் அவதாரமல்லர் என்னும் இராதா கிருஷ்ணனின் கருத்து இங்கு நோக்கற்குரியது. (S. Radhakrishnan, Indian Philosophy Vol.I, 1977, P. 482 )

*இராமாயணம், இராமனைச் சாதாரண மனிதனாகவே விவரிக்கிறது. விஷ்ணுவின் அவதாரமாகவன்று; அவர் 'இறைவனாகி*

*விஷ்ணுவாக்கப் பெற்றது பிற்சேர்க்கைப் பகுதிகளில்; இத்தகைய இடைச் செருகல்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் நிகழ்ந்தனவாதல் வேண்டுமென்று அறிஞர்கள் கருதுகின்றனர். (சுவீரா ஜெயஸ்வால், வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும், 1991, மே.ப.ப.13)*

திராவிடரின் கலைகளும், சொத்துகளும் பிற்காலத்தில் ஆரிய மயமாக்கப்பட்டது போல் திராவிடச் சின்னங்களும் பிற்காலத்தில் ஆரிய மயமாக்கப்பட்டன.

என்னும் பகுதி, இராமன் அவதாரமாக்கப்பட்டது கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

வால்மீகி இராமாயணத்தில் மனிதனாகக் காட்டப்படும் இராமன், கம்பர் எழுதிய கம்பராமாயணத்தில்தான் அவதாரமாகக் கூறப்படுவது இங்கு ஆழ்ந்து நோக்கற்குரியது. எனவேதான், இராமனைக் காட்டும் சிற்பங்கள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளின் தொடக்கக் காலங்களில் காணப்படாமல், பிற்பட்ட காலங்களிலேயே காணப்படுகின்றன.

வீரனாக விளங்கிய இராமன், காலத்திற்குக் காலம், சமயத்திற்குச் சமயம் பல்வேறு பண்புகளுடன் பல்வேறு நிலைகளில் காட்டப்படுவதை மேற்கண்டவை விளக்குகின்றன.

எளிய மக்களுக்காக வைக்கப்பட்ட சிற்பங்கள், நாளடைவில் பற்பல மாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டதால், அவை முதலில் வைக்கப்பட்ட அடிப்படை நோக்கத்தையே மக்கள் புரிந்து கொள்ள இயலா நிலையில் இருக்கின்றனர்.

எனவே, வரலாற்று நோக்கில் இவை தெளிவுபடுத்தப்பட வேண்டும்.

# 14. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் - வரலாற்று நோக்கு

கிறிஸ்துவிற்கு முற்பட்ட வழிபாடுகளும் சமயங்களும் கிறிஸ்தவத்தினால் அடைந்த மாற்றங்களையும் வளர்ச்சிகளையும் வரலாற்று வழியில் காண்பது வரலாற்று நோக்கு ஆகும்.

குறிப்பாக, இந்தியாவில் தோமா வழி கிறிஸ்தவத்தினால் இந்திய வழிபாடுகளும் சமயங்களும் அடைந்த மாற்றங்களை வரலாற்று நோக்கில் காண்பது இந்த இயலில் முக்கிய இடம் பெற்றுள்ளது.

சமயங்களின் வரலாற்றைப் பார்க்கும்போது, கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட நிலையையும், கிறிஸ்துவிற்குப் பின் வழிபாடுகளிலும் சமயங்களிலும் கிறிஸ்தவத்தினால் ஏற்பட்ட மாற்றங்களையும் பின்வருமாறு காணலாம்.



கிறிஸ்தவத்தினால், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் சமணத்தில் புதிய பிரிவாக, சுவேதாம்பரம் உருவானது. இவ்வாறே, கிறிஸ்துவிற்கு முற்பட்ட கால பௌத்தமான 'ஹீனயான' பௌத்தத்திலிருந்து, கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில், கிறிஸ்தவத்தினால், மஹாயான பௌத்தம் உருவானது. அதாவது, தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளையான மஹாயான பௌத்தமாகப் பிரிந்தது.

கி.பி. முதல் நூற்றாண்டில் கிறிஸ்தவம் இந்தியாவிற்கு வந்ததினாலும், இந்திய மொழி மற்றும் பண்பாட்டில் வளர்ச்சியடைந்ததாலும் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளைச் சார்ந்த சிந்துவெளி மற்றும் பழந்திராவிட வழிபாடு முதலியவை திருக்குறளை அடிப்படையாகக் கொண்ட சான்றோர் சமயமாகவும், சைவ, வைணவ சமயங்களாகவும் வளர்ந்தன.

இவற்றைப் பின்வருமாறு காணலாம்.

| கிறிஸ்தவம் | பிதா | தூய ஆவி | குமாரன் |
|---|---|---|---|
| திருக்குறள் | கடவுள் | வான் | நீத்தார் |
| பௌத்தம் | தர்ம காயா | சம்போக காயா | நிர்மாண காயா |
| சைவம் | அப்பன் | அம்மை | மகன் |
| வைணவம் | சிவன் | விஷ்ணு | பிரமன் |

இனி, வரலாற்றுப் பார்வையில், இந்தியாவில், காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் வளர்ந்த நிலையையும் அடைந்த மாற்றங்களையும்

## காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும்

என்னும் அட்டவணைகளில் பின்வருமாறு காணலாம்.

# காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் - I

**சிந்துவெளி–திராவிட நாகரிகம்**

நினைவுக்கல்
–
பெண் தெய்வம் கொம்புகளுடன்
–
ஆண் தெய்வம்
–
கலப்புருவம்
–
ஆதாம்–ஏவாள்–
–
சுவஸ்திக் சின்னம் (வார்த்தை)–
சுட்ட செங்கற்களால் கட்டமைக்கப்பட்ட வீடுகள் – நகர வாழ்க்கை –

கற்கள் மற்றும் வெள்ளி பயன்பாடு.

இரும்பு இல்லை.
குதிரை இல்லை.

மீன்,எருது, புலி, யானை காணப்படுதல்

திராவிட பலிக் கோட்பாட்டு வழிபாடு

கி.பி.1920ல் சிந்துவெளி நாகரிகம் கண்டுபிடிப்பு– சர்.ஜான் மார்ஷல், பின்னர் Fr. ஹீராஸ் – இருவரும் சிந்துவெளி நாகரிகம் திராவிடநாகரிகம் என்று விளக்கல்.

---

திராவிடர் பிற நாடுகளுடன் **வணிகத் தொடர்பு**

சுமேரியா 'ஊர்' எனுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட சிதைந்த கோவிலின் உத்தரம் தென் இந்தியத் தேக்கு மரத்தால் ஆனது
–
சுமேரியாவில் சிந்துவெளி முத்திரைகள்
–
வணிகத்தொடர்பும் பண்பாட்டுத் தொடர்பும்

---

திராவிட– பெர்சிய தொடர்பு
வடமேற்கில் பெர்சிய செல்வாக்கு –

சொராஷ்டிரம்

பௌத்தம், சமணம் (கடவுள் கொள்கை அற்ற சமயங்கள்)
புத்தரின் உருவங்கள் கி.மு.வில் இல்லை.

இந்திய மொழிகள்:
தமிழ் /
பாலி (பௌத்தம்).......
அர்த்தமாகதி,(சமணம்)
பலிக்கோட்பாட்டு வழிபாட்டின் வளர்ச்சி
ஆரிய வழிபாட்டிற்கு எவ்வித ஆதாரங்களுமில்லை.

---

உரோமப் பேரகடன் தென் இந்தியா கடல் வழி வணிக உறவு.
வடமேற்கு படையெடுப்பு

---

அசோகரின் கீழ் **பௌத்தம்** ஆட்சி மதம்

விலங்கு பலி தடை சட்டம்

விலங்கு பலி தடை குறித்து இந்திய மொழிகள் உட்பட கிரேக்கம், அரமேயத்தில் அசோகர் கல்வெட்டுகள்

கல்வெட்டுகளில் ஒன்றுகூட சமஸ்கிருதத்தில் காணப்படவில்லை.

வடமேற்கில் கிரேக்கப் படையெடுப்புகள்.

---

**தமிழ்ச் சங்கங்களின் காலம்**
(ஏறக்குறைய கி.மு.3 நூற் – கி.பி.3 நூற்.)

நினைவுக் கல் 'கந்து', எனும் பெயரில் வழிபடப்படல்;

வேலன், கொற்றவை வழிபாடு

ஆதாம் –ஏவாள் குறிப்புகள்

கடவுளை வெவ்வேறு பெயர்களில் வழிபடல்

---

←-----------கி.மு..2500-----------→ கி.மு.600 கி.மு.400 ←----கி.மு.300----→

# காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் -II

**சங்க இலக்கியம் காட்டும் தமிழரின் வாழ்க்கை முறை,**

ஐவகை நிலத்தில் கடவுளை ஐவகைப் பெயர்களில் வழிபடல்

குறிஞ்சி – சேயோன்
முல்லை – மாயோன்
மருதம் – இந்திரன்
நெய்தல் – வருணன்
பாலை – கொற்றவை

**"யாதும் ஊரே யாவரும் கேளிர்"**

எனும் உயர்ந்த பண்பாடு

".விருந்தோம்பல்" பண்பு

ஏறக்குறைய கி.மு..300––முதல்–––

**சங்க இலக்கியம் காட்டும் சாதி ஏற்றத்தாழ்வு அற்ற சமுதாயம்**

சங்க இலக்கியம் காட்டும் சமுதாயத்தில் தொழிலால் மட்டும் வேறுபாடு,: அவை,

1.பாடுபவன் – பாணன்
2.பறையடிப்பவன் – பறையன்
3.துடி தட்டுபவன் – துடியன்
4.கடம்பு முழக்குபவன் – கடம்பன்

இவை அனைத்தும் தொழில் பெயர்களே தவிர சாதிப் பெயர்கள் அல்ல. மற்றும்

1. அந்தணர்
2. அரசர்
3. வணிகர்
4. வேளாளர் என்பன. இதில் சாதி ஏற்றத்தாழ்வு கிடையாது.

'ஐயர்' ,'அந்தணர்' 'பார்ப்பான்' எனும் பெயர்கள் – தமிழ்த் தலைவர்களாகிய, மெய்யறிவாளர்களைக் குறித்தல்

கி.மு.300

**பௌத்தம் ஆட்சி மதம்**

திராவிட அரசன் அசோகன் பெயரன் பிருகத்ரதனைப் படைத் தளபதி புஷ்யமித்திரன் சூழ்ச்சியாகக் கொலை செய்தல், திராவிட அரசனிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றல் சுங்க வம்சம் நிறு வுதல்

ஆரிய வழிபாடு

கி.மு. 2ஆம் நூற்.ல் வடமேற்குப் படைபெடுப்பு சகர்கள்.....

கி.மு.185

இந்தியாவில் புனித தோமாவின் நற்செய்திப் பணி.

தட்சசீலத்தை ஆண்ட கொண்டோபோரஸ் நாணயங்கள் கண்டுபிடிப்பு..

**கிறிஸ்தவத்தின் வருகையால்**

புதிய கோட்பாடுகள் அறிமுகம்

ஓரிறைக் கோட்பாடு முக்கிய இடம்

1. மூவொருமைக் கோட்பாடு
2. அவதாரக் கோட்பாடு
3. பலி நிறைவேற்றக் கோட்பாடு
4. பாவ மன்னிப்புக் கோட்பாடு
5. விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு

ஆகிய கிறிஸ்தவக் கோட்பாடுகள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற். களில் உருவான இந்தியச் சமயங்களுக்கு அடிப்படையான கோட்பாடுகளாக அமைதல்.

கி.பி முதலாம் நூற்றாண்டு

# காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் -III

(கிறிஸ்தவத்தின் வருகையால் கடவுளையும் வழிபடலாம், ஆனால், பலி செலுத்தத் தேவையில்லை எனும் புதிய பலி நிறைவேற்றக் கோட்பாடு அறிமுகம்)———

...எனவே, சைவ, வைணவக் கோவில்களில் பலிபீடம் உண்டு. ஆனால், பலி செலுத்துவதைக் காண முடியாது. ஆனால், பழந்திராவிட வழிபாட்டின் தொடர்ச்சியில் மட்டுமே பலி இடுவதைக் காணலாம்.——

பௌத்தத்தில் கிறிஸ்தவத்தால் மகாயான பௌத்தம் உருவாதல் ———

சமணத்தில் கிறிஸ்தவத்தால் சுவேதாம்பர சமணம் உருவாதல் ———

பௌத்த, சமணத்தில் புதிய நிலையில் வழிபாடு

முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு

மகாயான பௌத்தம் சுவேதாம்பர சமணம் –

முதல்முதல் புத்தருக்கு உருவங்கள் வைத்து சிறப்பித்தல் –

பௌத்தத்தில் 'திரிகாயா' –

தர்மகாயா — பிதா
சம்போககாயா – ப.ஆவி
நிர்மாணகாயா – குமாரன்

'போதிசத்துவர்' கொள்கை –

வடக்கில் சிற்பங்கள் தட்சசீலம், மதுரா சமண, பௌத்த, சிற்பங்கள் –

சுவேதாம்பர சிற்பங்கள் – கண் திறந்த நிலையில் ஆடையுடன் காணப்படுதல்

திருவள்ளுவர் – திருக்குறள்

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ முதல் நூல் திருக்குறள்

------

'சிலுவை' என்பது 'பொறி' எனக் குறிக்கப்படல். சிலுவையில் பலியான கிறிஸ்துவை, 'பொறி வாயில் ஐந்தவித்தான்' என்னும் தொடரால் குறித்தல்.——

'இயல்புடைய மூவர்' என்னும் தொடரால் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி குறிக்கப்படல்.———

பிதா – கடவுள் வாழ்த்து
ப.ஆவி – வான் சிறப்பு
குமாரன் – நீத்தார் பெருமை—

திருக்குறளில், 'கிறிஸ்தவர்கள்' 'சான்றோர்' என்று குறிக்கப்படல்.

'சான்றோர்'களின் அடிப்படையான பண்புகள்

1. அன்பு
2 நாண்
3. ஒப்புரவு
4. கண்ணோட்டம்
5. வாய்மை

வியாசர் : வேதங்கள் தொகுக்கப்படுதலும் ரிக் வேதம் பத்தாம் மண்டலம் இயற்றப்படுதலும்.

தெற்கில் சீரியக் கிறிஸ்தவம்

மகாயான சமஸ்கிருதத்தில் இலக்கியங்கள்

### தமிழ் பக்தி இயக்கம்

புனித தோமா அடக்கம் செய்யப்பட்ட மயிலையிலிருந்து தமிழ் பக்தி இயக்கம் (சைவ, வைணவம்) உருவாதல்.

மயிலையிலிருந்து – பொய்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார் – பக்தி இயக்க எழுச்சிப் பாடல்கள் –

சைவத்தின் 63 நாயன்மார்களும் வைணவத்தின் 12 ஆழ்வார்களும் புனித தோமா அடக்கம் செய்யப்பட்ட தமிழ் நாட்டையே சார்ந்தவர்கள்.–

தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவக் கிளைகள் (சைவம் – வைணவம்) முதலில் ஒன்றாகக் காணப்படுதல்.பின்னர் பிரிந்து தனித் தனியே காணப்படல்

0 ←————கி.பி.150 முதல் ———→ .கி.பி.200 முதல்————கி.பி.400———கி.பி.500 முதல்———

# காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் -IV

செப்பமான சமஸ்கிருதம் கல்வெட்டுகளில் ஆளுகை செய்தல் –

தேவாரம், திருவாசகம், நாலாயிரதிவ்வியப்பிரபந்தம் ....அனைத்தும் தமிழ் மொழியில்

இயேசுவின் சிலுவைப் பாடுகளை நினைவுகூறும் 'திருநீறு' சைவத்தில் சிறப்பிக்கப்படல்

தெற்கில் பல்லவர் ஆட்சி

தெற்கில் சிற்பங்கள் – ஆய்கோலே, மகாபலிபுரம், காஞ்சிபுரம் முதலிய இடங்களில் சிற்பங்கள் வளர்ச்சி

சைவத்தின் பழமையான கோவிலான சிதம்பரமும் வைணவத்தின் பழமையான கோவிலான திருவரங்கமும் தமிழ் நாட்டிலேயே உள்ளன.

பழமையான 275 சைவக் கோவில்களில் 230 தமிழ் நாட்டிலேயே உள்ளன.
பழமையான 103 வைணவத் திருப்பதிகளில் 96 தமிழ் நாட்டிலேயே உள்ளன.

### ஆரிய ஆட்சியும் 'மனுநூலும்'

வெளிநாட்டிலிருந்து படையெடுத்து வந்த

1. பாரசீகர் – (கிமு.6 ஆம்.நூற்.)
2. கிரேக்கர் – (கிமு.4 ஆம்.நூற்.)
3. சகர் – (கிமு.2 ஆம்.நூற்.)
4. குஷானர் – (கிபி.1 ஆம்.நூற்.)
5. ஹூணர் – (கிபி.4 ஆம்.நூற்.)

மற்றும்
வணிகத்திற்காக வந்த

6. ரோமர் – (கிமு.4 ஆம்.நூற்.)

ஆகிய ஆறு பிரிவினரும் ராஜஸ்தானில் உள்ள 'மவுண்ட் அபு'வில் கி.பி.7ஆம்நூற்றாண்டில் கூட்டணி அமைத்தல்.
திராவிட அரசனாகிய 'ஹர்ஷவர்த்தனனை'க் கொன்று, 'ஆரியவர்த்தம்' உருவாக்கல்.

ஆரிய ஆட்சியில் சட்ட நூலான 'மனுநூல்' உருவாக்கல். நிற, இன ஏற்றத்தாழ்வை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்ட சட்ட நூல்.

### வடக்கில் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை

ஆரியருக்குள் திராவிடரின் உடைமைகள் பங்களிப்பு

1. சமயச் சடங்கு – பிராமணர்
2. ஆட்சி உரிமை – சத்திரியர்
3. நிலவுடைமை – வைசியர்

இவ்வாறு,

1. பிராமணர்
2. சத்திரியர்
3. வைசியர்

என்று ஆரியரில் 3 பிரிவினர்.
திராவிடரில், ஆரிய ஆட்சியை ஏற்றுக் கொண்டோர்

4. சூத்திரர்

எதிர்த்தவர்

5. பஞ்சமர்

என்று பிரிக்கப்பட்டனர்.

ஆசாரியர்/ புரோகிதர் 'பிராமணர்' என்றும் ராஜபுத்திரர்கள் (650–1200) தாக்கூர்கள் என்றும் அழைகப்படுதல்.

0 கி.பி.500-----முதல்--------------------------- ---------கி.பி.700------- -----கி.பி.900--------

# காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் -V

**ஆதிசங்கரர் ... அத்வைதம்**
**சங்கரமடம்**

..........

**ஆதிசங்கரர் அத்வைதக் கொள்கையால் மனுநூலை மனுதர்ம சாஸ்திரமாக்கல்**

ஆதிசங்கரர், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை இந்தியா முழுவதும் பரப்புவதற்காக இந்தியாவின் நான்கு திசைகளிலும்

1. ஜோஷி மடம் –உத்தரபிரதேசம்)
2. துவாரகா மடம் – குஜராத்
3. பூரி மடம் – ஒரிசா
4. சிருங்கேரி மடம் – கர்நாடகா

ஆகிய 4 சங்கரமடங்களை நிறுவுதல். அத்வைத ஒருமைவாதம் தெற்கிலிருந்து வடக்காகப் பரவுதல் – பிராமணீயக் கொள்கை பரவுதல்.

தெற்கில் சோழ ஆட்சி
(கி.பி.9 – 12 நூற்.)

திராவிட நூல்களுக்கு ஆரிய நோக்கில் தவறான உரைகள்.

திராவிடர்களின் மூல நூல்களான

பிரமசூத்திரம்,
பகவத்கீதை.
உபநிஷத்

ஆகியவற்றிற்கு, சாதி ஏற்றத்தாழ்வை நிலைநிறுத்தும் நோக்கில் பிராமணர்களால் எழுதப்பட்ட உரைகளே,

1. அத்வைதம் – ஆதிசங்கரர்
2. விசிஷ்டாத்வைதம் – இராமானுஜர்
3. துவைதம் – மாத்துவர்

எனவே, ஆதிசங்கரர், இராமானுஜர், மாத்துவர் ஆகியோர் உரையாசிரியர்களே தவிர மூலநூலாசிரியர்கள் அல்லர்.

**சைவ சித்தாந்தம்**

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இறையியல் நூல்கள்

(கி.பி.12ஆம் நூற். முதல் கி.பி. 14ஆம் நூற். வரை)

சைவ சித்தாந்த சாத்திரங்கள் மொத்தம் 14

முதல் நூல் – திருவுந்தியார்
இரண்டாம்நூல் – திருக்களிற்றுப்படியார்
மூன்றாம் நூல் – சிவஞானபோதம்

**குகையிடி கலகம்**

3ஆம் குலோத்துங்கச் சோழன் காலத்தில், பிராமணீயத்தின் ஆதிக்கத்தால் நாட்டில் வாழ இயலாது குகைகளில் வாழ்ந்து கொண்டிருந்த மருத்துவர்களும், தத்துவஞானிகளுமான சித்தர்கள் படுகொலை செய்யப்பட்டனர். வரலாற்றில் இது 'குகையிடி கலகம்' எனக் குறிக்கப்படுகிறது.

'குகையிடி கலக'க் காலத்தில் 'பைபிள்' முழுவதையும் சுருக்கி, மெய்கண்டாரால் எழுதப்பட்டது சிவஞானபோதம்.

←---------கி.பி.900------------------------கி.பி.1200------------------------கி.பி.1500---------

# காலந்தோறும் வழிபாடுகளும் சமயங்களும் -VI

## சிவஞானபோதம்

—

சைவ சித்தாந்த நூல்களில் சூத்திர வடிவில் அமைந்த ஒரே நூல் **சிவஞானபோதம்.**
(12 சூத்திரங்கள் மட்டுமே கொண்டது.)

பைபிளின் மையக் கருத்தான,

படைப்பு
மனிதனின் வீழ்ச்சி,
வீழ்ந்த மனிதனை மீட்க, கடவுள் மனிதனாதல்
மனிதனான கடவுள் தன்னையே பலியாக ஒப்புவித்தல்,
அவருடைய பலியால் மனிதன் மீட்கப்படல்,
மீட்கப்பட்ட மனிதன் கடவுள் வாழும் ஆலயமாதல்

என்பனவற்றைச் சூத்திர வடிவில் சுருக்கமாக விளக்குகிறது.

மனிதனாக வந்து தன்னை பலியாக்கிய இறைவன் மூலமே மனிதருக்கு மீட்பு என்பதை விளக்கும் இதை, 'விசவாசப்பிரமாணம்'('Creed') என்று சொல்லலாம்.

ஐரோப்பியப் பேரரசு

## 'இந்துத்துவமும்', 'இந்து மதமும்'

ஐரோப்பியர் ஆட்சியின்போது கல்கத்தாவில் இந்தியாவின் உச்சநீதிமன்றம். அப்போது உச்சநீதிமன்ற நீதிபதி சர்.வில்லியம்ஜோன்ஸ்.

கிறிஸ்தவ, முஸ்லிம் அல்லாதாருக்குச் சட்டம் உருவாக்க, பிராமணர்கள்,
சர். வில்லியம் ஜோன்ஸிடம் 'மனுநூலை'க், கொடுத்தனர். கி.பி.1794 இல், அவர் அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

சாதி, இன ஏற்றத்தாழ்வை அடிப்படையாகக் கொண்ட 'மனுநூலின்'கொள்கைக்கு,
சர்.வில்லியம்ஜோன்ஸ்'Hinduism'
('இந்துத்துவம்') எனும் பெயர் கொடுத்தல்.

இதனடிப்படையில் சைவ, வைணவ சமயங்கள்..
கி.பி.1794–க்குப்பின் 'இந்து மதம்' எனும் பெயர் பெறுதல்.

ஐரோப்பியர் வெளியேறுதலும் சுதந்திர இந்தியாவும்

ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம்

கி.பி.14ஆம் நூற். — கி.பி.18ஆம் நூற் — கி.பி.1947

இவ்வாறு, இந்திய வழிபாடுகளிலும் சமயங்களிலும் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் கிறிஸ்தவத்தின் வருகையால் மாற்றங்களும் புதிய கோட்பாடுகளும் பிரிவுகளும் உருவாகியுள்ளமையைச் சமய வரலாறு தெளிவாகக் காட்டுகிறது.

# 15. திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூல்

தோமா வழி தமிழ் கிறிஸ்தவத்தின் முதல் நூல் திருக்குறள்.

உலகத்தில் நாற்பதுக்கும் மேற்பட்ட மொழிகளில் மொழி பெயர்ப்பு செய்யப்பட்டுள்ள பழமையான நூல் திருக்குறள்.

திருக்குறளில் கிறிஸ்தவக் கருத்துகள் காணப்படுகின்றன என்று திருக்குறள் ஆய்வில் ஈடுபட்டவர்கள் கூறத் தொடங்கிய நிலையில் கி.பி. 1933இல் ஒன்று கூடிய ஆர்வலர்கள் சிலர், திருவள்ளுவரின் காலம் கி.மு.31 என்று அறிவித்தனர்.

பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சியாளர்களின் ஆய்வுப்படி திருக்குறள் அறநெறி காலத்தைச் சார்ந்தது. சங்க காலத்தை இயற்கை நெறி காலம் என்றும், சங்கம் மருவிய காலத்தை அறநெறிக்காலம் என்றும் ஆராய்ச்சியாளர்கள் பிரித்துள்ளனர். அறநெறிக்காலம் என்பது கிறித்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளின் தொடக்கக் காலம் ஆகும்.

- ☆ திருக்குறள் இயற்கை நெறிக் கால நூல் அன்று; அறநெறிக் கால நூல் ஆகும்.
- ☆ திருக்குறள் ஆசிரியப்பாவில் இயற்றப்படவில்லை; வெண்பாவில் இயற்றப்பட்டுள்ளது.
- ☆ சங்ககால நூல் அன்று; சங்கம் மருவிய கால நூல் ஆகும்.

என்பவை ஆராய்ச்சியாளர்களின் ஆய்வு. எனவே, திருக்குறள் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டைச் சார்ந்தது என்பது ஆய்வாளர்களின் முடிவு.

### கிறிஸ்து, கிறிஸ்தவர் :

திருக்குறளிலும், அதற்கு முந்தைய காலத்தைச் சேர்ந்த நூல்களிலும் 'கிறிஸ்து', 'கிறிஸ்தவர்' எனும் பெயர்கள் காணப்படவில்லை. இதற்குக் காரணம் தோமா காலத்தில் 'கிறிஸ்தவர்' என்ற பெயர் உருவாகவில்லை. அந்தியோகியா பட்டணத்தில்தான் முதன்முதல் சீஷர்கள் 'கிறிஸ்தவர்கள்' (இராஜ மக்கள்) என்று கேலியாகக் குறிக்கப்பட்டனர். இயேசு கிறிஸ்துவின் காலத்தில் அப்பெயர் பயன்படுத்தப்படவில்லை.

'கிறிஸ்டாஸ்' என்ற கிரேக்கச் சொல்லில் இருந்து வந்தது தான் 'கிறிஸ்து' என்ற சொல் ஆகும். 'கிறிஸ்து' கிரேக்க மொழி பேசவில்லை. அரமேயம் பேசினார். அரமேயம் என்பது எபிரேய மொழியின் கிளை மொழி ஆகும். எபிரேய மொழியில் 'மேசியா' என்ற பெயர்தான், கிரேக்கமொழியில் 'கிறிஸ்து' என்றாயிற்று. இதற்குத் தமிழில் பொருள் என்ன?

'கிறிஸ்து' என்றால் 'அபிஷேகம் பண்ணப்பட்டவர்' அதாவது 'எண்ணெய் ஊற்றப்பட்டவர்' என்று பொருள் ஆகும் என்பது ஏற்கெனவே குறிப்பிடப்பட்டது.

மற்றும், 'எண்ணெய் ஊற்றப்பட்டவர்' என்ற எபிரேயச் சொல் (மேசியா) அரசன் – தீர்க்கதரிசி – குரு ஆகியோரைக் குறிக்கும். இதற்குக் காரணம் ஒருவர் குருவாகவோ, அரசராகவோ, தீர்க்கதரிசியாகவோ ஆகின்ற நிலையில் யூத பாரம்பரியத்தின்படி எண்ணெயால் அபிஷேகம் பண்ணப்படுவார்கள்; அதாவது, அவர்கள் தலையில் எண்ணெயை ஊற்றுவார்கள். எனவே, எண்ணெய் ஊற்றப்பட்டவர் என்றால் இம்மூன்று நிலைகளையும் குறிக்கும் என்பதும் ஏற்கனவே குறிப்பிடப்பட்டன.

இயேசுவிற்கு இம்மூன்றும் பொருந்தும். இயேசு இம்மூன்று நிலைகளில் குறிக்கப்பட்டாலும், சிறப்பாக அரசர் என்று குறிப்பிடப்படுகிறார். அரசன் என்ற பொருளுக்கு ஏற்ற நல்ல சங்க இலக்கியச் சொல் 'இறை', 'இறைவன்' என்பதாகும். 'இறை' என்ற சொல் அரசனை மட்டும் குறித்தது. 'இறைவன்' என்ற அரசனைக் குறிக்கும் சொல்லைக் கடவுளைக் குறிப்பதற்கு முதன் முதல் பயன்படுத்தியவர் திருவள்ளுவரே ஆவார்.

திருவள்ளுவர் 'இறைவன்' என்ற சொல்லை, கடவுள் வாழ்த்தில் மட்டுமே இரண்டு இடங்களில் எடுத்தாளுகிறார்.

***இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்***
***பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.*** *( திருக்குறள் 5 )*

இருளில் சேர்க்கும் இரண்டு வினைகளும் இறைவன் நமக்காக ஈட்டி வைத்த பொருளாகிய விடுதலையைப் (மீட்பு) பெற்று, அவ்விடுதலைப் பணி புரிவோரிடத்தில் சேராது.

இருளில் சேர்க்கும் இரண்டு வினைகள் 'நல்வினை', 'தீவினை' எனப் பொதுவாகக் கூறப்படுகிறது. 'தீவினை' இருளில் சேர்க்கும். ஆனால் 'நல்வினை' எவ்வாறு இருளில் சேர்க்கும் என்று கேட்டால் அதற்குப் பதில் வராது.

**இருளில் சேர்க்கும் இரண்டு வினைகளாவன :**

ஆதாம் செய்த தீவினை - ஜென்ம பாவம்

நாம் செய்கின்ற தீவினை - கர்ம பாவம்

★ "பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இயேசு கிறிஸ்து காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியில் நிற்போரே நீடுவாழ்வடைவர்".

கிறிஸ்தவம் தவிர மற்ற எதிலும் இந்த இரண்டு வினைகள் பற்றிய கருத்துத் தெளிவு கிடையாது. இருளில் சேர்க்கும் இரண்டு வினைகளும் நம்மை அடையாதவாறு, நமக்காக இறைவன் ஈட்டிய பொருள் 'மீட்பு'அல்லது 'இரட்சிப்பு' ஆகும்.

*பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்.* *( திருக்குறள் 10 )*

நாமே செய்கின்ற கர்ம பாவத்திலிருந்து விடுபட்டு, அப்பாவத்தைச் செய்யாதிருக்க முயற்சிக்கலாம். ஆனால், பிறவியிலே நம்மைத் தொடர்ந்து வருகின்ற ஜென்மபாவமாகிய பெருங்கடலை இறைவனடி சேரவில்லை என்றால் நம்மால் கடக்க முடியாது.

## பாயிரத்தின் அமைப்பு :

திருக்குறள் ஒரு கிறிஸ்தவ நூல் என்று பாயிரத்தின் அமைப்பு விளக்குகிறது.

பாயிரம் என்றால் என்ன? பாயிரம் என்றால் முன்னுரை என்று பொருள் ஆகும்.

நூலுக்கு முன்பாகச் சொல்லப்படும் உரை ஆகும். பாயிரத்தில் இரண்டு பிரிவுகள் உள்ளன.

1. பொதுப்பாயிரம் 2. தற்சிறப்புப்பாயிரம்

## பொதுப்பாயிரம் :

இதில் ஆக்கியோன் பெயர், வழி, நூலின் எல்லை, நூற் பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன் பற்றிய எட்டு பொருள்களும் அமைந்திருக்கும். இது பற்றிக் கூறுவது பொதுப்பாயிரம் ஆகும்.

## சிறப்புப்பாயிரம் :

'தெய்வ வணக்கமும், செயப்படுபொருளும்
எய்த உரைப்பது தற்சிறப்பு ஆகும்' .

அதாவது கடவுள் வாழ்த்தும், என்ன நோக்கத்திற்காக இந்நூல் எழுதப்பட்டது என்பதை உணர்த்துவதும் சிறப்புப் பாயிரமாகும்.

திருக்குறளின் பாயிரத்தில் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என நான்கு அதிகாரங்கள் உள்ளன.

திருக்குறளில் பாயிரத்தில் இடம் பெற்றுள்ள முதல் 3 அதிகாரங்களாகிய

1. கடவுள் வாழ்த்து - பிதாவாகிய கடவுளையும்
2. வான் சிறப்பு - தூய ஆவியாகிய கடவுளையும்
3. நீத்தார் பெருமை - குமாரனாகிய கடவுளையும்

வாழ்த்திப் பாடுகின்றன.

4ஆம் அதிகாரமாகிய 'அறன் வலியுறுத்தல்' , கடவுள் மனிதனாக வந்து, வாழ்ந்து காட்டிய அறத்தை வலியுறுத்துக்கின்றது.

## பாயிரத்தில் மூவொருமைக் கோட்பாடு :
## கடவுள், வான், நீத்தார் :

5ஆம் அதிகாரத்தின் முதல் குறளில்

***இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்***
***நல்லாற்றின் நின்ற துணை*** *(திருக்குறள் 41)*

பிதாவாகிய கடவுளையும்
தூய ஆவியாகிய கடவுளையும்
குமாரனாகிய கடவுளையும்

ஒன்றாகச் சேர்த்து **'இயல்புடைய மூவர்'** எனும் தொடரால் குறிக்கின்றார்.

'மூன்று வித வெளிப்பாடுகளில் - நிலைகளில் செயல்படும் ஒரே கடவுள்' அதாவது, "One Essence Three Persons' ("Homoousius') என்பதை இந்த ஒரே தொடரில் திருவள்ளுவர் அழகாக விளக்கியுள்ளார்.

கிறிஸ்தவ சமயத்தில் இறைவனை மூன்று நிலைகளில் காண்கின்றனர். அவை அருவம், அரு உருவம், உருவம் ஆகும்.

அருவ நிலையைத் தந்தை நிலை என்றும்,
அரு உருவ நிலையை ஆவிநிலை என்றும்,
உருவ நிலையை மகன்நிலை என்றும்,

கொள்ளுகின்றனர்.

மூன்று நிலைகளில் இறைவனைக் காண்கின்றபோதிலும் மூவேறு தனித்தனிக் கடவுளாக அவர்கள் கொள்ளுவதில்லை. மூவொரு கடவுள் என்பர்.

'நீத்தார்' என்பது இங்கு விண்ணை நீத்து, உருவத்தில் மண்ணிற்கு வந்த இயேசு கிறிஸ்துவையே குறிக்கிறது.

வள்ளுவர் முதல் மூன்று அதிகாரங்களிலும் கிறிஸ்தவத்தின் மூவொரு கடவுளை வாழ்த்தியுள்ளார். 'தனக்குவமை இல்லாதான்' எனக் கடவுளைக் கூறிய வள்ளுவர், அதே கடவுளை, "பொறிவாயில் ஐந்தவித்தான்" எனக் கடவுள் வாழ்த்திலும், "ஐந்தவித்தான் ஆற்றல்" என நீத்தார் பெருமையிலும், கூறியிருப்பது, ஆழ்ந்து நோக்கத்தக்கது.

ஐந்தவித்தான் கடவுளா? நீத்தாரா? என்ற கேள்விக்கு ஐந்தவித்தான் கடவுளே, அதே நேரத்தில் நீத்தாரே என்று வள்ளுவர் விடை கொடுப்பதாக அமைகிறது. இயேசு கிறிஸ்து மனிதரா? கடவுளா? என்ற கேள்விக்குக் கிறிஸ்தவம் கொடுக்கும் பதில், அவர் கடவுள், அதே நேரத்தில் மனிதர் என்பதாகும். அவர் முழுநிலையில் கடவுள், அதே நேரத்தில் முழுநிலையில் மனிதன்.

> *'கடவுள் தன்மையில் விளங்கிய அவர் கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையை விடாமல் பிடித்துக் கொண்டிருக்க வேண்டியதொன்றாகக் கருதவில்லை. ஆனால், தம்மையே வெறுமையாக்கி அடிமையின் தன்மை பூண்டு மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றி தம்மைத் தாழ்த்திச் சாவையேற்கும் அளவுக்கு அதுவும் சிலுவைச் சாவையேற்கும் அளவுக்கு, கீழ்ப்படிபவரானார்'* *(பிலிப்பியர் 2 : 6 – 8)*

என்று அவருடைய நீத்த நிலையை விவிலியம் கூறுகின்றது.

ஐந்தவித்தான் என்ற சொல்லால் கடவுளையும், நீத்தாரையும் ஒன்றாக்கினார்.

**ஐந்தவித்தான்:**

> *பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
> *நெறிநின்றார் நீடுவாழ் வார்.* *(திருக்குறள் 6)*

ஒரு கருவியின் வழியாகத் தன் உடலைப் பலியாக்கிய கடவுள், நாம் நடக்க வேண்டிய ஒழுக்க நெறியைக் காட்டிச் சென்றார். நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன் என்றார். அப்படிக் கூறியவரைப் பின்பற்றினால் நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்ளலாம் என்கிறது இக்குறள்.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி என்பது, 'பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இயேசு கிறிஸ்து காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியாகிய கிறிஸ்துவின் வழியைக் குறிக்கிறது' .

இதனை மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வக வெளியீடான திருக்குறளும் விவிலியமும் எனும் நூலில் காமாட்சி சீனிவாசன், பொறிவாயில் ஐந்தவித்தான் என்னும் தொடரோ, கிறிஸ்தவ இறையியற் கொள்கைக்கே மிக ஏற்புடையதாகும். அங்கு அது எவ்வித இடர்ப்பாடுமின்றிப் பொருந்தும் என்கிறார். (செல்வி காமாட்சி சீனிவாசன், 'திருக்குறளும் விவிலியமும்' , மதுரை காமராசர் பல்கலைக் கழகம், 1979, ப.327)

## சிலுவை :

இந்தியாவில் குற்றவாளிகளைச் சிலுவையில் அறையும் பழக்கம் இல்லை. எனவே, 'சிலுவை' என்ற சொல்லும் கிடையாது என்பது முன்னரே குறிப்பிடப்பட்டது.

இயேசு சிலுவையில் பலியானார். 'சிலுவை' என்பதை சீரியாக் மொழியில் 'சிலிபோ' என்கின்றனர். மலையாளத்தில் 'சிலுபை' என்கின்றனர். இதன் ஒலி வடிவம் மாறி, 'சிலுவை' என்று தமிழில் வந்துள்ளது.

சங்க காலத்திலும் சங்கம் மருவிய காலத்திலும் 'சிலுவை' எனும் சொல் கிடையாது. எனவே, சிலுவை, 'பொறி' என்று சொல்லப்பட்டுள்ளது. ஐந்து பொறிகளை உடைய தன் உடலை அவித்தவன் - 'அவி' யாகக் கொடுத்தவன் பலியாக்கினவன். அப்படிப் பலியாக்கினவரின் வழி வாழ்பவர் என்றும் நீடுவாழ்வர்.

| | |
|---|---|
| பொறி | = கருவியாகிய சிலுவை |
| வாயில் | = வழியாக, |
| ஐந்து அவித்தான் | = தன் ஐம்பொறிகளையும் அவித்தவன் அதாவது தன்னையே பலியாக்கினவன் |
| பொய்தீர் ஒழுக்க நெறி | = அவர் காட்டிய பொய்மையே இல்லாத (சத்தியம்) வழி, |
| நின்றார் | = நடப்பவர்கள், |
| நீடுவாழ்வார் | = நித்திய ஜீவனைப் பெற்றுக் கொள்வார்கள். |
| ★பொறி | = கருவி (Instrument) |
| அவி | = பலி |

இயேசுகிறிஸ்து இறந்து, உயிர்த்தெழுந்ததை

*ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்*
*இந்திரனே சாலும் கரி.* *( திருக்குறள் 25 )*

எனும் குறள் விளக்குகின்றது.

| | | |
|---|---|---|
| ஐந்தவித்தான் | = | தன்னையே பலியாக்கிய இயேசு கிறிஸ்துவின், |
| ஆற்றல் | = | உயிர்த்தெழுந்த ஆற்றலுக்கு, |
| அகல் விசும்புளார் கோமான் இந்திரன் | = | அகன்ற ஆகாயத்தில் உள்ள தூதர்களின் தலைவன் |
| சாலும் | = | போதுமான |
| கரி | = | சான்று. |

இங்கு ஆற்றல் என்பது தன் உடலைப் பலியாக்கியவரின் உயிர்த்தெழுந்த ஆற்றலைக் குறிக்கிறது.

இயேசுகிறிஸ்துவின் உயிர்த்தெழுந்த ஆற்றலுக்கு ஆகாயத்தில் உள்ள தூதர்களின் தலைவனாகிய இந்திரனே சான்று. ஆற்றல் என்பது கூற்றம் குதித்தலாகிய அதாவது, மரணத்தையே வென்ற ஆற்றல் என்பதைத் திருவள்ளுவர் பின்வரும் குறளில் தெளிவாக விளக்குகிறார்.

*கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்*
*ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.* *( திருக்குறள் 269 )*

| | | |
|---|---|---|
| நோற்றலின் | = | நோன்பின், தவத்தின். |
| ஆற்றல் தலைப்பட்டார்க்கு | = | ஆற்றல் கைவரப்பட்டவர்க்கு. |
| கூற்றம் | = | மரணம், சாவு |
| குதித்தலும் | = | வெல்லுதலும் |
| கைகூடும் | = | முடியும். |

## இந்திரன் :

இந்திரன் என்பது எந்த ஒரு சமயத்திற்கும் உரிய பெயர் அல்ல. இந்திரன் என்றால் தலைவன் என்று பொருள்.

(எ.கா)

*கஜேந்திரன்* – *யானைகளின் தலைவன்.*

*நரேந்திரன்* – *மனிதர்களின் தலைவன்.*

*தேவேந்திரன் – தேவர்களின் தலைவன்.*

*ராஜேந்திரன் – ராஜாக்களின் தலைவன்.*

எனவே, இந்திரன் என்றால் தலைவன் என்று பொருள். 'அகல் விசும்புளார் கோமான் இந்திரன்' என்றால் ஆகாயத்திலுள்ள தூதர்களின் தலைவன் என்று பொருள். ('ஆண்டவரின் தூதர் வானின்று இறங்கி வந்து.......... உங்களுக்குச் சொல்லிவிட்டேன்' மத். 28 : 2-8) மேலும் ஆழமாகப் புரிந்து கொள்ள டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் **'ஐந்தவித்தான் யார்?'** எனும் நூலைக் காணலாம்.

## வான் சிறப்பு :

'வான்' என்பது மழையைக் குறிக்கின்றது என்பர். மழை மட்டும் இருந்தால் போதுமா? ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாகிய 'காற்று' இல்லாமல் வாழ முடியுமா? ஐம்பெரும் பூதங்களுள் எந்த ஒன்று குறைந்தாலும் வாழ முடியாது. எனவே, 'வான்' என்பது இங்கு, கடவுள் வாழ்த்திற்கு அடுத்த படியாக வருவதால் இது கடவுளோடு இணைந்த ஒன்றையே குறிக்கின்றது என ஆய்வு அடிப்படையில் விளக்கும் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள், கடவுள் வாழ்த்தில் இடம் பெற்றுள்ள இந்த அதிகாரம் தூய ஆவியாகிய கடவுளை வாழ்த்தும் அதிகாரம்; தூய ஆவி இந்த அதிகாரத்தில் உருவகமாக 'வான்' என்று சிறப்பிக்கப்படுவதை **'வான் எது?'** எனும் நூலில் ஆழமாக விளக்குகிறார்.

வான் என்பது ஆள் தன்மையைக் குறிக்குமா? என்ற ஐயம் எழலாம். கிறிஸ்தவத்தில் தந்தை, ஆவி, மகன் என்ற மூன்றும் மூவேறுபட்ட ஆள் தன்மையையே குறிக்கும் என்பர். கிறிஸ்தவத்தில் தந்தையையும், மகனையும் விளக்குகின்ற அளவு, ஆவியை விளக்க இயலா நிலையை நாம் பார்க்கலாம்..

பிற்கால சைவ மரபுப்படி இதைக் கூறினால் அப்பன், அம்மை, மகன் எனலாம். சைவ மரபில் ஆவியாகிய அருட்சக்தி அம்மையாக உருவகித்துக் காட்டப்படுகிறது. கிறிஸ்தவத்தில் ஆவி ஆண் என்றோ, பெண் என்றோ கொள்ளப்படாமல் ஆள்தன்மையுடையவர் என்று மட்டுமே கொள்ளப்படுகின்றது.

தந்தையையும், மகனையும் அல்லது கடவுளையும், நீத்தாரையும் எளிதாக விளங்கிக் கொள்ளுகின்ற அளவுக்கு, ஆவியை விளங்கிக் கொள்ளுவது கடினமேயாகும். ஆவியை முன்மாரி, பின்மாரி, மழை, தூறல், பனி இவற்றோடு ஒப்பிட்டு விளக்கிக்காட்ட முற்படுகின்றது விவிலியம்.

*'அவர் மழையைப் போலவும், பூமியின் மேல் பெய்யும் முன்மாரி, பின்மாரியைப் போலவும் நம்மிடத்தில் வருவார்.'* *(ஓசி,6:3)*

*'நான் இசுரவேலுக்குப் பனியைப் போலிருப்பேன்.' (ஓசி, 14 : 5)*

*'புல்லறுப்புண்ட வெளியின்மேல் பெய்யும் மழையைப் போலவும், பூமியை நனைக்கும் தூறலைப் போலவும் இறங்குவார்.' (சங். 72 : 6)*

பிதாவாகிய கடவுளையும்
தூய ஆவியாகிய கடவுளையும்
குமாரனாகிய கடவுளையும்
ஒன்றாகச் சேர்த்து
'இயல்புடைய மூவர்' எனும்
தொடர் குறிக்கின்றது.
- திருக்குறள்

மேலே கண்டபடி, விவிலியத்தில் உவமையாகச் சொல்லபட்டதோடு உருவமாகவும் விளக்கப்பட்டுள்ளது.

*'தாகமுள்ளவன் மேல் தண்ணீரையும், வறண்ட நிலத்தின் மேல் ஆறுகளையும் ஊற்றுவேன், உன் சந்ததியின் மேல் என் ஆவியையும், உன் சந்தானத்தின் மேல் ஆசிர்வாதத்தையும் ஊற்றுவேன்.*

*அதனால், அவர்கள் புல்லின் நடுவே நீர்க்கால்களின் ஓரத்திலுள்ள அலரிச்செடிகளைப் போல வளருவார்கள்.' (ஏசா. 44 : 3,4)*

மேலே கண்ட குறிப்பில் உருவகமும் பொருளும் இணைந்து வருவதைக் காணலாம்.

உருவகமாக மட்டுமே விளக்கப்படுகின்ற இடங்களும் உண்டு.

*'ஜீவ தண்ணீர் ஊற்றாகிய என்னை விட்டுவிட்டார்கள்'. (எரே. 2 : 13)*

*'அந்நாளிலே பாவத்தையும், அழுக்கையும் நீக்க தாவீதின் குடும்பத்தாருக்கும் எருசலேமின் குடிகளுக்கும் திறக்கப்பட்ட ஒரு ஊற்று உண்டாயிருக்கும்'. (சகரி. 13 : 1)*

*'அந்நாளிலே ஜீவதண்ணீர்கள் எருசலேமிலிருந்து புறப்பட்டு, பாதி கிழக்குச் சமுத்திரத்துக்கும், பாதி மேற்குச் சமுத்திரத்திற்கும் போய், மாரிக் காலத்துக்கும் கோடைக் காலத்துக்கும் இருக்கும்'. (சகரி. 14 : 8)*

*'நான் தரும் தண்ணீரைக் குடிப்பவனோ, என்றுமே தாகங்கொள்ளான்; நான் அவனுக்குக் கொடுக்கும் தண்ணீரோ அவன் முடிவில்லா வாழ்வடைய அவனுக்குள் பொங்கியெழும் ஊற்றாகும்.' (அரு.4:14)*

*'யாரேனும் தாகமாயிருந்தால் என்னிடம் வரட்டும்; என்னில் விசுவாசங்கொள்பவன் குடிக்கட்டும்; மறைநூல் கூறுவதுபோல், அவனுடைய உள்ளத்திலிருந்து உயிருள்ள நீர் ஆறாய்ப் பெருக்கெடுத்து ஓடும் என்றார்.*

*தம்மில் விசுவாசங்கொள்வோர் பெறப்போகும் ஆவியானவரைக் குறித்து அவர் இவ்வாறு சொன்னார்.' (அரு. 7 : 37 – 39)*

மேலே கண்ட குறிப்புகளிலிருந்து ஆவியை விளக்குவதற்கு உவமையாகவோ அல்லது உருவகமாகவோ நீர், மழை, பனி, ஊற்று, நதி இவை விவிலியம் முழுவதும் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறியலாம்.

## நீத்தார் :

'நீத்தார்' என்பது துறவியைக் குறிக்கின்றது என்பர். ஆனால், துறவறவியலில் துறவியைக் குறிக்கும் எந்த இடத்திலும் வள்ளுவர் 'ஐந்தவித்தான்' என்ற சொல்லைப் பயன்படுத்தவில்லை என்பது நோக்கத்தக்கது. வள்ளுவர் காலத்திற்குப் பின்னரும் துறவியைக் குறிப்பதற்கு, யாரும் 'ஐந்தவித்தான்' என்ற சொல்லைப் பயன்படுத்தியதாக இலக்கிய வரலாற்றில் எங்குமே தெரியவில்லை.

'நீத்தார்' என்பது விண்ணை நீத்து, உருவத்தில் மண்ணிற்கு வந்த இயேசு கிறிஸ்துவையே குறிக்கிறது. 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்பது வள்ளுவரின் மதம் அல்லது சமயத்தைக் குறிக்கும் என்றார் டாக்டர் மு. கோவிந்தசாமி. அவருடைய கருத்துக்கிணங்க, பொய் மலிந்த இவ்வுலகத்தில் பொய்யை நீக்கி, பொய்தீர்ந்த ஒழுக்க நெறியைக் காட்டுவதற்காகவே, பொய்தீர் ஒழுக்க நெறியை நிலை நிறுத்துவதற்காகவே, அருவக் கடவுள் உருவத்தை ஏற்றார். நீத்த ஓர் கடவுளானார்.

'பொய்தீர் ஒழுக்க நெறி 'யில் சிறப்பிடம் பெற்று நிற்பது 'ஒழுக்கம்' . 'ஒழுக்கம்' என்ற சொல்லால் வள்ளுவர் முதல் மூன்று அதிகாரங்களையும் இணைக்கின்றார். பொய்தீர் ஒழுக்க நெறிக்குரியவர் கடவுள்.

*'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்.'* *(திருக்குறள் 6)*

உயிரினும் ஓம்பப்படும் ஒழுக்கத்தில் நிலைநிற்பதற்கு யார் யாருக்கும் துணைபுரிவது வான் (தூய ஆவி) .

*'நீர் இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்*
*வான் இன்று அமையாது ஒழுக்கு.'* *(திருக்குறள் 20)*

ஒழுக்கத்தில் மற்றவர்கள் நிலைநிற்கும் பொருட்டு மற்ற எவ்வுயிருக்கும் செந்தண்மை பூண்டு ஒழுகிக் காட்டியவர் ஒழுக்கத்து நீத்தார். (இயேசு கிறிஸ்து)

*'ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து*
*வேண்டும் பனுவல் துணிவு.'* *(திருக்குறள் 21)*

ஆகவே கடவுள், வான், நீத்தார் வழி உலகத்தில் ஒழுக்கம் நிலைநிற்கின்றது. இக்கருத்துகளை நுணுக்கமாக அறிந்து கொள்ள டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் 'நீத்தார் யார்?' எனும் நூலைக் காணலாம்.

## பாயிரம் பிற்சேர்க்கை அன்று:

தம் நூலில் பிற்காலத்தில் மற்றவர் எதையும் சேர்க்கவோ, குறைக்கவோ கூடாதபடிக்கு வள்ளுவர் ஒரு பூட்டைப் போட்டுள்ளார். எப்படி? முழுமையைக் குறிக்கும் கிறிஸ்தவ எண் 7. இது நிறைவான எண் எனப்படும். எனவே இந்த எண்ணைப் பயன்படுத்திக் குறளைப் பூட்டியுள்ளார்.

ஏழுபிறப்பு என்பது ஏழுபிறப்புகளைக் குறிக்காமல், ஏழப்போகின்ற பிறப்புகளான தலைமுறைகளைக் குறிக்கும்.

| | | | |
|---|---|---|---|
| அறத்துப்பால் 34 அதிகாரங்கள் | 3+4 | = | 7 |
| மொத்தக் குறள் 340 | 3+4+0 | = | 7 |
| பொருட்பால் 70 அதிகாரங்கள் | 7+0 | = | 7 |
| மொத்தக் குறள் 700 | 7+0+0 | = | 7 |
| இன்பத்துப்பால் 25 அதிகாரங்கள் | 2+5+ | = | 7 |
| மொத்தக் குறள் 250 | 2+5+0 | = | 7 |
| மொத்த அதிகாரங்கள் 133 | 1+3+3 | = | 7 |
| மொத்தக் குறள் 1330 | 1+3+3+0 | = | 7 |

| | அதிகாரங்கள் |
|---|---|
| பாயிரம் | 4 |
| அறத்துப்பால் | 34 |
| பொருட்பால் | 70 |
| இன்பத்துப்பால் | 25 |
| | 133 |

எனவே, பாயிரம் பிற்சேர்க்கை அன்று. ஆகவே நிறைவு எண் ஏழால் திருக்குறளைச் சிதையாது கட்டிவைத்துள்ளார் வள்ளுவர். குறள் முழுவதும் ஏழு என்ற நிறைவு எண் அமைவதால் பாயிரம் பிற்சேர்க்கை அன்று என்பது தெளிவு.

## சான்றோர்:

'கிறிஸ்தவன்' என்பது கிரேக்கச் சொல். இயேசுகிறிஸ்து தன் காலத்தில் தம்மைப் பின்பற்றியவர்களை சீஷர், சிநேகிதர், சகோதரர் என்று அழைத்தார். பலியாகி, உயிர்த்த இயேசு, அவர்களை, 'சாட்சி' என்றும் அழைத்தார். 'சான்றோர்', 'சான்றார்' என்னும் தமிழ்ச் சொற்கள், சமஸ்கிருதத்தில் 'சாட்சி' எனப்படுகிறது. (அப். 1: 8)

சால்பு உடையவன் சான்றோன். சால்பு = நிறைவு; தூயாவியின் நிறைவு உடையவன் சான்றோன். இவன்தான் உண்மைக் கிறிஸ்தவன். சங்க இலக்கியத்திலும் இச்சொல் காணப்படுகின்றது. எல்லா நற்குணங்களாலும் நிறையப் பெற்றவர் சான்றோர். தெளிவான கொள்கையின் அடிப்படையில் வருவதுதாம் நற்குணங்கள். விளக்கமாக இதைக் குறித்து அறிய டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் 'சான்றோர் யார்?' எனும் நூல் உதவும்.

## புறநானூறு :

'ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்' என்னும் தொடர் சங்க இலக்கியத்தில் ஒன்றாகிய புறநானூற்றில் வருகின்றது. இதற்கு, கொள்கைச் சான்றோர் அதாவது கொள்கை உடைய சான்றோர் என்று பொருள்.

ஆன்று = சிறப்புற்று,

அவிந்து = பலியாகி

அடங்கிய கொள்கை = இக்கொள்கைதான் சால்புடையவர்களின் – சான்றோர்களின் கொள்கை ஆகும்.

இத்தகைய சான்றோர்களின் குணநலன்கள் ஐந்து ஆகும். அவை

அன்பு,
நாண்,
ஒப்புரவு,
கண்ணோட்டம்,
வாய்மை – என்பனவாகும்.

## 1. அன்பு - அன்புடைமை :

கடவுள் மனிதனிடம் அன்பு கூர்ந்தார். அன்பின் நிமித்தம் தன்னையே பலியாகக் கொடுத்தார். மனிதன் கடவுளிடமும், மற்றவர்களிடமும் அன்பு கூர வேண்டும்.

திருக்குறளின் 8ஆவது அதிகாரம் அன்புடைமை ஆகும்.

## 2. நாண் - நாணுடைமை :

தப்பு செய்துவிட்டால் / பாவங்கள் உணர்த்தப்பட்டவுடன் அதை நியாயப்படுத்தாமல், மெய்யாய் மனம் வருந்துதல் நாணுடைமை ஆகும்.

நாண் = வெட்கம்,

நாண் உடைமை = தவறுசெய்ததற்கு வருந்துதல் ஆகும்.

திருக்குறளின் 102 ஆவது அதிகாரம் நாண் உடைமை ஆகும்.

ஊழ் என்றால் முறையாக வருவது ஆகும். தலை எழுத்து, சென்ற பிறவிப் பயன் என்பதெல்லாம் தவறு. கடவுளின் திட்டத்தைத்தான் வள்ளுவர் ஊழ் என்று சொல்கிறார்.

### 3. ஒப்புரவு :

நாம் செய்த தவறுகளுக்கு வருந்தியபின், நமக்கும் கடவுளுக்கும் இருந்த இடைவெளி அகன்று, கடவுளோடும் மனிதரோடும் ஒப்புரவாகுதல் வேண்டும். இது ஒப்புரவறிதல் ஆகும்.

இது திருக்குறளின் 22ஆவது அதிகாரம் ஆகும்.

*ஊருணி நீர்நிறைந் தற்றே, உலகவாம்*
*பேரறி வாளன் திரு.* *(திருக்குறள் 215)*

ஊருணி, தண்ணீரைத் தான் வைத்துக்கொள்ளும்; நாம்தான் சென்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

*பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்*
*நயன்உடை யான்கண் படின்.* *(திருக்குறள் 216)*

பழம் பழுத்துவிட்டால், மரம் அதைத் தானே வைத்துக் கொள்ளாமல் கீழே போட்டுவிடும். நாம் எடுத்துக் கொள்ளலாம்.

*மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்*
*பெருந்தகை யான்கண் படின்.* *(திருக்குறள் 217)*

இவற்றைப் போல் ஒப்புரவு செய்தவன், தானே சென்று மற்றவர்கள் துன்பத்தைத் தீர்த்து வைக்க முயல்வான். ஒப்புரவறிதல் என்பது இவ்வாறு கடவுளோடும், பிற மனிதர்களோடும் ஒன்று சேருதல் ஆகும்.

இது திருக்குறளின் 22ஆவது அதிகாரம்.

### 4. கண்ணோட்டம் :

அடுத்தவனை, தவறு செய்தவனை மன்னிப்பதுதான் கண்ணோட்டம் ஆகும். இது குறளின் 58ஆவது அதிகாரம்.

*பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்.* *( திருக்குறள் 580 )*

நஞ்சினை உண்டால் உடல் தான் அழியும்; ஆன்மா அழியாது. உடல் கூட கடவுளுக்குச் சித்தமானால்தான் அழியும். "தலையிலுள்ள மயிரெல்லாம்

எண்ணப்பட்டிருக்கிறது" எனும் திருமறை வசனம் இங்கு குறிப்பிடற்குரியது. உள்ளத்தைத் திருத்துதல் 'மன்னிப்பு' ஆகும்.

## 5. வாய்மை :

வாய்மை என்பது பொய் சொல்லாமல் இருப்பது மட்டும் அல்ல. வாயினால் மெய்யை அறிவிப்பது வாய்மை.

*வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்*
*தீமை இலாத சொலல்.* *(திருக்குறள் 291)*

*யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்*
*வாய்மையின் நல்ல பிற.* *(திருக்குறள் 300 )*

பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படிக் கேள்விப்படுவான்? நற்செய்திப்பணி. இதுதான் வாய்மை. (ரோமர் 10: 13-15)

வாய்மை திருக்குறளின் 30 ஆவது அதிகாரம்.

எனவே, அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற இந்த ஐந்தும் மீட்கப்பட்டவர்களின் குணநலன்கள் ஆகும்.

## ஞானஸ்நானம் - திருமுழுக்கு :

ஞானஸ்நானம் பற்றி வள்ளுவர் குறிப்பிடுகின்றாரா?

*மனத்தது மாசாக மாண்டார் நீராடி*
*மறைந்தொழுகும் மாந்தர் பலர்.* *(திருக்குறள் 278)*

மனத்தது மாசாக = மனத்திலே எல்லாக் குற்றமும் உடையவனாக.

மாண்டார் நீராடி = மாண்புடையவர்கள் பெயரால் குளித்து.

மறைந்தொழுகும் மாந்தர் பலர் = திருச்சபையில் நல்லவர் போல் மறைந்து வாழும் மக்கள் பலர்இருக்கிறார்கள்.

★ மாண்டார் = ஒப்பற்ற மாண்புடையவர்களாகிய பிதா, தூய ஆவி, குமாரன்

மனத்திலே குற்றம் உடையவராய் இருந்தும், மாண்பு உடையவர்களாகிய பிதா, தூய ஆவி, குமாரன் ஆகியோர் நாமத்தில் நீராடி, அதாவது, ஞானஸ்நானம் பெற்று மறைந்து வாழ்பவர் பலர்.

## பிறவி சுழற்சிக் கொள்கை ?

கடவுள் கோட்பாட்டை மட்டுமே உடைய முற்காலச் சான்றோர் எழுதிய நூல்களில் 'பிறப்பு' என்ற சொல் வரும் இடங்களிலெல்லாம் பிறவி சுழற்சிப் பொருள் காண உரையாசிரியர்கள் முற்பட்டுள்ளனர். திருக்குறளும் இதற்கு விதிவிலக்கு அல்ல.

திருச்சபை,
திருமுழுக்கு,
உயிர்த்தெழுதல் - பற்றி
திருக்குறள்
விளக்குகின்றது.

வள்ளுவர் பிறவிசுழற்சிக் கொள்கை உடையவர் எனக் கருதியே உரை எழுதிச் சென்றுள்ளனர். இதற்கு ஆதாரமாக அவர்கள் கொள்ளும் சொற்கள் :

1. எழுமை
2. எழுபிறப்பு
3. பிறப்பறுக்கல்
4. பிறவிப்பெருங்கடல்
5. ஊழ்

ஆகியனவாகும்.

### எழுமை :

எழுமை - 'மை' விகுதியைக் குறிக்கும். எழு + மை = எழுமை, எழுமை என்றால் எழுகின்ற நிலைகள்

***ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு***
***எழுமையும் ஏமாப்பு டைத்து.*** ***(திருக்குறள் 398)***

| | | |
|---|---|---|
| ஒருமையில் தான் கற்ற கல்வி | = | ஒரு நிலையில் மாணவனாயிருக்கையில் தான் கற்ற கல்வி |
| ஒருவற்கு எழுமையும் | = | இனி எழப்போகின்ற, எழுகின்ற பல நிலைகளிலும். |
| ஏமாப்பு உடைத்து | = | பாதுகாப்பு உடையது ஆகும். |

இவ்வாறு இல்லாமல், ஒரு பிறப்பில் ஒருவன் கற்ற கல்வி, அவனுக்கு ஏழு பிறப்புகளிலும் பாதுகாப்பு கொடுக்கும் என்றால் அறிவிற்குப் பொருந்துமா? எழுகின்ற பல நிலைகளிலும் பாதுகாப்பு கொடுக்கும் என்பது அறிவிற்கு ஏற்புடையது.

## எழுபிறப்பு :

எழுபிறப்பு என்பது ஏழுபிறப்புகளைக் குறிக்காமல், இவன் மூலம் எழப்போகின்ற பிறப்புகளான தலைமுறைகளைக் குறிக்கும்.

(எ.கா)

| | | |
|---|---|---|
| எழுஞாயிறு | = | எழுகின்ற ஞாயிறு, |
| எழுபிறப்பு | = | எழுகின்ற தலைமுறை, |
| எழுபிறப்பும் தீயவை தீண்டா.. | = | எழுகின்ற / வரப்போகின்ற தலைமுறைகளிலும் தீயவை தீண்டாது. |

*எழுபிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப்*
*பண்புடை மக்கட் பெறின்.* *(திருக்குறள் 62)*

*எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்*
*விழுமம் துடைத்தவர் நட்பு.* *(திருக்குறள் 107)*

எழுமை = தன்னுடைய வாழ்நாளிலேயே எழுகின்ற பல நிலைகள், எழுபிறப்பு : தன்னுடைய வழித்தோன்றல்கள் (அ) பரம்பரை, தலைமுறை

*மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்*
*உற்றார்க்கு உடம்பும் மிகை.* *(திருக்குறள் 345)*

பிறவிச் சுழற்சிக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாதவர்களும் பிறப்பு, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது என்று ஏற்றுக் கொள்வர்.

## எழுபிறப்பு - தலைமுறை :

பல உயிர் பல உடல்களில் தலைமுறை தலைமுறையாகப் படிப்படியாகத் தோன்றும் பல பிறப்பு – என்பதும்

## பிறவிப் பெருங்கடல் :

பல உயிர் பல உடல்களில் தலைமுறை தலைமுறையாகத் தோன்றும் பிறவியாகிய கடல் – என்பதும்

## பிறப்பறுக்கல் :

தலைமுறையில், தனக்கு அடுத்தபடியாகப் பிறக்கப் போகும் பிள்ளைகளாகிய பிறப்பை அறுத்தல். அதாவது துறவறம் மேற்கொள்ளுதல் –என்பதும்

*பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று*
*நிலையாமை காணப் படும்.* *(திருக்குறள் 349)*

உடல் பற்றுதல் நீங்கும்பொழுதே. பிறப்பு துண்டிக்கப்படும். உலகத்தின் நிலையாமையும் விளங்கும் என்பதும் சரியான பொருள்களாகும். இதைக் குறித்து மேலும் அறிய டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் 'எழுபிறப்பு?' எனும் நூல் உதவும்.

**ஊழ் :**

திருக்குறளில் 'ஊழ்' என்று ஒரு தனி அதிகாரம் (38) உண்டு. இதற்குத் தலைவிதி என்று உரையாசிரியர்கள் பொருள் கொடுக்கின்றனர். ஆனால் அது தவறு.

ஊழ் என்றால் முறையாக வருவது ஆகும். தலை எழுத்து, சென்ற பிறவிப் பயன் என்பதெல்லாம் தவறு.

கடவுளின் திட்டத்தைத்தான் வள்ளுவர் ஊழ் என்று சொல்கிறார். இதற்கு ஆதாரம் என்ன?

*வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.* *(திருக்குறள் 377)*

| | | |
|---|---|---|
| வகுத்தான் | - | கடவுள். |
| வகுத்த வகை | - | திட்டம் |
| அல்லால் | - | இல்லாமல் |
| தொகுத்தல் | - | சேர்த்தலோ |
| துய்த்தல் | - | அனுபவித்தலோ |
| அரிது | - | முடியாது. (லூக்கா 12: 16-21.) |

ஊழ் = முறையாக வருதல்

ஊழ் என்பது கடவுளின் திட்டம் (Will of God) ஆகும்.

*ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று*
*சூழினுந் தான்முந் துறும்.* *(திருக்குறள் 380)*

நாம் என்ன திட்டம் வைத்திருந்தாலும், இறுதியில் இறைவனின் திட்டமே நிறைவேறும்.

*ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்*
*தாழாது உஞற்று பவர்.* *(திருக்குறள் 620)*

கடவுளின் திட்டம் என்று சொன்னால் அதை மாற்ற முடியுமா? முடியும். ஆனால் மாற்றச் சொல்லி அவரையே கேட்க வேண்டும். எசேக்கியா ராஜா தன் வாழ்நாளில் 15 ஆண்டுகள் கூட்டிப் பெற்றுக் கொண்டார். ( II ராஜா 20: 1 - 6 ) ; (மத்தேயு 7:7)

'ஊழ்' என்பது இந்த அண்டத்தின் விதி (Law of Universe) ஆகும். எனவே, 'ஊழ்' என்றால் முறைமை என்பது தான் இங்கு சரியான பொருள் ஆகும். கடவுள் கொள்கையற்ற பிறவி சுழற்சிக் கொள்கையில், பழ வினையாகிய ஊழை யாராலும் மாற்றவே இயலாது.

'ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்'

ஊழ்வினைத் தன்பயனைத் தந்தே தீரும்.

ஆனால், வள்ளுவர் காட்டும் ஊழ், இறைவன் உலகை இயக்கும் முறையைத் தெரிவிப்பதேயன்றிப் பழவினையை அடிப்படையாகக் கொண்ட பிறவிச் சுழற்சிக் கொள்கை யுடையது அன்று. டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் 'எழுபிறப்பு' எனும் நூல், இக்கருத்துகளை மேலும் புரிந்து கொள்ள உதவும்.

## புலால் மறுத்தல் :

திருக்குறளில் புலால் மறுத்தல் கொள்கை இடம் பெற்றுள்ளது. இக்கொள்கை கிறிஸ்தவத்தில் ஆழமாக இருக்கின்ற நிலையை ஆராய்ச்சி அடிப்படையில், டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதிய

**'பைபிள் கூறும் சைவ உணவின் வரலாறு'**

எனும் நூலில் காணலாம்.

## இதுவரை நாம் பார்த்த கருத்துகளின் சுருக்கம்:

1. திருவள்ளுவரின் காலம் கி.மு.31 அல்ல. கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளின் தொடக்கக் காலம் ஆகும். அதாவது ஏறக்குறைய கி.பி. இரண்டாம் நூற்றாண்டை ஒட்டியது ஆகும்.
2. திருக்குறள் சங்க காலத்தைச் சேர்ந்த நூல் அல்ல; சங்கம் மருவிய காலத்தைச் சேர்ந்தது ஆகும்.
3. திருக்குறளின் பாயிரம் இடைச் சேர்க்கை அல்ல; நூலோடு இணைந்த ஒன்றே ஆகும்.
4. வான் சிறப்பு என்பது மழையின் சிறப்பு அல்ல; தூய ஆவியானவரின் சிறப்பே ஆகும்.
5. நீத்தார் பெருமை என்பது துறவிகளின் பெருமையைக் குறிக்காமல்,

வானுலகம் விட்டு, துறந்து பூமிக்கு வந்த இறைவனையே குறிக்கும்.

★ கான்ஸ்டன்டைன் காலம் வரை கிறிஸ்தவத்தைக் குறிக்க சிலுவை அடையாளம் பயன்படுத்தப்படவில்லை.

6. கிறித்தவத்தின் மூவொரு கடவுட்கோட்பாட்டின் கோணத்தில் பார்த்தால் தான் பாயிரத்தின் பொருள் விளங்கும்.
7. கடவுள் - வான் - நீத்தார் என மூவொரு கடவுளை வள்ளுவர் 'இயல்புடைய மூவர்' என்று குறிப்பிடுகின்றார்.
8. 'இறைவன்' என்று அரசனைக் குறிக்கும் சொல்லை, முதன் முதல் கடவுளைக் குறிக்கப் பயன்படுத்தியவர் வள்ளுவரே.
9. 'சான்றோர்' என்ற சொல் கிறிஸ்துவின் அடியவர்களைக் குறிக்கும்.
10. திருச்சபை, திருமுழுக்கு, உயிர்த்தெழுதல் பற்றி திருக்குறள் விளக்குகின்றது.
11. எழுமை, எழுபிறப்பு, பிறப்பறுக்கல், பிறவிப் பெருங்கடல், ஊழ் இவற்றிற்கு வள்ளுவர் நோக்கிலேயே பொருள் கொள்ள வேண்டுமே தவிர, பிறவி சுழற்சிக் கோட்பாட்டின் அடிப்படையில் பொருள் கொள்ளக் கூடாது.
12. மேற்கண்ட குழப்பம் காணப்படுவதற்குக் காரணம் உரையாசிரியர்களின் காலம் திருவள்ளுவரின் காலத்திற்கு, சுமார் 1000 ஆண்டுகள் பிற்பட்டது என்பதனால் ஆகும்.

   எனவே, உரையாசிரியர்கள் தங்கள் காலத்தில் நிலவிவந்த கருத்தின் அடிப்படையிலேயே வள்ளுவரின் சிந்தனையை அறிய முற்பட்டதுதான் குழப்பத்திற்குக் காரணம்.
13. சமண, பௌத்த சமயங்களுக்கு முற்றிலும் மாறு பட்டது வள்ளுவரின் கருத்துகளாகும்.
14. புலால் மறுத்தல், கொல்லாமை என்பன ஐரோப்பியக் கிறிஸ்தவத்திற்கு முரண்பட்டதாகக் காணப்பட்டாலும் வேதாகமக் கிறிஸ்தவத்திற்கு பொருந்தியது ஆகும்.
15. திருக்குறள் ஒரு சமய வரலாற்றையோ, சமயம் தோன்றுவதற்குக் காரணமான ஓர் இன வரலாற்றையோ கூறும் நோக்கத்துடன் எழுந்த நூல் அல்லாமல் கிறிஸ்தவ அறநெறியியல் நூலாக இருக்கின்றது.
16. எனவே, திருக்குறளானது ஐரோப்பியக் கிறிஸ்தவ நூலாக அல்லாமல், தோமா வழித் திராவிடக் கிறிஸ்தவ நூலாக விளங்குகின்றது.

# 16. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் பழமையான சின்னம்

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தைக் குறித்து விளக்குவதாக
இந்நூல் இருப்பதால் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின்
பழமையான சின்னமான திருநீறு குறித்து
டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதிய

**'சரியான சின்னம் எது?**

**திருநீறா? சிலுவையா?'**

எனும் நூலில்
தோமா வழி திராவிடக் கிறிஸ்தவச் சின்னமான
திருநீறு குறித்த பகுதிகள் மட்டும் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.
முழுமையாகத் தெரிந்து கொள்ள விரும்புவோர்
அந்நூலைப் படித்துப் புரிந்து கொள்ளலாம்.

## தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் பழமையான சின்னம்:

பொதுவாக, கிறிஸ்தவத்திற்குரிய சின்னமாக 'சிலுவை' கருதப்படுகிறது. கான்ஸ்டன்டைன் காலம் வரை கிறிஸ்தவத்தைக் குறிக்க சிலுவை அடையாளம் பயன்படுத்தப்படவில்லை. ரோமப் பேரரசனாகிய கான்ஸ்டன்டைன் கி.பி. நான்காம் நூற்றாண்டில் சிலுவைக்குச் சிறப்புக் கொடுத்தார். அதற்குப் பின்னரே கான்ஸ்டன்டைனைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் சிலுவைக்குச் சிறப்பு கொடுத்தார்கள்.

கிறிஸ்தவர்கள் இயேசு கிறிஸ்துவின் பாடு மரணத்தைத் தியானம் செய்யும் தபசுகாலத்தின் தொடக்க நாளை, 'திருநீற்றுத் திருநாள்' என்று குறிப்பிட்டு, திருநீற்றை அணியும் மரபைக் காணலாம்.

சிலுவை "இயேசுகிறிஸ்து கொலை செய்யப்பட்டார்" என்பதைக் குறிக்கும் அடையாளம். சிலுவையில் இயேசு கிறிஸ்து மட்டும் கொலை செய்யப்படவில்லை. ரோமர்களின் ஆட்சிக் காலத்தில் மரண தண்டனையை நிறைவேற்றப் பயன்பட்ட கருவிகளில் சிலுவையும் ஒன்று. அதனால் ரோமர்களால் ஏராளமானவர்கள் சிலுவையில் அடித்துக் கொல்லப்பட்டார்கள்.

சிலுவை இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததைக் குறிக்கும் அடையாளம் ஆகாது. எவ்வாறு எனில் சிலுவையில் இயேசு கிறிஸ்து உயிர்த்து எழவில்லை. இயேசு கிறிஸ்து உயிர்த்து எழுந்ததைக் குறிக்கும் அடையாளம் வெறுமையான கல்லறை.

ஆகவே, இயேசு கிறிஸ்து இறந்து உயிர் பெற்றார் என்பதை, சிலுவை அடையாளம் குறிக்க இயலாது.

ரோமர்கள் வழிவந்த ஐரோப்பியக் கிறிஸ்தவத்தில் கி.பி. நான்காம் நூற்றாண்டு வரை சிலுவை சிறப்பிக்கப்படாவிட்டாலும் கிறிஸ்தவத்தில் 'திருநீற்றுத் திருநாள்' என்று ஒரு நாள் சிறப்பிக்கப்படுவது ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டிய ஒன்று. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தில் திருநீறு சிறப்பிடம் பெற்றிருப்பது குறிப்பிடற்குரியது. வழிபாடுகளில் திருநீறு பெற்ற இடத்தை நோக்கும்போதுதான் அதன் வரலாற்றுச் சிறப்பை அறிய முடியும்.

## திருநீற்றுத் திருநாள் :

'திருநீற்றுத் திருநாள்' என்று சிறப்பிக்கப்படுவது சாம்பல் புதன்கிழமை. கிறிஸ்தவத் திருநாட்களில் சாம்பல் புதன்கிழமை ஒரு முக்கியமான நாள் ஆகும்.

இயேசு கிறிஸ்துவின் பாடு, மரணம், உயிர்த்தெழுதல் இவற்றை நினைவு கூர்ந்து அதற்கென நோன்பு மேற்கொள்ளும் தபசுகாலத்தின் தொடக்க நாள் திருநீற்றுத் திருநாள் அல்லது சாம்பல் புதன்கிழமை ஆகும்.

## நீறு; திருநீறு:

'நீறு பூத்த நெருப்பு' என்பதிலுள்ள 'நீறு' சாம்பலைக் குறிக்கிறது. வழிபாட்டில் 'நீறு' சிறப்பிக்கப்படும்பொழுது 'திரு' என்ற அடைமொழியைப் பெற்று அது 'திருநீறு' ஆகிறது. ஆகவே சாதாரண சாம்பல், வழிபாட்டோடு தொடர்புபடுத்தப் படும்பொழுது அது 'திருநீறு' ஆகிறது. திருநீற்றுத்திருநாள் அன்று கிறிஸ்தவர்கள் தங்கள் நெற்றியில் திருநீறு பூசிக் கொள்ளும் வழக்கம் ரோமன் கத்தோலிக்கக் கிறிஸ்தவப் பிரிவு மக்களிடையே இன்றும் நடைமுறையில் இருக்கிறது.

## துக்கத்தை வெளிப்படுத்தும் அடையாளம் :

இயேசு கிறிஸ்துவின் பாடு, மரணம், இவற்றைத் தியானம் செய்யும் காலமாக திருச்சபை அட்டவணையில் 40 நாட்கள் ஒதுக்கப்படுகின்றன. இதைத் 'தபசுகாலம்' என்று குறிப்பிடுவர். தபசுகாலத்தின் தொடக்க நாள் 'திருநீற்றுத் திருநாள்' என குறிக்கப்பட்டு, அன்று நெற்றியில் சாம்பல் பூசப்படுகின்றது. துக்கத்தை வெளிப்படுத்தும் அடையாளமாகச் சாம்பல் பூசிக்கொள்வதையும், சாம்பலில் உட்காருவதையும், பழைய ஏற்பாடு கூறுகிறது. (II சாமு. 13: 19, எஸ்தர். 4: 3, யோபு. 2: 8.)

## மனந்திரும்புதலின் அடையாளம்:

மனந்திரும்புதலை வெளிப்படுத்தும் அடையாளமாக, சாம்பலில் உட்காருவதையும் சாம்பலைப் பூசிக்கொள்ளுவதையும் பற்றிய குறிப்புகளை நாம் பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் பார்க்கின்றோம். (யோனா 3: 6, மத்தேயு 11: 21, லூக்கா 10: 13)

## பாவம் நீக்கும் சாம்பல் அல்லது திருநீறு :

பாவம் நீக்கும் பரிகாரப் பொருளாக இரத்தமும் சாம்பலும் விளங்குவதைப் புதிய ஏற்பாடு கூறுகின்றது. 'வெள்ளாட்டுக் கடாக்கள், காளைகள், இவற்றின் இரத்தமும் கடாரியின் சாம்பலும் தீட்டுப்பட்டவர்கள் மீது தெளிக்கப் படும்போது, சடங்கு முறைப்படி அவர்கள் தூய்மை பெறுகிறார்கள்' (எபிரேயர் 9: 13)

## திருநீறு தயாரிக்கும் முறை :

பாவம் நீக்கும் சாம்பல், அல்லது திருநீறு தயாரிக்கும் முறை பழைய

ஏற்பாட்டிலுள்ள எண்ணாகமம் 19ஆம் அதிகாரத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வசன எண்களுடன் கீழே கொடுக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| 2ஆம் வசனம் | – | பழுதற்ற செங்கிடாரி ஒன்று |
| 3ஆம் வசனம் | – | பாளையத்திற்குப் புறம்பே எடுத்துச் செல்லப்பட்டு அடிக்கப்படும். |
| 5ஆம் வசனம் | – | அதன் தோல், தசை, இரத்தம் ஆகியவை சாணியுடன் சுட்டெரிக்கப்படும். |
| 9ஆம் வசனம் | – | கிடாரியின் சாம்பல் கூட்டப்பட்டு அது பாளையத்துக்கு வெளியே ஒரு தூய்மையான இடத்தில் கொட்டி வைக்கப்படும். அது பாவநிவர்த்திக்காகப் பயன்படும். |

## இரத்தமும் சாம்பலும் :

இரத்தமும் சாம்பலும் தீட்டுப்பட்டவர்கள் மீது தெளிக்கப்படும் பொழுது அவர்கள் தூய்மை பெறுகிறார்கள் என்று கூறப்பட்டுள்ளது. (எபி. 9: 13).

ஆடோ, மாடோ கொல்லப்பட்டவுடன் இரத்தம் கிடைத்தது. இரத்தத்தைச் சேமித்து வைத்து, வேண்டிய நேரங்களில் பயன்படுத்தவில்லை. ஆனால் சாம்பல் சேமித்து வைக்கப்பட்டு, வேண்டிய நேரங்களில் பயன்படுத்தப்பட்டது. கிடாரி எரிக்கப்படும் பொழுது, அதன் இரத்தமும் சாணமும் சேர்த்து எரிக்கப்பட்டு, அவற்றின் பயனாகச் சாம்பல் கிடைத்தது. அதனால் சாம்பலில் இரத்தத்தின் பகுதியும் அடங்கி இருக்கிறது. இரத்தமும் சாம்பலும் தூய்மைபடுத்தும் பொருள்களாக விளங்குகின்றன.

## சாம்பலும் - உயிர்த்தெழுந்த உடலும் :

செங்கிடாரி ஊருக்கு வெளியே பலியிடப்பட்டுத் தகனம் செய்யப்பட்டு சாம்பல் உருவாக்கப்பட்டது போன்று, இயேசு கிறிஸ்துவும் எருசலேமுக்கு வெளியே பலியிடப்பட்டு, அடக்கம் பண்ணப்பட்டு உயிர்த்தெழுந்தார். உயிர்தெழுந்த இயேசுவைப் போன்று சாம்பல் விளங்குகின்றது எவ்வாறு? கொல்லப்பட்டு எரிக்கப்படுவதற்கு முன்னருள்ள கிடாரியின் உடல் வேறு. எரிக்கப்பட்ட பின்னருள்ள கிடாரியின் உடல் வேறு. எரிக்கப்பட்ட பின்னருள்ள கடாரியின் உடல் சாம்பல் வடிவில் இருக்கிறது. சாம்பலை மேலும் எரித்து அழிக்கவோ அல்லது இல்லாமல் ஆக்கவோ இயலாது.

சாம்பல் உயிர்த்தெழுந்த உடலைப் போன்றது. பாவ நிவர்த்திக்கு உரியதாக விளங்குகின்றது. இரத்தம் பாவ நிவர்த்திக்குப் பயன்படுவதைப் போன்று சாம்பலும் பாவ நிவர்த்திக்குப் பயன்பட்டது. இரத்தம் ஒரு நேரம் மட்டுமே பயன்படுத்தப்பட்டது. சாம்பல் தொடர்ச்சியாகப் பயன்படுத்தப்பட்டது. இயேசுவின் இரத்தம் தொடர்ச்சியாகப் பயன்படுவதற்குக் காரணம், அவர் உயிர்த்தெழுந்தமை -யாலேயே. உயிர்த்தெழுதல் இல்லையென்றால் பாவப் பரிகாரம் இல்லை. ஆகவே உயிர்த்தெழுதலும் சாம்பலும் தொடர்ச்சியாகப் பாவ நீக்கத்திற்குப் பயன்படுகின்றன. சாம்பல் வேறு; உயிர்த்தெழுந்த உடல் வேறு; ஆனால் இரண்டும் செயல்பாட்டில் ஒன்று.

உயிர்த்தெழுந்த உடல் பழைய் உடல் அல்ல. அதை இனி யாரும் அழிக்க இயலாது. அதைப் போலவே சாம்பலையும் இனி யாரும் அழிக்க இயலாது. அதனால் இந்த சாம்பலில் அல்லது திருநீற்றில் 1. மரணம் 2. உயிர்த்தெழுதல் 3. பாவ மன்னிப்பு ஆகிய மூன்று நிலைகளும் அடங்கியிருக்கின்றன.

## திருநீறு :
## கிறிஸ்துவுக்கு முன்னும், கிறிஸ்துவுக்குப் பின்னும்.

மரணம், உயிர்த்தெழுதல், பாவ மன்னிப்பு ஆகிய மூன்று நிலைகளையும் அடக்கிய திருநீறு, கிறிஸ்துவின் உயிர்த் தெழுதலுக்கு முன்னர் யூத மதத்தில் பாவ நிவர்த்திக்காகப் பயன்படுத்தப்பட்டது. இது கிறிஸ்துவின் பலியை முன் அடையாளமாகக் குறிப்பதாகக் கொள்ளலாம். யூத மதம் கிறிஸ்துவின் பலியை ஏற்றுக்கொள்ளாத நிலையில் கிறிஸ்துவிற்குப் பின்னரும் பழைய நிலையைத் தொடருவது இயல்பே.

ஆனால் கிறிஸ்துவின் பலியை ஏற்றுக்கொண்டு, பாவ மன்னிப்புப் பெற்று இரட்சிக்கப்பட்ட கிறிஸ்தவர்கள் புதிய நிலையில் சாம்பல் அல்லது திருநீற்றைப் பயன்படுத்தினார்களா? என்பது இப்பொழுது நோக்கத்தக்கதாய் இருக்கிறது.

கிறிஸ்தவர்கள் இயேசு கிறிஸ்துவின் பாடு மரணத்தைத் தியானம் செய்யும் தபசுகாலத்தின் தொடக்க நாளை 'திருநீற்றுத் திருநாள்' என்று குறிப்பிட்டு, திருநீற்றை அணியும் மரபை முன்னர்ப் பார்த்தோம். மேலும் ஐரோப்பியக் கிறிஸ்தவர்களும் ஐரோப்பிய வழிக் கிறிஸ்தவர்களும் கான்ஸ்டன்டைன் காலம் முதல் இயேசு கிறிஸ்துவின் மரணம், உயிர்தெழுதல், பாவ மன்னிப்பு மூன்றையும் குறிக்கும் அடையாளமாகச் சிலுவையைப் பயன்படுத்தி வருவதையும் பார்த்தோம்.

## திருநீற்றைப் பயன்படுத்தும் திருச்சபை:

ஐரோப்பியர் பிடியில் சிக்காமலும் சிலுவை அடையாளத்தைப் பயன்படுத்தாமலும் கி.பி. நான்காம் நூற்றாண்டிற்கு முன்னர் உலகில் பரவி, திருநீற்றை அடையாளமாகப் பயன்படுத்தி வரும் கிறிஸ்துவின் திருச்சபைப் பிரிவினர் உலகில் இருக்கின்றார்களா? தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளான சைவ, வைணவத் திருச்சபைப் பிரிவுகளிலே திருநீற்றை அடையாளமாகப் பயன்படுத்தும் வழக்கம் இருக்கின்றதா? என்று தேடிப் பார்க்க வேண்டியது இப்பொழுது அவசியமாகிறது.

> 'இந்துமதம்' என்று அழைக்கப்படும் சைவ, வைணவ சமயங்கள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைகளாக இருப்பதினால், இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே என்பதைச் சமய வரலாறு தெளிவாகக் காட்டுகிறது.

## சிவலிங்கமும் சிவக்குடும்பமும்:

சைவ வைணவ சமயங்கள் என்பன இரண்டு தனித் தனிச் சமயங்கள் அல்ல; சைவத்தின் கிளையே வைணவம் ஆகும். அன்பின் மறுபெயர் 'சிவம்' என்பதாகும். சைவம் என்பது சிவனை அடிப்படையாகக் கொண்டது. சிவபெருமானின் உடலின் இடப்பாகத்தைப் பெண்ணாகக் கூறினால் அது சைவம். அதையே ஆணாகக் கூறினால் அது வைணவம்.

கிறிஸ்தவத்தில், தந்தை, மகன், தூய ஆவி என்ற மூவொரு கடவுள் கோட்பாட்டில், தூய ஆவியைப் பெண்ணாகக்கொண்டு சைவம் பிறந்தது. தூய ஆவியை ஆணாகக் கொண்டு வைணவம் பிறந்தது. இதைப் பற்றி மேலும் விளக்கம் வேண்டுவோர் 'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு' என்னும் ஆய்வு நூலை நோக்குக.

பைபிளில் யாக்கோபு நாட்டிய நினைவுத்தூண், சைவத்தில் சிவலிங்கம் என்று அழைக்கப்படுகிறது. கிறிஸ்துவிற்கு முற்பட்டது சிவலிங்க வழிபாடு. கிறிஸ்துவிற்கு முற்பட்ட சிவலிங்க வழிபாட்டில் பலி இருந்தது. யாக்கோபு பலியிட்டான். கிறிஸ்துவுக்குப் பிற்பட்டது சிவக் குடும்ப வழிபாடு. சிவக்குடும்ப வழிபாட்டில் பலிபீடம் இருக்கிறது. ஆனால் பலி இல்லை. காரணம் பலி இயேசு கிறிஸ்துவினால் நிறைவேற்றப்பட்டு விட்டது என்பதாலேயேயாகும்.

தந்தை, தூய ஆவி, மகன் ஆகிய 'மூவொரு கடவுள்' என்னும் கிறிஸ்தவ இறையியல் கொள்கை,

1. திருக்குறளில் கடவுள், வான், நீத்தார் ஆகிய 'இயல்புடைய மூவர்' என்றும்

2. சிவக்குடும்ப வழிபாட்டின் ஒரு பிரிவாகிய சைவத்தில், அப்பன், அம்மை, மகன் ஆகிய 'சோமாஸ்கந்தர்' என்றும்

3. சிவக் குடும்ப வழிபாட்டின் மற்றொரு பிரிவாகிய வைணவத்தில் சிவன், விஷ்ணு, பிரமன் ஆகிய 'மும்மூர்த்தி' என்றும்

குறிக்கப்படுகின்றது. சைவம், வைணவம் இரண்டிலும் நெற்றியில் அடையாளம் இடும் மரபு இருந்து வருகிறது.

## திருநீறும், திருமண்ணும்:

சைவர்கள் திருநீற்றால் தங்கள் அடையாளத்தையும், வைணவர்கள் திருமண்ணால் தங்கள் அடையாளத்தையும் தங்கள் நெற்றிகளில் இடுகின்றார்கள். சைவத்திலிருந்து வைணவம் பிரிந்த பின்னரே திருநீற்றிற்குப் பதில் திருமண் பயன்படுத்தப்பட்டது என்பது வரலாறு. மரணம், உயிர்த் தெழுதல், பாவ மன்னிப்பு மூன்றையும் திருநீறு விளக்கி நின்ற நிலையை முன்னர்ப் பார்த்தோம்.

இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலுக்கு முன்னர் செங்கிடாரி கொல்லப்பட்டு, அதனுடைய தோல், தசை, இரத்தம் ஆகியவை சாணியுடன் சுட்டெரிக்கப்பட்டு, திருநீறு தயாரிக்கப்பட்டது. இது வெறும் நீறு அன்று. சுத்திகரிக்கும் நீறு. அதனால் திருநீறு ஆகிறது. இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர், தயாரிக்கப்படும் திருநீறு, சுத்திகரிக்கப் பயன்படும் திருநீறு அன்று.

இயேசு கிறிஸ்துவின் மரணம், உயிர்த்தெழுதல், பாவ மன்னிப்பு ஆகிய மூன்றையும் அறிவிக்கும் அடையாளமாக, பின்னர்த் திருநீறு விளங்குகிறது. ஆகையால் கிறிஸ்தவத்தில் திருநீறு தயாரிக்கப்படுவதற்குக் கிடாரி கொல்லப்படவோ, தோல், தசை, இரத்தம் எரிக்கப்படவோ அவசியம் இல்லை. இவை எல்லாம் கிறிஸ்துவுக்குள் நிறைவேறிவிட்டன. அதனால் திருநீறு தயாரிக்க, கிடாரியின் சாணி எரிக்கப்பட்டாலே போதுமானதாகிறது.

சாணி எரிக்கப்பட்டால் அது நீறு ஆகுமே தவிர திருநீறாக எவ்வாறு ஆகும் என்று எண்ணலாம். கிறிஸ்துவின் மரணம், உயிர்த்தெழுதல், பாவ மன்னிப்பு ஆகிய மூன்றையும் குறிக்கும் அடையாளமாக நெற்றியில் இடப்படுகின்ற காரணத்தால் அது வெறும் நீறு அன்று; திருநீறாக மாறி விடுகிறது.

இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர் கடவுளின்

1. தந்தை

2. மகன்

3. தூய ஆவி

ஆகிய மூன்று நிலைகளையும் உலகம் அறியும் வகை ஏற்பட்டது.

★ நெற்றியில் அடையாளம் இடும் வழக்கம் பைபிளிலிருந்து உருவான ஒன்றே என்பதில் ஐயமில்லை.

இந்த மூன்று நிலைகளையும் விளக்குவதற்காகத் திருநீற்றால் மூன்று படுக்கைக் கோடுகள் இடப்படுகின்றன. இந்த மூன்று நிலைகளில், 'மகன் மரத்தில் இரத்தம் சிந்தியதால் பாவ மன்னிப்பு ஏற்பட்டது' என்பதை விளக்க, மூன்று கோடுகளில் மகனைக் குறிக்கும் மையக் கோட்டின் மத்தியில், 'மரத்தின் வழியாக இரத்தம் சிந்தினார்' என்பதைத் தெரிவிக்க, சந்தன மரத்தினாலாகிய சந்தனப் பொட்டும், அப்பொட்டின் மத்தியில் இரத்தத்தைக் குறிக்க சிவப்புக் குங்குமப் பொட்டும் இடப்பட்டு, இயேசு கிறிஸ்துவின் நற்செய்தி முழுமையாக வெளிப்படுத்தப்படுகிறது. இது சைவத்தின் நிலை.

சைவத்திலிருந்து வைணவம் பிரிந்த பின்னர் திருநீற்றிலிருந்து திருமண் அணியும் நிலை உருவாயிற்று. அத்துடன் 'இரத்தம் சிந்தி மீட்டெடுத்தார்' என்பதை விளக்க, 'குங்குமப் பொட்டு வைப்பதைவிட இரத்தம் வடிவதைக் காட்ட வேண்டும்' என்ற நிலை உருவாக்கப்பட்டது. அதனால் நெற்றியில் படுக்கையாக இடப்பட்ட மூன்று கோடுகள் மாற்றப்பட்டு, செங்குத்தாக மேலிருந்து கீழாக இடப்பட்டன. மையக்கோடு கடவுளின் மகன் இரத்தம் சிந்துவதைக் காட்டும் சிவப்புக் கோடாக மாற்றப்பட்டது. மேலிருந்து இரத்தம் சிந்தப்பட்டதைக் காட்ட சிவப்புக் கோடு மேலே ஒடுக்கமாகவும் கீழே வரவர அகலமாகவும் அமைக்கப்பட்டது.

## அறிய இயலா நிலை:

கிறிஸ்தவத்தின் நற்செய்தியைத் தெளிவாக வெளிக் காட்டும் இந்த அடையாளங்களைச் சைவப் பெருமக்களும், வைணவப் பெருமக்களும் தினந்தோறும் தங்கள் நெற்றிகளில் தவறாது இட்டுக்கொண்ட போதிலும், ஏன் இவ்வாறு அணிகின்றோம் என்று அவர்கள் அறிய இயலாத நிலை ஏற்பட்டது வருந்தத்தக்க ஒன்று ஆகும்.

## பைபிளும் நெற்றியில் அடையாளமிடுதலும் :

ஐரோப்பிய வழிக் கிறிஸ்தவர்கள் நெற்றியில் அடையாளம் இடுவதில்லை. தோமா வழிக் கிறிஸ்தவர்களாகிய சைவர்களும் வைணவர்களும் நெற்றியில்

அடையாளம் இடுகின்றார்கள், இது பைபிளுக்குப் பொருந்துமா? என்ற கேள்வி எழுகிறது.

## பழைய ஏற்பாட்டில் :
## கண்களுக்கிடையில் நினைவுச் சின்னம்

'ஆண்டவரின் சட்டம் உன் உதடுகளில் ஒலிக்கும்படி, இது உன் கையில் அடையாளமாகவும், உன் கண்களிடையில் நினைவுச் சின்னமாகவும் இருக்கட்டும்' . (விடுதலைப் பயணம் 13:9)

## புதிய ஏற்பாட்டில் :
## நெற்றியில் பொறித்திருந்தனர்

'சீயோன் மலை மீது ஆட்டுக்குட்டி நிற்கக் கண்டேன். அதன் பெயரையும் அதனுடைய தந்தையின் பெயரையும் தங்களது நெற்றியில் பொறித்திருந்த ஓர் இலட்சத்து நாற்பத்து நான்காயிரம் பேர் அதனுடன் இருந்தனர்' . (திருவெளிப்பாடு 14: 1).

## திருச்சபை வரலாற்றில் :
## நெற்றியில் திருநீறு

இன்றும் சாம்பல் புதன் அல்லது திருநீற்றுத் திருநாள் அன்று நெற்றியில் திருநீறு அணியும் வழக்கம் ஐரோப்பிய வழிக் கிறிஸ்தவர்களில் கத்தோலிக்கத் திருச்சபையில் இருந்து வருகிறது.

ஆகவே, நெற்றியில் அடையாளம் இடும் வழக்கம் பைபிளிலிருந்து உருவான ஒன்றே என்பதில் ஐயமில்லை.

பைபிள் வழியில் திருநீற்றை அணியும் சைவ மக்களின் சைவ சமய இலக்கியங்கள் பன்னிரு திருமுறையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பன்னிரு திருமுறையில் முதன்மையானது மூவர் பாடிய தேவாரம். மூவர் பாடிய தேவாரங்களில் முதன்மையானதாகக் கருதப்படுவது திருஞான சம்பந்தர் பாடிய தேவாரம். திருஞான சம்பந்தர் பாடிய தேவாரத்தில் திருநீற்றைச் சிறப்பித்துப் பத்துப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. இவை “திருநீற்றுப்பதிகம்” என்ற பெயரால் சைவப் பெருமக்களால் போற்றப்படுகின்றன.

## திருநீற்றுப் பதிகத்தின் சில பகுதிகள் :

மந்திரமாவது நீறு... - வானவர்மேலது நீறு

சுந்தரமாவது நீறு... - துதிக்கப்படுவது நீறு

வேதத்திலுள்ளது நீறு... - வெந்துயர் தீர்ப்பது நீறு

பாவம் அறுப்பது நீறு... - வானம் அளிப்பது நீறு

முத்தி தருவது நீறு... - சத்தியமாவது நீறு.

ஆலமதுண்டமிடற்று எம்மான் ஆலவாயன் திருநீறே.

திருஞான சம்பந்தரால் பாடப்பட்டிருக்கும் திருநீற்றுப் பதிகத்திலுள்ள திருநீறு

1. இறைவன் சாவை ஏற்று, பின்னர் அதை வென்றார். (ஆலமதுண்டமிடற்று எம்மான்)
2. உலக மக்களின் பாவத்தைப் போக்கினார். (பாவம் அறுப்பது நீறு)
3. இந்த நற்செய்தியை வெளிப்படுத்தும் வேதத்தில் கூறப்பட்டிருப்பது திருநீறு. (வேதத்தில் உள்ளது நீறு)

என்று தெளிவாக வரலாற்று அடிப்படையில் விளக்கப் பட்டிருக்கிறது.

## வேதம் எது?

திருநீற்றுப் பதிகம் தேவாரத்தின் ஒரு பகுதி. தேவாரம் பன்னிரு திருமுறையின் பகுதி. பன்னிரு திருமுறை சைவப் பெருமக்களால் 'வேதம்' என்று குறிக்கப்படுவதில்லை.

அப்படியானால் திருநீற்றுப் பதிகத்தால் சிறப்பிக்கப்படும் வேதம் எது?

ரிக், யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களில் திருநீற்றைப் பற்றிய குறிப்பும் இல்லை. திருநீற்றை அணியும் வழக்கமும் இல்லை. சிவக் குடும்ப வழிபாடும் இல்லை.

பைபிளே திருநீற்றைச் சிறப்பிக்கின்றது. மொத்தத்தில் கிறிஸ்தவ ஆன்மீக நற்செய்தியை விளக்கும் சின்னம் திருநீறே என்னும் புதிய உண்மை தோமா வழிக் கிறிஸ்தவமாகிய சைவ சமயத்தின் வழி உலகுக்கு வெளிப்படுத்தப்படுகிறது.

# 17. இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே - தொகுப்பு

1. ஏறத்தாழ கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரையிலான கால கட்டத்தைச் சேர்ந்த சங்கத்தமிழ் இலக்கியங்கள் கிரேக்கர், ரோமர், யூதர், சீரியர் போன்றவர்களை 'யவனர்' என்ற பெயரில் குறிக்கின்றன.
2. இயேசு கிறிஸ்து பிறந்த காலத்தில் ரோமப் பேரரசை ஆளுகை செய்த யவனரான அகஸ்டஸ் மன்னன் கால நாணயங்களை அதிக எண்ணிக்கையில் அகழ்வாராய்ச்சியாளர்கள் தமிழ்நாட்டில் தோண்டி எடுத்துள்ளனர்.
3. யவனரான தூய தோமா தொடர்பு கொண்டதாகக் கூறப்படும் கொண்டோபோரஸ் அரசனின் கால நாணயங்களை அதிக எண்ணிக்கையில் தட்சசீலத்தில் தொல்பொருள் இயலார் தோண்டி எடுத்துள்ளனர்.
4. மஹாயான பௌத்தமும், மஹாயான பௌத்த உருவங்களும் உருவான தட்சசீலத்திற்கு யவனரான தூய தோமா சென்றதாகக் கூறப்படுவது நோக்கத்தக்கது.
5. ஆதி இந்தியக் கிறிஸ்தவம் (அ) தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் முதல் தமிழ் இலக்கியம் திருக்குறள் ஆகும்.
6. தமிழ்நாட்டின் ஒருபகுதியாய் இருந்த கேரளாவில் கி.பி. நான்காம் நூற்றாண்டு முதல் இருக்கும் சீரியக் கிறிஸ்தவம், தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவம் அல்லது திராவிடக் கிறிஸ்தவத்திலிருந்து வேறுபட்டதாகும்.
7. வேதங்களும், சமஸ்கிருதமும் மிகவும் தொன்மையானவை என்ற பொதுவான நம்பிக்கை உள்ளது. ஆனால், முதல் சமஸ்கிருதக் கல்வெட்டே கி.பி. 150-இல் தான் காணப்படுகிறது. வேதவியாசர் என்ற திராவிடர்தான் கிறித்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளில் ஆரியரின் நாடோடி வழிபாட்டுப் பாடல்களுக்கு எழுத்து வடிவம் கொடுத்தார்.

பழமையான சமஸ்கிருத இலக்கியங்கள் பழங்கால தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கருத்துகளை விளக்க எழுந்தவையே ஆகும்.

அதாவது மஹாயான பௌத்தம், சைவம், வைணவம் ஆகியவை திராவிடக் கிறிஸ்தவத்தினுடைய கிளைகளாகும்.

8. தமிழ் பக்தி இயக்கத்தின் வளர்ந்த, முன்னேறிய நிலை தான் சைவம், வைணவம் ஆகும்.

தமிழ் இனம் என்பது தமிழிலிருந்து பிரிந்த மொழிகளைப் பேசுகின்ற, அதே சமயம் தமிழை மறந்து வாழ்கின்ற மக்களுக்குரிய இனப் பெயராக உள்ளதால், வரலாற்று ஆசிரியர்களால் 'திராவிட இனம்' என்று குறிக்கப்படுகின்றது.

9. சைவம், வைணவம் இரண்டும் தூய தோமா நற்செய்தி கூறி, கொல்லப்பட்டு, அடக்கம் பண்ணப்பட்ட தமிழ்நாட்டில் தோன்றி, தமிழ்நாட்டின் நாயன்மார், ஆழ்வார்களால் வளர்க்கப்பட்டன.
10. சைவத்தின் 63 நாயன்மார்களும் தமிழ்நாட்டையே சார்ந்தவர்கள்.
11. வைணவத்தின் 12 ஆழ்வார்களும் தமிழ்நாட்டையே சார்ந்தவர்கள்.
12. சைவத்தின் புனித நூல்களான பன்னிரு திருமுறைகளும் தமிழிலேயே உள்ளன.
13. வைணவத்தின் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் தமிழிலேயே இருக்கிறது.
14. இந்தியாவிலுள்ள பழமையான 275 சைவத் திருக்கோயில்களில் 230 தமிழ்நாட்டிலேயே உள்ளன.
15. இந்தியாவிலுள்ள பழமையான 108 வைணவத் திருப்பதிகளில் 96 தமிழ்நாட்டிலேயே உள்ளன.
16. சைவத்தில் 'கோயில்' என்ற சொல் தமிழ்நாட்டில் உள்ள 'சிதம்பரத்தை'யே குறிக்கும்.
17. வைணவத்தில் 'கோயில்' என்ற சொல் தமிழ்நாட்டில் உள்ள 'திருவரங்கத்தையே குறிக்கும்.
18. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் இறையியல் வெளிப்பாடான 'சைவசித்தாந்தம்' தமிழிலேயே இருக்கிறது.
19. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியம் தமிழில் மட்டுமே காணப்படுவதாக, இந்தியச் சமயங்கள் மற்றும் இலக்கியங்களின் வரலாறு வெளிப்படுத்துகிறது.

ரோம சாம்ராஜ்யத்தில் உருவான ஆதி கிறிஸ்தவ இலக்கியங்கள் கிரேக்க மொழியில் காணப்படுவது போன்று, தமிழ்நாட்டில் உருவான தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கியங்கள் தமிழ்மொழியில் காணப்படுகின்றன.

ஐரோப்பியக் கிறிஸ்தவத்தில் கிரேக்க மொழிக்குப் பின் லத்தீன் இடம் பெற்றது போல், இந்தியக் கிறிஸ்தவத்தில் தமிழைத் தொடர்ந்து சமஸ்கிருதம் இடம் பெற்றது.

20. இந்திய மக்கள் தொகையில் திராவிடர்கள் 90% மற்றும் ஆரியர் 10%

## முடிவு :

இந்திய மக்களில் திராவிடர்களே பெரும்பான்மையினர். இவர்களில் பெரும்பான்மையோர் சைவ, வைணவத்தைப் பின்பற்றுகின்றனர். இந்தியாவின் பெரும்பான்மையோரான 90 சதவிகிதம் உள்ள திராவிடரின் மதம் சைவம், வைணவமாகும். 'இந்துமதம்' என்று அழைக்கப்படும் சைவ, வைணவ சமயங்கள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைகளாக இருப்பதினால், இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே என்பதைச் சமய வரலாறு தெளிவாகக் காட்டுகிறது.

## திருக்குறளில்
## மூவொருமைக் கோட்பாடு

| பிதாவாகிய கடவுள் | கடவுள் (வாழ்த்து) |
| --- | --- |
| தூய ஆவியாகிய கடவுள் | வான் (சிறப்பு) |
| குமாரனாகிய கடவுள் | நீத்தார் (பெருமை) |

மூவொரு கடவுள் அல்லது
திரியேக மூர்த்தி
(பிதா, தூய ஆவி,
குமாரனாகிய கடவுள்) – இயல்புடைய மூவர்
ஒரே இயல்பு அல்லது
தன்மையுடைய
மூவொரு கடவுள்.

## அறுவகை சமயத்தில் மூவொருமைக் கோட்பாடு

| | | | |
|---|---|---|---|
| கிறித்தவம் | தந்தை | தூய ஆவி | மகன் |
| சைவம் | சிவன் | அம்மை | மகன் |
| சாக்தம் | சிவன் | சக்தி | மகன் |
| கௌமாரம் | சிவன் | சக்தி | குமரன் |
| காணாபத்தியம் | சிவன் | சக்தி | கணபதி |
| வைணவம் | சிவன் | விஷ்ணு | பிரமன் |
| சௌரம் | சிவன் | விஷ்ணு | ஐயப்பன் |

# சைவத்தில்
# மூவொருமைக் கோட்பாடு

| | |
|---|---|
| பிதாவாகிய கடவுள் | சிவன் |
| தூய ஆவியாகிய கடவுள் | சக்தி |
| குமாரனாகிய கடவுள் | குமரக்கடவுள் |

மூவொரு கடவுள் அல்லது
திரியேக மூர்த்தி
(பிதா, தூய ஆவி,
குமாரனாகிய கடவுள்) – மூவொரு கடவுள்
சோமாஸ்கந்தர்

# வைணவத்தில் மூவொருமைக் கோட்பாடு

| | |
|---|---|
| பிதாவாகிய கடவுள் | சிவன் |
| தூய ஆவியாகிய கடவுள் | விஷ்ணு |
| குமாரனாகிய கடவுள் | பிரமன் |

மூவொரு கடவுள் அல்லது
திரியேக மூர்த்தி
(பிதா, தூய ஆவி,
குமாரனாகிய கடவுள்) – மும்மூர்த்தி
அரிஅரபுத்திரன்

| பௌத்தத்தில் மூவொருமைக் கோட்பாடு | |
|---|---|
| பிதாவாகிய கடவுள் | தர்ம காயா |
| தூய ஆவியாகிய கடவுள் | சம்போக காயா |
| குமாரனாகிய கடவுள் | நிர்மாண காயா |
| மூவொரு கடவுள் அல்லது திரியேக மூர்த்தி (பிதா, தூய ஆவி, குமாரனாகிய கடவுள்) - | திரிகாயா அல்லது முத்திருமேனிக் கோட்பாடு |

# 1. திராவிடர் யார்?

தமிழர் என்ற பெயரே திரிபடைந்து (தமிழர் – த்ரமிளர் – த்ரமிடர் – திரவிடர் – திராவிடர்) சமஸ்கிருதத்தில் 'திராவிடர்' என்று வழங்கப்படுகிறது.

தமிழ் மொழி என்பது சமஸ்கிருதத்தில் 'திராவிட பாஷா' என்றும்; தமிழ்க் குழந்தை என்பது சமஸ்கிருதத்தில் 'திராவிட சிசு' என்றும், தமிழ்ப் பேருரை என்பது சமஸ்கிருதத்தில் 'திராவிட மாபாஷ்யம்' அல்லது 'திராவிட மாபாடியம்' என்றும் வழங்கப்படுகின்றன.

தமிழ் மொழியிலிருந்து பிரிந்த மொழிகளின் தொகுப்பிற்கு, 'திராவிட மொழிகள்' என்ற பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

தமிழர்கள் என்போர் 3 நிலைகளில் குறிக்கப்படுகின்றனர்.

1. தமிழ் மொழியைப் பேசும் தமிழர்கள்
2. தமிழ் மொழியிலிருந்து பிரிந்த மொழிகளைப் பேசும் தமிழர்கள்
3. தமிழ் / திராவிட மொழியை மறந்த தமிழர்கள்

மேலே கூறப்பட்டுள்ளவற்றில் தமிழ் மொழியைப் பேசும் தமிழர்கள் தமிழ் நாட்டில் இருக்கின்றனர்.

தமிழ் மொழியை மறந்து, காலம் காலமாக வாழ்கின்றவர்களுக்குத் 'தமிழர்' என்ற மொழி அடிப்படையிலான பெயரை விட, திராவிடர் என்ற இன அடிப்படையிலான பெயர் பொருத்தமாக இருக்கின்றது. அது எவ்வாறு என்று எண்ணிப் பார்க்கும்போது, தமிழ் மொழியைப் பேசுகிறவர்கள் தமிழர் என்பது இயல்பான பெயராகும். ஆனால், தமிழ் மொழியைப் பேசாமல், வேற்று மொழிகளைப் பேசும் மக்களைத் 'தமிழர்' என்று அழைப்பது கேள்விக்குறியாகிறது.

தமிழர் என்ற சொல் மொழி அடிப்படையில் உருவான பெயராய் இருந்தபோதிலும் அது உருமாறி, சமஸ்கிருதத்தில் 'திராவிடர்' என்று குறிக்கப்படும்பொழுது, மொழி அடிப்படையிலிருந்து மாறி, இன அடிப்படைக்குச் சென்று விடுகிறது.

ஆகவே, தமிழ் மொழியை மறந்து வேற்று மொழிகளைப் பேசுகின்றவர்கள், (ஒரு காலத்தில் அவர்கள் முன்னோர் தமிழ் மொழியைப் பேசி வந்திருந்தபோதிலும்) இப்பொழுது தமிழ் மொழிக்குத் தொடர்பில்லாதவர்களாக இருக்கின்றார்கள்.

ஆனால், அவர்கள், தமிழ் இனத்திற்குச் சொந்தக்காரர்கள். அதனால், தமிழ் இனம் என்பது தமிழிலிருந்து பிரிந்த மொழிகளைப் பேசுகின்ற, அதே சமயம் தமிழை மறந்து வாழ்கின்ற மக்களுக்குரிய இனப் பெயராக உள்ளதால், வரலாற்று ஆசிரியர்களால் 'திராவிட இனம்' என்று குறிக்கப்படுகின்றது.

ஆகவே, திராவிட இனத்தில்,

- தமிழைப் பேசுகின்ற மக்களும்
- தமிழிலிருந்து பிரிந்த மொழிகளைப் பேசும் மக்களும்
- தமிழை, திராவிட மொழிகளை மறந்த மக்களும்

அடங்குகின்றனர்.

'ஆரிய வர்த்தம்' என்பது ஆரியர்களுக்கு உரிய நாடு அல்ல. அவர்களால் அபகரிக்கப்பட்ட இந்தியாவின் ஒரு பகுதியே 'ஆரிய வர்த்தம்' அல்லது 'ஆரிய தேசம்' எனப்பட்டது. இவர்கள் தனித்தனி மொழிகளைப் பேசி, தனித்தனிப் பண்பாடுகளை உடைய, தனித்தனி இனத்தினர் என்பது வரலாறு கூறும் உண்மை.

ஆரியர் என்பது ஓர் இனப் பெயர் அன்று. ஆனால் திராவிடர் என்பது ஓர் இனப் பெயர் ஆகும்.

இந்தியா திராவிட இந்தியா என்பது வரலாற்று உண்மை ஆகும். இன்றைய இந்தியாவில் வாழும் மக்கள் தொகையில் 90 சதவிகிதம் மக்கள் திராவிட இனத்தினர் ஆவர்.

ஆனால், ஆரியர்களுடைய கூட்டு முயற்சியால், திராவிட இனம் அடிமைப்படுத்தப்பட்டு, நசுக்கப்பட்டு, பல்வேறு சாதிகளாக உடைக்கப்பட்டு, தங்களுடைய இனப் பெயரை மறக்கடிக்கப்பட்டவர்களாக வாழ்ந்து கொண்டு இருக்கின்றார்கள்.

திராவிட இனத்தின் சிறப்பான வரலாறு இந்தியாவிலுள்ள திராவிட இன மக்களுக்குப் பல்வேறு முறைகளில் திரிக்கப் பட்டு, மறைக்கப்பட்டுள்ளது.

இவற்றை வரலாற்று ஆராய்ச்சியாளர் வெளிக்கொண்டு வர வேண்டும்.
(டாக்டர் மு. தெய்வநாயகம், திராவிட சமயம், ஜூன் 2004)

# உ. ஆரியர் யார்? *

'ஆரியர்' எனும் பெயர் உயர்ந்தவர்கள் எனும் பொருளில் பயன்படுத்தப்படுவதாகப் பலரும் நம்புகின்றனர். இந்த நம்பிக்கை முழுவதும் தவறு என்று தள்ளிவிட இயலாது. எவ்வாறென்றால், இந்திய மக்கள் தொகையில் இவர்கள் 10 சதவிகிதமே இருந்தாலும் இந்தியாவின் அரசியல் பதவிகளில் உயர்ந்த நிலைகளில் இருந்தவர்கள், இன்றும் உயர்ந்த பதவிகளில் இருப்பவர்கள் ஆரியர்கள் என்பதை நாம் கண் கூடாகப் பார்க்கிறோம்.

இந்தியாவில் 'ஆரிய தேசம்' அல்லது 'ஆரியவர்த்தம்' என்ற ஒரு தனி நாட்டை அமைத்து, ஏறத்தாழ 500 ஆண்டுகள் ஆட்சி செய்தவர்கள் ஆரியர்கள் என்பது வரலாறு. இன்றும் இந்திய மதங்களில் 'இந்து மதம்' என்று அழைக்கப்படுகின்ற சைவமும், வைணவமும் ஆரியர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருக்கின்றன. ஆதலால், அரசியல் பதவிகளாலும் பொருளாதாரத்தாலும் சமுதாய அந்தஸ்தாலும் ஆரியர்கள் இந்தியாவில் உயர்ந்து விளங்குகின்ற காரணத்தால், ஆரியர்கள் என்றால் மேலானவர்கள் / உயர்ந்தவர்கள் என்று நினைக்கப்படுவதும் 'ஆரியர்' எனும் சொல்லுக்குரிய பொருளாகச் சொல்லப்படுவதும் இயல்பானதாக இருக்கின்றது.

ஆனால், 'ஆரியர்' என்ற பெயருக்குப் பொருள் 'உயர்ந்தவர்' என்பது கிடையாது. ஈரானிலிருந்து இந்தியாவிற்குள் வந்தவர்கள் 'ஈரானியர்' என்று அழைக்கப்படுவது இயல்பு.

'ஈரானியர்' என்ற பெயர் திரிபடைந்து 'ஆரியர்' என்று ஆகி இருக்கிறது.

ஈரான் வழியாக இந்தியாவிற்குள் படை எடுத்து வந்தவர்கள் அனைவருமே ஈரானியர் என்று அழைக்கப்படுவது இயல்பே. அந்த நிலையில் ஈரான் வழியாக இமயமலையில் உள்ள கைபர், போலன் கணவாய் மூலம் இந்தியாவினுள் படை எடுத்து வந்த

- பாரசீகர்· (கி.மு. 6ஆம் நூற்றாண்டு)
- கிரேக்கர் (கி.மு. 4ஆம் நூற்றாண்டு)
- சகர் (கி.மு. 2ஆம் நூற்றாண்டு)
- குஷானர் (கி.பி. 1ஆம் நூற்றாண்டு)
- ஹூனர் (கி.பி. 4ஆம் நூற்றாண்டு)

ஆகிய அனைவருக்கும் பொதுப் பெயராக 'ஆரியர்' என்பது விளங்குகிறது.

இவர்களோடு வணிகத்திற்காக வந்த

✦ ரோமர்களும் (கி.மு. 4ஆம் நூற்றாண்டு முதல்)

இணைக்கப்பட்டு 'ஆரியர்' என்ற பெயரில் அடங்குகின்றனர்.

இந்திய மக்கள் இவர்களுக்குப் பொதுப் பெயராக 'ஆரியர்' என்ற பெயரைக் கொடுத்திருந்த போதிலும் இவர்கள் தனித்தனி மொழிகளைப் பேசி, தனித்தனிப் பண்பாடுகளை உடைய, தனித்தனி இனத்தினர் என்பது வரலாறு கூறும் உண்மை.

ஆரியர், வெள்ளையர் இருவருமே கைகோர்த்துக் கொண்டனர். வெள்ளையர் உயர்ந்த இனத்தவர் என்றும்; கருப்பர் தாழ்ந்த இனத்தவர் என்றும் தவறான கருத்தைப் பரப்பினர்.

இந்தியாவின் மீது பல காலங்களில் படை எடுத்து வந்த பாரசீகர், கிரேக்கர், சகர், குசானர், ஹுனர் ஆகிய படையெடுப்பாளர்களும் வணிகத்திற்காக வந்த ரோமரும் ஆகிய இந்த அந்நியர்கள் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் தங்கள் வெள்ளை நிற அடிப்படையில் 'ஆரியர்' என்ற பெயரில் ஒன்றாக இணைந்தனர். ராஜஸ்தானிலுள்ள 'மவுண்ட் அபு'வில் கூட்டணி அமைத்தனர். இந்தியாவின் ஒரு பகுதியைச் சூழ்ச்சியாக 'ஹர்ஷ வர்த்தனன்' என்ற திராவிடப் பேரரசனிடமிருந்து கைப்பற்றினர். கைப்பற்றி ஆரிய வர்த்தத்தை உருவாக்கினர்.

கி.பி. 7ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை ஆரிய வர்த்தத்தை ஆட்சி செய்தனர் என்பது இந்திய வரலாற்றின் ஒரு பகுதி.

ஆகவே, ஆரியர் என்பது ஓர் இனப் பெயர் இல்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

அப்படியானால், இந்திய வரலாற்றில், ஆரியர் என்பது ஓர் இனப் பெயராகச் சுட்டப்படுவது எவ்வாறு? எனும் கேள்வி எழுகிறது.

பல்வேறு மொழிகளைப் பேசிய

பல்வேறு இனத்தினராகிய

பல்வேறு நாட்டைச் சார்ந்த

இவர்கள் அனைவரையும் 'ஓர் இனம்' போல, இணைக்கின்ற கூறுகள் யாவை? என்பது இப்பொழுது நோக்கத்தக்கது.

1. இவர்கள் யாவரும் இந்தியாவின் மீது படை எடுத்து இந்திய மக்களை அடக்கி ஆள வந்தவர்கள்; (வணிகத்திற்காக வந்த ரோமர்களைத் தவிர)

2. இவர்கள் யாவரும் தங்கள் வெள்ளை நிற அடிப்படையில் இந்திய மக்களுக்கு எதிராக கி.பி. 7ஆம் நூற்றாண்டில் ஒன்றாக இணைந்தவர்கள்;

3. வெள்ளை நிறத்தவர்களாகிய தங்களை, பிறப்பால் 'உயர்ந்தவர்கள்' எனவும், வெள்ளை நிறமில்லாதவர்களாகிய இந்திய மக்களை, பிறப்பால் 'தாழ்ந்தவர்கள்' எனவும் சட்டங்களை இயற்ற ஒன்றாக இணைந்தனர்;

4. நிற அடிப்படையில் உருவாக்கப்பட்ட சட்டங்கள் நியாயமானவையே என்று காட்டுவதற்காக அதற்குரிய விளக்கங்களை உருவாக்கி, 'வருணாசிரமதருமம்' என்று அதற்குப் பெயரிட்டார்கள்;

5. இவர்களுடைய முக்கிய மொழிகளாகிய

   பாரசீகம்

   கிரேக்கம்

   இலத்தீன்

   போன்றவை, கிறிஸ்துவிற்குப் பின்னர் உருவாக்கப்பட்ட சமஸ்கிருத மொழியில் இடம் பெற்றமையால் சமஸ்கிருத மொழியை இவர்கள் உரிமை பாராட்டலாயினர்.

6. சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட நூல்கள் அனைத்தும் தங்களுக்கு உரிய நூல்களே என்றும் நம்பத் தொடங்கினர்;

மேலே கூறப்பட்டுள்ள காரணங்களால் ஆரியர்களுக்கென்று

ஒரு நாடு இருந்தது என்றும், அவர்களுக்கென்று
ஒரு தனி மொழி இருந்தது என்றும், அவர்கள்
ஒரு தனி இனத்தினர் என்றும்

நம்புகின்ற தவறான நம்பிக்கை இந்தியாவில் தோன்றி உலகம் முழுவதும் பரவியது.

'ஆரிய வர்த்தம்' என்பது ஆரியர்களுக்கு உரிய நாடு அல்ல. அவர்களால் அபகரிக்கப்பட்ட இந்தியாவின் ஒரு பகுதியே 'ஆரிய வர்த்தம்' அல்லது 'ஆரிய தேசம்' எனப்பட்டது.

ஆரிய மொழி என்று ஒரு தனி மொழி இல்லை. அவர்கள் பல்வேறு மொழிகள் பேசிய கூட்டத்தினர்;

சமஸ்கிருதம் ஆரியர்களின் மொழி அல்ல. இந்திய மொழிகள் மற்றும் இந்தியாவில் இருந்த வெளிநாட்டு மொழிகள் இவை அனைத்தையும் சேர்த்து தூய தோமா வழி கிறிஸ்தவர்களால் உருவாக்கப்பட்ட மொழியே சமஸ்கிருதம்.

ஆரிய இனம் என்பது தனி ஓர் இனம் அன்று; பல்வேறு இனத்தினரின் கூட்டமைப்பே பின்னர் 'ஆரிய இனம்' என்று கூறப்படுகிறது.

'சிந்துவெளி நாகரிகத்தை ஆராய்ச்சி செய்த பலர் இது 'திராவிட நாகரிகம்' எனக் கூறியுள்ளனர். அண்மைக்கால ஆய்வுகள் சிந்துவெளி மொழி அமைப்பு திராவிட மொழி அமைப்பே என்பதை உறுதிபடுத்தியுள்ளன.

(★ டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் பயிற்சி வகுப்புகளில் நடத்திய பாடச் சுருக்கம்.)

# 3. சிந்துவெளி நாகரிகம்

- ❖ திராவிடர்களுக்கு என்றுதனி நாகரிகம் எதுவும் இல்லை என்றும்
- ❖ அவர்கள் நாகரிகம் அற்றவர்கள் என்றும்
- ❖ ஆரியர்தான் திராவிடர்களுக்கு நாகரிகம் கற்றுக் கொடுத்தனர் என்றும் நம்பப்பட்டது.

Sir. William Jones என்ற ஆங்கிலேயர் சமஸ்கிருதத்தில் இருந்த மனுதர்ம சாஸ்திரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அதில் உள்ள லத்தீன், கிரேக்கச் சொற்களைக் கண்டவுடன் சமஸ்கிருதம் தான் கிரேக்கம், லத்தீன் இவற்றிற்கெல்லாம் தாய்மொழி என்றும், இதிலிருந்து தான் ஐரோப்பிய மொழிகள் எல்லாம் உருவாயின என்றும் ஒரு தவறான முடிவிற்கு வந்தார். இது ஆரியர் மொழி என்றும் தீர்மானித்தார்.

ஐரோப்பியர்கள், திராவிடர்களைவிட, ஆரியருக்கே அதிக முக்கியத்துவம் கொடுத்தனர்.

**இதற்கான காரணங்கள் :**

1. வெள்ளையர், ஆரியர் இருவருமே நாடு பிடிக்கும் நோக்கத்துடன் இந்தியாவிற்கு வந்தவர் ஆவர்.
2. இருவருமே உள்நாட்டு மக்களை அடிமைப்படுத்தியவர்.
3. இருவருமே வெள்ளை நிறத்தினர் ஆவர்.

ஐரோப்பியர் போதைப் பொருட்களைக் கொண்டு வந்து, உள்நாட்டு இளைஞர்களைப் போதைக்கு அடிமையாக்கினர்.

ஆரியர், வெள்ளையர் இருவருமே கைகோர்த்துக் கொண்டனர். வெள்ளையர் உயர்ந்த இனத்தவர் என்றும்; கருப்பர் தாழ்ந்த இனத்தவர் என்றும் தவறான கருத்தைப் பரப்பினர்.

காரணம், அவர்களுக்குத் தமிழ் பற்றியோ, தமிழ் இலக்கியங்கள் பற்றியோ தெரியாது.

மாக்ஸ்முல்லர் சமஸ்கிருதம் மற்றும் வேதங்கள் பற்றி மிக உயர்வாக எழுதியுள்ளார். இதற்குக் காரணம் தம் கடைசி நாட்களில்தாம் அவர் தமிழ்மொழி மற்றும் சங்க இலக்கியங்கள் பற்றிக் கேள்விப்பட்டார்.

நான்கு வேதங்களின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட ஒன்றுதான் சிந்துவெளி நாகரிகம் என்றும் அது ஆரியர்களுடையது என்றும் கருதுகின்றனர்.

எனவே வேதங்களைப் பற்றிய ஆராய்ச்சி, சிந்துவெளி நாகரிகம் பற்றிய தெளிவை உண்டாக்கும்.

சிந்துவெளி நாகரிகம் பற்றி சர். ஜான் மார்ஷல் செய்த ஆராய்ச்சியின் முடிவு, வேதங்களுக்கு முரணாக உள்ளது.

மிகவும் பழமையான தமிழ் எழுத்துக்களைத் தென்தமிழகத்தில் 'ஆதிச்சநல்லூரில்' கிடைக்கப் பெற்ற தாழிகளின் மீது கண்டுபிடித்துள்ளனர். இந்தத் தாழிகள் இன்றைக்கு 2,800 ஆண்டுகட்கு முற்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

1. ஆரியர் : மேய்ப்பர் தொழிலில் பாதியும், விவசாயத்தில் பாதியும் ஈடுபட்டனர். கிராம வாழ்க்கை நிலையிலேயே இருந்தனர். நகர வாழ்க்கை பற்றி எதுவும் தெரியாது. வீடுகள், மூங்கிலால் மட்டுமே கட்டப்பட்டன.

   இதற்கு மாறாக மொஹன்சதாரோ, ஹரப்பாவில் உள்ள மக்கள் நகர வாழ்க்கையில் இருந்தனர். நன்கு வசதி பெற்ற செங்கல் வீடுகள் கட்டினர். கிணறு, குளியலறை, கழிவு நீர் வடிகால் உள்ள வீடுகளால் அவர்கள் நகரம் நிறைந்திருந்தது.

2. ரிக் வேதகாலத்தில் தங்கம், செம்பு உபயோகத்தில் இருந்தன. பின்பு யஜுர் வேதம், அதர்வண வேதகாலத்தில் இவற்றுடன் வெள்ளி, இரும்பு உபயோகத்தில் இருந்தன.

   சிந்துவெளியில் வெள்ளி உபயோகத்தில் இருந்தது. கற்களால் செய்யப்பட்ட பாத்திரங்கள் உபயோகத்தில் இருந்தன. ஆனால் இரும்பு உபயோகத்தில் இல்லை.

3. வேதகாலத்தில் வில், அம்பு, கோடாரி, ஈட்டி போன்ற ஆயுதங்களும் தலைக் கவசங்களும் பயன்பாட்டில் இருந்தமை அறியப்படுகிறது.

   சிந்துசமவெளியில் ஆயுதங்கள் இருந்தன. ஆனால் தற்காப்புக் கருவிகள் காணப்படவில்லை.

4. மீன் பற்றி வேதங்களில் அதிக அளவில் குறிப்பிடப் படவில்லை. சிந்துசமவெளியில் மீன் அதிக அளவில் உள்ளது.

5. வேதங்களில் குதிரைகள் உபயோகத்தில் இருந்தமை சுட்டப்பட்டுள்ளது. சிந்துசமவெளியில் குதிரை பற்றிய ஆதாரம் கிடைக்கவில்லை.

6. வேதகாலத்தில் பசுவிற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. பசுவிற்கு, சிந்துசமவெளியில் முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. எருது முக்கிய இடம் பெற்றிருந்தது.

7. வேதத்தில் புலி பற்றி சொல்லப்படவில்லை; யானை பற்றி மிகச் சிறிதளவே சொல்லப்பட்டுள்ளது.

   சிந்துவெளியில் இவை இரண்டும் அதிக முக்கியத்துவம் பெற்றுள்ளன.

8. சிந்துவெளி கடவுளர் கொம்புகளுடன் காட்டப் பட்டுள்ளனர்; ஆனால் வேதங்களில் அப்படி காணப்படவில்லை. (Mr. I. Mahadevan, Indian Express, August 1994. Sir John Marshall, Mohenjo-daro and the Indus Civilization, Vol.I, 1973, Pp.109-112.)

9. சிந்துவெளியில் சிவலிங்கங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஆனால் அவை வேதங்களில் இழிவாகச் சொல்லப்படுகின்றன.

10. சிந்துவெளியில் காணப்படும் களிமண் முத்திரையில் உள்ள வண்டிகளில் ஆரங்களுடன் கூடிய சக்கரங்கள் காணப்படவில்லை. ஆனால் வேதங்களில் குறிப்பிடப்படும் ரதங்களின் சக்கரங்கள் ஆரங்களுடன் உள்ளன. (Mr. I. Mahadevan, "Review - An Encyclopaedia of the Indus Script' by Asco Parpola, Internation Journal of Dravidian linguistics, Vol.XXVI number 1, January 1997, P.110 )

11. சிந்துவெளியில் ஸ்வஸ்திக் அடையாளம் அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றது. ஆனால் வேதங்களில் அதைப் பற்றிய குறிப்புகள் கூட காணப்படவில்லை.

12. சிந்துவெளியில் கடவுளைப் பெண்ணுருவில் கண்டு மிகச் சிறப்பித்துள்ளனர்.

   ஆனால், வேதங்களில் பெண் தெய்வங்கள் மிகவும் குறைவான இடத்தையே பெற்றுள்ளனர்.

**சிந்துவெளி நாகரிகத்தில் உள்ளவற்றைச் சுருக்கமாகப் பின்வருமாறு குறிப்பிடலாம்.**

1. பெண் தெய்வங்கள் - இவை கொம்புகள் உடையவை. கொம்பு ஆற்றலுக்கு அடையாளம்.
2. நினைவுக்கல்.
3. நன்கு கட்டமைக்கப்பட்ட நகரங்கள்
4. இரும்பு இல்லை.
5. குதிரை இல்லை.
6. மீன் உருவங்கள் அதிகம்.

7. புலி காணப்படுகிறது.

8. தற்காப்பு ஆயுதங்கள் இல்லை.

9. எருது காணப்படுகிறது.

10. ஸ்வஸ்திக் சின்னம் காணப்படுகிறது.

இது ஓம் என்பதற்கு முன்னோடி ஆகும்.

## சிந்துவெளி நாகரிகம் :

'சிந்துவெளி நாகரிகத்தை ஆராய்ச்சி செய்த மார்ஷல், ஹீராஸ், கமில்சுவலபில் மற்றும் இரஷ்ஷிய, ஃபின்லாந்து, அமெரிக்க அறிஞர்கள் பலர் இது 'திராவிட நாகரிகம்' எனக் கூறியுள்ளனர். (Sir John Marshall, Mohenjo-daro and the Indus Civilization,Vol.I, 1973, Dr. Alexander Harris,"Holes in Vedic Valley Theory', The Week, August 9, 1998)

கணிப்பொறி ஆய்வு (Computer Analysis) சிந்துவெளி மொழி அமைப்பு திராவிட மொழி அமைப்பே என்பதை உறுதிபடுத்தியுள்ளது என்கிறார் ஐராவதம் மகாதேவன். (Indian Express - Madras - 5 August 1994 )

அண்மைக் காலங்களில். Fr. ஹீராஸ், டாக்டர் ஆர். மதிவாணன், திரு. பூரணச்சத்திர ஜீவா ஆகியோர் சிந்துவெளி எழுத்துகள் தமிழே என்ற தம் ஆய்வு முடிவைத் தெரிவித்துள்ளனர். (பூரணச்சத்திர ஜீவா, சிந்துவெளியில் முந்து தமிழ் )

சிந்துவெளி நாகரிகம் திராவிடரின் நாகரிகம் என்று கூறும் ஐராவதம் மகாதேவன், சிந்துவெளி நாகரிகத்தின் காலம் 'ரேடியோ கார்பன் ஆய்வுப்படி' (Radio carbon dating) கி.மு. 7000க்கு முற்பட்டது எனக் கூறியுள்ளார். (Indian Express - Madras - 5 August 1994)

Fr. ஹீராஸ் "Studies in Proto - Indo - Mediterranean Culture' எனும் புத்தகத்தில் ஒருபடி மேலே சென்று, சிந்துவெளி நாகரிகம் திராவிடரின் நாகரிகம் மட்டுமல்ல, சிந்துவெளி திராவிட நாகரிகம்தான் சுமேரிய, எகிப்திய நாகரிகங்களுக்கு அடிப்படையாக விளங்குகிறது என்று விளக்கிச் செல்கிறார். (Rev. Fr. Heras, Studies in Proto Indo Mediterranean Culture, Vol-I, Indian Historical Research Institute, Bombay, 1953)

# 4. பழமையான தமிழ்க் கல்வெட்டு

இந்திய மொழிகளிலேயே மிகவும் பழமை வாய்ந்த மொழி தமிழ்மொழி. பழமையான தமிழ்மொழி கல்வெட்டுகள் கி.மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்துதான் காணப்படுகின்றன என்று இதுவரை நினைத்துக் கொண்டு இருந்தோம்.

ஆனால், அண்மைக்கால ஆராய்ச்சி, மிகவும் பழமையான தமிழ் எழுத்துக்களைத் தென்தமிழகத்தில் திருநெல்வேலியிலிருந்து 24 கி.மீ. தூரத்திலுள்ள 'ஆதிச்சநல்லூரில்' கிடைக்கப் பெற்ற தாழிகளின் மீது கண்டுபிடித்துள்ளனர். இறந்தவர்களைப் புதைக்கும் தாழியின் மீது பழமையான தமிழ் பிராமி எழுத்துக்களைக் கண்டுபிடித்துள்ளனர் ஆராய்ச்சியாளர். இந்தத் தாழிகள் இன்றைக்கு 2,800 ஆண்டுகட்கு முற்பட்டவை என்பது குறிப்பிடற்குரியது. இதைக் குறித்து, '26 மே 2004 அன்று "THE HINDU' நாளிதழில் வெளியிடப்பட்ட கட்டுரை இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.

## Skeletons, script found at ancient burial site in Tamil Nadu

"In spectacular finds, the Archaeological Survey of India, Chennai Circle, has unearthed a dozen 2,800 year - old human skeletons intact in urns at Adichanallur, 24 km from Tirunelveli in Tamil Nadu. Three of these urns contain writing resembling the early Tamil Brahmi script. The dozen urns containing the skeletons form a part of about 100 fully intact urns unearthed in various trenches at the site, where excavation is under way. The urns were found at a depth of two to three metres. The finds may revolutionise theories about the origin of ancient culture in Tamil Nadu and the origin of writing in South Asia.

T. Satyamurthy, Superintending Archaeologist, ASI, Chennai Circle, the director of excavation at Adichanallur, said : "People generally think that megalithic culture is the earliest culture in South India, especially in Tamil Nadu. In our excavation (at Adichanallur), we have come across a culture earlier than the megalithic period.' The megalithic period in South India ranges from 3rd century B.C. to 3rd century A.D.

Dr.Satyamurthy called Adichanallur "the earliest historical site in Tamil Nadu.' The ASI would conduct "a thorough exploration of the area' to find out whether there had been any habitation nearby. If such a site was found, it would be the first discovery of its kind in Tamil Nadu. So far, no habitation belonging to this period had been found in the State. He described the discovery of writing resembling the early Tamil Brahmi script on the urns as "very important' .

Samples of the skeletons have been sent to the National Geophysical Research Institute, Hyderabad, for carbon-14 dating.

Along with the skeletons, husks, grains of rice, charred rice and neolithic celts (axe-like instruments used in agricultural operations) have been found.

The skeletons found in two or three urns show that prior to the megalithic period, these people used to inter the dead in urns along with the items they had used. Early Tamil Sangam works contained elaborate descriptions of the urn-burial custom. At adichanallur, pottery belonging to the early historic period, which stretches from 3rd century B.C. to 3rd century A.D., was found on the upper layers of the trenches and the urns were found below. So the discoveries at Adichanallur may go back to 7th or 8th century B.C., probably earlier than the Sangam period, Dr. Satyamurthy said.

He said that since the Brahmi script was found together with the skeletons, the date of the script could be determined if they could fix the date of the skeletons. "So far, we have been doing it on palaeographic grounds. Now, we will get a scientific date.' He said that the script might refer to names.

Dr. Sathyamurthy said that the Brahmi script of around 500 B.C. had been found in Sri Lanka. Dr. S.U. Deraniyagala, former Director - General and now Consultant to the Archaeological Survey Department, Sri Lanka, called the discovery of the writing on the urns at Adichanallur "fantastic' and "very, very important' . The evidence of writing on

more than 75 pieces of pottery had been found in Sri Lanka and radio-carbon dating had established that they belonged to the period between 600 B.C. and 500 B.C. This discovery "sheds a completely new light on the origin of writing in South Asia,' said Dr. Deraniyagala. Interestingly, there has been no evidence of habitation close to the cemeteries (burial sites) discovered in Sri Lanka. According to G. Thirumoorthy, Assistant Archaeologist, ASI, Chennai Circle, many artefacts had been found along with the skeletons at Adichanallur.

They included miniature bowls made of clay that were used in rituals, black and red ware of megalithic period ranging from the 7th century B.C., to 2nd century A.D., potsherds with graffiti marks, iron spearheads, knife-blades and hopscotches of various shapes including those in perfect circles. These hopscotches were used as weights, he said.'

- By T.S. Subramanian,

Courtesy - The Hindu, Wednesday, May 26, 2004, Chennai.

ஏறக்குறைய இன்றைக்கு 4500 ஆண்டுகட்கு முற்பட்ட சிந்துவெளி எழுத்திற்கு அடுத்தபடியாக, தமிழ் எழுத்தின் பழமைக்கு எடுத்துக்காட்டாய் இப்புதைப்பொருள் அமைந்திருப்பதோடு, தாழியில் எலும்புக் கூடுகளுடன் பழமையான பல பொருட்களும் கிடைத்திருப்பது குறிப்பிடற்குரிய செய்தி ஆகும்.

# 5. தூய ஆவிக்கு ஒரு கோவிலா?

ஆம். தூய ஆவிக்கென்றே கட்டப்பட்ட கோவில் தூத்துக்குடி மாவட்டம், திருவைகுண்டம் வட்டம், நட்டாத்தி என்னும் ஊரில் உள்ளது. (சுருக்கம் – டாக்டர் மு. தெய்வநாயகம், 'அம்மன் வரலாறு')

இது சற்று வித்தியாசமான கோவில். இரண்டு கோவில்கள் இணைத்துக் கட்டப்பட்டிருக்கும் இரட்டைக் கோவில் இது. இரண்டு தனித்தனிக் கருவறைகள். நடுவில் குறுக்குச் சுவர் ஒன்று.

இரட்டையாகக் கட்டப்பட்டிருக்கும் இவ்விரண்டு கோவில்களுக்கும் பெயர் ஒன்றுதான். இந்த இரட்டைக் கோவில்களுக்குப் பெயர் 'அருள்திரு ஆதி அடைக்கலம் காத்த அம்மையார் அம்மன் திருக்கோவில்' என்பதாகும்.

இக்கோவிலின் பெயர், பெண் தெய்வப் பெயராய் இருந்தபோதிலும் இரு கோவில்களிலும் பெண் தெய்வ உருவமோ, ஆண் தெய்வ உருவமோ இல்லை என்பது குறிப்பிடற்குரியது.

மற்றும், இக்கோவிலின் பெயரான 'அம்மன்' என்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது. 'அம்மாள்' , 'அம்மை' என்பன பெண்பால் பெயர்கள்.

பெண் பாலைக் குறிக்கும்வண்ணமாய் 'அம்மாள்' என்றில்லாமல் 'அம்மை' என்றும் இல்லாமல் 'அம்மன்' என்று 'அன்' என்னும் ஆண் பால் ஒருமை விகுதியைக் கொண்டிருப்பது ஆழ்ந்து நோக்கற்குரியது, எனவே, இந்த கடவுளின் பெயர், பெண்ணை மட்டும் குறிக்கவில்லை. சாதாரண பெண் என்ற நிலையிலிருந்து வேறுபட்ட கடவுளின் தன்மையோடு இணைந்த - ஆண் தன்மையோடு இணைந்த கடவுள் நிலையையே குறிக்கின்றது என்பதை இப்பெயரே உணர்த்துகிறது.

'அம்மை' சிவனின் இடப்பாகத்தில் இருப்பதாகக் கூறப் படுவதும் அதே இடப்பகுதியை ஆணாகக் கூறினால், அது 'விஷ்ணு' அல்லது 'நாராயணன்' அல்லது 'பெருமாள்' என்று கூறப்படுவதும் ஆழ்ந்து நோக்கற்குரியன. 'பெருமாள்' என்றிருக்கும் இந்தப் பெயரை எடுத்துக் கொள்வோமானால், 'பெருமான்' என்றில்லாமல் 'பெருமாள்' என்று இதிலும் 'அள்' என்னும் பெண் பால் ஒருமை விகுதி காணப்படுவது கவனிக்கத்தக்கது, சிவனின் இடப்பகுதி ஒரு சமயத்தில் பெண்ணாகவும் ஒரு சமயத்தில் ஆணாகவும் கூறப்படுவதே, இது ஓர் உருவகம்

என்பதைக் காட்டுகிறது. சைவ, வைணவ சமய வரலாற்றை நோக்கும்போது, பரம்பொருள் சிவனாகவும், பரம்பொருளாகிய கடவுள் மனிதனாக வருவதற்குக் காரணமான தூய ஆவி சைவ நிலையில் பெண்ணாகவும், வைணவ நிலையில் ஆணாகவும் விளக்கப்படுவதைக் காணலாம்.

'அம்மன்'

'பெருமாள்'

எனும் இப்பெயர்கள் தூய ஆவியின் உருவகமாக இருப்பதாலும் 'தூய ஆவி' , ஆண், பெண் தன்மைகளைக் கடந்தவர் என்பதாலும், தூய ஆவியைப் பெண்ணாக **'அம்மை'** என்று கூறினாலும் ஆண் தன்மையையும் இணைத்து **'அம்மன்'** என்று கூறுகின்றனர். இவ்வாறே தூய ஆவியை ஆணாக, 'பெருமான்' என்று கூறினாலும் பெண் தன்மையைக் காட்டும் பெண்பால் ஒருமை விகுதியை இணைத்து **'பெருமாள்'** என்று கூறுகின்றனர்.

எனவே,

| | |
|---|---|
| **'அம்மன்'** | (பெண் கடவுளின் பெயர். ஆனால், ஆண் பால் ஒருமை விகுதியுடன் காணப்படுகிறது.) |
| **'பெருமாள்'** | (ஆண் கடவுளின் பெயர். ஆனால், பெண் பால் ஒருமை விகுதியுடன் காணப்படுகிறது.) |

இப்பெயர்களில் ஆண்பால், பெண்பால் இணைந்து காணப்படுவது, சைவம், வைணவம் எனும் பிரிவுகள் தோன்றுவதற்கு முற்பட்ட நிலையையே காட்டுகிறது.

## தூய ஆவியும் புறாவும்:

தூய ஆவியை விளக்கும் கோவிலாகவும் தூய ஆவியின் கோவிலாகவும் விளங்குகின்ற சிறப்பை உள்ளடக்கியதே அருள்மிகு ஆதி அடைக்கலம் காத்த அம்மையார் அம்மன் திருக்கோவிலாகும். அம்மன், பெருமாள் எனும் சொற்கள் தூய ஆவியின் உருவகங்களாக இருப்பதால், 'அம்மன்' எனும் பெண்ணைக் குறிக்கும் பெயரில் 'அன்' எனும் ஆண்பால் விகுதியும் 'பெருமாள்' எனும் ஆணைக் குறிக்கும் பெயரில் 'அள்' எனும் பெண்பால் விகுதியும் சேர்க்கப்பட்டுள்ளமை குறிப்பிடப்பட்டது.

தூய ஆவி ஆணுமல்ல, பெண்ணுமல்ல, ஆண், பெண், தன்மையைக் கடந்தவர் எனும் நிலையை இக்கோவில் விளக்குகிறது. எனவே, இங்குள்ள கருவறையில் ஆணுருவமோ, பெண்ணுருவமோ வைக்கப்படாமை ஆழ்ந்து நோக்கற்குரிய குறிப்பாகும்.

தூய ஆவி புறா வடிவில் கிறிஸ்தவத்தில் கூறப்படுவதற்கு ஏற்ப, இக்கோவில் முன்னால் வைக்கப்பட்டிருக்கும் ஆலியின் கழுத்தைச் சுற்றி, புறா வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளமை ஆழ்ந்து நோக்கற்குரியது.

திருக்குறளில் சான்றோர் கொள்கை ஆழமாக விளக்கப்படுவதும் அம்மையார் அம்மன் கோவிலை, சான்றோர் கோவில் அல்லது 'சாணார் கோவில்' என்று கூறுவதும் குறிப்பிடற்குரியன.

## இன்றைய நிலை :

ஆனால், இரட்டைக் கருவறைகளில் எந்த உருவமும் இல்லாத இக்கோவிலில், சில ஆண்டுகட்குமுன் உருவங்கள் பலவற்றைக் கொண்டு வந்து வைத்து, இன்றைக்கு இக்கோவில் மிகவும் வேறுபட்டுக் காணப்படுகிறது.

பொதுவாக, அம்மன் கோவில்கள் என வழங்கப்படும் மாரியம்மன், காளியம்மன் முதலிய கோவில்களில் பலி உண்டு.

ஆனால், இந்த ஆதி அடைக்கலம் காத்த அம்மையாரம்மன் திருக்கோவிலில் பலி கிடையாது. ஏனென்றால் மனிதனாக வந்த கிறிஸ்துவே பலியாகிவிட்டார் எனும் பலி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளையான சைவ, வைணவக் கோவிலுக்கு முற்பட்ட ஆனால், கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டைச் சார்ந்த கோவிலாக இது இருப்பதால், இதில் பலி கிடையாது.

இந்தக் கோவிலில் பூசாரியராக திராவிடரே உள்ளனர். இவர்கள் புலால் உண்ணாதவராக இருக்க வேண்டுமென்ற தேவையில்லை.

## இக்கோவிலின் சிறப்புகள் :

1. சிவபெருமானின் இடப்பக்கத்தை அம்மையாகவும், நாராயணனாகவும் விளக்கும் நிலை
2. உருவ வழிபாடற்ற முறையில் சைவ, வைணவத்தை ஆண் பெண் பேதமற்ற நிலையில் விளக்கும் நிலை
3. சைவ, வைணவப் பிரிவுகள் தோன்றுவதற்குரிய வாய்ப்பாக இரட்டைக் கருவறைகளைக் கொண்டுள்ள நிலை
4. பலியற்ற வழிபாட்டு முறை
5. பலியற்ற வழிபாட்டு முறை திராவிட இனத்திற்குரியது என்பதை விளக்கும் நிலை

6. பலியற்ற வழிபாட்டு முறைக்கு, புலால் மறுத்த உணவுமுறை வேண்டும் என்ற கட்டாயம் உருவாகாத நிலை. (மு. தெய்வநாயகம், அம்மன் வரலாறு, சிறுகுறிப்பு, ப.4)

இந்த ஆறு நிலைகளையும் ஆதி அடைக்கலம் காத்த அம்மையார் அம்மன் திருக்கோவில் விளக்குகிறது.

## திருவழுதியும் அம்மையாரம்மன் கோவிலும்:

இந்த அருள்மிகு ஆதி அடைக்கலம் காத்த அம்மையார் அம்மன் திருக்கோவில், திருவழுதியைத் தலைவராகக் கொண்ட நட்டாத்தி நாடார் உறவின் முறைக்குச் சொந்தமானது.

சேர, சோழ, பாண்டியர்கள், 'நாடார்' எனவும் அவர்கள் பரம்பரையினர் 'சாணார்' ('சான்றோர்' என்பதன் திரிபு) எனக் குறிக்கப்படுவதும் வரலாறு காட்டும் செய்திகளாகும். சேர, சோழ, பாண்டியர்களாகிய தமிழர்களில் மிகப் பழமையானவர்களாகப் பாண்டியர்கள் குறிக்கப்படுகின்றனர். தமிழ்ச் சங்கங்களை வைத்துத் தமிழை வளர்த்தவர்கள் பாண்டியர்கள் என்று வரலாறு கூறுகிறது. பாண்டியர்களுக்கு 'வழுதி' என்ற குடும்பப் பெயர் உண்டு.

திருவழுதியைத் தலைவராகக் கொண்ட நட்டாத்தி நாடார் உறவின் முறைக்குச் சொந்தமான 'அருள்மிகு ஆதி அடைக்கலம் காத்த அம்மையார் அம்மன் திருக்கோவில்' , அவர்களுக்கு 'அம்மை' கோவிலாகவும், ' பெருங்குளம் திருவழுதி ஈஸ்வரன் கோவில்' 'அப்பன்' கோவிலாகவும், 'திருச்செந்தூர் குமரக்கடவுள் கோவில்' 'மகன்' கோவிலாகவும் கொள்ளப்பட்டு, மூன்று கோவில்களிலும் இன்றுவரை உரிமையுடையவர்களாக இவர்கள் இருக்கின்றார்கள்.

இக்கோவிலுக்குரிய சமய நூலாகத் 'திருக்குறளைக் கொள்ளலாம். திருக்குறளில் சான்றோர் கொள்கை ஆழமாக விளக்கப்படுவதும் இக்கோவிலை, சான்றோர் கோவில் அல்லது 'சாணார் கோவில்' என்று கூறுவதும் குறிப்பிடற்குரியன. பக்தி இயக்கத்திற்கு முற்பட்ட திருக்குறள், சான்றோர் சமய நூலாகக் காணப்படுகிறது.

## சான்றோர் சமய நூல் திருக்குறள் :

"சிவன்- சைவம், விஷ்ணு - வைணவம் எனும் சொற்கள் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை. சங்க காலத்திற்குப் பின்னர் எழுந்த பக்தி

இயக்கத்தின் காரணமாகவே சிவக் குடும்ப சமயங்கள் தமிழகத்தில் எழுச்சி பெற்றதை வரலாற்றில் காணுகின்றோம். சைவ, வைணவ இலக்கியங்கள் எல்லாம் சங்க காலத்திற்குப் பின்னர் அதாவது, கி.பி. 5ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் எழுந்த பக்தி இயக்கக் காலத்தில் உருவாயின" . (மு. தெய்வநாயகம், அம்மன் வரலாறு, சிறுகுறிப்பு, ப. 6)

கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்கு முன்னால் இந்தியாவில் சாதி ஏற்றத்தாழ்வு கிடையாது. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை உருவாக்கி, திராவிடர் மேல் திணித்தவர்கள் ஆரியர்கள்.

"சங்க காலத்திற்கும் பக்தி இயக்கக் காலத்திற்கும் இடைப் பட்ட நூல்களாகப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் கொள்ளப் படுகின்றன. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகத் திருக்குறள் விளங்குகிறது. எனவே, சைவ, வைணவப் பிரிவுகளுக்கு முற்பட்டதாகத் திருக்குறள் காணப்படுகிறது.

திருக்குறளிலுள்ள 'சான்றாண்மை' என்ற அதிகாரம் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய திருக்குறளின் சமயக் கருத்துகளை விளக்குகிறது.

*அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு*
*ஐந்துசால்பு ஊன்றிய தூண்* (குறள் 983)

*ஈன்றபொழுதில் பெரிதுவக்கும் தன் மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்.* (குறள் 69)

என்ற குறட்பா கூறும் 'சான்றோர்' என்ற கருத்தும் சமயச் சார்புடையதே.

சங்க நூலாகிய புறநானூற்றில்

*'ஆன்ற விந்தடங்கிய கொள்கைச் சான்றோர்'*

என்ற தொடர் சமயத் தொடராகக் காட்சியளிக்கின்றது. ஆகவே, 'ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்' என்று முதலில் குறிக்கப்பட்டு, சான்றோர் சமய நூலாக, சான்றாண்மையை விளக்கிக் கூறும் திருக்குறள் எழுந்து, அதன் பின்னர் பக்தி இயக்கத்தின் காரணமாக, சைவ, வைணவ சமயங்கள் வளர்ச்சி பெற்றிருத்தலை வரலாறு காட்டுகிறது.

திருக்குறள் பாயிரத்திலுள்ள கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை ஆகிய மூன்று அதிகாரங்களும் சான்றோர் சமயத்திற்கு அடிப்படையாக விளங்கும் அப்பன், அம்மன், மகன் ஆகிய மூன்று சொற்கள் உருவாவதற்குரிய அடிப்படைக் கூறுகளை விளக்குகின்றன". (மு. தெய்வநாயகம், அம்மன் வரலாறு, சிறுகுறிப்பு, ப. 7)

## சான்றோர் சமயம்:

"சைவ பக்தி இயக்க எழுச்சிக்குக் காரணமான திருநாவுக்கரசரும், வைணவ பக்தி இயக்க எழுச்சிக்குக் காரணமான முதலாழ்வார் மூவரும் தொண்டை நாட்டைச் சார்ந்தவர்கள் என்பதும் சான்றோர் சமயமே, பின்னர் சைவ, வைணவ சமயங்களாகப் பிரிந்து தனித்தனியாகப் பெயர் பெற்றன என்பதும் இவற்றை விளக்கும் தொடராக,

*'தொண்டை நாடு சான்றோர் உடைத்து'*

என்பதும் எண்ணிப்பார்க்க வேண்டிய குறிப்புகள் ஆகும்'. (மு. தெய்வநாயகம், அம்மன் வரலாறு, சிறுகுறிப்பு, ப. 7)

## சுருக்கம் :

ஆகவே, திருக்குறள் விளக்கும் சான்றோர் கொள்கை என்பது சைவம், வைணவம் என்று தனித்தனியே பிரிவதற்கு முற்பட்ட கொள்கையாகும். சான்றோர் சமயத்தைச் சேர்ந்தவர்கள் சான்றோர்கள் என்ற பெயரால் குறிக்கப்பட்டிருத்தல் இயல்பு.

பழமையான நிலையில், தூய ஆவிக்காகக் கட்டப்பட்ட இக்கோவில், அதன் பழைய நோக்கத்தையே அறிய இயலா நிலையில் இன்றைக்குக் காணப்படுகிறது.

எனினும், சைவ, வைணவ சமயப் பிரிவுகளுக்கு முற்பட்ட இக்கோவில் சான்றோர் சமயத்திற்கு எடுத்துக்காட்டான கோவிலாக வரலாற்றில் விளங்குகிறது.

மேலும், இக்கருத்துகள் பற்றி விரிவாக விளக்கம் வேண்டுவோர் பேராசிரியர் டாக்டர் மு. தெய்வநாயகம்அவர்கள் எழுதிய **'அம்மன் வரலாறு'** எனும் நூலின் மூலம் அறியலாம். மற்றும் தெ. தேவகலா ஜோதிமணியின் **'வரலாற்று நோக்கில் திருவழுதீசுவரர் கோயில், பெருங்குளம்'** எனும் ஆய்வேட்டையும் காணலாம்.

# i) தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையும்

சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலை நிறுத்துவதற்காக ஆரியர் பயன்படுத்திய ஆயுதமே தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாகிய சைவ, வைணவ சமயங்களாகும். சைவம், வைணவம் ஆகிய இரண்டு சமயங்களும் ஆதிசங்கரரால், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப்பட்டன. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப் பட்டுள்ள சைவ வைணவ சமயங்களுக்குப் பிற்காலத்தில் 'இந்து மதம்' (Hindu Religion) என்ற புதுப்பெயர் கொடுக்கப்பட்டது.

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் ஆரியரின் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப்பட்டதுபோல், திராவிட இந்தியாவும் அடிமைப்படுத்தப்பட்டுள்ளது.

ஆகவே, பிராமணர்களின் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து இந்திய மக்களை விடுவிக்க வேண்டுமானால் முதலில், பிராமணர்களின் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையின் பிடியில் அகப்பட்டுக் கிடக்கும், சைவ, வைணவ சமயங்களாகிய இந்து மதத்தை விடுவிக்க வேண்டும். சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை உருவான பின்னணியையும் அது சமுதாயத்தில் நடைமுறைபடுத்தப்படும் முறையையும் அறிந்து கொள்ளும்போதுதான் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து இந்திய மக்களையும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாகிய இன்றைய 'இந்துமதத்தையும்' விடுவிக்க முடியும்.

இனி, சாதி ஏற்றத்தாழ்வு குறித்தும் அது இந்தியாவிற்குள் எப்போது வந்தது, யாரால் உருவாக்கப்பட்டது, எவ்வாறு நடைமுறைபடுத்தப்பட்டது என்பன குறித்தும் சுருக்கமாகக் காணலாம்.

# தோமா வழி
# திராவிடக் கிறிஸ்தவமும்
# சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையும்*

இந்தியப் பண்பாட்டோடு மிகவும் பின்னிப்பிணைந்தது சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை. ஏனென்றால், இக்கொள்கை இந்தியாவின் மிகப் பழமையான கொள்கை என்பதாகக் கூறப்படுகிறது.

சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கை இந்தியாவின் கொள்கை அன்று. இது பழந்தமிழரின் கொள்கையும் அன்று. சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கை இந்தியாவின் பழமையான கொள்கையாக இருந்திருக்கும் என்றால், இந்தியாவின் பழமையான இலக்கியமான சங்க இலக்கியங்களில் இதைப் பற்றிக் கூறப்பட்டிருக்க வேண்டும்.

ஆனால், பழந்தமிழரிடையே சாதி ஏற்றத்தாழ்வு இல்லை என்பதால், சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையைச் சங்க இலக்கியங்களில் காண முடியவில்லை.

பொதுவாக, சங்க இலக்கியங்கள் கூறும் நான்கு வகைத் தொழில்களை, நான்கு வகை சாதி என்று நம்புகின்றனர். ஆனால், அவை சாதிப் பிரிவுகள் அல்ல, தொழில் வேறுபாட்டைத்தான் குறிக்கின்றன என்பதைப் பின்வருமாறு காணலாம்.

### சங்க இலக்கியங்கள் காட்டும் நான்கு வகைத் தொழில்கள் :

*அந்தணர்*

*அரசர்*

*வணிகர்*

*வேளாளர்*

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள இவை தொழிலால் உள்ள வேற்றுமையே தவிர சாதிப் பிரிவுகள் அல்ல.

---

* (டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் வகுப்பில் நடத்திய பாடத்தின் அடிப்படையில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.)

பழந்தமிழ் இலக்கியப்படி,

*பாணன், பறையன், கடம்பன், துடியன்*
*இந்நான் கல்லது குடியும் இல்லை.*

இவை எல்லாம் இனக் குழுக்களின் தொழிலை அடிப்படையாகக் கொண்ட பெயர்களே தவிர, சாதிப் பெயர்களும் அல்ல; இனப் பெயர்களும் அல்ல.

| | |
|---|---|
| பாடுபவன் | = பாணன் |
| பறையடிப்பவன் | = பறையன் |
| துடி தட்டுபவன் | = துடியன் |
| கடம்பு முழக்குபவன் | = கடம்பன் |

இவை சாதி ஏற்றத்தாழ்வு அல்ல.

*வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்கின்*
*மேற்பால் ஒருவன் அவன்கட் படுமே.*

*(புறநானூறு - பாண்டியன் நெடுஞ்செழியன்)*

என்று பழமையான தமிழ் இலக்கியமான புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது.

ஆனால், சாதி ஏற்றத்தாழ்வு என்பதோ படித்தாலும், பதவிக்கு வந்தாலும், பணம் இருந்தாலும், அதே நிலைதான். படித்தால் சாதி ஏற்றத்தாழ்வு அகலும் என்பது அறியாமை. அப்படியானால் சாதி ஏற்றத்தாழ்வு என்பது எதில் உள்ளது? அடிப்படைக் காரணம் எது?

*தொழிலால் வேற்றுமை*
*படிப்பால் வேற்றுமை*
*பணத்தால் வேற்றுமை*

இவை உலகில் எல்லா இடங்களிலும் உண்டு. ஆனால் இவை சாதி ஏற்றத்தாழ்வு இல்லை. சரியான காரணம் தெரிந்தால் தான் சாதி ஏற்றத்தாழ்வை நீக்க முடியும். இல்லாவிட்டால் அதை நீக்க முடியாது.

## இனக் குழுக்கள் :

சாதி ஏற்றத் தாழ்வின் தொடக்கம் இனக் குழுக்கள் (Tribes) என்று கூறலாம். இது உலகம் முழுவதும் உண்டு. அதாவது இனக் குழுக்களில் வேறுபாடு உலகம் முழுவதிலும் உண்டு.

ஓர் இனம் ஆளுகை செய்யும்; மற்றோர் இனம் ஆளப்படும்.

## அரசியல் மட்டும் காரணமல்ல :

★ தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் ஆரியரின் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப்பட்டதுபோல், திராவிட இந்தியாவும் அடிமைப்படுத்தப்பட்டுள்ளது.

அரசியல் காரணத்தால் அடிமைப் படுத்தப்படுதல் என்பது உலகம் முழுவதும் உண்டு. அதைப் போல், ஓர் இனம் மற்றோர் இனத்தை நசுக்குவதும் உண்டு. இதுவும் உலகம் முழுவதும் உண்டு. இதற்குக் காரணம் அரசியல்.

எகிப்தில் பிரமிட் கட்டப்பட்டபோது, இஸ்ரவேல் மக்கள் பயன்படுத்தப்பட்டனர். தமிழ்நாட்டில் கரிகால் சோழன் கல்லணையைக் கட்டுவதற்கு 10,000 சிங்கள அடிமைகளைப் பயன்படுத்தினான்.

இவை உலக நாடுகள் எங்குமுள்ள பொது இயல்பு ஆகும். இவை எல்லாமே அரசியல் காரணங்களால் நிகழ்ந்தவை ஆகும். ஆனால் அங்கு சாதி ஏற்றத்தாழ்வு இல்லை.

*சாதி ஏற்றத்தாழ்வு என்பது வேறு; அரசியல் காரணங்களுக்கான இன அடிமை, நசுக்கப்படுதல் என்பது வேறு;*

இவை அனைத்தும் அரசியல் காரணங்களால் ஆனவை ஆகும்.

உலகம் முழுவதும் உள்ள அடிமைத்தனம் அரசியல் காரணங்களால் நடைபெறுவதால், அரசியல் விடுதலை பெறும்போது, இன விடுதலையும் உருவாகிறது.

## தொழிலால் உருவாகவில்லை :

சாதி ஏற்றத்தாழ்வு என்பது அவரவர் செய்கின்ற தொழிலால் வருகிறது என்பதும் சரியல்ல. தொழில் என்பது இனக் குழுக்கள் தெரிந்து கொள்வது ஆகும். எந்தத் தொழிலையும் யார் வேண்டுமானாலும் தெரிந்து கொள்ளலாம்.

அமெரிக்காவில் ஒரு குறிப்பிட்ட கூட்டத்தார் "Cheese' செய்யும் தொழிலை நீண்டகாலமாகச் செய்து வருகின்றனர். ஆனால் அவர்கள் ஒரு சாதியாகக் கருதப்படவில்லை. கழிவறையைச் சுத்தம் செய்பவர் இழிவாகக் கருதப்படுவதில்லை.

*தொழிலை அடிப்படையாகக் கொண்டு ஒருவரை இழிவுபடுத்துவது என்பது வேறு; அது சாதி இல்லை;*

காரணம், ஒருவன் தன் தொழிலை எப்பொழுது வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம். எனவே,

தொழில் வழியாக சாதி வரவில்லை.
அரசியல் காரணத்தால் சாதி வரவில்லை.
படிப்பால் சாதி வரவில்லை.
பணத்தால் சாதி வரவில்லை.

அப்படியானால் சாதி ஏற்றத்தாழ்வு எப்படி, எப்போது இந்தியாவிற்குள் வந்தது என்பது ஆழ்ந்து நோக்கப்பட வேண்டும்.

கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்கு முன்னால் இந்தியாவில் சாதி ஏற்றத்தாழ்வு கிடையாது. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை உருவாக்கி, திராவிடர் மேல் திணித்தவர்கள் ஆரியர்கள்.

சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை ஆரியர் எவ்வாறு நடைமுறைப்படுத்தினர் என்பதைப் பின்வருமாறு காணலாம்.

1. இந்தியாவின் மீது படைஎடுத்து வந்த பாரசீகர், கிரேக்கர், சகர், குஷானர், ஹூணர் மற்றும் வணிகத்திற்காக வந்த ரோமர் இவர்கள் ஆறு கூட்டத்தினரும் ஒன்றிணைந்து கி.பி. 7ஆம் நூற்றாண்டில் கூட்டணி அமைத்தனர்.
2. கூட்டணி அமைத்து திராவிட ஆட்சியைக் கைப்பற்றினர். அவர்கள் கைப்பற்றிய பகுதி 'ஆரியவர்த்தம்' எனப்பட்டது. ஆரிய வர்த்தத்தை கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்தனர்.
3. திராவிட ஆட்சியைக் கைப்பற்றியவுடன் தமது ஆட்சிக்குட்பட்ட மக்களை ஆள, புதிய சட்டங்களை உருவாக்கினர். (மனுநூல்).
4. இவர்கள் அனைவருக்கும் இருக்கும் ஒரே பொது அம்சம் வெள்ளை நிறம் ஆகும். எனவே நிற அடிப்படையில் இனத்தைப் பிரித்தனர்.
5. ஆரிய வர்த்தத்தில் (ஆரிய நாட்டில்) ஆரியர்கள் உருவாக்கிய சட்டப் புத்தகமாகிய மனுநூல், நிற, இன ஏற்றத்தாழ்வை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது.
6. வெள்ளையராகிய தங்களுக்குச் சாதகமான சட்டமும் வெள்ளையரல்லாத இந்தியர்களுக்கு அல்லது திராவிடர்களுக்கு எதிரான சட்டமும் உருவாக்கினர்.

7. நிற, இன அடிப்படையில் உருவாக்கப்பட்ட இச்சட்டத்தை, சமுதாயத்தில் நடைமுறைக்குக் கொண்டுவர மக்களை மூளைச் சலவை செய்தனர்.

8. மூளைச் சலவை செய்வதற்கு அவர்களுக்குப் பயன்பட்ட கருவியே இந்தியச் சமயங்கள் - அதிலும் குறிப்பாக தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளாகிய சைவ, வைணவ சமயங்கள்.

9. இந்தியச் சமயங்களின் - குறிப்பாக சைவ, வைணவ சமயங்களின் அடிப்படைக் கொள்கைகளைத் திரித்து, தங்களுடைய கருத்துகளைத் திணித்து, தங்களின் தவறான நிற, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு மதச் சாயம் பூசி, தவறான மத நம்பிக்கையின் அடிப்படையில் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நடைமுறைப்படுத்தினர்.

10. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு மதச் சாயம் பூசி, அதற்கு மத அங்கீகாரம் கிடைக்கச் செய்தவர் ஆதிசங்கரர் எனும் பிராமணர்.

ஐயர், பார்ப்பார், அந்தணர் இவை தமிழ் தலைவர்களைக் குறித்த பெயர்கள். பின்னர் ஆரியர்கள் இப்பெயர்களைத் தங்களுக்கு உரியதாக ஆக்கிக் கொண்டனர். திருமூலர் பிராமணர்களைப் போலி (duplicate) பார்ப்பான் என்கின்றார். இதற்குக் காரணம் பழைய அல்லது உண்மையான பார்ப்பான் தமிழன் ஆவான்.

**நம்பிக்கை :**

மனுநூல் முதலில் ஓர் அரசியல் சட்ட நூலாகத்தான் இருந்தது. கி.பி. 9ஆம் நூற்றாண்டில், ஆதி சங்கரரால் மனுநூல், மனுதர்ம சாஸ்திரம் ஆக்கப்பட்டது. இந்த மனுதர்ம சாஸ்திரமே சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நம்பிக்கை அடிப்படையில் நியாயப்படுத்தும் நூலாகும்.

சாதி ஏற்றத்தாழ்வு என்பது நம்பிக்கையில் இருக்கிறது. அந்த நம்பிக்கையை உருவாக்கிய காலந்தான் கி.பி. 9ஆம் நூற்றாண்டு. நம்பிக்கையைத் திணிப்பதற்கு மதம் பயன்பட்டது. (எ.கா) சமண மத நம்பிக்கையின்படி பல பிறவி உண்டு. ஆனால் இந்தக் கொள்கையைத் திரித்து, சென்ற பிறவியின் விளைவே இந்தப் பிறவியில் இந்த சாதியில் பிறந்ததற்குக் காரணம் என்று இந்திய மக்கள் நம்ப வைக்கப்பட்டுள்ளனர்.

ஒருவன் பிராமணனாகப் பிறந்தால், 'அது முற்பிறவியில் அவன் செய்த நன்மை என்றும், கீழ்சாதியில் பிறந்தால், சென்ற பிறவியில் செய்த தீமை' என்றும் பிறவி சுழற்சிக் கொள்கையின் அடிப்படையையே திரித்துக் கூறினர். நிற, இன

ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கு இடமில்லாத சமண மதத்தைப் பின்பற்றுகின்ற சமணர்களும் தற்காலத்தில் மாறிவிட்டனர். தங்களை ஆரிய சத்ரியர் என்றும், ஆரிய வைசியர் என்றும் எண்ணுகின்றனர். தங்களைத் திராவிடராகக் கருதுவதில்லை.

## மனுநூல்:

ஆரியர்களின் முக்கிய சட்ட நூல், மனுநூல் ஆகும்.

ஆரிய வர்த்தத்தில் (ஆரிய நாட்டில்) ஆரியர்களால் உருவாக்கப்பட்ட சட்டப் புத்தகமாகிய மனுநூல்படி, ஓர் ஆரியனை நோக்கி, ஒரு திராவிடன் கை நீட்டினால், அவன் கையை வெட்டலாம். ஆரியன் உட்கார்ந்த இடத்தில் ஒரு திராவிடன் உட்கார்ந்தால், அப்பகுதியை வெட்டலாம். இப்படியாக, அரசியல் கோணத்தில் ஆரியம் திராவிடத்தை நசுக்கியது.

> *"If a man of the lowest caste injures a man of a higher caste with some particular part of his body, that very part of his body should be cut off; If a man raises his hand or a stick, he should have his hand cut off; if in anger he strikes with his foot, he should have his foot cut off. If a man of inferior caste tries to sit down on the same seat as a man of superior caste, he should be branded on the hip and banished, or have his buttocks cut off. If in his pride he spits on him, the king should have his two lips cut off; if he urinates on him, the penis; if he farts at him, the anus. If he grabs him by the hair, or by the feet, the beard, the neck, or the testicles, (the king) should unhesitatingly have his hands cut off.' (The Laws of Manu, Wendy Dongier, Brian K.Smith (Trans), Penguin Books, New Delhi, F.P.1991, Chapter.8 : 279-283)*

நிற அடிப்படையில் ஒன்றாக இணைந்த இவர்கள், இந்தியாவின் பூர்வீகக் குடிமக்களாகிய திராவிடரை, சூத்திரர் என்றும் பஞ்சமர் என்றும் பிரித்தனர். எந்த அடிப்படையில் இவ்வாறு பிரித்தனர் என்பதை இனி காணலாம்.

## சூத்திரர், பஞ்சமர் :

சூத்திரர், பஞ்சமர் அனைவரும் திராவிடர் ஆவர். இந்தியாவின் மொத்த ஜனத் தொகையில் இவர்கள் 90 சதவிகிதத்தினர் ஆவர்.

1. திராவிடரில் தங்களை ஆரியரோடு ஒன்றுபடுத்திக் கொண்டவர்கள் 'சிவாச்சாரியார்' எனப்பட்டனர். இவர்கள் திராவிடரில் மிக உயர்ந்த சாதியினர்.

2. திராவிடரில் காட்டிக்கொடுத்தவர்கள் சற்சூத்திரர் எனப்பட்டனர். இவர்கள் திராவிடரில் உயர்ந்த சாதியினர்.

3. திராவிடரில் ஆரியருக்கு அடிபணிந்தவர்கள் சூத்திரர் எனப்பட்டனர். இவர்கள் திராவிடரில் இடைப்பட்ட சாதியினர்.

4. திராவிடரில் மலைக்கு ஓடிச் சென்றவர்கள் மலைவாழ் சாதியினர் எனப்பட்டனர்.

5. திராவிடரில் ஆரியரை எதிர்த்த திராவிட ஞானிகள் அனைவரும் பஞ்சமர் எனப்பட்டனர். இவர்கள் திராவிடரில் கீழ்சாதியினர் எனப்பட்டனர்.

> சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலைநிறுத்துவதற்காக ஆரியர் பயன்படுத்திய ஆயுதமே தோமாவழி திராவிடக் கிறிஸ்தவமாகிய சைவ, வைணவ சமயங்களாகும்.

இவ்வாறு திராவிடரில்,

1. **ஆரியரோடு தங்களை ஒன்றுபடுத்தியவர் மிகவும் உயர்ந்த சாதியினர் என்றும்**
2. **காட்டிக்கொடுத்தவர் உயர்ந்த சாதியினர் என்றும்**
3. **அடிபணிந்தவர்கள் இடைப்பட்ட சாதியினர் என்றும்**
4. **மலைக்கு ஓடிச் சென்றவர்கள் மலைவாழ் சாதியினர் என்றும்**
5. **எதிர்த்தவர் கீழ்சாதியினர் அல்லது தீண்டத்தகாதோர் என்றும்**

அழைக்கப்பட்டனர். வெளிநாட்டிலிருந்து வந்த ஆரியர்கள் அரசியல் ஆட்சியாளர்களைக் கையில் வைத்துக் கொண்டு, வன்முறை மூலம், பெரும்பான்மையினரான திராவிடர்களை தங்களுடைய மேலாதிக்கத்திற்கு கீழ்ப்படியுமாறு கட்டாயப்படுத்தினர். ஆரியரின் மேலாதிக்கத்தை எதிர்த்தவர்கள் கொலை செய்யப்பட்டார்கள். அரசு படைகள் மூலம் ஒடுக்கப்பட்டார்கள்.

திராவிடரில் துரத்தப்பட்டவர்கள் காடுகளுக்கு ஓடிச் சென்று, குகைகளில் மறைந்து வாழத் தொடங்கினார்கள். அங்கேயும் துரத்திச் சென்று, அவர்களைத் தாக்கி, கொலை செய்தார்கள். இந்நிகழ்ச்சி 'குகையிடிக் கலகம்' என்று இன்றும் வரலாற்றில் குறிப்பிடப்படுகிறது. தமிழ்நாட்டில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் இது நடைபெற்றது.

## சதுர்வர்ணம் :

சதுர் = நான்கு.

வர்ணம் = நிறங்கள்

ஆரியர் ஆட்சியில், இந்த நான்கு பிரிவினருக்கு மட்டுமே (பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர்) குடியுரிமை (Citizenship) உண்டு. பஞ்சமர்களுக்குக் (SC / ST) குடியுரிமை கிடையாது. இந்த நான்கு பிரிவினரும் பஞ்சமரைக் கொலை செய்யலாம், நசுக்கலாம் என்பது ஆரியரின் சதுர்வர்ணக் கொள்கை. அதனால்தான் இப்பொழுதும் பஞ்சமரைத் துன்புறுத்திக் கொடுமை செய்கின்றனர். 'பஞ்சமனால் தீட்டு வருகிறது. அவனை ஒழித்துவிட்டால் தீட்டு முற்றிலுமாக ஒழிந்துவிடும்' என்பது அவர்களது கருத்தாகும்.

திராவிட ஆட்சியாளர்களை ஆரிய சூழ்ச்சிக்கு ஒத்துப் போகச் செய்வதற்காக ஆரியர் பயன்படுத்திய கருவிகள்

1. பெண்கள்
2. நயவஞ்சக சதித் திட்டங்கள்
3. விளம்பர சாதனங்கள்
4. திராவிட இளைஞர்களிடம் போதைப் பொருட்களையும் ஒழுக்கக்கேட்டையும் புகுத்தி, போதைக்கு அடிமையாக்கி, சிந்தனை தடுமாற்றத்தை உருவாக்குதல்.
5. அவர்களைக் கல்வி கற்க விடாமை.

## நய வஞ்சக நாத்திகர் :

நானே கடவுள் - ('அஹம் பிரம்மாஸ்மி') என்று சொல்பவர் நயவஞ்சக நாத்திகர்.

கடவுள் எனக்குள் இருக்கிறார் என்பது மூல நூல்களின் பொருள். ஆனால், நானே கடவுள் என்பது நயவஞ்சகக் கொள்கை.

சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையை உருவாக்கியவர்கள் நயவஞ்சக நாத்திகர்கள். இவர்கள் ஆத்திக வேடம் பூண்ட நாத்திகர் ஆவர்.

கடவுள் மனிதனைப் படைக்கும்போதே சாதி ஏற்றத் தாழ்வை உருவாக்கினார் என்கிறார்கள்.

பிரமாவின்

| | | |
|---|---|---|
| முகத்தில் | - | பிராமணன் |
| தோளில் | - | சத்திரியன் |
| தொடையில் | - | வைசியன் |
| பாதத்தில் | - | சூத்திரன் |

தோன்றியதாகச் சொல்கின்றனர்.

இதில் பிராமணன், சத்ரியன், வைசியன் மூவரும் ஆரியர்;

சூத்திரர் - திராவிடர்;

பஞ்சமனுக்குக் கடவுளிடம் இடமே கிடையாது.

## அத்வைதம் :

சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு அடிப்படையானது அத்வைதக் கொள்கை ஆகும். இது ஒரு நாத்திகக் கொள்கை ஆகும். அதாவது கடவுள் கொள்கை போன்று வேடமிட்டு இருக்கும் ஒரு நாத்திகக் கொள்கை. இதுதான் நயவஞ்சக நாத்திகம் ஆகும்.

| | | |
|---|---|---|
| எனக்குள் கடவுள் இருக்கிறார் | - | கடவுள் கொள்கை |
| நானே கடவுள் | - | கடவுளுக்கு எதிரான கொள்கை |

'அஹம் பிரமாஸ்மி' என்ற உபநிடத ஸ்லோகத்திற்கு 'எனக்குள் கடவுள் இருக்கிறார்' என்பதுதான் உண்மையான பொருள் ஆகும்.

இதற்கு 'நானே கடவுள்' என்று திரித்து, பொருள் கொடுத்தவர்தான் ஆதிசங்கரர்.

பிரமத்தை உடையவன் பிராமணன் என்பது ஒரு கொள்கை ஆகும். ஆனால் இந்தக் கொள்கை உடையவர் அனைவரும் பிராமணர் என்று கொள்ளாமல் இந்தக் கொள்கையைத் திரித்து, பிறப்பினை அடிப்படையாகக் கொண்டு விளக்கம் தருகிறார்.

| | | |
|---|---|---|
| கிறிஸ்தவன் என்பது ஒரு கொள்கை | - | சாதி அல்ல |
| முஸ்லீம் என்பது ஒரு கொள்கை | - | சாதி அல்ல |
| | | ஆனால் |
| பிராமணன் என்பது ஒரு கொள்கை அல்ல | - | சாதி ஆகும் (பிறப்பால் வருவது). |

கொள்கைதான் என்றால் அதில் சாதி இருக்கக் கூடாது.

*கிறிஸ்தவனாகப் பிறந்தவுடன் கிறிஸ்தவனாக முடியாது. ஞானஸ்நானம் பெற்றால்தான் கிறிஸ்தவன் என்று ஏற்றுக் கொள்ளப்படுவான்.*

அதைப் போல்

*உப நயனம் செய்யப்பட்டவன் தான் பிராமணன் ஆக முடியும்.*

அதற்கு முன்பு, அவன் சூத்திரன்தான் என்பார்கள்; ஆனால் மற்ற சாதிக்காரர்களுக்கு உபநயனம் செய்யப்படுகிறதா? இல்லை. காரணம், இது இனச் சார்பு உடையது ஆகும். யார் வேண்டுமானாலும் கிறிஸ்தவன், முஸ்லீம் ஆக முடியும்; ஆனால் யார் வேண்டுமானாலும் பிராமணன் ஆக முடியாது.

வர்ணம் + ஆசிரமம் = வர்ணாசிரமம்

இது நிற அடிப்படையில் உள்ள பிரிவு ஆகும். குண அடிப்படையில் உருவான பிரிவு அல்ல. ஆனால் பிறரை ஏமாற்றுவதற்காக வர்ணம் என்றால் குணம் என்று பொருள் என்பார்கள்.

| | | |
|---|---|---|
| பூஜை செய்பவன் | - | பிராமணன் |
| ஆளுபவன் | - | சத்ரியன் |
| வியாபாரம் செய்பவன் | - | வைசியன் |
| அடிமை வேலை செய்பவன் | - | சூத்திரன் (அ) அடிமை. |

அதாவது

| | | |
|---|---|---|
| எதிரியின் காலில் விழுந்தவன் | - | சூத்திரன் - அடிமை. |
| எதிரியை எதிர்த்தவன் | - | பஞ்சமன் - பகைவன். |

சூத்திரனுக்கு ஓர் உரிமை உண்டு. ஆரியன் சாப்பிட்ட மீதியை அவன் உண்ணலாம். அடிமைகளுக்கு நில உடைமை கிடையாது. இது ஆரியவர்த்தத்தில் (கி.பி. 7ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை ஏறக்குறைய 500 ஆண்டு காலம் ஆரியர் ஆரியவர்த்தத்தை ஆளுகை செய்தபோது) உருவாக்கப்பட்ட சட்டம்.

## கோயில் பூசாரிகள் :

சைவக் கோயில்களில் பூசாரியாக இருந்தவர்கள் பறையர்கள்; இவர்கள் தமிழ்ப் பூசாரிகள். வைணவக் கோயில்களில் பூசாரியாக இருந்தவர்கள் பாணர்கள்.

சைவக் கோயில்கள் அனைத்திற்கும் தலைமையிடம் சிதம்பரம். அது பூலோகக் கைலாசம் எனப்படும். சைவக் கோயில்களில் பூசாரியாக இருந்தவர்கள் பறையர்கள். ஆனால் அங்கு பறையர்களுக்குப் பதிலாக, தீட்சிதர்கள் கைப்பற்றிக் கொண்டதால், தன்னுடைய உரிமைக்காகப் போராடினார் நந்தனார். அவரைத் தீயிட்டுக் கொளுத்திவிட்டு, நந்தனார் ஜோதியில் கலந்துவிட்டார் என்று சொல்லிவிட்டனர்.

*'பார்ப்பானுக்கு மூத்த பறையன்*
*கேட்பாரில்லாமல் கீழ்ச் சாதியானான்'*

என்பது பழமொழி.

| | | |
|---|---|---|
| மூத்த | = | முந்தைய (Senior); |
| கேட்பாரில்லாமல் | = | நியாயத்தைக் கேட்க அவனுக்கு அரசர்கள் (Support) இல்லாமல் போனதால் |
| கீழ்ச் சாதியானான் | = | கீழ்ச் சாதியாக்கப்பட்டான். |

வைணவக் கோயில்களுக்குத் தலைமையிடம் ஸ்ரீரங்கம். அங்கு பாணர்கள் பூசாரிகளாக இருந்தனர்.

பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவர் திருப்பாணாழ்வார். இவரும் கொல்லப்பட்டார் என்பது சரித்திரம்.

பறையர், பாணர் என்பவர் தமிழர்களின் குருக்கள்; மெய்யியலாளர்கள்.

| | | |
|---|---|---|
| பறையன் | = | பறையடிப்பவன் |
| பறை | = | சொல்லுதல்; முக்காலத்தையும் சொல்லும் மெய்யியலாளர் |
| பார்ப்பான் | = | எதையும்ஆராய்ந்து பார்ப்பவன் |

தமிழ்த் தலைவர்களைக் குறிக்கும் சொல்.

ஐயர், பார்ப்பார், அந்தணர் இவை தமிழ் தலைவர்களைக் குறித்த பெயர்கள். பின்னர் ஆரியர்கள் இப்பெயர்களைத் தங்களுக்கு உரியதாக ஆக்கிக் கொண்டனர்.

## திருமூலர் :

திருமூலர் பிராமணர்களைப் போலி (duplicate) பார்ப்பான் என்கின்றார். இதற்குக் காரணம் பழைய அல்லது உண்மையான பார்ப்பான் தமிழன் ஆவான்.

*பேர்கொண்ட பார்ப்பான் பிரான் தன்னை அர்ச்சித்தால்*
*போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்*
*பார்கொண்ட நாட்டில் பஞ்சமுமாம் என்றே*
*சீர்கொண்ட நந்தி தெரிந்து ரைத்தானே.*

நந்தி = குரு.

*'பித்தேறிய மூடர் பிராமணர் தாம் அன்றே'*

என்று போலி (duplicate) பார்ப்பனர்களைப் பித்தேறிய மூடராகிய பிராமணர் என்கின்றார் திருமூலர்.

## சங்கரமடங்கள்:

இந்தியாவின் ஒரு பகுதியாகிய ஆரிய நாட்டில் உருவாக்கப்பட்ட சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையாகிய மனுதர்ம சாஸ்திரக் கொள்கையை இந்தியா முழுவதும் பரப்பி ஆரியர்களுடைய மேலாதிக்கத்தை என்றென்றும் பரம்பரை பரம்பரையாக நிலைநாட்டும் பொறுப்பை ஏற்றுச் செயல்படுத்தியவரே ஆதி சங்கரர். இவர் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் சங்கரமடங்களை நிறுவினார்.

இதற்காகவே இந்தியாவின்,

| | | |
|---|---|---|
| வடக்கில் ஜோஷி மடம் | - | உத்தரபிரதேசம் |
| கிழக்கில் பூரி மடம் | - | ஒரிசா |
| மேற்கில் துவாரகா மடம் | - | குஜராத் |
| தெற்கில் சிருங்கேரி மடம் | - | கர்நாடகம் |

என்று நான்கு திசைகளிலும் நான்கு சங்கரமடங்களை நிறுவினார். பிற்காலத்தில் மிக அண்மையில் (ஏறக்குறைய 200 ஆண்டுகட்கு முன்பு) உருவாக்கப்பட்டதே காஞ்சி சங்கரமடம்.

இச்சங்கர மடங்களின் தலைவர்கள் ஆரியர்களுக்குத் தலைமை தாங்கும் பிராமணர்கள் ஆவர்.

இன்று இந்திய மக்களில் ஆரியர் 10% திராவிடர் 90% இருக்கிறார்கள். இந்தியாவில் 10% இருக்கும் அந்நியர்களாகிய ஆரியர்கள், தங்களில் ஒரு பிரிவினராகிய பிராமணர்கள் தலைமையில் ஒன்றிணைந்து 90% இருக்கும் இந்திய மக்களாகிய திராவிடர்களைப் பல்வேறு சாதிகளாகப் பிரித்து, திராவிடர்கள் ஒருவரையொருவர் பகைத்துச் சண்டையிட்டு அழியுமாறு மிகத் தந்திரமாகத் திட்டங்கள் தீட்டிச் செயல்படுத்தி வருகின்றார்கள். இதற்கு அவர்களுக்குப் பயன்படுவதுவே சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையாகும். இக்கொள்கையை அழியாமல் பாதுகாப்பதே சங்கர மடங்களாகும்.

சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலைநிறுத்துவதற்காக ஆரியர் பயன்படுத்திய ஆயுதமே தோமாவழி திராவிடக் கிறிஸ்தவமாகிய சைவ, வைணவ

சமயங்களாகும். மனுநூல் அடிப்படையில் உருவாக்கப்பட்ட வருணாசிரமக் கொள்கையாகிய சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு கி.பி. 1794இல் சர். வில்லியம் ஜோன்ஸ் என்ற ஆங்கில நீதிபதி 'Hinduism' என்று புதுப்பெயர் கொடுத்தார். சாதி ஏற்றத்தாழ்வு கொள்கைக்குக் கொடுக்கப்பட்ட இந்துத்துவம் (Hinduism) என்ற பெயர், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப் படுத்தப்பட்டுள்ள சைவ, வைணவ மதங்களுக்கு 'இந்து மதம்' (Hindu Religion) என்ற புதுப்பெயர் உருவாகக் காரணமாயிற்று.

இவ்வாறு, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளான சைவ, வைணவ சமயங்கள் ஆரியரால் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப்பட்டன. இது மட்டுமல்லாமல், இன்னும் எவ்வெவ்வாறு தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாகிய சைவ, வைணவ சமயங்களும், இந்திய மக்களும் ஆரிய பிராமணர்களால் அடிமைப்படுத்தப்பட்டனர் என்பதும் இந்நிலை மாற, விடுதலைப் பணியைச் செய்ய வேண்டியது யாருடைய கடமை என்பதும் வருமாறு சுட்டிக் காட்டப்படுகின்றன.

## ii) தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் கறைபடுத்தப்பட்டமையும், திரிக்கப்பட்டமையும்

தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளான சைவ, வைணவ சமயங்கள் ஆரியரால் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கு அடிமைப்படுத்தப் -பட்டதுடன் தொடர்ந்து பல்வேறு முறைகளில் கறைபடுத்தப்பட்டன.

கடவுளே மனிதனைப் படைக்கும்போது ஏற்றத்தாழ்வுடன் படைத்துவிட்டார்; எனவே, பிரமன் தலையிலிருந்து பிராமணனும், தோளிலிருந்து சத்திரியனும், தொடையிலிருந்து வைசியனும், காலிலிருந்து சூத்திரனும் வந்தனர் என்று கூறியதுடன், கடவுள் கொள்கையை விளக்க வைக்கப்பட்ட சைவ, வைணவ சிற்பங்களுடன், திராவிடரை அடிமைப்படுத்தும் நோக்கில், தவறான உணர்வுகளுக்கு இடமளிக்கும் சிற்பங்களையும் கோவில்களில் இடம் பெற வைத்தனர் ஆரியர்.

அதை நியாயப்படுத்தும் வகையில், சைவ, வைணவ சமயங்களின் அடிப்படைக் கொள்கைகளுக்கு மாறுபட்ட நோக்கில், திராவிடரால் எழுதப்பட்ட இலக்கியங்களுக்குத் தவறான உரைகள் எழுதினர். திராவிடரின் பிரம சூத்திரம், பகவத் கீதை, உபநிஷத் இவற்றிற்கு ஆரியரால் திரித்து எழுதப்பட்ட தவறான உரைகளே அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் என்பதும்; இம் மூன்று உரைகளிலும் சாதி, ஏற்றத் தாழ்வுக் கொள்கையை நியாயப்படுத்தும் உரைகள் இடம் பெற்றுள்ளமையும் முன்னர்க் குறிப்பிடப்பட்டன.

கி.பி. 12 ஆம்நூற். முதல் கி.பி.14 ஆம் நூற். வரையுள்ள காலத்தை இலக்கிய வரலாற்றில் 'உரையாசிரியர் காலம்' என்று கூறுவர். இக்காலத்தில் திராவிடரின் நூல்களுக்கு உரை எழுதியவர்கள், திராவிடருக்கு எதிரான சாதி, ஏற்றத் தாழ்வுக் கொள்கை மற்றும் ஆரிய மேலாதிக்கக் கோணங்களின் அடிப்படையில் உரை எழுதியுள்ளனர். எனவே, திராவிடரின் அடிப்படைக் கொள்கைகளைப் பிற்காலத்தில் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலா நிலை ஏற்பட்டது.

கிறிஸ்தவக் கருத்துகளை எளிய மக்களுக்கு விளக்குவதற்காகக் கூறப்பட்ட சைவ, வைணவப் புராணங்களிலும் தவறான கருத்துகளைத் திணித்து, தவறான உணர்வுகளுக்குச் சமய சாயம் பூசி, திராவிடரை மதத்தின் பெயரலாலேயே மூளைச் சலவை செய்தனர்.

ஆரியர் திராவிடரைப் பல பிரிவுகளாகக் கூறுபடுத்தி, இழிவுபடுத்தியதுடன் திராவிடரின் கடவுளரும் இழிவுபடுத்தப்பட்டனர். எனவேதான், சைவ முழுமுதல் கடவுளான 'சிவன்' சூத்திரக் கடவுள் என்றும், வைணவ முழுமுதல் கடவுளான 'விஷ்ணு' சத்திரியக் கடவுள் என்றும் ஆரியரால் திராவிடக் கடவுளர் கூறுபடுத்தி, இழிவுபடுத்தப்பட்டனர்.

★யார் வேண்டுமானாலும் கிறிஸ்தவன், முஸ்லீம் ஆக முடியும். ஆனால் யார் வேண்டுமானாலும் பிராமணன் ஆக முடியாது.

கடவுள் கொள்கையை விளக்க வைக்கப்பட்ட சைவ, வைணவ சிற்பங்களுடன், திராவிடரை அடிமைப்படுத்தும் நோக்கில், தவறான உணர்வுகளுக்கு இடமளிக்கும் சிற்பங்களைக் கோவில்களில் இடம் பெற வைத்தமைக்கு, 'கோனார்க் கோவில்' (ஒரிசா) ஓர் எடுத்துக்காட்டு. 'கோனார்க் கோவில் சிற்பங்கள்' சில சமயத்தின் பெயரால் மக்களின் சிந்தனையைக் கறைப்படுத்தி அடிமைப்படுத்தும் ஆரியத்திற்கு ஓர் எடுத்துக்காட்டாய் விளங்குகிறது.

மேலும், சைவ, வைணவ சமயங்களின் தோற்ற, வளர்ச்சிக்கு ஆரிய வேதங்களே அடிப்படை என்பதைப் போன்ற தவறான கருத்துகளைக் கூறி திராவிடரை நம்ப வைத்தனர். எனவேதான், ஆரியரின் வேதங்களை திராவிடர் கேட்கக் கூடாது, பார்க்கக்கூடாது, படிக்கக் கூடாது என்னும் விதிமுறைகளைக் கட்டாயப்படுத்தினர். எனவே, திராவிடரும் சைவ, வைணவ சமயங்களின் தோற்ற, வளர்ச்சிக்கு ஆரியரே காரணம்; ஆரிய வேதங்களே அடிப்படை என்று நம்பி இன்று வரை ஆரிய அடிமைகளாக, தங்கள் கடவுளைத் தங்கள் மொழியில் தாங்களே வழிபட முடியாதவாறு அடிமைப்படுத்தப்பட்டுள்ளனர்.

காலமெல்லாம் சைவக் கோவில்களில் பூசாரிகளாய் இருக்கும் ஆரிய பிராமணர், தங்கள் வீடுகளில் ஒரு விசேஷ நிகழ்ச்சி என்றால், சைவக் கடவுளாகிய 'சிவன்' பெயரில் செய்யாமல் 'தீயை' சாட்சியாக வைத்து எல்லாவற்றையும் செய்வர். இவ்வாறே, காலமெல்லாம் வைணவக் கோவில்களில் பூசாரிகளாய் இருக்கும் ஆ.ரிய பிராமணர், ஒரு விசேஷ நிகழ்ச்சி என்றால், வைணவக் கடவுளாகிய 'விஷ்ணு'வின் பெயரில் செய்யாமல் 'தீயை' சாட்சியாக வைத்து எல்லாவற்றையும் செய்வர். ஏனெனில் அவர்கள் இயற்கை வழிபாட்டினர். முழுமுதல் இறைக் கொள்கையை அறியாதவர்கள்.

மேற்கூறியவற்றைச் சுருக்கமாகப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

- தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ சமயங்களான சைவ, வைணவ சமயங்களைப் பயன்படுத்தி, அவற்றின் அடிப்படைக் கொள்கைகளைத் திரித்து, திராவிடரை மதத்தின் பெயரால் அடிமைப்படுத்துதல்.

- கடவுள் நம்பிக்கையாளரைப் போல் தங்களைக் காட்டிக் கொள்வர். ஆனால், 'அஹம் பிரமாஸ்மி' எனும் திராவிடரின் கொள்கைக்கு, 'கடவுள் எனக்குள் இருக்கின்றார்' எனும் விளக்கத்திற்குப் பதிலாக, 'நானே கடவுள்' எனத் தவறான விளக்கம் கொடுத்து, தங்களையே கடவுளாகக் காட்டிக் கொள்ளல்.

- திராவிடருக்கு எதிரான சாதி, ஏற்றத் தாழ்வுக் கொள்கை மற்றும் ஆரிய மேலாதிக்கக் கோணங்களின் அடிப்படையில் திராவிட நூல்களுக்கு உரை எழுதுதல்.

- கடவுள் கொள்கையை விளக்க வைக்கப்பட்ட சைவ, வைணவ சிற்பங்களுடன் திராவிடரை அடிமையாக்கும் நோக்கில், தவறான உணர்வுகளுக்கு இடமளிக்கும் சிற்பங்களைக் கோவில்களில் இடம் பெற வைத்தல்.

- கிறிஸ்தவக் கருத்துகளை எளிய மக்களுக்கு விளக்குவதற்காகக் கூறப்பட்ட சைவ, வைணவப் புராணங்களிலும் தவறான கருத்துகளைத் திணித்தல்.

- ஆரியர், திராவிடரைப் பல பிரிவுகளாகக் கூறுபடுத்தி, இழிவுபடுத்தியது போல் திராவிடரின் கடவுளரையும் சூத்திரக் கடவுள், சத்திரியக் கடவுள் என்று கூறுபடுத்தி, இழிவுபடுத்தல்.

- சைவ, வைணவ சமயங்களின் தோற்ற, வளர்ச்சிக்கு ஆரிய வேதங்களே அடிப்படை எனும் தவறான கருத்தைப் பரப்பல்.

- சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலைநிறுத்தும் ஆரிய பிராமணரின் சங்கரமடங்கள், அரசியலைப் பயன்படுத்தியும், மதப் போர்வையிலும் இந்திய மக்களை அடிமைப்படுத்தல்.

இதைப் போன்ற பலவேறு முறைகளில், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் ஆரியரால் திரிக்கப்பட்டு, கறைபடுத்தப்பட்டு, அடிமைப்படுத்தப்பட்டது போல், திராவிட இந்தியாவும் அடிமைப்படுத்தப்பட்டுள்ளது.

இந்த அடிமைத்தளையிலிருந்து விடுதலையடைய வேண்டுமனால், முதலில் சைவமும், வைணவமும் கறைபடுத்தப்பட்ட தவறான ஆரியக்

கொள்கையிலிருந்து விடுவிக்கப்படுவதுடன் சைவமும், வைணவமும் ஆரியருக்குச் சிறிதும் தொடர்பில்லாத, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளே என்னும் வரலாற்று உண்மை எடுத்துக்காட்டப்பட வேண்டும். ஆரியப் பிடியிலிருந்து விடுபட்ட திராவிடக் கிறிஸ்தவர்களே விடுதலைப் பணியைச் செய்ய முடியும்.

சைவ முழுமுதல் கடவுளான 'சிவன்' சூத்திரக் கடவுள் என்றும், வைணவ முழுமுதல் கடவுளான 'விஷ்ணு' சத்திரியக் கடவுள் என்றும் ஆரியரால் திராவிடக் கடவுளர் கூறுபடுத்தி, இழிவுபடுத்தப்பட்டனர்.

இந்தியாவில கிறிஸ்தவர்களின் நிலை என்று எடுத்துக் கொண்டால், பெரும்பாலும் அவர்கள் ஐரோப்பியச் சிந்தனைக்கு உட்பட்டவர்களாகவே காணப்படுகின்றனர். எனவே, ஐரோப்பிய அடிமைச் சிந்தனையிலிருந்து விடுபட்ட - தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ வரலாற்று உண்மைகளைத் தெளிவாக அறிந்த, இறை அழைப்பு பெற்ற கிறிஸ்தவர்கள் மட்டுமே தற்கால இந்தியச் சூழலில் ஆரிய அடிமைத் தளையிலிருக்கும் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தை விடுவித்து, திராவிடர் விடுதலையடையக் கூடிய, பொருள் நிறைந்த பணியை இந்தியாவில் செய்ய முடியும். அப்போதுதான் எபேசியர் 3:3 இல் கூறப்பட்டுள்ளபடி, அனைவரும் கிறிஸ்துவுக்குள் ஒரே உடம்பின் அங்கங்களாயிருக்க முடியும். கிறிஸ்து நம் தலையாயும் நாம் அவருடைய உடம்பின் அங்கங்களாயும் இருக்கும்போது, சாதி ஏற்றத் தாழ்விற்கே இடமில்லாமல் போய்விடும்.

# கேள்வி - பதில்

6 மாத டிப்ளமோ பயிற்சி வகுப்பில் பயின்ற மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்ட கேள்விகளும் அவற்றிற்கான பதில்களும் இங்கே சுருக்கமாக, தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

பயிற்சி வகுப்புகளில் நடத்தப்பட்ட பாடங்களின் அடிப்படையில் மாணவர்களுக்காக எடுக்கப்பட்ட கேள்விகளாய் இருப்பதால், பொதுவாக நாம் நடத்தும் பயிற்சி வகுப்புகளில் பங்குபெறுவோரின் பயன் கருதி, அவை இங்கே வெளியிடப்பட்டுள்ளன.

# கேள்வி - பதில்

## உடல் - உயிர் - ஆன்மா - கடவுள் - வேறுபாடுகள்:

1. ‘ஆன்மீகம்’ என்றால் என்ன?

   ஆன்மாவைப் பற்றி சிந்தித்தல் ‘ஆன்மீகம்’ எனப்படும்.

2. ஆன்மீக வாழ்க்கை – என்றால் என்ன?

   ஆன்மாவைப் பற்றி அறிந்து, அந்த அறிவுக்கேற்ப வாழ முயலும் வாழ்க்கை ஆன்மீக வாழ்க்கை என்பதாகும்.

3. உடல் எவற்றால் ஆனது?

   நிலம் – நீர்– நெருப்பு – காற்று – ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களால் ஆனது.

4. உயிருக்கு உருவம் உண்டா?

   உயிருக்கு மட்டுமே உருவம் உண்டு. உயிர் உடலை விட்டு நீங்கும்போது உருவம் அழியத் தொடங்குகிறது.

5. உயிர் என்பது என்ன?

   உடல் அழியாமல் இருப்பதற்குக் காரணமாய் இருப்பது உயிர் ஆகும். இது ஆவி (Spirit) என்றும் சொல்லப்படுகிறது.

6. உயிரினங்கள் எத்தனை வகைப்படும்?

   உயிரினங்கள் ஆறு வகைப்படும். உயிரினங்களுக்குரிய ஆறு வகையான அறிவுகளின் அடிப்படையில் உயிரினங்கள் ஆறு வகையாகப் பிரிக்கப்பட்டு இருக்கின்றன.

7. ஆறு அறிவுகள் எவை?

   1) தொட்டு அறிதல் – அதற்குப் பயன்படும் உறுப்பு – உடல்.

   2) சுவைத்து அறிதல் – அதற்குப் பயன்படும் உறுப்பு – வாய்.

   3) நுகர்ந்து அறிதல் – அதற்குப் பயன்படும் உறுப்பு – மூக்கு.

   4) கண்டு அறிதல் – அதற்குப் பயன்படும் உறுப்பு – கண்.

5) கேட்டு அறிதல் - அதற்குப் பயன்படும் உறுப்பு - காது.

6) சிந்தித்து அறிதல் - அதற்குப் பயன்படும் உறுப்பு - உள்ளம்.

8. ஆறாவது அறிவிற்கு அடிப்படையான உறுப்பு எது?
ஆன்மா - உள்ளம் (Soul).

9. ஆன்மாவும் மனமும் ஒன்றா? வேறுவேறா?
ஒன்றல்ல; வேறுவேறானவை.

10. ஆன்மா உடலைப் பயன்படுத்த எது தேவை?
உயிர்

11. எல்லா உயிரினங்களுக்கும் இயல்பிலேயே இருக்கும் உணர்விற்குப் பெயர் என்ன?
இயல்பூக்க அறிவு (Natural Instinct).

12. ஆன்மா வேலை செய்வதற்கு அடிப்படைத் தேவை எது?
அக ஒளி - இறைவனின் அருள்.

13. ஆன்மாவிற்கு உரிய சிறப்பு அம்சம் எது?
ஆளுகை (அ) ஆட்சி செய்வது ஆகும்.

14. பேரண்டத்தை இயக்குவது எது?
பேருயிர்.

15. பேரான்மாவின் மறுபெயர் என்ன?
கடவுள்.

16. போன பிறவி, இந்தப் பிறவி, அடுத்த பிறவி கொள்கை உடையவர்களுக்கு ஆன்மாவைத் தெரியுமா?
தெரியாது.

17. சார்வாகக் கொள்கை உயிரைப் பற்றியும், ஆன்மாவைப் பற்றியும் தெளிவாக விளக்கம் தருகிறது. சரியா-தவறா?
தவறு.

18. சிவஞானபோதத்தில் உயிர் பற்றிய விளக்கம் உண்டா?
இல்லை.

19. இந்துத்துவா கொள்கையில் ஆன்மா, கடவுள் பற்றிய கொள்கை உண்டு; சரியா - தவறா?
தவறு.

20. அகக் கண் வேலை செய்ய எது தேவை?
அக ஒளி.

## நற்செய்தி அறிவிக்கும் முறை :

21. பவுலின் சுவிசேஷ அறிவிப்பு முறையை அப்போஸ்தலர் எந்த அதிகாரம் தெரிவிக்கிறது?
அப்போஸ்தலர் 17ஆம் அதிகாரம்

22. பிற மதத்தினரின் வேதநூல்களைத் தெரிந்து கொள்வது அவசியமா? வேத ஆதாரத்துடன் கூறுக.
மிகவும் அவசியம் ஆகும். ( I கொரிந்தியர் 9: 21 - 23, அப்போஸ்தலர் 17ஆம் அதிகாரம்).

23. எந்த அடிப்படையில் நற்செய்தி அறிவிக்க வேண்டும்?
கேட்கின்றவருடைய பண்பாடு, மொழி, நம்பிக்கை அடிப்படையில் நற்செய்தி அறிவிக்க வேண்டும். (I கொரிந்தியர் 9ஆம் அதிகாரம், அப்போஸ்தலர் 17ஆம் அதிகாரம்.).

## அனைவர்க்கும் கடவுள்:

24. கடவுள் இஸ்ரவேலர்க்கு மட்டும் கடவுளா? பழைய ஏற்பாட்டு வசன ஆதாரம் தருக.
கடவுள் இஸ்ரவேலர்க்கு மட்டுமல்ல; அனைவர்க்கும் கடவுள் ஆவார். ஆமோஸ் 9:7.

25. யேகோவா என்னும் நாமத்தினால் நான் அவர்களுக்கு அறியப்படவில்லை என்ற வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அவர்கள் யார்?
அவர்கள் - "ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு" என்ற முற்பிதாக்களுக்கு யேகோவா என்னும் பெயரால் கடவுள் அறியப்படவில்லை.
(யாத்திராகமம் 6:3)

26. ஆமோஸ் 9:7 இன் அடிப்படைக் கருத்து என்ன?
கடவுள் இஸ்ரவேல் கோத்திரத்தாருக்கு மட்டுமல்லாமல், எல்லாருக்கும் கடவுளாக இருக்கிறார் என்பதாகும்.

27. கடவுள் எதனுடைய அடையாளமாக நோவா கொடுத்த பலியை ஏற்றுக் கொண்டார்?
தம் மகன் இயேசு கிறிஸ்து சிலுவையில் பலியாகப் போவதன் அடையாளமாக.

## இஸ்ரவேல் - யூதம் - பழைய ஏற்பாடு - புதிய ஏற்பாடு

28. எந்த ஆண்டில் இஸ்ரவேல் நாடு அழிக்கப்பட்டது?
கி.மு. 721 இல்

29. எந்த ஆண்டில் யூதேயா நாடு அழிக்கப்பட்டது?
கி.மு. 586இல்

30. எந்த ஆண்டில் இருந்து யூதநாடு புத்துயிர் பெறத் தொடங்கியது?
கி.மு. 516 இலிருந்து.

31. பழைய ஏற்பாட்டில் உள்ள இரண்டு சமயங்கள் யாவை?
இஸ்ரேல் சமயம், யூத சமயம்.

32. பைபிளில் உள்ள மூன்று வெவ்வேறு சமயங்களும் (இஸ்ரேல், யூதம், கிறிஸ்தவம்) யாருடைய வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டவை?
முற்பிதா என்று சொல்லப்படும் ஆபிரகாமின் வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டவை.

33. உடன்படிக்கைப் பெட்டிக்கு மேல் கேருபீன்களை வைத்தது யார்?
சாலமோன்.

34. சாலமோன் அந்நிய தெய்வங்களுக்கு மேடையைக் கட்டியதைக் கூறும் வசனம் எது?
I இராஜாக்கள் 11:7

35. புதிய ஏற்பாட்டில் உள்ள 27 புத்தகங்களும் யூத சமயத்திற்கும், கிறிஸ்தவ சமயத்திற்கும் உள்ள வேறுபாடுகளை நன்கு புரிந்து கொண்ட பிறகு எழுதப்பட்டவை அல்ல. இதை விளக்கும் வசனங்களைக் குறிப்பிடுக.
அப்போஸ்தலர் 21: 24 - 26; யாக்கோபு 1: 1. ('அனைவர்க்கும்' என்று குறிப்பிடப்படாமல் '12 கோத்திரத்தார்க்கு எழுதப்பட்டது' என்பது நோக்கற்குரியது.)

36. அப்போஸ்தலர் 21:26 இன் முக்கியப் பொருள் எது?
யூதத்திலிருந்து கிறிஸ்தவம் முழுமையாகப் பிரிவதற்கு முன் புதிய ஏற்பாடு

எழுதப்பட்டது. கிறிஸ்து பலியானார் என்ற சத்தியத்தை, பவுல் அப்பொழுது முழுமையாகப் புரிந்து கொள்ளவில்லை.

37. எசனேய மக்கள் வாழ்ந்த காலக் கட்டம் எது?
கி.மு. முதலாம் நூற்றாண்டு முதல் கி.பி. முதலாம் நூற்றாண்டு வரை.

38. பலியிடப்படும் விலங்குகள் எவ்வகை விலங்குகளாயிருந்தன?
ஓரறிவு உயிர்களான தாவரங்களை மட்டுமே உண்டு வாழும் விலங்குகளாயிருந்தன.

39. புலால் உணவைக் குறித்து எந்தத் திருச்சபைக்குப் பிரச்சினை வந்தது?
ரோமத் திருச்சபைக்கு

40. முதன் முதல் கர்த்தருக்குப் பலியிட்டவன் ஆபேல். சரியா - தவறா?
தவறு.

41. பலிக்கும், காணிக்கைக்கும் உள்ள வேறுபாடு என்ன?
பலி என்பதில் இரத்தம் சிந்தப்பட வேண்டும். காணிக்கை என்பது அப்படியல்ல.

42. முதன்முதலாகக் கடவுளுக்குப் பலி செலுத்தியது யார்?
நோவா.

43. முதன்முதல் புறஜாதியாரிடம் அனுப்பப்பட்ட சீஷன் யார்?
பேதுரு.

44. தோமா வழிக் கிறிஸ்தவர் என்றால் உலகளாவிய நிலையில் யாரைக் குறிக்கும்?
சீரியக் கிறிஸ்தவர்களைக் குறிக்கும்..

45. ஆவியின் வரங்களில் முதலாவது வரம் எது?
ஞான வரம்.

## இஸ்ரவேல் வழிபாடு, யூத வழிபாடு:

46. பழைய ஏற்பாட்டில் கல் நட்டு, கடவுள் வழிபாடு செய்ததற்கான சான்றுகளைக் கூறுக.

a. ஆதியாகமம் 28:18,19
b. ஆதியாகமம் 31:45 - 48
c. யாத்திராகமம் 24:4

d. யோசுவா 24:26 - 28
e. யோசுவா 4:20
f. I சாமுவேல் 7:12

47. யாக்கோபு கல்தூண் (தமிழில் சிவலிங்கம்) வைத்துக் கடவுளை வழிபட்ட இடத்தின் பெயர் என்ன?
பெத்தேல்.

48. தமிழர்களின் சிவலிங்க வழிபாடு, இஸ்ரவேல் வழிபாடு, சிந்துவெளி வழிபாடு, - கால வரிசைப்படி எழுதுக.
சிந்துவெளி வழிபாடு.
இஸ்ரவேல் வழிபாடு.
தமிழர்களின் சிவலிங்க வழிபாடு.

49. இஸ்ரேல் வழிபாட்டிலும், யூத வழிபாட்டிலும் கடவுளின் வாகனங்களாக வைக்கப்பட்டவை யாவை?
கன்றுக்குட்டி, கேருபீன்கள்.

50. ஆகமம் எதை விளக்குகிறது?
கோவில்கள் எப்படிக் கட்டப்பட வேண்டும் என்று விளக்கும் முறை ஆகம முறை ஆகும். (எருசலேம் ஆலய கட்டட முறை).

## ஆன்மீகம் - அரசியல்:

51. முதன்முதல் யாரால், எந்த நூற்றாண்டில் சிலுவைக்குச் சிறப்பு கொடுக்கப்பட்டது?
கி.பி. நான்காம் நூற்றாண்டில் கான்ஸ்டன்டைன் என்ற ரோமப் பேரரசனால் சிலுவைக்குச் சிறப்பு கொடுக்கப்பட்டது.

52. பைபிளில் உள்ள எத்தனை புத்தகங்கள் ஆசியர்களால் எழுதப்பட்டவை?
அனைத்துப் புத்தகங்களும்

53. கிறிஸ்தவ ஆன்மீகம் எந்த நூற்றாண்டில் கிறிஸ்தவ அரசியல் மதமாக மாற்றப்பட்டது?
கி.பி. நான்காம் நூற்றாண்டில்.

54. ஆசியாவில் தோன்றிய கிறிஸ்தவம் யாருடைய காலம் முதல் ஐரோப்பியக் கிறிஸ்தவமாக ஆக்கப்பட்டது?
கான்ஸ்டன்டைன் காலம் முதல்.

## பௌத்தம் :

55. உடலைத் தவிர உயிர் என்ற ஒன்று உள்ளது என்று முதன்முதல் கூறியவர் யார்?
புத்தர்

56. ஹீனயானம் - பொருள் என்ன?
சிற்றூர்தி.

57. ஹீனயான பௌத்தத்திற்கு மற்றொரு பெயர் என்ன?
தேரவாத பௌத்தம்.

58. சமணத்திலும், பௌத்தத்திலும் நினைவுக்கல் எந்தப் பெயரில் குறிக்கப்படுகிறது?
'ஸ்தூபி'.

59. சமணத்திலும், பௌத்தத்திலும் எதற்காக 'ஸ்தூபி'கள் நிறுவினர்?
புத்தர், மகாவீரர் மற்றும் பௌத்த, சமண குருமார்களின் நினைவாக ஸ்தூபிகளை நிறுவினர்.

60. மகாயான பௌத்த சமயத்தில் போதிச்சத்துவரின் அடிப்படைக் கோட்பாடுகள் யாவை?
- இவர் மக்களின் துன்பத்தைப் போக்க மனித உருவில் வந்தார்.
- இவர் இயற்கைக்கு அப்பாற்பட்ட பிறப்பினை உடையவர்.
- மனித உருவில் வந்த அவர், மனிதர்களுக்காகத் தன்னையே பலியாகக் கொடுத்தார்.
- அவரை நம்பி சரணடைந்தால் விடுதலை அடையலாம்.

61. புத்தர் - பொருள் என்ன?
புத்தர் - குரு (Teacher).

62. கிறிஸ்தவத்தில் இருந்து, மகாயான பௌத்த சமயம் பெற்றுக் கொண்ட மூவொரு கடவுள் கொள்கையின் பெயர் என்ன?
முத்திருமேனிக் கொள்கை.

63. முத்திருமேனி - விளக்கம் தருக.
மஹாயான பௌத்தத்தின் முக்கியக் கோட்பாடு முத்திருமேனிக் கோட்பாடு ஆகும். இது கிறிஸ்தவ திரித்துவக் கொள்கை ஆகும்.

தர்மகாயா - அறத்திருமேனி - பிதா

சம்போககாயா - இன்பத்திருமேனி - தூய ஆவி

நிர்மாணகாயா - படைக்கப்பட்ட திருமேனி - குமாரன்.

64. மஹாயான பௌத்த மதத்திற்கும், ஹீனயான பௌத்த மதத்திற்கும் அடிப்படை வேறுபாடு என்ன?

ஹீனயான பௌத்தத்தில் கடவுள் பற்றிய கொள்கை எதுவும் சொல்லப்படவில்லை. மஹாயான பௌத்தத்திற்கு அடிப்படையே கடவுள் கொள்கை. கிறிஸ்தவத்தின் செல்வாக்கு பெற்ற பௌத்த வடிவம் மஹாயான பௌத்தம்.

மஹாயான பௌத்தத்தில் முத்திருமேனி கோட்பாடு, போதிசத்துவர் கோட்பாடு ஆகியவை அடிப்படையாக உள்ளன.

65. அமிதாப புத்தர் - என்பது யாரைக் குறிக்கும்?

பிதா.

66. 'போதிசத்துவர்' கோட்பாடு யாரைக் குறிக்கும்?

மனிதனாக வந்த கடவுளாகிய இயேசு கிறிஸ்துவைக் குறிக்கும்.

67. இரண்டாம் வருகை - வைணவத்திலும், பௌத்தத்திலும் எந்தப் பெயரால் குறிக்கப்படுகிறது?

வைணவம் - கல்கி அவதாரம்

பௌத்தம் - மைத்ரேய புத்தர்

68. மகாயான பௌத்த சமயத்தின் இலக்கியங்கள் எந்த மொழியில் எழுதப்பட்டுள்ளன?

சமஸ்கிருதம்.

## சங்க இலக்கியம் :

69. பழந்தமிழரின் / திராவிடரின் வழிபாடு முறை பற்றி அறிய உதவும் இலக்கியங்களின் பெயர் என்ன?

சங்க இலக்கியங்கள்.

70. சங்க இலக்கியத்தின் காலம் என்ன?

ஏறக்குறைய கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்கும், கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தது.

71. சங்க இலக்கியங்கள் யாவை?

பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் சங்க இலக்கியங்கள் ஆகும்.

72. சங்க இலக்கியத்தில் ஆதாம், ஏவாள் எவ்வாறு குறிக்கப்படுகின்றனர்?
ஆதன், அவ்வை.

73. சங்க இலக்கியத்தில் ஆதாமைப் படைத்த கடவுள் எவ்வாறு குறிக்கப்படுகின்றார்?
(ஆதன் + தந்தையார்) 'ஆந்தையார்' என்று குறிக்கப்படுகின்றார்.

74. பழந்தமிழர் சமுதாய அமைப்பு தாய் வழி சமுதாய அமைப்பா? தந்தை வழி சமுதாய அமைப்பா?
தாய் வழி சமுதாய அமைப்பு.

75. சங்க இலக்கியத்தில் முக்கிய இடம் பெற்றுள்ள பெண் தெய்வத்தின் பெயர் என்ன?
'கொற்றவை'.

கொற்றவை என்பதற்கு 'வெற்றியைத் தரும் தாய்' என்று பொருள்.

76. சங்க இலக்கியத்தில் சிவலிங்கத்திற்கு என்ன பெயர்?
கந்து.

77. சங்க இலக்கியத்தில் முக்கிய இடம் பெற்றுள்ள ஆண் தெய்வத்தின் பெயர் என்ன?
வேலன்.

78. சங்க இலக்கியக் காலத்தில் சிவலிங்கத்திற்குப் பலி செலுத்தினரா?
பலி செலுத்தினர்.

## திருக்குறள் :

79. திருக்குறள் சங்க இலக்கியத்தில் ஒன்று. சரியா? தவறா?
தவறு. திருக்குறள் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.

80. திருக்குறள் இயற்கைநெறி காலத்தைச் சார்ந்ததா? அறநெறி காலத்தைச் சார்ந்ததா?
அறநெறி காலத்தைச் சார்ந்தது. அதாவது, கிறித்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டைச் சார்ந்தது.

81. உலக மொழிகளில் 46 மொழிகளுக்கு மேல் மொழி பெயர்க்கப்பட்ட பழமையான தமிழ் நூல் எது?
திருக்குறள்.

82. கிறிஸ்டாஸ் "Christos" என்ற கிரேக்கப் பெயருக்கு இணையாக, திருக்குறளில் காணப்படும் தமிழ்ப் பெயர் என்ன?
இறைவன்.

83. திருக்குறளை முதன்முதல் (லத்தீன்) மொழிபெயர்த்தவர் யார்?
வீரமாமுனிவர் என்கிற கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி.

84. பாயிரம் என்றால் என்ன?
நூலுக்கு முன்பாகச் செய்யப்படும் முன்னுரை.

85. பாயிரத்தின் இரண்டு வகைகள் யாவை?
பொதுப்பாயிரம், சிறப்புபாயிரம்.

86. திருக்குறளில் சிலுவையில் பலியான கிறிஸ்துவைக் குறிக்கும் பெயர் எது?
(பொறிவாயில்) ஐந்தவித்தான்.

87. சிலுவை என்பதன் சீரிய மொழிப் பெயர் என்ன?
சிலிபோ.

88. திருக்குறளில் 'சிலுவை'யைக் குறிக்க எந்தப் பெயர் பயன்படுத்தப்பட்டு உள்ளது?
'பொறி' . அதாவது, கருவி என்று குறிப்பிடப்படுகிறது. ஏனென்றால் இந்தியாவில் சிலுவையில் அறைந்து கொலை செய்யும் பழக்கம் இல்லாததால், கொலை செய்யப் பயன்படுத்தப்படும் கருவி எனும் பொருளில் 'பொறி' எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

89. திருக்குறளில் 'நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன்' என்பதை விளக்கும் குறள் எது?
"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்" 1 : 6

90. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலை எத்தனையாவது திருக்குறள் எடுத்துக் கூறுகிறது?
25ஆவது குறள். மூன்றாம் அதிகாரம் - நீத்தார் பெருமை.
"ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும் புளார்கோமான்
இந்திரனே சாலும் கரி".

91. திருக்குறளில் பிதாவை வாழ்த்தும் அதிகாரம் எது?
'கடவுள் வாழ்த்து' - முதல் அதிகாரம்.

92. திருக்குறளில் தூய ஆவியை வாழ்த்தும் அதிகாரம் எது?
'வான் சிறப்பு' - இரண்டாம் அதிகாரம்.

93. திருக்குறளில் விண்ணிலிருந்து மனித உருவத்தில் வந்த கடவுளை வாழ்த்தும் அதிகாரம் எது?
'நீத்தார் பெருமை' - மூன்றாம் அதிகாரம்.

94. பிதா, தூய ஆவி, குமாரன் மூவரையும் இணைத்து வள்ளுவர் கூறும் தொடர் எது?
"இயல்புடைய மூவர்".

95. 'மனித உருவத்தில் வந்த கடவுளின் பெருமையை வேதம் காட்டிவிடும்' எனும் குறளில் மனித உருவில் வந்த கடவுள் எவ்வாறு குறிக்கப்படுகிறார்?
'நிறைமொழி மாந்தர்'.

96. 'இருமை வகை தெரிந்து' எனும் குறளில் வரும் இருமை என்பது என்ன?
இம்மை - மறுமை.
அதாவது, இவ்வுலகம் - மறுஉலகம்.

97. திருக்குறள் முழுவதையும் முதன்முதல் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர் யார்?
G.U. போப்.

98. திருக்குறள் எந்த வெண்பாவால் ஆனது?
குறள் வெண்பா - குறுகிய வெண்பா - குறள்.

99. திருக்குறளில் கூறப்படும் 'இருள்சேர் இருவினைகள்' யாவை?
- ஜென்ம பாவம் – ஆதாம் செய்த தீவினை – Original Sin.
- கர்ம பாவம் – அவரவர்செய்கின்ற தீவினை – Individual Sin.

100. பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு - என்பதில் வரும் பொருள் என்பது என்ன?
மீட்பு (இரட்சிப்பு - Salvation).

101. 'அகல் விசும்புளார் கோமான் இந்திரன்' என்பதில் வரும் இந்திரன் என்பவர் யார்?

'இந்திரன்' என்றால் தலைவன் என்று பொருள். இராஜாக்களுக்குத் தலைவன் இராஜேந்திரன், நரர்களுக்குத் தலைவன் நரேந்திரன். எனவே, 'அகல் விசும்புளார் கோமான் இந்திரன்' என்பதற்கு, அகன்ற வானிலுள்ள தூதர்களின் தலைவன். அதாவது கர்த்தருடைய தூதன் என்று பொருள்.

102. குறளில் இடைச் செருகல் செய்யமுடியாதபடி, குறளில் உள்ள கட்டமைப்பு அமைந்துள்ளதைக் காட்டும் எண் எது?
ஏழு.

103. குறளில் மொத்தம் எத்தனை அதிகாரங்கள், எத்தனை குறள்கள் உள்ளன?
133 அதிகாரங்கள். 1330 குறட்பாக்கள்.

104. தமிழ் வேதாகமத்தில் கடவுள் என்ற சொல்லுக்குப் பதில் தேவன் என்று மொழிபெயர்க்கப்படக் காரணமாயிருந்தவர் யார்?
இலங்கையைச் சேர்ந்த யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலர் என்ற சைவர்.

105. சான்றோர் என்ற சொல் தரும் பொருள் என்ன?
சால்பு உடையவன் சான்றோன். சால்பு என்றால் நிறைவு. தூய ஆவியின் (அருள்) நிறைவு பெற்றவன்.

106. நாணுடைமை என்றால் என்ன பொருள்?
நாணுடைமை = நாண் + உடைமை. நாண் - நாணம் - வெட்கம். தவறு செய்ததற்கு வருந்துதல் - நாண் உடைமை. தவறு செய்துவிட்டால், அதை நியாயப்படுத்தாமல், அதற்காக நாணமடைய வேண்டும்.

107. திருக்குறளுக்கு உரை எழுதிய உரையாசிரியர்களின் காலம் எது?
கி.பி 1200 - கி.பி 1400.

108. மாண்டார் என்றால் என்ன பொருள்? அது யாரைக் குறிக்கும்?
மாண்டார் = மாண்பு உடையவர்கள். இயல்புடைய மூவராகிய பிதா, குமாரன், தூய ஆவியைக் குறிக்கும்.

109. பெயர் அளவில் ஞானஸ்நானம் எடுத்தவர்கள் பற்றித் திருவள்ளுவர் எந்தக் குறளில் குறிப்பிடுகிறார்?
278ஆம் குறள்.

110. எழுமை, எழு பிறப்பு விளக்குக.
எழுமை = எழுகின்ற பல நிலைகள். 'மை' என்பது பண்பைக் குறிக்கும்.

(எ.கா) ஒருமை, பன்மை. தன்னுடைய வாழ் நாளிலேயே எழுகின்ற பல நிலைகள்;

எழுபிறப்பு - எழுகின்ற பிறப்புகள். பிறப்பு என்பது தலைமுறையைக் குறிக்கும். ஒருவனுடைய வழித் தோன்றல்கள் அல்லது தலைமுறைகள்.

111. பிறப்பறுக்கல் உற்றார் யார்?
துறவியாக மாறிவிட்டவர். இல்லறத்தில் இல்லாமல், துறவியானவர். தன்னுடைய வழித்தோன்றல்களைத் தவிர்த்தவர்.

112. உண்மை, மெய்ம்மை, வாய்மை விளக்குக.

உண்மை = உள் + மெய்
உள்ளத்தால் மெய்யை உணர்தல்.

மெய்ம்மை = மெய் + மெய்
உடலால் மெய்க்குரியவற்றைச் செய்தல்.

வாய்மை = வாய் + மெய்
வாயால் மெய்யை அறிவித்தல்.

113. மன்னிப்பு பற்றி விளக்கும் அதிகாரத்தின் பெயர் என்ன?
கண்ணோட்டம்.

114. சான்றோர் என்ற சொல் திரிந்து இன்று எவ்வாறு கூறப்படுகின்றது?
சாணார்.

115. ஊழ் என்பதற்கு என்ன பொருள்? அதற்குப் பிற உரையாசிரியர்கள் கூறும் பொருள் என்ன?
ஊழ் என்றால் முறையாக வருவது என்று பொருள்.
இதைக் கடவுளின் திட்டம் - (Will of God) என்ற பொருளில் திருவள்ளுவர் தருகிறார். பிற உரையாசிரியர்கள் இதைத் தலை விதி, தலை எழுத்து, முற்பிறவிப் பலன் என்ற பொருளில் கூறுகின்றனர்.

## சமஸ்கிருதம் :

116. இந்திய மொழிகளில் பழமையான மொழி எது? சமஸ்கிருதமா? தமிழா?
தமிழ் மொழியே பழமையானது. ஏனெனில் தமிழ் மொழிக் கல்வெட்டுகள் கி.மு. 3ஆம் நூற்றாண்டிலேயே கிடைக்கின்றன. ஆனால் சமஸ்கிருத மொழிக் கல்வெட்டு கி.பி. 2ஆம் நூற்றாண்டிலிருந்துதான் காணப்படுகிறது.

117. சமஸ்கிருத மொழி எந்தக் காலத்தைச் சார்ந்தது?

கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட காலத்தைச் சார்ந்தது ஆகும். கி.பி. 150இல் தான் முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு காணப் படுகிறது.

118. சமஸ்கிருதம் எந்த ஏழு மொழிகளின் இணைப்பு / கலப்பு ஆகும்?

தமிழ், பாலி, அர்த்தமாகதி, கிரேக்கம், லத்தீன், பாரசீகம், அரமேயம்.

119. முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு கூறும் செய்தி என்ன? அது எந்த இடத்தில் இருக்கின்றது?

சந்திரகுப்த மௌரியர் கட்டிய அணையொன்று பழுது பார்க்கப்பட்ட செய்தியை அது தெரிவிக்கின்றது. கத்தியவாரில் உள்ள கிர்னார் என்ற இடத்தில் உள்ளது. உஜ்ஜயினியின் சிற்றரசனான சக வம்சத்தைச் சார்ந்த ருத்ர தமனா என்பவனால் நிறுவப்பட்டதாகும்.

120. சமஸ்கிருதம்தான் உலகின் முதல் மொழி என்று பரப்பியவர்கள் யார் யார்?

சர். வில்லியம் ஜோன்ஸ், மாக்ஸ் முல்லர்.

121. சமஸ்கிருத மொழி யாரால், எந்த நோக்கத்திற்காக உருவாக்கப்பட்டது?

தோமா வழிக் கிறிஸ்தவர்களால் உருவாக்கப்பட்டது. தமிழ் அறியாத, பிற இந்தியப் பகுதிகளில், கிறிஸ்தவ நற்செய்தியைக் கூறுவதற்காக உருவாக்கப்பட்டது.

122. சமஸ்கிருதம் - சிறு குறிப்பு தருக.

சமஸ்கிருதம் என்றால் நன்றாகச் செய்யப்பட்டது என்று பொருள். இது யாருடைய தாய்மொழியும் அல்ல; ஆரியர் மொழியும் அல்ல. தோமா வழிக் கிறிஸ்தவர்களால் உருவாக்கப்பட்ட ஒரு பொம்மை மொழியாகும். Code Language. பொது மக்களால் பேசப்பட்டதும் அல்ல. கிறிஸ்தவக் கருத்துக்களைப் பரப்புவதற்காக உருவாக்கப்பட்டது.

123. சமஸ்கிருத மொழியில் மூல நூல்களை எழுதியவர்கள் ஆரியர்களா? திராவிடர்களா?

திராவிடர்கள்.

124. பழமையான சமஸ்கிருத இலக்கியங்களின் முக்கியக் கோட்பாடுகள் யாவை? இக்கோட்பாடுகள் எந்த சமயத்திற்குரியவை?

1. மூவொருமைக் கோட்பாடு
2. அவதாரக் கோட்பாடு
3. பலிநிறைவேற்றக் கோட்பாடு

4. பாவ மன்னிப்புக் கோட்பாடு
5. விசுவாசத்தினால் மீட்புக் கோட்பாடு

இக்கோட்பாடுகள் கிறிஸ்தவத்திற்கேயுரிய கோட்பாடுகளாதலால் இக்கோட்பாடுகளை இந்திய மக்கள் எல்லோருக்கும் விளக்குவதற்காகச் செய்யப்பட்ட மொழி 'சமஸ்கிருதம்'.

## வேதங்கள் :

125. வேதங்கள் எந்த மொழியில் எழுதப்பட்டுள்ளன?
சமஸ்கிருதம்.

126. வேதாந்தம் என்றால் பொருள் என்ன?
வேதம் + அந்தம் = வேதாந்தம். வேதாந்தம் என்றால் வேதங்களின் முடிவுப் பகுதி அல்ல; வேதங்களை முடிவுபடுத்துவது என்று பொருள் ஆகும்.

127. வேதம், வேதாந்தத்தை விவிலியத்தில் எவற்றுடன் ஒப்பிடலாம்?
வேதத்தை விவிலியத்தின் பழைய ஏற்பாட்டுடனும், வேதாந்தத்தை விவிலியத்தின் புதிய ஏற்பாட்டுடனும் ஒப்பிடலாம்.

128. வேதம் - வேதாந்தம் என்பவை முறையே பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடுகளை எப்படி ஒத்திருக்கிறது?
வேதம் - பலிக் கோட்பாட்டு வழிபாடு கொண்டது - பழைய ஏற்பாடு போன்றது.
வேதாந்தம் - பலிநிறைவேற்றக் கோட்பாட்டு வழிபாடு கொண்டது - புதிய ஏற்பாடு போன்றது.

129. வேதங்களில் சிவன்தான் முழுமுதல் கடவுள். சரியா? தவறா?
தவறு. சிவன் என்ற பெயரைக்கூட வேதங்களில் காண முடியாது. வேதங்கள் இயற்கை வழிபாட்டிற்கு சிறப்பு அளிப்பவை.

130. நான்கு வேதங்களில் கோவில் கட்டி கடவுளை வழிபடும் முறை இருக்கிறதா?
ஆரிய வேதங்களில் கோவில் கட்டி வழிபடும் முறை கிடையாது. கடவுளுக்குக் கோவில் கட்டி வழிபடும் முறை திராவிட வழிபாட்டு முறை. கோவில்களுக்கு மட்டுமல்ல. சைவ, வைணவக் கடவுளராகிய சிவன், சக்தி, முருகன், பிள்ளையார் முதலிய சிவக்குடும்ப திராவிடக் கடவுளருக்கும் ஆரிய வேதங்களில் இடம் இல்லை.

131. வேதம், வேதாந்தங்களைத் தொகுத்தவர் யார்? அவர் எந்த இனத்தைச் சார்ந்தவர் ஆவார்?
வேதவியாசர் - திராவிட இனத்தைச் சார்ந்தவர்.

132. வியாசர் செய்த பணிகள் யாவை?
தொகுப்புப் பணி : வேதம், வேதாந்தங்களைத் தொகுத்தல்.

எழுத்துப் பணி : பிரம சூத்திரம், பகவத் கீதை, மகாபாரதம், பதினெண்புராணங்கள், உபபுராணங்களை இயற்றல்.

133. வேதங்களை வியாசர் தொகுப்பதற்குரிய காரணங்கள் என்னென்ன?
வேதங்கள் பலி கோட்பாட்டை மையமாகக் கொண்டவை ஆகும்.

கடவுள் மனிதனாக வந்து பலியானார் என்ற செய்தியைத் தெரிவிப்பதற்காக வேதங்களைத் தொகுத்தார்.

134. வியாசர் என்பது தனி ஓர் ஆளின் பெயரா? விளக்குக.
வியாசர் என்பது தனி ஓர் ஆளின் பெயர் அல்ல; வேதவியாசர், வேதம் - வேதாந்தங்களைத் தொகுத்தவர். இது மிகப்பெரிய பணி - பிரம சூத்திரம், பகவத் கீதை, மகாபாரதம், பதினெண்புராணங்கள், உபபுராணங்கள் இவை யாவற்றையும் வியாசர் எழுதினார் / தொகுத்தார் என்று சொல்லப்படுகின்றன. எனவே, வியாசர் என்ற பெயரால் ஒத்த கருத்து உடையவர்கள், அவரைச் சார்ந்தவர்கள், அவரது மாணாக்கர்கள் எழுதி யிருத்தல் வேண்டும். எனவே வியாசர் என்பது School of thought.

135. உபநிஷத் என்றால் பொருள் என்ன?
உப - நி - ஷத்
(குருவின்) அருகில் அமர்தல் [ to sit by the side (of a Teacher) ] என்று பொருள்.

136. 'ஈசன்' என்ற பெயர் யாரைக் குறிக்கின்றது?
'ஈசன்' என்பது இயேசுவைக் குறிக்கும் சொல். குரானிலும் இயேசுவை 'ஈசா என்றே குறிப்பிட்டுள்ளனர். பாரதியார் இயேசுவை - 'ஈசன் வந்து சிலுவையில் மாண்டான்' என்றே குறிப்பிடுகிறார்.

137. நான்கு வேதங்களில் இசைப் பாடல்களாகத் தொகுக்கப்பட்ட பாடல் தொகுப்பின் பெயர் என்ன?
சாமவேதம்.

138. நான்கு வேதங்களில் யாகங்களை விளக்கும் பாடல்களின் தொகுப்புப் பெயர் என்ன?
யஜுர் வேதம்.

139. பிரம சூத்திரத்தை எழுதியவர் யார்?
வேத வியாசர்.

140. பகவத் கீதை - இராமாயணத்தின் ஒரு பகுதி ஆகும். சரியா - தவறா?
தவறு.

141. ஆதி சங்கரரின் காலம் எது?
கி.பி. 9ஆம் நூற்றாண்டு.

142. ஆதி சங்கரர் யாருடைய மூன்று நூல்களுக்கு உரை எழுதினார்?
தோமா வழி திராவிடக் கிறிஸ்தவரான வியாசரின் நூல்களுக்கு உரை எழுதினார்.

அதில் வியாசர் எழுதியவை 2. தொகுத்தது 1.

143. அந்த மூன்று நூல்களின் பெயர்களை எழுதுக?
பிரம சூத்திரம், பகவத்கீதை, உபநிஷத்துக்கள்.

144. இராமாயணத்தை சமஸ்கிருதத்தில் எழுதியவர் யார்?
வால்மீகி முனிவர்.

145. மனுநூலை மனுதர்ம சாஸ்திரமாக மாற்றியவர் யார்?
ஆதிசங்கரர்.

146. காளிதாசர் ஆரியரா? திராவிடரா?
திராவிடர்.

## வழிபாடு - மதம் :

147. வழிபாடு - மதம் வேறுபாடு?

### வழிபாடு :

வழிபாடு என்பது தனி மனித நம்பிக்கை. எப்படி வேண்டுமானாலும் எதை வேண்டுமானாலும் வழிபடலாம். அதற்கென்று வரையறுக்கப்பட்ட சட்ட திட்டங்களோ, தத்துவங்களோ, இறையியல் கோட்பாடுகளோ, வேதங்களோ கிடையாது.

**மதம் :**

இது சமயம் எனப்படும். அதாவது, சமைக்கப்பட்டது - ஒழுங்குபடுத்தப்பட்டது என்று பொருள். இதற்கென்று தனிக்கோட்பாடு (Doctrine) உண்டு. தனி வேத நூல், சட்ட திட்டங்கள் உண்டு.

148. உலகில் உள்ள சமயங்கள் எத்தனை வகைப்படும்?

மூன்று வகைப்படும். அவை

1. பலி மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கள்
2. பலிக் கோட்பாட்டுச் சமயங்கள்
3. பலி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயங்கள்.

## இந்து - இந்துத்துவம் - இந்துமதம்:

149. 'இந்து' என்ற சொல் – விளக்கம் தருக :

'சிந்து' என்ற சொல்லைப் பாரசீகர் 'இந்து' என்று உச்சரித்தனர். சிந்து நதியைச் சுற்றிலும் வாழ்ந்த திராவிட மக்களை அச்சொல் குறித்தது. 'இந்து' என்ற சொல் மதத்துடன் தொடர்புடையதன்று.

150. 'இந்துத்துவம்' என்றால் என்ன?

'இந்துத்துவம்' – என்பது ஒரு மதம் இல்லை. இது ஒரு வாழ்க்கை முறை. 'ஆரியர் பிறப்பால் உயர்ந்தவர், திராவிடர் பிறப்பால் தாழ்ந்தவர்' என்பதை ஏற்றுக்கொண்டு வாழும் ஆரிய வாழ்க்கை முறையாகிய சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையே 'இந்துத்துவம்' அல்லது 'இந்துத்துவா' என்று குறிக்கப்படுகிறது.

151. 'இந்துமதம்' – 'இந்துத்துவா' வேறுபாடு என்ன?

'இந்துமதம்' என்பது சைவ, வைணவ சமயங்களைக் குறிக்கும். இவை தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகள்.

'இந்துத்துவா' என்பது சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையைக் குறிக்கும். இக்கொள்கை ஆரிய பிராமணர்களுடையது.

152. ஆரியர்கள் நிற, இனவெறியை அடிப்படையாகக் கொண்டு எழுதிய சட்ட நூல் எது?

மனுநூல்.

153. இந்தியாவில் கிறிஸ்தவத்தை எவ்வாறு வகைப்படுத்தலாம்?

1. தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்
2. சீரியக் கிறிஸ்தவம்.
3. ஐரோப்பிய வழி இந்தியக் கிறிஸ்தவம்.

154. 'யவனர்' என்னும் சொல் யாரைக் குறிக்கிறது?

'யவனர்' என்னும் சொல் முதலில் கிரேக்கர்களையும், பின்பு உரோமர், யூதர், சீரியர் ஆகியோரையும் குறித்தது.

155. இந்தியாவிற்கு வந்த யவனராகிய தூய தோமா கூறிய நற்செய்தி என்ன ஆயிற்று?

தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாக வளர்ந்தது.

156. தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் என்றால் என்ன?

தூய தோமா இந்தியாவில் கூறிய நற்செய்தி இந்திய மண்ணிலும், இந்திய மொழியிலும் திராவிடப் பண்பாட்டு அடிப்படையில் கி.பி. முதல் நூற்றாண்டு முதல் வளர்ச்சியுற்றது. இந்தக் கிறிஸ்தவம்தான் தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் ஆகும்.

157. தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவம் - தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம், இரண்டும் ஒன்றா? வேறுவேறா?

இரண்டும் ஒன்றே. யவனரான தூய தோமா தட்சசீலத்திலிருந்து கேரளா வழியாக, தமிழ் மண்ணிற்கு வந்தார் என்பது பாரம்பரியம் ஆகும். அவர் கொலை செய்யப்பட்டார் என்பதும், தமிழ் மண்ணில் திருமயிலையில் அடக்கம் செய்யப்பட்டார் என்பதும் பாரம்பரியம் ஆகும்.

திருமயிலையில் இருந்துதான் முதல் தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவ நூலான திருக்குறள் மலர்ந்தது. அதன் பின் தூய தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் தமிழ்நாட்டில் பக்தி இயக்கமாகப் பரிணமித்தது. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பின் தமிழ்ப் பக்தி இயக்கம் சைவ, வைணவமாக வளர்ச்சியுற்றது. தமிழ்நாட்டில் சைவ, வைணவக் கோவில்கள் பேரளவில் உருவாயின.

எனவே, 'தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவம்' என்றாலும் 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்' என்றாலும் ஒன்றே.

158. இந்தியாவின் 275 பழமையான சிவன் கோவில்களில் எத்தனை கோவில்கள் தமிழ்நாட்டிலேயே இருக்கின்றன?

230

159. இந்தியாவின் பழமையான 108 வைணவத் திருப்பதிகளில் எத்தனை திருப்பதிகள் தமிழ்நாட்டிலேயே இருக்கின்றன?

96.

160. சைவத்தை வளர்த்த நாயன்மார் எத்தனை பேர்?
63 பேர்.

161. வைணவத்தை வளர்த்த ஆழ்வார் எத்தனை பேர்?
12 பேர்.

162. சைவத்தில் 'கோயில்' என்று சொன்னாலே அது எதைக் குறிக்கும்? அது எங்கே இருக்கிறது?
அது சிதம்பரத்தைக் குறிக்கும். அது தமிழ்நாட்டில் இருக்கிறது.

163. வைணவத்தில் 'கோயில்' என்றாலே அது எதைக் குறிக்கும்? அது எங்கே இருக்கிறது?
திருவரங்கத்தைக் குறிக்கும். அது தமிழ்நாட்டிலேயே உள்ளது.

164. பொதுவாக, பெயர்களை எவ்வாறு பிரிக்கலாம்?
இடுகுறிப் பெயர் (Arbitrary name)
காரணப் பெயர் (Logical name)

165. 'மேசியா' என்பதற்கு என்ன பொருள்?
எண்ணெய் ஊற்றப்பட்டவர்.

166. படித்தவர்கள், பொதுமக்கள் அனைவருக்கும் நற்செய்தியைக் கூறுவதற்காக, தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் எந்தெந்த நோக்குகளில் (Aspects) விளக்கப்பட்டுள்ளது?

1) புராண நோக்கு
2) இலக்கிய நோக்கு
3) இறையியல், தத்துவ நோக்கு
4) சிற்பவியல் நோக்கு
5) வரலாற்றுநோக்கு.

167. அன்பு என்பதைக் குறிக்கும் மற்றொரு தமிழ்ச் சொல் என்ன?
சிவம்.

168. அன்பே உருவான கடவுளுக்கு, தமிழில் என்ன பெயர்?
சிவன்.

169. நாம் அனைவரும் நீங்காத இன்பத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக அன்பே உருவான கடவுள் மனிதனாகப் பிறந்ததைக் கூறும் சைவ சித்தாந்தப் பாடல் ஒன்றை எழுதவும்.

"இறவா இன்பத்து எமை இருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்தான்"

170. பாவியர் பாவத்தைப் போக்குவதற்காக இறைவன் பலியானார் என்பதை விளக்கும் தேவாரப் பாடலை எழுதுக.

"அவியாய் அவியுமாகி, அருக்கமாய்ப் பெருக்கமாகிப்
பாவியர் பாவம் தீர்க்கும் பரமனாய்ப் பிரமனாகி"

...அப்பர் தேவாரம் பா.எ. 320

171. குருவாக அவதரித்த கடவுள், கோடு ஆயுதத்தால் அதாவது, மரக் கொம்பாலான ஆயுதத்தால் கொடிய பாவ வினையைத் தீர்த்தார் என்பதை விளக்கும் சைவப் பாடலை எழுதுக.

'குருவடி வாகிக் குவலயம் தன்னில்
திருவடி வைத்துத் திறம் இது பொருள் என
வாடாவகைதான் மகிழ்ந்து எனக்கு அருளிக்
கோடு ஆயுதத்தால் கொடுவினை களைந்தே'

172. மனிதனாக வந்த கடவுள் தீமையை வென்றார் என்கிற தன்மையை, சைவம் புராண நோக்கில் எந்தப் பெயரில் விளக்குகிறது?
குமரக் கடவுள் / முருகன்.

173. சிவனுடைய வேறு பெயர்கள் யாவை?
நீலகண்டன், மகேஸ்வரன், தட்சிணாமூர்த்தி, நடராசன்....

174. விஷ்ணுவின் வேறு பெயர்கள் யாவை?
திருமால், பெருமாள், நாராயணன், வெங்கடேசன்....,

175. வைணவத்தில், நீரின் மேல் அசைவாடுபவர் எனும் பொருள் தரும் கடவுளின் பெயர் என்ன?
நாராயணன்.

176. முருகனின் வேறு பெயர்கள் யாவை?
குமரன், வேலன், கந்தன், கார்த்திகேயன்...,

177. மனிதனாக வந்த கடவுள் இறந்து உயிர்பெற்றார் என்கிற தன்மையை, சைவம் புராண நோக்கில் எந்தப் பெயரில் விளக்குகிறது?
பிள்ளையார்.

178. பிள்ளையாருடைய வேறு பெயர்கள் யாவை?
விநாயகர், கணபதி, விக்னேஷ்வர்....,

179. மனிதனாக வந்த கடவுள் சூரியனைப் போன்ற ஒளிமயமானவர் என்பது எந்தப் பெயரில் விளக்கப்படுகிறது?
ஐயப்பன்.

180. மனிதனாக வந்த கடவுள் உலகப் படைப்புக்குக் காரணமானவர் என்பது எந்தப் பெயரில் விளக்கப்படுகிறது?
பிரமன்.

181. சிந்தனையின் வெளிப்பாட்டு வடிவங்களின் ஆறுநிலைகளைக் குறிப்பிடவும்.
சிந்தனை வடிவம்.
சொல் வடிவம்.
எழுத்து வடிவம்.
ஓவிய வடிவம்.
புடைசிற்ப வடிவம்.
சிற்ப வடிவம்.

182. சைவ, வைணவ சிற்பங்கள் வழி விளக்க முற்பட்ட பொதுவான கருத்து என்ன?
கடவுள் மனித உரு எடுத்து, இவ்வுலகிற்கு வந்து, தன்னையே பலியாகக் கொடுத்தார் என்னும் கருத்தை, சாதாரண - பொது மக்கள் விளங்கிக் கொள்வதற்காக, சிற்பங்கள் வழி விளக்க முயன்றனர்.

183. சைவத்தில் பிதா, குமாரன், தூய ஆவியாகிய மூவரை இணைத்துக் காட்டும் உருவத்திற்கு என்ன பெயர்?
சோமாஸ்கந்தர்.

184. வைணவ நோக்கில் சிவன், விஷ்ணு, பிரமா இணைந்திருக்கும் உருவத்திற்கு என்ன பெயர்?
மும்மூர்த்தி.

185. கடவுள் ஒருவரே; ஆனால் இரண்டு நிலைகளில் செயல்படுகின்றார் என்பதைக் காட்டும் உருவங்களின் பெயர்கள் என்னென்ன?
அர்த்தநாரீஸ்வரர் - அரிஅரர்.

186. அர்த்தநாரீஸ்வரர், ஹரிஹரர் ஆகிய இவை இரண்டும் எதை விளக்குகின்றன?
அர்த்தநாரீஸ்வரர், ஹரிஹரர் ஆகிய இரண்டு உருவங்களிலும் சிவனுக்கு இடப்பகுதியில் உள்ள இருவரும் (சக்தியும், விஷ்ணுவும்) தூய

ஆவியானவரின் பெண், ஆண் உருவகங்களே என்பதை விளக்குகின்றன.

187. சிவனின் உடம்பின் இடப்பாகம் பெண் வடிவாக (சக்தி) விவரிக்கப்பட்டால், அது எவ்வாறு குறிக்கப்படுகிறது?
அர்த்தநாரீஸ்வரர்.

188. சிவனின் உடம்பின் இடப் பாகம் ஆண் வடிவாக (விஷ்ணு) விவரிக்கப்பட்டால், அது எவ்வாறு குறிக்கப்படுகிறது?
அரிஅரன்.

189. சிவனுடைய உடம்பின் இடதுபாதி ஆண்வடிவமாகவும், பெண் வடிவமாகவும் சித்தரிக்கப்படுவது எதை விளக்குகிறது?
அன்பே உருவான பிதாவாகிய கடவுளாம் சிவனின் உடம்பின் இடப்பாகம் தூய ஆவியை இரண்டு நோக்கில் சித்தரிக்கும் (metaphorism) உருவக நிலையைக் காட்டுகிறது.

அதாவது, பிதாவாகிய கடவுள், தூய ஆவியாகிய கடவுள் (பெண் நிலை) சைவ நோக்கில் அர்த்தநாரீஸ்வரராக விளக்கப்பட்டுள்ளது.

பிதாவாகிய கடவுள், தூய ஆவியாகிய கடவுள் (ஆண் நிலை) வைணவ நோக்கில் அரிஅரராக விளக்கப்பட்டுள்ளது.

190. 'மூன்று தலைகள் – ஒரே உடல்' உள்ள சிவன் உருவம் மூலம் விளக்கப்படுகின்ற கருத்து என்ன?.
'சிவன், சக்தி, குமரக்கடவுள்' – 'சிவன், விஷ்ணு, பிரமன்' எனப் பல்வேறு முறைகளில் கடவுள் மூன்று வித்தியாசமான ஆள்தத்துவமாகக் காணப்பட்டபோதிலும், அவர் மூவரல்லர் – மூன்று ஆள்தத்துவமுடைய ஒரே கடவுளே ஆவார் என்பதையே மேற்கண்டவை காட்டுகின்றன.

191. சோமாஸ்கந்தர் – விளக்கம் தருக.
சோமாஸ்கந்தர் = ச + உமா + ஸ்கந்தர் = உமை, கந்தனுடன் உள்ள கடவுள்; பிதாவாகிய கடவுள் சிவனாகக் காட்டப் படுகிறார்; தூய ஆவி 'பெண்' என்ற நிலையில் உமையாகக் காட்டப்படுகிறார்; மகன் என்ற நிலையில் 'கந்தன்' காட்டப்படுகிறார்.

192. மும்மூர்த்தி – விளக்கம் தருக.
கிறிஸ்தவத் திரித்துவக் கருத்து வைணவத்தில் மும்மூர்த்தியாக விளக்கப்பட்டுள்ளது.

கடவுள் – சிவனாகக் காட்டப்படுகிறார். பெண் தெய்வம் உமைக்குக் பதிலாக,

வைணவத்தில், தூய ஆவியைக் குறிக்கும் ஆண் கடவுளாக விஷ்ணு காணப்படுகிறார். மகன் என்ற நிலையில் ஸ்கந்தனின் இடத்தில் பிரமனைக் காண்கிறோம் - மூவருமே ஆணாகக் காணப்படுகின்றனர். இது மும்மூர்த்திகள் என்று விளக்கப்படுகிறது.

193. நடராஜர் - விளக்கும் தத்துவம் என்ன?

மனிதனாக வந்த கடவுள் தன் சாவின் மூலம் தீமையை வென்று, சாவை வெற்றி கொண்டதைக் குறிப்பதே நடராஜர் விளக்கமாகும். இச்சம்பவம் நடைபெற்றது மயானத்தில். இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததும் மயானத்தில் - கல்லறையில் தான் நடந்தது. உயிர்த்தெழுதல் - மகிழ்ச்சிக்குரியது ஆகும். மகிழ்ச்சிக்குரிய வெற்றி ஆகும். எனவே இது 'ஆனந்தக்கூத்து' என்றும், அவ்வாறு ஆடுபவரை 'ஆனந்தக்கூத்தன்' என்றும் சொல்வர்.

194. சிவலிங்க வழிபாட்டில் கிறிஸ்துவிற்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் பலி செலுத்தப்பட்டதா?

பலி செலுத்தப்பட்டது.

195. சிவக்குடும்ப வழிபாட்டில் பலி உண்டு. சரியா - தவறா?

தவறு.

196. சிவக்குடும்ப வழிபாட்டில் பலி இல்லாமல் போனதற்குக் காரணம் என்ன?

கடவுளே மனிதனாக வந்து தன்னையே பலியாக்கியதால் இனி கடவுள் பெயரால் பலி செலுத்தத் தேவையில்லை எனும் நிலையில் சிவக்குடும்பம் பலி நிறைவேற்றக் கொள்கையுடையதாய் விளங்குகிறது.

197. இயேசு ஜீவனுள்ள கல் (உயிருள்ள சிவலிங்கம்) என்று அழைக்கப்படுகிறார். ( 1 பேதுரு 2:4 ) ஜீவனுள்ள கல்லாகிய இயேசுகிறிஸ்து என்று அவர் குறிக்கப்படுவது ஏன்?

கடவுளுடைய அன்பின் வெளிப்பாட்டை அறிந்து கொள்ள உதவியது இஸ்ரவேல் வழிபாட்டில் உள்ள கல்லாகிய சிவலிங்கம் ஆகும். அதைப் போல் கடவுளுடைய அன்பின் வெளிப்பாட்டை உலகிற்கு வெளிப்படுத்தியவர் இயேசு கிறிஸ்து ஆவார். (யோவான் 3:16) கிறிஸ்து வருவதற்கு முற்பட்ட காலங்களில் கல் ஒன்றை நட்டு அதன் மூலம் கடவுளை வழிபடும் நிலையிலிருந்து வேறுபட்டு, கடவுளே இவ்வுலகில் மனிதனாக - கிறிஸ்துவாக வந்ததால், ஜீவனோடு இவ்வுலகில் வந்த மனிதக் கடவுள், 'ஜீவனுள்ள கல்' என்று குறிக்கப்படுகின்றார்.

198. சிவக்குடும்ப வழிபாட்டில் கடவுளை விளக்கும் ஏழு புராணப் பெயர்கள் யாவை?
சிவன், சக்தி, விஷ்ணு, குமரன், பிள்ளையார், பிரமன், ஐயப்பன்.

199. 'ஓம்' - பொருள் தருக
'ஓம்' என்பது மூலப்பிரணவ மந்திரம் என்கின்றனர் சைவர். 'உலகத் தோற்றத்திற்குக் காரணமான ஒலி' என இதற்குப் பொருள் கூறுகின்றனர். திருமறையில் உலகைப் படைத்த முதல் வார்த்தை இவ்வாறு குறிக்கப்படுகிறது.

200. கிறிஸ்தவத்தில் சிலுவை எந்தக் காலக் கட்டத்திலிருந்து சிறப்பிக்கப்பட்டது?
ரோமப் பேரரசனாகிய கான்ஸ்டன்டைன் கி.பி. நான்காம் நூற்றாண்டில் சிலுவைக்குச் சிறப்புக் கொடுத்தார். அதற்குப் பின்னரே கான்ஸ்டன்டைனைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் சிலுவைக்குச் சிறப்பு கொடுத்தார்கள்.

201. 'வேதத்தில் உள்ளது நீறு' என்ற பாடலில் குறிப்பிடப்படும் வேதம் எது?
'பைபிள்' . நான்கு வேதங்களில் திருநீறுபற்றிய குறிப்பு இல்லை.

202. சாம்பல் புதன் கிழமைக்கு மற்றொரு பெயர் என்ன?
திருநீற்றுத் திருநாள்.

203. எபிரேயர் 9:13 எதை விளக்குகிறது?
பாவம் நீக்கும் பரிகாரப் பொருளாக இரத்தமும், சாம்பலும் விளங்குவதைக் குறிக்கிறது.

204. திருநீறு தயாரிக்கும் முறையைப் பழைய ஏற்பாடில் எந்தப் பகுதி விளக்குகிறது?
எண்ணாகமம் 19ஆம் அதிகாரம் 2, 3, 5, 9 வசனங்கள்.

205. திருநீறு விளக்கும் மூன்று நிலைகள் யாவை?
1. (கிறிஸ்துவின்) மரணம்
2. (கிறிஸ்துவின்) உயிர்த்தெழுதல்
3. (கிறிஸ்து அளிக்கும்) பாவமன்னிப்பு.

206. சைவர்கள் நெற்றியில் திருநீற்றால் படுக்கையான மூன்று கோடுகள் இட்டு, மையக் கோட்டின் மத்தியில் சந்தனப் பொட்டும் அதன் மத்தியில் குங்குமமும் வைப்பது எதைக் குறிக்கின்றது?

திருநீற்றால் மூன்று கோடுகள் இடுவது மூவொரு கடவுளாகிய பிதா, குமாரன், ப.ஆவியையும் (மூன்று கோடுகள்), மையக் கோட்டில் சந்தனப் பொட்டும் அதன் மத்தியில் குங்குமமும் வைப்பது, மனிதனாக வந்த கடவுள், மனிதரை மீட்கும் பொருட்டு, சிலுவை மரத்தில் (சந்தனம்) சிந்திய இரத்தத்தையும் (குங்குமம்) குறிக்கின்றன.

207. வைணவர்கள் நெற்றியில் திருமண்ணால் செங்குத்தாக 'U' வடிவில் கோடுகள் இட்டு, மையத்தில் சிவப்புக் கோடு மேலிருந்து கீழே இடுவது எதைக் குறிக்கின்றது?

பிதா, குமாரன், ப.ஆவியாம் மூவொரு கடவுள், மனிதனாக வந்த நிலையில், இரத்தம் சிந்தி மனிதரை மீட்டெடுத்தார் என்பதில், இரத்தம் வடிவதைக் காட்ட சிவப்புக் கோடு மேலிருந்து கீழாக இடப்படுகின்றது.

## சைவ சித்தாந்தம்:

208. தோமாவழி திராவிடக் கிறிஸ்தவ இறையியல் நூல்களின் பெயர் என்ன?
சைவசித்தாந்த சாத்திரங்கள்.

209. சைவசித்தாந்த சாத்திரங்களின் காலம் என்ன?

கி.பி. 12ஆம் நூற்றாண்டு முதல்
கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரை.

210. சைவசித்தாந்த சாத்திரங்கள் மொத்தம் எத்தனை?
14

211. சைவசித்தாந்த சாத்திரங்களுள் சூத்திரத்தால் ஆன சாத்திரம் எது?
சிவஞானபோதம்.

212. சைவசித்தாந்த சாத்திரங்களில் முதல் சாத்திரம் எது?
திருவுந்தியார்.

213. பைபிளில் கூறப்பட்டுள்ள படைப்பு முதல் மீட்பு வரையிலான செய்தியை 12 சூத்திரத்திலேயே விளக்கும் சைவ சித்தாந்த சாத்திரம் எது?
சிவஞானபோதம்

214. சிவஞானபோதத்தின் ஆசிரியர் பெயர் என்ன?
மெய்கண்டார்.

215. சிவஞானபோதத்தில் மொத்தம் எத்தனை சூத்திரங்கள் உள்ளன?
12. (பன்னிரெண்டு)

216. பிறக்கும்போதே வருகின்ற பாவத்தை, சைவசித்தாந்தம் எவ்வாறு குறிக்கிறது?
சகசமலம்.

217. நம் தீவினை இறைவனுடைய நல்வினையால் நீக்கப்படுகிறது என்பதை விளக்கும் சைவ சித்தாந்தத் தொடர் எது?
இருவினை ஒப்பு

218. இறைவனால் நம் பாவம் கழுவப்படுகிறது என்பதை விளக்கும் சைவசித்தாந்தத் தொடர் எது?
மலபரிபாகம்

219. பாவம் கழுவப்பட்ட ஆன்மா, கடவுளின் பாதம் சரண் அடைகிறது என்பதை விளக்கும் சைவ சித்தாந்தத் தொடர் எது?
சத்தினிபாதம்.

## இன, சாதி ஏற்றத்தாழ்வு :

220. ஆரியர் உயர்ந்தவர், திராவிடர் தாழ்ந்தவர் என்ற கருத்து உலகம் முழுவதும் பரவக் காரணமாயிருந்தோர் யார், யார்?
சர். வில்லியம் ஜோன்ஸ், மாக்ஸ் முல்லர்.

221. திராவிடர் என்பது இனத்தைக் குறிக்குமா? அல்லது திராவிட மொழி பேசுபவர்களைக் குறிக்குமா?
இனத்தைக் குறிக்கும்.

222. திராவிடர் என்போர் யார்?
இந்தியாவிற்கேயுரிய மண்ணின் மைந்தர்.

223. ஆரியர் என்போர் யார்?
வெளிநாட்டிலிருந்து இந்தியாவின் மீது வெவ்வேறு காலங்களில் படையெடுத்து வந்த

1. பாரசீகர் 2. கிரேக்கர் 3. சகர் 4. குஷானர் 5. ஹூணர் மற்றும் வாணிபத்திற்காக வந்த 6. ரோமர் ஆகிய ஆறு வகைக் கூட்டத்தினரும் பிற்காலத்தில் 'ஆரியர்' எனும் பொதுப் பெயரால் குறிக்கப்பட்டனர்.

224. இந்தியா தவிர, உலக மொழிகள் எதிலும் ஆரியர் என்ற பெயர் எந்த நூற்றாண்டு வரை இடம் பெறவில்லை?
கி.பி. 18ஆம் நூற்றாண்டு வரை.

225. ஆரியர்கள் எந்தெந்த அடிப்படையில் - ஒன்றிணைந்தனர்?

a. வெள்ளை நிறம்

b. வெளிநாட்டிலிருந்து வந்தவர்கள் என்ற நிலை.

c. உள்நாட்டினரை அடக்கியாள வேண்டும் எனும் வாஞ்சை.

226. இந்தியாவில் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை மிகப் பழமையான காலத்திலிருந்தே இருக்கின்றதா?

இல்லை. இதற்கு ஆதாரமாகப் பழமையான சங்க இலக்கியத்தைக் கூறலாம். சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் நான்கு குடிகள் தொழில் அடிப்படையில் குறிப்பிடப்படுகின்றனவே தவிர பிறப்பு அடிப்படையில் அல்ல.

227. சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் நான்கு குடிகள் யார் யார்?

பாணன், பறையன், துடியன், கடம்பன்.

| | | |
|---|---|---|
| பாடுபவன் | = | பாணன் |
| பறையடிப்பவன் | = | பறையன் |
| துடி தட்டுபவன் | = | துடியன் (துடி = உடுக்கு) |
| கடம்பை முழக்குபவன் | = | கடம்பன் |

இவை சாதி ஏற்றத்தாழ்வு அல்ல.

228. சங்க இலக்கியத்தில் தமிழ்த் தலைவர்களைக் குறிக்கும் பெயர்கள் யாவை?

ஐயர் - அந்தணர் - பார்ப்பான். இவை தமிழ்த் தலைவர்களைக் குறித்த பெயர்கள். ஆரியருக்கும் இப்பெயர்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. ஐயர் - அந்தணர் - பார்ப்பான் என்பன தமிழ்த் தலைவர்களையும் தமிழ்ச் சமயப் பெரியோர்களையும் குறிக்கின்றதே தவிர இவற்றிற்கும் ஆரியருக்கும் எந்தத் தொடர்புமில்லை.

229. பிராமணர்களைத் திருமூலர் எவ்வாறு குறிப்பிடுகிறார்?

பேர் கொண்ட பார்ப்பான். அதாவது போலி பார்ப்பான்.

230. ஆரிய பிராமணருக்கு முன்பு சைவ, வைணவக் கோவில்களில் திராவிட குருக்களே பூசாரிகளாய் இருந்தனர் என்பதை எடுத்துக் காட்டும் பழமொழி எது?

'பார்ப்பானுக்கு மூத்த பறையன்

கேட்பாரில்லாமல் கீழ்ச் சாதியானான்' .

231. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை இந்தியாவில் எந்த நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது?
கி.பி. 7ஆம் நூற்றாண்டிற்குப் பின்.

232. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை உருவாக்கியவர் யார்?
வெளிநாட்டிலிருந்து இந்தியாவிற்குப் பிழைக்க வந்த ஆரியர். இந்தியாவில் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கை ஆரிய பிராமணராகிய ஆதி சங்கரர் காலத்தில் தர்மமாக ஆக்கப்பட்டது. அரசியல் ஆட்சியாளர்களைக் கையில் வைத்துக் கொண்டு, வன்முறை மூலம் இக்கொள்கையைப் பரப்பினர். இதற்காக ஆதி சங்கரரால் நிறுவப்பட்ட மடங்களே சங்கரமடங்கள்.

233. சதுர் வர்ணம் என்றால் என்ன?
சதுர் = நான்கு. வர்ணம் = நிறம். நான்கு வர்ணங்கள் = நான்கு சாதிகள் என்று பொருள்.

பிராமணன், க்ஷத்ரியன், வைசியன், சூத்திரன். முதல் மூவர் ஆரியர். சூத்திரர் மட்டும் திராவிட இனத்தவர்.

234. யாகத்தின் மூலம் க்ஷத்ரியர் உருவாக்கப்பட்டதாகக் கூறப்படும் இடம் எது?
ராஜஸ்தானில் உள்ள மவுண்ட் அபு (Mount Abu.)

235. வரலாற்றில் க்ஷத்ரியர்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயர் என்ன?
இராஜபுத்திரர்.

236. வரலாற்று ஆசிரியர்களால் பேய்கள் (Devils) என்று குறிப்பிடப்பட்டவர்கள் யார்?
ஹூணர்கள்.

237. இந்தியா முழுவதும் உள்ள திராவிடர் எந்த இரண்டு பிரிவுகளில் சேர்க்கப்பட்டுள்ளனர்?
சூத்திரர் - பஞ்சமர்.

238. திராவிடரில் உயர்ந்த சாதி என்போர் யார்?
ஆரியரோடு தங்களை ஒன்றுபடுத்திக் கொண்டவர்கள்.

239. திராவிடரில் இடைப்பட்ட சாதியினர் யார்?
ஆரியருக்கு அடிபணிந்தவர்கள்.

240. திராவிடரில் கீழ்ச்சாதியினர் யார்?
ஆரியரை எதிர்த்தவர்கள்.

241. திராவிடர் ஆரியரால் ஐந்து பிரிவுகளாக எவ்வாறு பிரிக்கப்பட்டனர்?

| | | |
|---|---|---|
| 1. | சிவாச்சாரியார் | - பிராமண மயமாக்கப்பட்டவர்கள். |
| 2. | சற்சூத்திரர் | - ஆரியருக்குத் துணை போனவர்கள். |
| 3. | சூத்திரர் | - ஆரியருக்கு அடிபணிந்தவர்கள். |
| 4. | பஞ்சமர் | - ஆரியரை எதிர்த்தவர்கள். |
| 5. | மலை சாதியினர் | - மலைக்குத் தப்பி ஓடிப்போனவர்கள். |

242. ஆரியர்களின் எதிரி யார்?

திராவிட குருக்களும், ஞானிகளும் ஆவர். இவர்கள் ஆரியரை எதிர்த்ததால் பஞ்சமர் (அ) எதிரி என முத்திரை குத்தப்பட்டனர்.

243. பஞ்சமர்கள் - தீ வளர்த்துத் திருமணம் செய்வார்கள். சரியா? தவறா?

தவறு.

244. சாதி ஏற்றத் தாழ்வுக்கொள்கை எதன் அடிப்படையில் நிலை நிற்கிறது?

மத நம்பிக்கையின் அடிப்படையில்.

245. சாதி, இன வேறுபாட்டை, சைவ, வைணவ சமயங்களோடு இணைத்தவர் யார்?

ஆதி சங்கரர்.

246. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலைநிறுத்த ஆதிசங்கரர் உருவாக்கிய நிறுவனம் யாது?

சங்கரமடங்கள்.

247. ஆதிசங்கரர் எத்தனை சங்கரமடங்களை உருவாக்கினார்? அவை எங்கெங்கே உள்ளன?

4 சங்கரமடங்கள். அவை

| | | | |
|---|---|---|---|
| 1) | ஜோஷி மடம் | - | உத்திரபிரதேசம். |
| 2) | துவாரகை மடம் | - | குஜராத். |
| 3) | பூரி மடம் | - | ஒரிசா. |
| 4) | சிருங்கேரி மடம் | - | கர்நாடகம். |

248. ஆதிசங்கரர் காலத்திற்குப் பிறகு மிக அண்மைக் காலத்தில் தமிழகத்தில் உருவாக்கப்பட்ட மடம் எது?

காஞ்சி சங்கரமடம்.

249. ஆரியவர்த்தத்தின் ஆட்சிக்காலம் எது?

கி.பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்து

கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை.

250. சற்சூத்திரர் என்று அழைக்கப்படுபவர் யார் யார்?
சைவ வேளாளர், சைவ செட்டியார், சைவ முதலியார், கார்காத்தார்.

251. ஆரிய மயமாக்கப்பட்ட சூத்திரர் யார்?
சிவச்சாரியார்கள்.

252. ஆரியர்களால் உருவாக்கப்பட்ட தீய தத்துவங்கள் யாவை?

1. நிறவெறித் தத்துவம்.
2. இனவெறித் தத்துவம்.
3. சாதிவெறித் தத்துவம் முதலியன.

253. நிறவெறியை நிலைநாட்டும் நூல் எது?
மனுதர்ம சாஸ்திரம் என்று சொல்லப்படும் மனுநூல்.

254. மனுதர்ம சாஸ்திரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஐரோப்பியர் யார்?
சர்.வில்லியம் ஜோன்ஸ்.

255. சர்.வில்லியம் ஜோன்ஸ் எந்த ஆண்டில் மனுதர்ம சாஸ்திரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்?
கி.பி. 1794.

256. ஆரியர் போருக்குப் பயன்படுத்திய விலங்கு எது?
குதிரை.

257. பழைய சைவ, வைணவக் கோவில்களில் யார் பூசாரிகளாய் இருந்தார்கள்?
சைவக் கோவில்களில் பறையர்களும், வைணவக் கோவில்களில் பாணர்களும் பூசாரிகளாய் இருந்தனர்.

258. சைவக் கோவில்களில் பறையரும் வைணவக் கோவில்களில் பாணரும் பூசாரிகளாய் இருந்தனர் என்பதற்கு ஆதாரமாக இருவர் பெயர்களைக் கூறவும்?
நந்தனார், திருப்பாணாழ்வார்.

சிதம்பரத்தில் நந்தனாரும், திருவரங்கத்தில் திருப்பாணாழ்வாரும் கொலை செய்யப்பட்டமை ஆழ்ந்து சிந்தித்தற்குரியது.

259. பிராமணன் என்பது சாதியின் பெயரா? கொள்கையின் பெயரா?
கொள்கையின் பெயர்.
சிவனை வழிபடுபவன் சைவன்;
விஷ்ணுவை வழிபடுபவன் வைணவன்;
பிரமனை வழிபடுபவன் பிராமணன். எனவே, பிராமணன் என்பது கொள்கையின் பெயர். ஆனால் இது பின்னர் சாதிப் பெயராக மாற்றப்பட்டது.

260. குகையிடிக் கலகம் என்றால் என்ன? எந்த நூற்றாண்டில் நடைபெற்றது?
இந்தியாவில் சாதி ஏற்றத் தாழ்வுக்கொள்கையை உருவாக்கிய ஆரிய பிராமணர்கள், அரசியல் ஆட்சியாளர்களைக் கையில் வைத்துக் கொண்டு, வன்முறை மூலம் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நடைமுறைப்படுத்தினார்கள். எதிர்த்தவர்கள் கொலை செய்யப்பட்டனர். மற்றவர்கள் காடுகளுக்கு ஓடி, குகைகளில் ஒளிந்து வாழ வேண்டிய நிர்ப்பந்தத்திற்குள்ளாயினர். ஆனால், அங்கேயும் அவர்களைத் துரத்திச் சென்று, குகைகளை இடித்து, அவர்களைத் தாக்கி, கொலை செய்தனர். இது குகையிடிக் கலகம் என்று சொல்லப்படுகிறது. தமிழ் நாட்டில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் இது நடைபெற்றது.

261. ஆரிய இனம் பற்றிய கருத்து எந்த நூற்றாண்டிற்குப் பின்னர் உலகம் முழுவதும் பரவிற்று?
கி.பி பதினெட்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு.

262. ஹிட்லரின் கொள்கைக்கு என்ன பெயர்?
நாசிசம்.

263. புதுயுகக் கொள்கைக்கு அடிப்படை எது?
பிராமணீயம்.

264. திராவிடர்களின் மூல நூல்களுக்குத் திசை திருப்பும் வகையில் விளக்கம் எழுதிய மூவர் யார்?
சங்கரர், இராமானுஜர், மாத்துவர்.

265. கிழக்கு நாடுகளின் தூய நூல்கள் என்ற தலைப்பில் மாக்ஸ் முல்லர் கூறிய தவறான கருத்துகள் என்னென்ன?
ஆரியரின் மொழி சமஸ்கிருதம்; சமஸ்கிருதத்திலுள்ள இலக்கியங்களும், வேதங்களும் ஆரியருடையன, எனவே, ஆரியரே உயர்ந்த பண்பாட்டை உடையவர். ஆரியரே திராவிடருக்குப் பண்பாட்டைக் கற்றுக் கொடுத்தனர் என்பவையே தவறான கருத்துகள் ஆகும்.

266. ஐரோப்பியர் இந்தியாவை ஆட்சி செய்தபோது, யாருக்கு 'இந்திய ஐரோப்பியர் ', "Indo - Europeans" என்ற பெயர் கொடுத்தனர்?
இந்தியாவில் உள்ள பிராமணர் உட்பட உள்ள ஆரியர்களுக்கு.

267. "International Aryan League' என்ற அமைப்பை யார், யார் இணைந்து உருவாக்கினர்?
இந்திய ஆரியர்களும், ஐரோப்பியர்களும் இணைந்து உருவாக்கினர்.

268. ஆரிய இனமே உலகை ஆளப் பிறந்த இனம் என்று கூறி யார், யாரைக் கொன்று குவித்தான்?
ஹிட்லர், திராவிட வழி வந்த 60 இலட்சம் யூதர்களைக் கொன்று குவித்தான்.

269. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை நிலை நாட்ட இயங்கி வரும் அமைப்புகள் யாவை?
ஆர்.எஸ்.எஸ்., பா.ஜ.க., வி.எச்.பி., பஜ்ரங் தள், சிவசேனா.
( R.S.S., B.J.P., V.H.P., Bajrang Dal, Shivsena ).

270. இந்து மதத்தையும், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையையும், பிரிக்க முடியாத நிலை எந்த ஆண்டிலிருந்து தொடங்கியது?
ஏறத்தாழ, கி.பி. 1794இல் இருந்து

271. அத்வைதம் விளக்குவது உயிரையா? ஆன்மாவையா?
உயிரை (சிற்றுயிரை)

272. கிறிஸ்தவத்தில் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையைப் பாதுகாக்க பிராமணர்கள் யாருக்கு மேலிடம் கொடுத்தனர்?
சீரியக் கிறிஸ்தவர்களுக்கு

273. ஏறத்தாழ கி.பி.1966 வரை அமெரிக்காவில் இருந்து வந்த இனம் பற்றிய நம்பிக்கை என்ன?

- வெள்ளையர் அல்லாதவர்களுக்கு ஆன்மாவின் முழுமை கிடையாது.
- இவர்கள் ஆன்மாவை உடைய மனித இனத்தில் இல்லை.
- விலங்குகளையும், வெள்ளையர் அல்லாதவர்களையும் வேட்டையாடுவது ஒன்று தான்.
- வெள்ளையர் அல்லாதவர்களுக்கு5/6 பங்கு ஆன்மா தான் உண்டு.

274. இன மீட்பிற்குத் தேவையானது ஆன்மீகமா? தீவிரவாதமா?
ஆன்மீகம்.

275. ஆசிய நாடுகளின் இறையியல் கொள்கைக்கும் ஐரோப்பிய இறையியல் கொள்கைக்கும் உள்ள வேறுபாடு என்ன?
ஐரோப்பிய இறையியல் கொள்கையானது உயிருக்கும், ஆன்மாவிற்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாக விளக்கவில்லை. ஆசியர் இதைத் தெளிவாக விளக்குகின்றனர். இதன் காரணம் ஐரோப்பியர் பெரும்பாலானோர் பொருள்முதல் வாதிகள் (Materialist) ஆவர்.

276. 20ஆம் நூற்றாண்டின் இந்தியாவின் மிகச் சிறந்த இரண்டு சிந்தனையாளர் யார் யார்?
பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார், பாபா சாகேப் டாக்டர் B.R. அம்பேத்கார்.

277. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை எந்த துரோகத்திற்குச் சமம்?
விசுவாச துரோகத்திற்குச் சமம்.

278. மக்கள் விடுதலைக்கு அம்பேத்கார் காட்டிய வழி என்ன?
இந்து மதத்தை விட்டு வெளியேறி பௌத்தத்திற்கு மதம் மாறுதல்.

279. திராவிட இன விடுதலைக்குப் பெரியார் காட்டிய வழி என்ன?
கடவுள் மறுப்புக் கொள்கையான நாத்திகம்.

280. அம்பேத்கார் எந்த மதத்திலிருந்து எந்த மதத்திற்கு மாறினார்?
இந்து மதத்திலிருந்து பௌத்த மதத்திற்கு.

281. திராவிடர் சிந்தனையின்படி, 'அஹம் பிரமாஸ்மி' என்பதன் உண்மையான பொருள் என்ன?
'கடவுள் எனக்குள் இருக்கின்றார்'.

282. 'அஹம் பிரமாஸ்மி' என்பதற்கு, சங்கரர் கொடுத்த தவறான விளக்கம் என்ன?
'நானே கடவுள்'.

283. இந்தியாவிற்கு வெளியே பரவிய பிராமணியத்தின் மறு வடிவங்கள் யாவை?
நாசிசம், புதுயுகம் இயக்கம் (New Age Movement)

284. தூய தோமா வழிக் கிறிஸ்தவத்தின் கிளைகளான சைவமும் வைணவமும் எந்த நூற்றாண்டிலிருந்து ஆரிய வாழ்க்கை முறைக்கு அடிமைப்படுத்தப்பட்டு இன்றைக்கு எந்தப் பெயரில் உள்ளன?

தூய தோமா வழிக் கிறிஸ்தவத்தின் கிளைகளான சைவமும் வைணவமும் கி.பி. 9ஆம் நூற்றாண்டிலிருந்து ஆரியர்களின் வாழ்க்கை முறையாகிய வருணாசிரம தருமத்திற்கு அடிமைப் படுத்தப்பட்டு இன்று "இந்து மதம்" என்ற பெயரால் ஆரியப் பிராமணர்களுக்கு அடிமைப்பட்டு கிடக்கின்றன.

285. ஆரியப் பிராமணர்களின் இந்துத்துவத்திலிருந்து இந்து மதத்தை விடுவிப்பது யாருடைய கடமை?
ஆரியப் பிராமணர்களின் இந்துத்துவாவின் பிடியிலிருந்து இந்து மதத்தை விடுவிக்க வேண்டியது ஐரோப்பியப் பிடியிலிருந்து ஆன்மீக விடுதலை அடைந்த சைவ, வைணவ சமயங்களுக்கு உரிமையாளர்களான தோமா வழி திராவிட கிறிஸ்தவர்களின் கடமையாயிருக்கிறது.

286. இந்தியா எப்போது சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையிலிருந்து விடுதலையடையும்?
இந்துத்துவாவின் பிடியிலிருந்து சைவ, வைணவ சமயங்களாகிய இந்து மதத்தை விடுவித்துவிட்டால் இந்தியா சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையிலிருந்து விடுதலையடைந்து விடும்.

## பொதுவான கேள்விகள் :

287. 'சுவஸ்திக்' சின்னம் ஆரியருடையதா? திராவிடருடையதா? 'சுவஸ்திக்' சின்னம், 'தன்னை ஆரியர்' என்று கூறிக் கொண்ட ஹிட்லரால் பயன்படுத்தப்பட்டதே. அப்படி யானால் அது ஆரியரின் சின்னம் தானே? ஒன்றைப் பயன்படுத்துவதாலேயே அது அவருடையது என்று கூற முடியுமா? அதை முதன்முதல் யார், எப்போது, எந்தப் பொருளில் பயன்படுத்தத் தொடங்கினார்கள் என்று ஆராயும்போதுதான் உண்மை புலப்படும்.

"சுவஸ்திக் சின்னம்" திராவிடரின் சின்னம். ஏனெனில் திராவிடரின் பழமையான சிந்துவெளி முத்திரைகளில் 'சுவஸ்திக் சின்னம்' ஏராளமாகக் காணப்படுகிறது.

288. இந்தியா முழுவதும் ஒரு காலத்தில் தமிழ் பேசப்பட்டது என்பதை அம்பேத்கார் எந்தத் தொகுதி எந்தப் பக்கங்களில் குறிப்பிடுகிறார்?
தொகுதி : 7; பக்கம் : 299 -300.

289. திராவிடபதி யார்? இது பற்றி விளக்கும் புராணம் எது?
நோவா - மச்ச புராணம்.

290. இஸ்லாம் மதத்தின் இரண்டு பிரிவுகள் யாவை?
ஷியா, சுன்னி.

291. தமிழ்நாடு என்ற பெயர் வருவதற்கு உண்ணாவிரதமிருந்தவர் யார்?
சங்கரலிங்க நாடார்.

292. தமிழன் என்ற சொல் எவ்வாறு திரிந்து காணப்படுகிறது?
திராவிடன்

தமிழன் - திரமிளன் - திரமிடன் - திரவிடன் - திராவிடன்.

293. 'இராமர்' கடவுளின் அவதாரம் என்று கூறிய முதல் இலக்கியம் எது?
கம்பர் எழுதிய கம்பராமாயணம்.

கம்பராமாயணத்தின் மூலநூலாகிய வால்மீகி இராமாயணத்தில் 'இராமர்' கடவுளின் அவதாரம் என்று குறிக்கப்படவில்லை. கம்பர்தான் தன்னுடைய கம்பராமாயணத்தில் முதன் முதல் இராமரை, கடவுளின் அவதாரம் என்று குறிப்பிடுகிறார்.

294. சமயங்கள், அடிப்படையில் ஒரே மெய்ப்பொருளையே வெவ்வேறு கோணங்களில் விளக்குகின்றன என்றால், 'கடவுள் மனிதருக்காகத் தன்னையே தியாகம் செய்தார்' எனும் கருத்தை சமயங்கள் எந்தெந்தப் பெயரில் விளக்குகின்றன?

மனிதருக்காகத் தன்னையே தியாகம் செய்த கடவுளை, கிறிஸ்தவம் 'இயேசு' எனும் பெயரிலும் சைவம் 'தியாகராசன்', 'நீலமணிமிடற்றன்' முதலிய பெயர்களிலும், மகாயான பௌத்தம் 'போதிசத்துவர்' எனும் பெயரிலும் விளக்குகின்றன.

295. 'நினைவுக் கல்' இஸ்லாமில் எந்தப் பெயரில் உள்ளது?
காபாக் கல் / கறுப்புக் கல்.

296. கோவில் என்றாலே இஸ்லாமில் எதைக் குறிக்கும்?
'மெக்கா' வில் உள்ள கோவில்.

297. மெக்காவில் உள்ள கறுப்புக் கல்லை இஸ்லாமியர் எத்தனை முறை சுற்றி வந்து சிறப்பிப்பர்?
7 முறை.

298. இஸ்லாமியர் மெக்காவிலுள்ள கறுப்புக் கல்லைச் சுற்றி வரும்போது மரபுப்படி எப்படி உடை உடுத்தியிருக்க வேண்டும்?
தையல் இல்லாத வெள்ளை வேட்டி, தையல் இல்லாத வெள்ளைத் துண்டு

299. மெக்காவிலுள்ள கறுப்புக் கல்லை இஸ்லாமியர் யாருடைய வழிபாட்டு முறையில் சிறப்பிப்பதாகக் கூறுகின்றனர்?
தம் முன்னோராகிய இப்ராகிம் நபி அல்லது ஆபிரகாம் வழியில்.

300. தையல் இல்லாத வெள்ளை வேட்டியையும், தையல் இல்லாத வெள்ளைத் துண்டையும் அணிந்து கொண்டு சுற்றி, சுற்றி வந்து கடவுளை வழிபடும் முறை, உலகில் யாருடைய முறை?

தமிழர் முறை / திராவிடர் முறை.

301. பைபிளில் 'பெத்தேல்' என்பது குர்ஆனில் எந்தப் பெயரில் குறிக்கப்படுகிறது?

பைத்துல்லா.

302. இஸ்லாமில் ஆண்களும் பெண்களுமாகத் தொழக் கூடிய ஒரே இடம் எது?
மெக்காவிலுள்ள மசூதி மட்டும்.

303. திராவிட அரசராகிய அசோகனின் பேரனான பிருகத்ரதனை வஞ்சகமாகக் கொன்றுவிட்டு திராவிட ஆட்சியைக் கைப்பற்றிய ஆரியன் யார்? எப்போது? அவன் எந்த வம்சத்தைச் சேர்ந்தவன்?

புஷ்யமித்திரன். கி.மு. 185ஆம் ஆண்டில். அவன் சுங்க வம்சத்தைச் சேர்ந்தவன்.

304. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று அனைவரையும் சகோதரராகக் கருதும் உயர்ந்த தத்துவத்தைக் கூறிய தமிழ்ச் சான்றோர் பெயர் என்ன?
கணியன் பூங்குன்றனார்.

305. மக்களை உயர்ந்த சாதியினர், தாழ்ந்த சாதியினர் என்று கூறுபோடும் ஆரியக் கொள்கை ஒருபுறம் காணப்பட மனிதரை, கடவுள் வாழும் நடமாடும் கோவில் என்று கூறிய தமிழ்ச் சைவ அடியவர் யார்?

திருமூலர்.

306. கல்வியை, திராவிடர் எந்தப் பெயரில் உருவகித்தனர்?
சரஸ்வதி.

307. செல்வத்தை, திராவிடர் எந்தப் பெயரில் உருவகித்தனர்?

இலக்குமி (லஷ்மி).

308. விநாயகர் அகவல் பாடியவர் யார்?

ஔவையார்.

309. சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகமே என ஆராய்ச்சி அடிப்படையில் விளக்கிய வெளிநாட்டவர் யார்? யார்?

சர். ஜான் மார்ஷல்

Fr. ஹீராஸ்.

310. சிந்துவெளி பெண் தெய்வ உருவங்கள் கொம்புடன் காணப்படுகின்றன. சரியா? தவறா?
சரி.

311. திருவாசகத்தின் ஆசிரியர் பெயர் என்ன?
மாணிக்கவாசகர்.

312. திருமந்திரத்தின் ஆசிரியர் யார்?
திருமூலர்.

# டாக்டர் மு. தெய்வநாயகத்தின் ஆய்வுகள்மீது நடந்த விவாதங்களும் வெற்றியும்

## (i) திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே.... விவாதங்களும் வெற்றியும்

### ஆய்வு மாநாடு

திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே என்பதை விளக்கி டாக்டர் தெய்வநாயகம் அவர்கள்,

1. திருவள்ளுவர் கிறித்தவரா?
2. ஐந்தவித்தான் யார்?
3. வான் எது?
4. நீத்தார் யார்?
5. சான்றோர் யார்?
6. எழு பிறப்பு?

எனும் ஆறு நூல்களை எழுதியவுடன் தமிழகத்தில் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டது. எனவே இந்த ஆறு நூல்களை ஆராய்வதற்கென, அப்பொழுது தமிழகத்தில் இருந்த

1. சென்னைப் பல்கலைக்கழகம்
2. மதுரைப் பல்கலைக் கழகம்
3. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் மற்றும்
4. திருப்பதி வெங்கடேசுவரன் பல்கலைக் கழகம்

ஆகிய நான்கு பல்கலைக் கழகங்களையும் சார்ந்த முப்பத்தேழு அறிஞர்கள் ஒன்று சேர்க்கப்பட்டார்கள்.

தமிழக வரலாற்றிலேயே ஒரு தனி மனிதர் கருத்தை ஆய்வதற்கெனத் தமிழக அறிஞர்களை ஒன்று சேர்த்து ஆய்வு மாநாடு நாள் கணக்கில் நடத்தப்பெற்றது இதுவே முதன் முறையாகும்.

இம்மாநாடு 1972-ஆம் ஆண்டு மே மாதம் 3, 4ஆம் நாள்களில் சென்னைக் கிறிஸ்தவக் கலைத் தொடர்பு நிலையத்தில் அதன் தலைவரான மறைதிரு. சா. சுவிசேஷ முத்து அவர்களின் நன்முயற்சியால் நடத்தப்பட்டது.

திருவள்ளுவர் கூறும் மூவர் யார்? எனும் தலைப்பில் 1974இல்

வெளியிடப்பட்ட நூலில் இந்நிகழ்ச்சிகளைக் குறித்து விளக்கும் பகுதிகளிலிருந்து சில இங்கே 'அப்படியே' கொடுக்கப்படுகின்றன.

## மாநாட்டில் கலந்து கொண்டவர்கள்

மாநாட்டுச் சிறப்புத் தலைவர் :

மொழிநூல் மூதறிஞர், பண்டித **ஞா. தேவநேயப் பாவாணர்**, எம்.ஏ., அவர்கள்

அரங்கத் தலைவர் :

அருள்திரு. **சா. சுவிசேஷமுத்து**, B.T., B.D., M.Th., அவர்கள்
இயக்குநர், கிறித்தவக் கலைத்தொடர்பு நிலையம்.

## ஆய்வுக்குரிய நூல்கள்

### 1. ஐந்தவித்தான் யார்?

அணித்தலைவர் :

திருக்குறள் பீடம் **அழகரடிகள்** அவர்கள்

உறுப்பினர்கள் :

1. **டாக்டர் சி. பாலசுப்பிரமணியம்**, அவர்கள், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி., தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக் கழகம்.
2. பண்ணாராய்ச்சி வித்தகர். **பேராசிரியர் பி. சுந்தரேசனார்** அவர்கள்
3. **திரு. ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால்** அவர்கள்
   தலைவர், தென்னிந்திய ஜீவபிரசாரகர் சபை, சென்னை.
4. பேராசிரியர் **வி.பா.கா. சுந்தரம்**, எம்.ஏ., அவர்கள்
   இறையியற் கல்லூரி, மதுரை.
5. **செல்வி. ப. தமிழ்ச்செல்வி**, எம்.ஏ., அவர்கள்
   பேராசிரியை, ஆக்சிலியம் கல்லூரி, காட்பாடி விரிவு

### உ. வான் எது?

அணித்தலைவர்:

பன்மொழிப்புலவர் **கா. அப்பாதுரையார்** அவர்கள், எம்.ஏ., எல்.டி., விசாரத் (இந்தி

உறுப்பினர்கள் :

1. **டாக்டர் என். சுப்பு ரெட்டியார்** அவர்கள், எம்.ஏ., பிஎச்.டி.,
   தமிழ்த்துறை, திருவேங்கடத்தான் கல்லூரி, திருப்பதி.
2. **டாக்டர் ஞானப்பிரகாசம்** அவர்கள், எம்.ஏ., பிஎச்.டி.,
   தமிழ்த்துறை, லயோலா கல்லூரி, சென்னை.
3. பேராசிரியர் **லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார்** அவர்கள், சென்னை.
4. பேராசிரியர் **கே.எஸ். மகாதேவன்** அவர்கள், எம்.ஏ., மாநிலக் கல்லூரி, சென்னை.
5. **தத்துவக் கவிஞர் குடியரசு** அவர்கள், சென்னை.

## 3. நீத்தார் யார்?

அணித்தலைவர் :

டாக்டர் **வ.சுப. மாணிக்கம்** அவர்கள் எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.,
தலைவர், இந்திய மொழிப்புலம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

உறுப்பினர்கள் :

1. டாக்டர் **மு. கோவிந்தசாமி** அவர்கள், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
துணைப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
2. புலவர் **மு. சண்முகம் பிள்ளை** அவர்கள்
திருக்குறள் ஆராய்ச்சித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்
3. பேராசிரியர் **பொன் ஆ. சத்தியசாட்சி** அவர்கள் எம்.ஏ., எம்.ஓ.எல்.,
கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்
4. பேராசிரியை **சரசுவதி இராமநாதன்** அவர்கள், எம்.ஏ.,
சீதாலட்சுமி கல்லூரி, பள்ளத்தூர்.
5. பேராசிரியர் **இ.சு. முத்துசாமி** அவர்கள், எம்.ஏ., பி.டி.,
மாநிலக் கல்லூரி, சென்னை.

## 4. எழுபிறப்பு?

அணித்தலைவர் :

தவத்திரு. **குன்றக்குடி அடிகளார்** அவர்கள், எம்.எல்.சி.,

உறுப்பினர்கள் :

1. டாக்டர் **இரா. சாரங்கபாணி** அவர்கள், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி.
2. வித்துவான் **வை. இரத்தினசபாபதி** அவர்கள், பி.ஓ.எல்., எம்.ஏ., (தத்துவம்)
தத்துவத்துறை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
3. மகாவித்வான் **ச. தண்டபாணி தேசிகர்** அவர்கள்
4. ஆராய்ச்சி அறிஞர் **மயிலை சீனி-வேங்கடசாமி** அவர்கள், சென்னை.
5. வித்வான் **வி.பி. நடராசன்**, பசுமலை, மதுரை.

எதிர்பாராத காரணத்தால் அடிகளார் வர இயலாமையால். மகாவித்வான் அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

## 5. சான்றோர் யார்?

அணித்தலைவர் :

புலவர். **குழந்தை** அவர்கள் ( இராவண காவியம், ஆசிரியர் )

உறுப்பினர்கள் :

1. பேராசிரியர் **புலவர் நன்னன்** அவர்கள், எம்.ஏ.,
தமிழ்த்துறைத் தலைவர், கலைக் கல்லூரி, சென்னை.

2. பேராசிரியர் **மோசசு பொன்னையா** அவர்கள், எம்.ஏ., தமிழ்த்துறைத் தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

3. திரு. **சு.மி. டயசு** அவர்கள் ஐ.பி.எஸ்., டி.ஐ.ஜி. அலுவலகம், சென்னை.

4. திருவாட்டி **சாரதா நம்பியாரூரன்** அவர்கள், எம்.ஏ., மேரி அரசியார் கல்லூரி, சென்னை.

5. பேராசிரியர் **சோம இளவரசு** அவர்கள், எம்.ஏ., தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## 6. திருவள்ளுவர் கிறித்தவரா?

அணித்தலைவர் :

டாக்டர் **மெ. சுந்தரம்** அவர்கள், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி., தமிழ்த்துறைத்தலைவர், மாநிலக் கல்லூரி, சென்னை.

உறுப்பினர்கள் :

1. பேராசிரியர் **க.த. திருநாவுக்கரசு** அவர்கள், எம்.ஏ.,(தமிழ்), எம்.ஏ., (வரலாறு), எம்.லிட்., திருக்குறள் ஆராய்ச்சித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்

2. டாக்டர் **இராம. பெரிய கருப்பன்** அவர்கள், எம்.ஏ., பிஎச்.டி., தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக் கழகம்.

3. டாக்டர் **எம். இஸ்ரவேல்** அவர்கள், எம்.ஏ., பி.எச்டி., தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக் கழகம்.

4. புலவர் **க. வெள்ளைவாரணனார்** அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

5. பேராசிரியர் **எழில்முதல்வன்,** எம்.ஏ., மாநிலக் கல்லூரி, சென்னை.

## தடை செய்யப்பட வேண்டும்!

இம்மாநாட்டு நிகழ்ச்சிகள் நாளிதழ்களில் வெளிவரும் பொருட்டுத் தலைநகரிலுள்ள செய்தி நிறுவனங்கள் அத்தனையும் அழைக்கப்பட்டன. நாள் ஒன்றுக்கு மூன்று நூல்களாக இரண்டு நாள்களிலும் ஆறு நூல்கள் ஆயப்பட்டன. பொதுவாக ஆய்வு மாநாடு நன்முறையில் நடைபெற்ற போதிலும் சில நேரங்களில் அறிவு நிலையைக் காட்டிலும் உணர்ச்சி நிலை ஓங்கி இருந்தது எனலாம்.

★ "தமிழ்நாட்டில் இத்தகைய கருத்துகளைத் தெரிவிக்க ஆசிரியருக்கு உரிமை இல்லை."

★ "இப்புத்தகங்கள் யாவும் தடை செய்யப்பட வேண்டும்."

★ "இனி ஆசிரியர் நூல் எழுதக் கூடாது."

★ "அதை வெளியிடவும் கூடாது."

★ "நூல்கள் வெளியிடப்படுமானால் அதை எதிர்த்துப் போராட்டங்கள் நடத்தப்படும்."

என்ற ஆர்ப்பாட்ட ஒலிகள் எழுந்தன.

தமிழக வரலாற்றிலேயே ஒரு தனி மனிதர் கருத்தை ஆய்வதற்கெனத் தமிழக அறிஞர்களை ஒன்று சேர்த்து ஆய்வு மாநாடு நாள் கணக்கில் நடத்தப்பெற்றது. இதுவே முதன் முறையாகும்.

இவை மேடை மீதிருந்தே வந்த போதிலும் இதை எதிர்த்துக் கூட்டத்திலிருந்தும் குரல்கள் எழுந்தன. அவ்வாறு குரல் கொடுத்தோருள் குறிப்பிடத்தக்கவர் 'தமிழ்ப்பணி' ஆசிரியர் கவிஞர் சேதுராமன் முதலியோராவர்.

நூலாசிரியரைக் குறித்து பேராசிரியர் சோம இளவரசு அவர்கள்,

"நூலாசிரியரை (டாக்டர் தெய்வநாயகத்தை) மேடை மீது வைத்துக் கொண்டே அவரை எதிர்த்துக் கண்டனக் கணைகளையும் கேள்விக்கணைகளையும் வீசுவதும், அவர் கொஞ்சமும் அசையாது மலைபோலப் புன்சிரிப்புடன் வீற்றிருந்து பதில் கொடுப்பதும் வேடிக்கையாயும் வியப்பாயும் உள்ளன"

எனத் தமது உரையின் போது தெரிவித்தது இங்குக் குறிப்படத்தக்கது.

## மறைக்கப்பட்டன

செய்தி நிறுவனங்கள் அத்தனையும் அழைக்கப்பட்டிருந்தும் ஒரே ஒரு நாளிதழ் மட்டுமே மூன்று புத்தகங்களின் மறுப்புச் செய்திகளை மட்டுமே வெளியிட்டது. மற்றப் புத்தகங்களைப் பற்றி மறுப்புச் செய்திகளைக் கூட அது வெளியிடவில்லை. மற்ற நாளிதழ்களோ இம்மாநாட்டு நிகழ்ச்சிகள் எதையுமே வெளியிடாது மறைத்தன.

ஆகவே, வரலாற்றுச் சிறப்பு மிக்க அம்மாநாடு நடைபெற்ற செய்திகளோ, அதில் அறிஞர்கள் வெளியிட்ட நடுநிலை ஆய்வுக்கருத்துகளோ பொதுமக்களுக்கு எட்டா வண்ணம் மறைக்கப்பட்டன.

ஆய்வு அடிப்படையில் எதிர்க்க முடியாமல், உணர்ச்சி வயப்பட்டபோதிலும், அறிஞர்கள் அனைவருமே இப்படித்தான் இருந்தனர் என்று கூறமுடியாது. டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின் ஆய்வைப் புரிந்து கொண்டு பாராட்டிய அறிஞர்கள் பலரையும் பின்வருமாறு காணலாம்.

### *வியந்து பாராட்டத்தக்கது*

**புலவர் க. வெள்ளை வாரணனார்,** M.A.,Ph.D.,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

"இந்நூல்களின் ஆசிரியராகிய புலவர் மு. தெய்வநாயகம் அவர்கள் மேற்கொள்ளும் ஆராய்ச்சி முறையும் ஒத்த கருத்துகளைத் தொகுத்து நோக்கிச் சீர் தூக்கி முடிவு காணும் திறமும், பிறர் கருத்துகளை வேண்டிய இடத்துத் தமக்கு ஆதரவாக எடுத்துக் காட்டித் தன் கோள் நிறுவும் திறமும் அறிஞர்களால் வியந்து பாராட்டத்தக்கன."

### *மிகுந்த பாராட்டுக்குரியது*

**மகாவித்வான் தண்டபாணி தேசிகர்,**
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

"ஆசிரியருடைய பல நூலறிவும். பன்மொழிப் புலமையும். புதுமை காணும் போக்கில் இவர்களை மிக மிக ஊக்கியிருக்கிறது என்பதை உணரும்போது சில முடிவுகள் ஒவ்வாவாயினும், முடிவிற்கு நம்மை கூட்டிச் செல்லும் முறை மிகுந்த பாராட்டுக்குரியது."

### *மீண்டும் உயிர்த்தெழச் செய்திருக்கிறார்*

**டாக்டர் இராம. பெரியகருப்பன், எம்.ஏ., பிஎச்.டி.,**
மதுரைப் பல்கலைக் கழகம்.

"திருவள்ளுவர் கிறித்தவரா? முதலிய ஆறு நூல்களையும் எழுதிய புலவர் மு. தெய்வநாயகம் திருக்குறட் சிந்தனையைத் தமிழகத்தில் மீண்டும் உயிர்த்தெழச் செய்திருக்கிறார். புலவர் மு. தெய்வநாயகம் மிகப் பொறுமையாக எவ்விடத்திலும் உணர்ச்சி வசப்படாமல் இவ்வாய்வை நடாத்திச் செல்கிறார். அதன் வன்மை மென்மைகளைக் காணவேண்டுவது நம் கடமையாகும்."

### *தெய்வீக அரசை நிறுவப் பயன்படும்*

பன்மொழிப் புலவர் கா. **அப்பாத்துரையார்,** எம்.ஏ., (ஆங்கிலம்), எம்.ஏ., (தமிழ்), விசாரத், ஆசிரியர். **"மணி விளக்கவுரை"**

"ஆய்வாளர் முடிவுகள் திருக்குறளாராய்ச்சியில் புதுவழி புதுத்திருப்பம் உண்டுபண்ணுபவை என்பதில் ஐயம் இல்லை. தமிழகத்திலிருந்து பிறக்கும்

இப்புத்தொளி திருக்குறள் போலவே.......
உலகெலாம் பரந்து ஒளி வீசிப் புதிய
உலகை - ஒளியுலகத் தெய்வீக அரசை
நிறுவப் பயன்படுவதாக அமைக."

"நூலாசிரியரை
(டாக்டர் தெய்வநாயகத்தை)
மேடை மீது வைத்துக் கொண்டே
அவரை எதிர்த்துக்
கண்டனக் கணைகளையும்
கேள்விக்கணைகளையும்
வீசுவதும், அவர் கொஞ்சமும்
அசையாது மலைபோலப்
புன்சிரிப்புடன் வீற்றிருந்து பதில்
கொடுப்பதும் வேடிக்கையாயும்
வியப்பாயும் உள்ளன"
- பேராசிரியர் சோம இளவரசு

*அறிவுக்கண் திறப்பாகும்*

டாக்டர் மு. கோவிந்தசாமி, எம்.ஏ., பிஎச்.டி.,
தலைவர்,
திருக்குறள் ஆராய்ச்சித்துறை,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

"ஐந்தவித்தான்", 'இறந்தாரை எண்ணிக் கொண்டற்று', 'நிறைமொழி மாந்தர்' என்னும் குறள்களைக் கொண்டு நீத்தார் எனக் குறள் குறிப்பது இல்லறம் துறவறம் இரண்டும் கடந்தவரை; மனிதனாக வந்த இறைவனை; ஆண் மகனை, இறப்பை வென்றவனை; ஐம்புலனையும் பலியாகக் கொடுத்தவனை;......... என எடுத்துக் காட்டி இவையனைத்தும் இயேசு பெருமான் ஒருவர்க்கே பொருந்தும் என உரைப்பதே இந்நூலின் நோக்கமாகும். அது நன்கு நிறைவேறியுள்ளது. கிறித்துவர்க்கும் மற்றச் சமயத்தார்க்கும் இஃதொரு அறிவுக்கண் திறப்பாகும்."

# மறைக்கவோ மறுக்கவோ இயலாது

டாக்டர் இசுரவேல், எம்.ஏ., பிஎச்.டி., மதுரைப் பல்கலைக் கழகம்

"திருவள்ளுவர் கிறித்தவரா?" என்னும் வினாவை எழுப்பி அவர் கிறித்தவரே என்று கூறி முடிக்கும் ஆசிரியரின் ஆய்வுத் திறன், உண்மை நாட்டம், அணுகும்முறை, ஆய்ந்த படிப்பு, சொல்லாற்றல், துணிச்சல் முதலியன மாற்றாரும் போற்றும் தன்மையனவாய், ஏற்காதவரும் ஏற்குந் தன்மையனவாய் அமைகின்றன. புலவர் தெய்வநாயகம் அவர்களின் ஆய்வு புரட்சிகரமானது, புதுமையானது, உண்மை காணத் தூண்டுவது, சீர் தூக்கிக் காணும் தன்மையது. ஆகவே, ஆசிரியர் அவர்கள் முயற்சியைத் தமிழறிஞர் எவரும் பாராட்டாதிரார். அவர் கூறும் முடிவு ஏற்கத் தக்கதோ மறுக்கத் தக்கதோ என்பதற்கு ஆய்வாளர் உள்ள நிலையே உண்மைப் பதிலை அளிக்கும். அவர், வள்ளுவர் கிறித்தவரா? என்னும் வினாவினை எழுப்பி, ஆம், அவர் கிறித்தவரேதான் என்று சான்றுகளால் நிறுவியிருப்பதனைத் தமிழகம் ஏற்கலாம். அன்றேல் அது இன்னும் ஆய்ந்து முடிவு செய்யத்தக்கது

எனலாம். இல்லையேல் அதனை முற்றிலும் மறுத்துவிடலாம். அன்றேல் அவரது முயற்சியினை எள்ளி நகையாடலாம். ஆனால், அவர் நூலை நன்கு பயிலுவார்க்கும் திருமறையையும் தமிழ் மறையையும் ஒத்துநோக்கி நுட்பமாய் ஆய்வார்க்கும் திருக்குறள் கிறித்தவக் கொள்கைகளுக்குப் பெரிதும் இடம் தருகிறது என்பதனை மறைக்கவோ மறுக்கவோ இயலாது.

1972 மே மாதம் 3, 4 ஆகிய இரண்டு நாட்களிலும் இந்த விவாதத்தை நடத்திய கிறித்தவக் கலைத் தொடர்பு நிலைய இயக்குநர் அருள்திரு. சுவிசேஷமுத்து அவர்கள், விவாதங்களின் கருத்துச் சுருக்கத்தைப் பின்வருமாறு கூறுகிறார்.

## தூய்மையான ஆராய்ச்சி மலர

அருள்திரு. சா. சுவிசேஷமுத்து, பி.டி., எம்.டிஎச்.,
இயக்குநர், கிறித்தவக் கலைத்தொடர்பு நிலையம்

"திருக்குறள் ஆய்வு மாநாடு ஒன்று 1972-ஆம் ஆண்டு மே மாதம் 3, 4 தேதிகளில் சென்னையில் நடைபெற்றது. தேனாம்பேட்டையில் இருக்கும் கிறித்தவக் கலைத் தொடர்பு நிலையத்திடலில் தமிழ் அறிஞர்கள் பலர் ஒன்று கூடி ஆய்வதற்கெனத் தெரிந்து கொள்ளப்பட்ட பொருள் "வள்ளுவரின் கோட்பாடுகள் கிறித்தவக் கோட்பாடுகள்தாமா? " என்பது. இப்பொருளைத் தெரிந்தெடுப்பதற்கு காரணமாயிருந்தவை புலவர் தெய்வநாயகம் அவர்கள் எழுதிய ஆறு நூல்கள். அவை.

1. ஐந்தவித்தான் யார்?
2. வான் எது?
3. நீத்தார் யார்?
4. எழு பிறப்பு?
5. சான்றோர் யார்?
6. திருவள்ளுவர் கிறித்தவரா?

இந்நூல்களின் அடிப்படையில் ஓர் ஆய்வு மாநாட்டைக் கூட்ட வேண்டும் என நான் எண்ணியதற்கு இரு காரணங்கள் இருந்தன. புலவர் தெய்வநாயகம் தர்க்க ரீதியாக, இலக்கண ரீதியாக, வரலாற்று அடிப்படையில், பல பிற தமிழறிஞர்களின் ஆய்வு முடிவுகளைத் துணைக்கழைத்துக் கொண்டு கிறித்தவமும் திருவள்ளுவரின் கோட்பாடுகளும் ஒன்றே என்று உறுதியுடன் கூறுகிறாரே. இவருடைய ஆய்வு முடிவுகள் தமிழ்ப் பேரறிஞர்களால் எவ்விதம் ஏற்றுக் கொள்ளப்படும் என்பதை அறிய வேண்டும் என்பது

முதற்காரணம். இரண்டாவது காரணம் தன்னலமுடையது. உண்மை என்ன? என்பதை நானே அறிந்துகொள்ள வேண்டுமென்பது."

மாநாட்டின் சிறப்புத் தலைவராக மொழி நூல் மூதறிஞர், பண்டித ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ., அவர்கள் வீற்றிருக்க, ஆய்வு மாநாட்டை நடத்திச் செல்லும் அரங்கத் தலைவராக நான் அமர்ந்து, அறிஞர்களின் ஆய்வு உரைகள் ஒவ்வொன்றையும் கேட்டேன்.

'கிறித்தவ சமய ஆய்வில் மு. தெய்வநாயகம் மிகுதியான ஆய்வு நூல்களைப் படைத்தவராகக் காணப்படுகின்றார். இன்றைய காலகட்டத்தில் கிறித்தவமே குறளின் உட்கிடக்கை என்ற கருத்துப் போக்கைப் பெற்று முடிந்துள்ளது.

- தி.சு. சத்தியம்

தமிழகத்தில் தனிச்சிறப்புடையோரும், ஆழ்ந்த அறிவு படைத்தவர்களும், தமிழுலகில் தமிழன்னையின் தவப் புதல்வருமாகிய பேறறிஞர்களின் நடுவில் அமர்ந்திருந்து அவர்களின் தேன் நிகர் தமிழ் ஆய்வுக் கட்டுரைகளைக் கேட்டுக் கொண்டிருந்த அந்த நாள்கள் என் வாழ்வில் ஒப்பற்ற நாள்கள்.

எனினும், மாநாட்டின் முடிவில் நான் குழப்பமுடையவனாகவே இருந்தேன். ஏனெனில், புலவர் தெய்வநாயகம் திருக்குறள் ஆராய்ச்சியின் பயனாக எழுப்பியுள்ள வினாக்களை, அவ்வினாக்களுக்கு அவரே உணர்த்தும் விடைகளைத் தர்க்க ரீதியாக, வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு, இலக்கண, இலக்கிய மேற்கோள்களுடன் ஒருவராவது ஆணித்தரமாக மறுத்துக் கூறவில்லை. மாறாகத் தெய்வநாயகத்தின் புலமையைப் பாராட்டினார்கள். அவர் காண்பிக்கும் முடிவுகளுக்கு அவர் தர்க்கரீதியாக அறிஞர்களின் பல மேற்கோள்களுடன் நடத்திச் செல்லும் முறையைப் பாராட்டினார்கள். ஆனால் 'முடிவுகள், ஏற்றுக் கொள்ளப்பட முடியாதவை' என்றனர் சிலர். வேறு சிலர் ஏற்றுக் கொள்ளாமலிருக்கக் காரணங்கள் இல்லை என்றும் கூறினர்.

முடிவுகள் ஏற்றுக்கொள்ளப்பட முடியாதவை என்று கூறத்தகுந்த காரணங்கள் சொல்லப்பட்டிருக்குமாயின் குழப்பம் நீங்கியிருக்கும்.

வள்ளுவர் ஆராய்ச்சி வளர வேண்டும். உண்மை நெறியைத் தமிழகம் உணர வேண்டும். அந்நெறி உலக நெறியாக மலர வேண்டும். தமிழனின் திருமறையாம் திருக்குறள் உலகமெங்கும் தன் புகழ் மணம் வீசி நிற்க வேண்டும். அதற்குப் பாராட்சமற்ற தூய்மையான ஆராய்ச்சி மலர வழி ஏற்பட

வேண்டும். புலவர் தெய்வநாயகத்தைப் போன்று பிற பல ஆய்வாளர்கள் முன்வர வேண்டும். அவர்கள் முயற்சி வெல்ல வேண்டும்"

இந்த ஆறு நூல்கள் எழுதிய பின்பும் சற்றும் சளைக்காத டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் தொடர்ந்து,

★ வள்ளுவர் வாழ்த்தும் இயல்புடைய மூவர் யார்?

★ அருட்செல்வம் யாது?

★ பேரின்ப விளக்கம் (பொதுமறையும் பொருளிலக்கணமும்)

முதலிய நூல்களை எழுதி வெளியிட்டார்.

"திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே " என்பதை டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் ஆணித்தரமாக நிலைநாட்டுவதைக் கண்டு பொறுத்துக் கொள்ள முடியாத கூட்டம் ஒரு பக்கம் கொதித்துக் கொண்டிருந்தது.

**மறுக்கவும் முடியவில்லை;**

**ஏற்றுக் கொள்ளவும் மனமில்லை;**

எனும் இக்கட்டான சூழ்நிலையில், இதை மறுப்பதற்காகவே, தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் சஞ்சீவி அவர்களால் சென்னைப் பல்கலைக் கழகத்தில், தி.சு. சத்தியம் அவர்களுக்குத் தனி ஓர் ஆய்வுத் தலைப்பு கொடுக்கப்பட்டது. இருபதாம் நூற்றாண்டில் 'திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி' எனும் தலைப்பில், பிஎச்.டி., ஆய்வு செய்த தி.சு. சத்தியம், தம் ஆய்வேட்டின் முடிவில் பின்வருமாறு கூறுகிறார்.

*'கிறித்தவ சமய ஆய்வில் மு. தெய்வநாயகம் மிகுதியான ஆய்வு நூல்களைப் படைத்தவராகக் காணப்படுகின்றார். இவர், தம் சமயமான கிறித்துவ சமயத்தின் விவிலியக் கோட்பாடுகளே திருக்குறளுக்கு உட்கிடக்கை என்னும் கருத்தை நிலைநிறுத்துவார் போன்று, தம் ஆய்வை அமைத்துக் கொண்டு உள்ளார். இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் திருக்குறளின் உட்கிடக்கை சைவசித்தாந்தமே என்று எழுந்த ஆய்வுப்போக்கு, இன்றைய காலகட்டத்தில் கிறித்தவமே குறளின் உட்கிடக்கை என்ற கருத்துப் போக்கைப் பெற்று முடிந்துள்ளது.*

*(தி.சு. சத்தியம், இருபதாம் நூற்றாண்டில் திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி, 1979, பக். 192-193)*

இவ்வாறு, "திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே" என்பதைப் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர்களே ஏற்றுக்கொள்ளும் வண்ணம் ஆணித்தரமாக நிலைநாட்டினார் டாக்டர் மு. தெய்வநாயகம்.

திருக்குறள்
தோமா வழி திராவிடக்
கிறிஸ்தவ நூலே " என்பதை
டாக்டர் தெய்வநாயகம் அவர்கள்
ஆணித்தரமாக
நிலைநாட்டுவதைக் கண்டு
பொறுத்துக் கொள்ள முடியாத
கூட்டம் ஒரு பக்கம்
கொதித்துக் கொண்டிருந்தது.

# (ii) இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே..... விவாதங்களும் வெற்றியும்

டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் "திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே" எனும் ஆராய்ச்சியோடு நிற்காமல், "விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வு" எனும் தலைப்பில், சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றார். 1985இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வாயிலாக வெளியிடப்பட்ட அவருடைய பிஎச்.டி. ஆய்வேடு தமிழகத்தில் பெரும் பரபரப்பையும் சலசலப்பையும் ஏற்படுத்தியது. தமது பிஎச்.டி. ஆய்வேட்டில்,

*திராவிட வழிபாட்டை அடிப்படையாகக் கொண்ட பைபிளை மையமாகக் கொண்டு எழுந்ததே சைவம், வைணவம் என்னும் பக்தி இயக்கம். எனவே, 'இந்துமதம்' எனப்படும் சைவ, வைணவ சமயங்கள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவக் கிளைகளே என்பதை நிலைநாட்டினார்.*

இந்த ஆராய்ச்சி உண்மைகளைப் பொறுத்துக் கொள்ள முடியாதவர்கள்

★ உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இந்த நூலை வெளியிட்டது தவறு.

★ ஆய்வு நூலைத் தடை செய்ய வேண்டும்.

★ ஆய்வு நூலுக்கு மறுப்பு நூல் வெளியிடக் கூடாது

என்றெல்லாம் கூக்குரலிட்டனர்.

ஆரியர்கள் எப்போதும் நேரடியாகப் போராட்டத்தில் ஈடுபடாமல் திராவிடர்களை வைத்தே திராவிடர்களை வீழ்த்துவதைத் தொழிலாகக் கொண்டவர்கள் என்பது வரலாற்று உண்மை. நம் விரலைக் கொண்டே நமது கண்ணைக் குத்துவதில் வல்லவர்கள். ஆரிய பிராமணர்களால் தூண்டப்பட்ட சைவ அன்பர்கள், பலருக்கும் அனுப்பிய தீர்மானங்களுள் சில கீழே கொடுக்கப்படுகின்றன.

*"சமயச் சார்பற்ற அரசின் சார்பு நிறுவனமாய் விளங்கும் 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்', 'தமிழாராய்ச்சி' என்ற பெயரில் வெளியிட்டுள்ள விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு நூலையும் அது தொடர்பாக மறுத்தும், ஏற்றும் நூல்கள் வெளிவருவதையும் உடனடியாகத் தடை செய்யுமாறு தமிழக அரசை, இம்மன்றம் கேட்டுக் கொள்கின்றது."*

*“விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு” எனும் நூலைத் தடை செய்யத் தக்க நடவடிக்கைகளைத் தயங்காது உடனே மேற்கொள்ளுமாறு இம்மன்றம் பணிந்து வேண்டிக் கொள்கின்றது.”*

1985இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வாயிலாக வெளியிடப்பட்ட டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் பிஎச்.டி. ஆய்வேடு தமிழகத்தில் பெரும் பரபரப்பையும் சலசலப்பையும் ஏற்படுத்தியது.

மேலும், பெரும் பரபரப்பை உருவாக்கிய இந்நூலை நீதிமன்றத்தின் வழி தடை செய்ய வேண்டும் என்று நிதி திரட்டினர். ஆனால் நீதிமன்றம் செல்லவில்லை. காரணம், சென்னைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் அளித்துள்ள இந்த நூலைத் தடை செய்ய முடியாது என்பதைப் பின்னர்தான் அறிந்தனர். வேறு ஏதும் செய்ய இயலாத நிலையில், தருமையாதீன மடத்தில் சைவ சமய அறிஞர்கள், மடாதிபதிகளைக் கூட்டி, டாக்டர் தெய்வநாயகம் அவர்களைப் பேச அழைத்தனர்.

# தருமை ஆதீன மடத்தில் விவாதம்

## "விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு" நூல் பற்றிய விவாதம்

தருமபுர ஆதீனத்திலுள்ள அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம், 1986 டிசம்பர் 6, 7 ஆகிய இரு நாட்களில் கருத்தரங்கம் ஒன்று ஒழுங்கு செய்து, தமிழகத்தில் பெரும் பரபரப்பையும் சலசலப்பையும் ஏற்படுத்திய, நூல் ஆசிரியர் டாக்டர் தெய்வநாயகம் அவர்களை அழைத்தது.

தருமை ஆதீனம் இருபத்தாறாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் தொடக்கவுரையோடு 1986 டிசம்பர் 6 சனிக்கிழமை முற்பகல் தொடங்கப் பெற்ற இவ்விரண்டுநாள் கருத்தரங்கில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் முதன்மையுரை ஆற்றினார்கள். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் கயிலை மாமுனிவர் ஸ்ரீமத். காசிவாசி சுவாமிகள் அவர்கள் தொடர்புரையாற்றினார்கள்.

பிற்பகல் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பெற்ற நூலின் முதல் ஐந்து இயல்கள் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில் தனித்தனிக் குழுவாக இருந்து விவாதம் செய்யப் பெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீமத். காசிவாசி சுவாமிகள் அவர்களும் குழு விவாதங்களை முன்னிருந்து நடத்தினர்.

இரண்டாம் நாள் டிசம்பர் 7, ஞாயிற்றுக்கிழமை நூலின் எஞ்சிய இரு இயல்கள் பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பெற்றது.

கேள்விக் கணைகளைச் சரமாரியாகத் தொடுத்த அவர்களுக்கு, டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் சளைக்காமல் தெள்ளத் தெளிவாகப் பதில் அளித்தார்கள்.

'கேள்விகளுக்கான பதில்களை, விவிலியத்திலிருந்தோ, திருக்குறளிலிருந்தோ கொடுக்கக் கூடாது. சைவ சித்தாந்தத்திலிருந்து மட்டும்தான் கொடுக்க வேண்டும்' என்று டாக்டர் தெய்வநாயத்தை அழைத்தவர்கள் கூறினார்கள்.

ஏனென்றால், அவர்கள் சைவ சித்தாந்தத்தைப் பல ஆண்டுகளாகப் படித்தவர்கள். அவர்கள் மடமே சைவ சித்தாந்தத்திற்குரிய மடம்.

சைவ சித்தாந்தத்தில் மொத்தம் 14 சாத்திரங்கள் உள்ளன. அவர்கள் கூறியபடியே, டாக்டர் தெய்வநாயகம் அவர்களும் சளைக்காமல், 14 சாத்திரங்களுள் ஒன்றையும் பார்க்காமலேயே, மடை திறந்த வெள்ளமெனப் பதில் சொல்வதைக் கண்டு திகைத்தனர் அங்கிருந்த அறிஞர் பெருமக்கள்.

★ "உண்மையிலேயே உங்கள் தந்தையாரைக் கடவுள்தான் நடத்துகிறார்; ஏனென்றால், எந்தக் கேள்வி கேட்டாலும் புத்தகங்களைப் பார்க்காமலேயே, உடனுக்குடனேயே தெள்ளத் தெளிவாகப் பதில் சொல்கிறார் "

- அறிஞர்கள் கருத்து

அறிஞர்கள் பலர் என்னிடம்,

*"உண்மையிலேயே உங்கள் தந்தையாரைக் கடவுள்தான் நடத்துகிறார்; ஏனென்றால், எந்தக் கேள்வி கேட்டாலும் புத்தகங்களைப் பார்க்காமலேயே, உடனுக்குடனேயே தெள்ளத் தெளிவாகப் பதில் சொல்கிறார் "*

என்று கூறியதை இன்றும் மகிழ்வோடு நினைவு கூறுகிறேன்.

இரண்டு நாள்களும் நடைபெற்ற விவாதங்களைப் பற்றி காமராசர் பல்கலைக் கழக சைவ சித்தாந்தத் துறைப் பேராசிரியர் டாக்டர் டி.பி. சித்தலிங்கையா அவர்கள் தொகுத்துரைத்தார்கள்.

அவர்கள் தொகுத்துரைத்த கருத்துகளில் குறிப்பிடத்தக்கவை :

★ இரண்டு நாட்களாக ஒரு நல்ல ஆய்வரங்கம் இங்கே இடம் பெற்றது.

★ அறிஞர்கள் பலர் எழுப்பிய வினாக்களுக்கு டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் விடை தந்தார்கள்.

★ புதிதாக ஒன்றைச் சொல்லுகின்றபொழுது உடனே ஏற்றுக் கொள்ளுகின்ற பக்குவம் மனிதர்களாகிய நமக்கு இன்னும் ஏற்படவில்லை.

★ டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் கூறியதுபோல, புதிதாக விளக்கம் தேடுகின்ற ஒரு முயற்சியினுடைய தொடக்கம் இது என்ற வகையிலே, இந்தத் தொடக்கம் மிக நன்றாக அமைந்தது.

★ புதிய கருத்துகளை ஏற்றுக் கொள்ளவும் பழைய கருத்துகளை விட்டுக் கொடுப்பதற்கும் நமக்குச் சில ஆண்டுகள் தேவைப்படலாம்.

இறுதியில், டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்கு, தருமை ஆதீன குருமகா சந்நிதானம் அவர்கள் பொன்னாடை போர்த்தி, சிறப்புச் செய்தார்.

இனி, பேராசிரியர் டாக்டர் சித்தலிங்கையா அவர்களின் தொகுப்புரையின் பகுதிகளைக் கீழே காணலாம்.

"தருமை குருமகா சன்னிதானம் அவர்களுக்கும் குன்றக்குடி ஆதீனம் மகா சன்னிதானம் அவர்களுக்கும் காசிவாசி எஜமான் சுவாமி அவர்களுக்கும் வணக்கம் கூறிக் கொள்கிறேன்.

பெரியோர்களே! பேராசிரியப் பெருமக்களே!

இரண்டு நாட்களாக ஒரு நல்ல ஆய்வரங்கம் இங்கே இடம் பெற்றது. டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதிய விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் எனும் நூலைப் பற்றி பல்வேறு கருத்துகள் இங்கு எடுத்துக் கூறப்பட்டன.

சமயத்தைப் பற்றி ஆய்வது சமய ஆராய்ச்சி. ஒரு சமயத்தினுடைய தோற்றம் வளர்ச்சி முதலியவற்றைப் பற்றி ஆராய்வது சமய வரலாற்று ஆராய்ச்சி. ஏதேனும் இரண்டு சமயங்களை அல்லது மேற்பட்ட சமயங்களை எடுத்து வைத்துக் கொண்டு, அவற்றுக்கு இடையிலே உள்ள கருத்துகளுக்கு ஒப்புமை காண்பது சமய ஒப்பியல் ஆராய்ச்சி அல்லது ஒப்பியல் சமயம் என்று ஏற்றுக் கொள்ளப்படும்.

அந்த வகையிலே பார்க்கும்போது கிறித்தவம் என்ற சமயத்தினுடைய கொள்கைகளையும் அதனுடைய வரலாற்றையும் திறம்பட அந்த நூலிலே அவர் எழுதியிருக்கிறார். அதே போல சைவ சித்தாந்தத்தினுடைய தத்துவங்களையும் கொள்கைகளையும் எடுத்து விளக்கியிருக்கிறார்.

இந்த விளக்கத்தின்போது பழைய மரபு வழியாக வந்த கருத்துக்கள் பலவற்றுக்குப் புதிய விளக்கம் தரும் முயற்சியை அவர் மேற்கொண்டார். இந்தக் கருத்துக்கள் அந்த நூலிலே வெளியாகியிருப்பதனாலே, பல குழுக்களாகப் பிரிந்து, ஒவ்வொரு குழுவும் ஒரு தலைப்பிலே ஆராயும் என்று நேற்று ஏற்பாடு செய்யப்பட்டது.

அந்த வகையிலே, அறிஞர் பலர் அந்தந்தக் குழுக்களிலே அமர்ந்து அந்தந்தப் பகுதிக்குரிய விளக்கங்களைக் கேட்டுப் பெற்றார்கள்.

இன்றும் நூலின் இறுதிப் பகுதியாகிய ஒப்பாய்வு - 1, ஒப்பாய்வு - 2 என்ற இரண்டு பகுதிகளையும் எடுத்துக் கொண்டு வினாக்கள் எழுப்பப்பட்டன. அந்த வினாக்களுக்கு அவர் விடையளித்தார்.

டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் கூறியதுபோல, புதிதாக விளக்கம் தேடுகிற ஒரு முயற்சியினுடைய தொடக்கம் இது என்ற வகையிலே, இந்தத்

தொடக்கம் மிக நன்றாக அமைந்தது.......... புதிய கருத்துகளை ஏற்றுக்கொள்ளவும் பழைய கருத்துகளை விட்டுக் கொடுப்பதற்கும் சில ஆண்டுகள் தேவைப்படலாம்.

அறிஞர்கள் பலர்
எழுப்பிய வினாக்களுக்கு
டாக்டர் மு. தெய்வநாயகம்
அவர்கள் விடை தந்தார்கள்.
புதிய கருத்துகளை
ஏற்றுக் கொள்ளவும்
பழைய கருத்துகளை
விட்டுக் கொடுப்பதற்கும்
நமக்குச் சில ஆண்டுகள்
தேவைப்படலாம்.
- டாக்டர் டி.பி. சித்தலிங்கையா

இந்தக் குழுக்களிலே பல வினாக்கள் எழுப்பப்பட்டன. இந்த வினாக்கள் எல்லாம், இந்த மரபிலே வந்தவர்கள் தாங்கள் இது வரையிலே கற்றறிந்த, கேட்டறிந்த, தெளிந்த அடிப்படையிலே வினாக்கள் எழுப்பினார்கள். அவர்கள், புதிதாகக் கொண்டு வந்திருக்கின்ற கருத்துப் போக்கினுடைய அடிப்படையிலே அந்த வினாக்களுக்கு விடை சொல்ல முயன்றார்கள். இந்த இரண்டும் அப்படியே இருக்கின்றன...... புதிய கருத்துகளை ஏற்றுக்கொள்ளவும் பழைய கருத்துகளை விட்டுக் கொடுப்பதற்கும் சில ஆண்டுகள் தேவைப்படலாம்.

இறுதியாக நடந்த – இப்போது நடந்த – சிறிது நேரத்திற்கு முன்னாலே நடந்த – கூட்டத்திலே, அடிப்படையாக இருக்கின்ற சில கேள்விகள், சில கருத்துகள் கூறப்பட்டன. சைவ சித்தாந்தத்திலே ஓரிறைக் கோட்பாடு, பிறவிச் சுழற்சி என்பன போன்ற வினாக்களை எழுப்பி இவற்றுக்கு விவிலியத்திலே காணப்படுகின்ற விளக்கங்கள், அங்கே இருக்கின்ற நிலைகள் இவற்றைப் பேசி விளக்கம் காண ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. அந்த அளவிலே இந்த ஆய்வரங்கம் இன்று முடிவு பெற்றது.

இந்தத் தொகுப்புரையை நேற்றும் இன்றும் நடந்த நிகழ்ச்சிகளினுடைய தொகுப்பாக எடுத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு டாக்டர் டி.பி. சித்தலிங்கையா தொகுத்தளித்தார்.

சைவத் திருமடத் தலைவர்கள், சைவ அறிஞர் பெருமக்கள் இவர்களால் அக்கருத்தரங்கில் நூலாசிரியரிடம் கேட்கப்பட்ட கேள்விகள் அனைத்திற்கும் ஏற்ற பதிலை ஏற்ற முறையில் அவர் விளக்கிக் காட்டினார். தருமைக் குருமகா சந்நிதானம் அவர்கள் ஆசிரியருக்குச் சிறப்புச் செய்து பொன்னாடையும் போர்த்தியது குறிப்பிடத்தக்கதாகும். அங்கு நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஒலி, ஒளிப்பதிவு செய்யப்பட்டுள்ளன.

# சிங்க முழக்கம்.....

# வரலாற்றுச் சிறப்பான வெற்றி!

கருத்தரங்கம் முடிந்து வரும் வழியில் நூல் ஆசிரியர் டாக்டர் தெய்வநாயகம் அவர்களைப் பார்த்து பன்மொழிப் புலவர் டாக்டர் கா. அப்பாத்துரையார் அவர்கள் கூறியவை :

*"டாக்டர், நீங்கள் இன்றைக்குப் பேசியது ரொம்பப் பெரிய வெற்றி. உண்மையிலே இது ஒரு பெரிய வரலாற்றுச் சிறப்பான வெற்றி என்று சொல்லலாம். அண்மையில் டி.வி.யிலே இராகவேந்திரர் என்ற ஒருவர் எப்படி மதுரையிலும் தஞ்சாவூரிலும் சென்று சைவர்களையும் பிற மதத்தினர்களையும் எதிர்த்து வெற்றிக்கொடி நாட்டி மாத்துவ மதத்திற்குத் தலைவரானார் என்ற கதையை உருக்கமாகக் கூறினார்கள். அது எவ்வளவு பெரிய வெற்றியோ அதுபோன்ற வெற்றி உங்களுடைய வெற்றி. அதோடு நீங்கள் நெடுநேரமாக சிங்கமுழக்கம் முழங்கினீர்கள். அது உண்மையிலேயே பெரு வெற்றிதான்.*

*அதுபோக கருத்துக்களை நிறைய அடுக்கி எதிராளிகள் தங்களுடைய உள்ளத்திலெல்லாம் ஒருபக்கம் மகிழ்ச்சியையும், ஒரு பக்கம் சிறிது தோல்வி மனப்பான்மையையும் கொள்ளும்படியான அளவிற்கு மிக அழகாக உங்களுடைய கருத்துக்களை எடுத்துச் சொல்லி வேண்டாதவர்களும் கூட - கருத்து வேற்றுமை உள்ளவர்கள்கூட - விரும்பும்படியான முறையிலே நீங்கள் நடத்தினீர்கள். அதனைக் கண்டு நான் மிகவும் பெருமைப்பட்டேன். இந்த நூற்றாண்டின் பிற்பகுதியிலே இவ்வளவு பெரிய வெற்றியை வேறு யாரும் அடைந்திருக்க மாட்டார்கள் என்று கருதுகிறேன்".*

என்று அவர் கூறியவை டாக்டர் தெய்வநாயகம் அவர்களைக் கடவுள் எவ்வளவு வல்லமையாக நடத்துகின்றார் என்பதை உணர்த்தும்.

## (iii) மாலையாக மாறிய மறுப்பு நூல்

இதன் பிறகு 1991இல் தமிழகத்தில் பிராமணப் பெண்மணியான செல்வி ஜெயலலிதா அவர்கள் முதலமைச்சராக ஆட்சி செய்தபோது, இதுதான் ஏற்ற சமயம் என்று கருதிய தருமை ஆதினம், அனைத்துலக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம் வழியாக மறுப்பு நூல் வெளியிட்டது. சென்னை மயிலை சைவ சித்தாந்தப் பெருமன்றமும், அனைத்துலக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனமும் இணைந்து 24 : 10 : 1991இல் வெளியீட்டு விழாவை நடத்தினர்.

### "விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூல்"

எனும் தலைப்பில் மகாவித்வான் சி. அருணை வடிவேல் முதலியார் அவர்களை ஆசிரியராகக் கொண்டு தருமையாதீன அனைத்துலக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம் நூலை வெளியிட்டது.

★ டாக்டர் தெய்வநாயகம் நூலுக்கு மறுப்பு எழுதுவது, "அரிச்சந்திரன் தன் மனைவியை வெட்ட அரிவாளை ஏந்தியதுபோல் உள்ளது. ஆனால் அரிவாள் அவரது மனைவி கழுத்தில் மாலையாக விழுந்தது. அதுபோல்தான் இந்த நூலும் "

- திரு. சி. அருணை வடிவேல் முதலியார்

மறுப்பு நூல் வெளிவருவதை அறிந்த டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். ஏனெனில்,

"இவ்வளவு காலமாக நான் புதிய ஆராய்ச்சி உண்மைகளைக் கூறி வருகின்றபோதிலும், யாருமே இதுவரை ஆய்வு அடிப்படையில் மறுப்பு எழுதவில்லையே. ஆய்வு அடிப்படையில் மறுப்பு எழுதினால்தானே, மக்கள் மத்தியில் கருத்துகள் பரவும். கருத்துகள் பரவும்போதுதானே மக்கள் ஆராய்ச்சி அடிப்படையிலான வாதத்தையும் எதிர்வாதத்தையும் படித்து, உண்மையை உணர்ந்து கொள்வார்கள்"

என்று மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்கள்.

### "மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்கின்றோம்"

என்று தலைப்பிட்டு, துண்டு வெளியீடு அச்சிட்டு, மறுப்பு நூல் விழாவிற்கு வந்திருந்த அனைவருக்கும் வழங்கப்பட்டது.

'மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்கின்றோம்' எனும் தலைப்பிடப்பட்டு, கொடுக்கப்பட்ட துண்டு வெளியீடும், அதில் வெளியிடப்பட்டிருந்த பிற கடிதங்களும் அப்படியே இணைப்பு – I-இல் கொடுக்கப்பட்டுள்ளன.

'மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்கிறோம்' எனும் தலைப்பிடப்பட்ட அந்தத் துண்டு வெளியீட்டில்,

1986-லேயே தருமை ஆதீனத்தில் நடைபெற்ற விவாதத்தில் இக்கருத்துகள் நிலைநாட்டப்பட்டமையும்,

ஆனால், 'இன்னும் 3 மாதங்களில் உங்களுக்கு மறுப்பு நூல் எழுதி வெளியிடுவோம்' என்று டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்கு, தருமையாதீனத்திலிருந்து கடிதம் எழுதியிருந்தமையும் சுட்டிக் காட்டப்பட்டன.

ஆனால், 6 ஆண்டுகளுக்குப் பின்தான் மறுப்புநூல் வெளியிடப்பட்டுள்ளது. இதற்குப் பதிலை, மூன்றே மாதங்களில் வெளியிட்டு விடுவோம். (இடம் L.L.A. Building, சென்னை, தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகக் கட்டட வளாகம்) என்று அச்சிட்டு வழங்கப்பட்டது.

மறுப்பு நூல் வெளியீட்டு விழாவில் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் புன்முறுவலுடன் உள்ளத்தில் மகிழ்ச்சியோடு முதல் வரிசையில் அமர்ந்திருந்தார்கள்.

வெளியீட்டு விழாவிற்கு அழைக்கப்பட்டிருந்த திரு. மீ.பா. சோமு என்பவர்,

> "நாம் எதற்கு டாக்டர் தெய்வநாயகத்தின் நூலுக்கு மறுப்பு எழுத வேண்டும்? நம்முடைய வழக்கம் என்ன? திருஞானசம்பந்தர் சமணரைக் கழுவிலேற்றி கொலை செய்ததுபோல், தெய்வநாயகத்தை அமைதியாக 'காலி' பண்ண வேண்டியதுதானே நம் முறை"

என்று பேசினார்.

அந்தக் கூட்டத்தை நடத்தியவர் அவருடைய பேச்சைக் கேட்டு அதிர்ச்சி அடைந்து, உடனே 'மைக்'கைப் பிடித்து,

> ***"தயவு செய்து, இங்கே பேச அழைக்கப்பட்டிருப்பவர்கள் பார்த்துப் பேசுங்கள். ஏனென்றால், டாக்டர் தெய்வநாயகம் அவர்களும் இங்கேதான் அமர்ந்திருக்கின்றார்கள்"***

என்று கூறினார்.

உடனே, மேடையில் அமர்ந்திருந்த திரு. மீ.பா. சோமு, அவர் பக்கத்தில் அமர்ந்திருந்தவரிடம்,

> ***"யார் தெய்வநாயகம், அவர் எங்கே அமர்ந்திருக்கிறார்"*** *என்று கேட்டவுடன், பக்கத்திலிருந்தவர், முதல் வரிசையில் புன்முறுவலுடன் நடப்பவற்றை எல்லாம் காலை ஆட்டிக் கொண்டே இரசித்துப் பார்த்துக் கொண்டிருந்த டாக்டர் தெய்வநாயகம் அவர்களைச் சுட்டிக் காட்டினார். உடனே 'குப்' பென்று வியர்த்தது திரு. மீ.பா. சோமுவிற்கு. ( அந்த நிகழ்ச்சியை என்றுமே மறக்க முடியாது )*

பிறகு, அந்த விழாவில் பேசிய, மறுப்பு நூல் ஆசிரியர் மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் டாக்டர் தெய்வநாயகம் அவர்களுடைய நூலுக்கு மறுப்பு எழுதுங்கள் என்று என்னைக் கேட்டுக் கொண்டதால் மறுப்பு எழுதினேன். ஆனால்

டாக்டர் தெய்வநாயகம் நூலுக்கு மறுப்பு எழுதுவது, "அரிச்சந்திரன் தன் மனைவியை வெட்ட அரிவாளை ஏந்தியதுபோல் உள்ளது. ஆனால் அரிவாள் அவரது மனைவி கழுத்தில் மாலையாக விழுந்தது. அதுபோல்தான் இந்த நூலும் " என்று பேசி முடித்தார்.

என்னைப் பெலப்படுத்துகின்ற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையும் செய்ய எனக்குப் பெலனுண்டு' என்ற திருமறை வாக்கைப் பெற்றவர் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள்.

மறுப்பு நூல் ஆசிரியர், இவ்வாறு, டாக்டர் தெய்வநாயகம் அவர்களுடைய நூலுக்கு எழுதிய மறுப்பு நூல், மாலையாக விழப் போகிறது என்று கூறியது ஏன்? டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆராய்ச்சியின் ஆழத்தையும் உண்மையில் அதை மறுக்க முடியாத நிலையையும், அவர் உணர்ந்திருந்ததாலேயே இவ்வாறு கூறினார். மறுப்பு நூலைப் படித்தால் இதைப் புரிந்துக் கொள்ள முடியும்.

மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்கின்றோம் என்ற தலைப்பில் வெளியிடப்பட்ட அந்தத் துண்டு வெளியீட்டில் குறிப்பிட்டவாறே, அவர்களுடைய மறுப்பு நூலுக்கு நமது மறுப்பு தயாரானது.

அவர்களுடைய மறுப்பு நூலுக்குப் பதில் எழுத டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் மாணவர்களில் ஒருவரான திரு. இராசசேகரன் என்பவர் தாமே முன்வந்து பதில் நூல் எழுதினார். மேற்படி நமது துண்டு வெளியீட்டில் குறிப்பிட்டவாறே சரியாக மூன்றாவது மாதத்தில் சென்னை, தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகக் கட்டடத்தில் 24.01.1992 அன்று இதற்கென்று ஒரு கூட்டம் அமைக்கப்பட்டு, பதில் கொடுக்கப்பட்டது. அந்தக் கூட்டத்திற்கு மறுப்பு நூல் வெளியீட்டு விழாவை நடத்திய தருமை ஆதீன மடத்திற்கும், சென்னை மயிலை சைவ சித்தாந்தப் பெருமன்றத்திற்கும், மறுப்பு நூல் வெளிவரக் காரணமாயிருந்தவர்களுக்கும் அவர்கள் வருகை தந்தால், சிறப்பான மரியாதையும் சிறப்பான இடமும் அளிக்கப்படுவதுடன் விரும்பினால் அவர்கள் வீடியோ எடுத்துக் கொள்ளலாம் என்று எழுதி, அழைப்பிதழையும் அவர்களுக்கு அனுப்பினார் டாக்டர் தெய்வநாயகம். ஆனால், அவர்கள் ஒருவர்கூட வரவில்லை.

**'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூலு'க்குப் பதிலுரையும் கருத்தரங்கும்**

எனும் தலைப்பில் அச்சிடப்பட்ட அழைப்பிதழ், இணைப்பு - II இல் கொடுக்கப்பட்டுள்ளது.

சரியாக மூன்றே மாதங்களில், மறுப்புக்குப் பதில் வெளியிடுவதற்கு முந்தைய நாள், மறுப்பு நூல் எழுதிய மகாவித்வான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள்

*'இனிமேல் நான் இது தொடர்பாக ஏதும் எழுதப் போவதில்லை'*

என்று டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்குக் கடிதம் அனுப்பிவிட்டார்.

அவருடைய கடிதம், மறுப்பிற்குப் பதில் வழங்கிய நாளன்று கூட்டத்தில் வாசிக்கப்பட்டது.

24 : 01 : 1992 அன்று நடத்தப்பட்ட 'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூலுக்குப் பதிலுரையும் கருத்தரங்கமும்' நிகழ்ச்சி பற்றிய சிற்றறிக்கையை இணைப்பு -III இல் காணலாம்.

'என்னைப் பெலப்படுத்துகின்ற கிறிஸ்துவினாலே எல்லாவற்றையும் செய்ய எனக்குப் பெலனுண்டு' என்ற திருமறை வாக்கைப் பெற்றவர் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள்.

இதற்கேற்ப,

**'திருக்குறள் தோமா வழி திராவிடக்**
**கிறிஸ்தவ நூலே'**

என்பதையும்,

**'இந்தியா தோமா வழி திராவிடக்**
**கிறிஸ்தவ நாடே'**

என்பதையும் பேரறிஞர்கள் மற்றும் மடாதிபதிகள், சமயத் தலைவர்கள் மத்தியிலே, ஆராய்ச்சி அடிப்படையில் நிலைநாட்டிடவும் மறுப்பு நூல் எழுதியவர்கள்கூட டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆழ்ந்த ஆராய்ச்சியைப் பாராட்டி, மகிழவும் கடவுள் பேரருள் புரிந்தார்.

விவாதத்தின்போது இந்து சமய மடாதிபதிகள் மற்றும் அறிஞர்கள் கேட்ட கேள்விகளும் அவற்றிற்கு டாக்டர் தெய்வநாயகம் அளித்த பதில்களும் 'வீடியோ'வில் உள்ளன. வேண்டுவோர் உரிய தொகை செலுத்தி இந்த Video CD யைப் பெற்றுக் கொள்ளலாம்.

( குறிப்பு : டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் ஆராய்ச்சி மீது நடைபெற்ற போராட்டங்கள் பல, பல! வெற்றிகள் பல, பல! சுருக்கம் கருதி அவை இங்கே கொடுக்கப்படவில்லை.)

# இணைப்பு - I

(டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின் விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்ற துண்டு வெளியீடு)

## மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்கின்றோம்

தமிழக முன்னாள் முதல்வர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள் தன்னுடைய சமயம் 'திராவிட சமயம்' என 1981இல் நடந்த மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்போது பதிவு செய்தார்கள். ஏன்? அதற்கு ஒரு வரலாற்றுப் பின்னணி உண்டு. சிந்திப்பவர்கள் அதைப் புரிந்துகொள்ள இயலும்.

திராவிடர்களின் சிவலிங்க வழிபாடே இஸ்ரவேல் சமயமாகவும், யூத சமயமாகவும், கிறிஸ்தவ சமயமாகவும், சைவ, வைணவ சமயங்களாகவும், இஸ்லாம் சமயமாகவும் வளர்ச்சி பெற்றுள்ளது. உலகப் பெரும் சமயங்கள் யாவும் திராவிடர்களின் சிந்தனை, வழிபாடு, பண்பாடு ஆகிய இவற்றின் விரிவாக்கம் என்னும் அடிப்படை உண்மையைத் தகுந்த ஆய்வின் வழி உலகிற்கு அறிவித்து வருவது திராவிட சமய ஆய்வு இயக்கம்.

எங்கள் ஆய்வு இயக்கத்தின் தலைவரும், 'பிற்படுத்தப்பட்டோர் ஷெட்யூல்டு வகுப்பினர், சிறுபான்மையினர் உரிமைப் பாதுகாப்புப் பேரவை'யின் தலைவருமான பேராசிரியர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் 1983இல் 'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு' என்னும் தலைப்பில் டாக்டர் பட்டத்திற்கான ஆய்வேடு ஒன்றினைச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் சமர்ப்பித்தார்கள். அந்த ஆய்வேடு டாக்டர் பட்டத்திற்கு ஏற்றுக் கொள்ளப்பட்ட பின்னர் மாற்றுக் கருத்துள்ளவர்களுக்கு வாய்ப்பளிக்கும் வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில், அதற்கெனத் தனியாக அறக்கட்டளை நிறுவி, அதன் வழியாக, நூலாக 1985இல் வெளியிடப்பட்டது. இதுவரை மாற்றுக் கருத்து, நூலாக வெளிவரவில்லை. நூலாசிரியரின் நீண்ட நாள் ஆவலை நிறைவேற்றும் வகையில் இந்நூலுக்கு 'மறுப்பு நூல்' ஒன்றைத் தயாரித்து தருமையாதீன அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனமும் மயிலை சைவ சித்தாந்தப் பெருமன்றமும் இணைந்து வெளியிட முன் வந்தமைக்கு எங்கள் இயக்கத்தின் பாராட்டுகளை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவிக்கின்றோம்.

அவர்களின் வெளியீடாகிய 'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்கின்றோம். மறுப்பு

நூலாசிரியருக்கும் மறுப்புரை ஆற்ற முன் வந்துள்ளவர்களுக்கும் எங்கள் மனமுவந்த பாராட்டுகள்.

24-10-91 வியாழன் அன்று சென்னை, மயிலை, லஸ்முனை, சீனிவாச சாஸ்திரி ஹாலில் மாலை 4-30 மணியளவில் நடைபெறும் மறுப்பு நூல் வெளியீட்டு விழா இனிது நடைபெற எங்கள் இயக்கத்தின் இனிய வாழ்த்துகளைத் தெரிவிக்கின்றோம்.

அறக்கட்டளையின் நோக்கத்திற்கிணங்க மறுப்பு நூலுக்குப் 'பதில் நூல்' திராவிட சமய ஆய்வு இயக்கத்தால் 24-1-1992 அன்று சென்னை தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகத்தில் மாலை 4-30 மணியளவில் வெளியிடப்படும். அத்துடன் மறுப்பு நூல் வெளியீட்டு விழாவில் தெரிவிக்கப்படும் மறுப்பு உரைகளும் மற்றும் பார்வையாளர்களின் ஐயங்கள் அனுமதிக்கப்பட்டால் அவையும் வீடியோ பதிவு செய்யப்பட்டு பதில் நூலில் அவற்றிற்கும் பதில் கொடுக்கப்படும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

ஆர்வமுள்ள அன்பர்கள் அனைவரையும் பதில் நூல் வெளியீட்டு விழாவிற்கு அன்புடன் அழைக்கிறோம்.

(ஒப்பம்)

பொதுச் செயலாளர், திராவிட சமய ஆய்வு இயக்கம்.

278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை - 600 023.
23-10-91

(நாலரை ஆண்டுகளுக்கு முன், மறுப்பு நூல் வெளிவருவதாகத் தருமை ஆதீன நிறுவனம் எழுதிய கடிதமும் அதற்கு ஆசிரியர் எழுதிய பதிலும் 1984இல் சைவ சித்தாந்தப் பெருமன்றத்திற்குப் பேராசிரியர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதிய பதிலுரையும் கொடுக்கப்படுகின்றன.)

# தருமையாதீனக் கடிதம்

## அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்

பெறுநர்

டாக்டர் மு. தெய்வநாயகம்,<br>அயன்புரம், சென்னை - 600 023.

1-59, வடக்கு வீதி<br>தருமபுரம், மயிலாடுதுறை.<br>நாள் : 21-3-87

ஐயா,

'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஓர் ஒப்பாய்வு' என்ற நூல் பற்றிய ஆய்வுக் கருத்தரங்கம் 1986 டிசம்பர் 6, 7 ஆகிய இரு நாட்களில் இந்நிறுவனத்தின் சார்பில் தருமையாதீனத் திருமடத்தில் நடைபெற்றது.

மேற்சொன்ன நூலின் முரண்பாடுகளை எடுத்துக்காட்டி உரியவாறு மறுப்பு நூல் ஒன்றை அறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வாயிலாக வெளியிடுவது என்று தீர்மானிக்கப்பட்டது. இச்செய்தி 10-12-86 தேதிய ஞானசம்பந்தம் இதழிலும் பிரசுரிக்கப்பட்டது.

உண்மை இப்படி இருக்க தாங்கள் தங்களது கருத்தை நிலைநாட்டி வெற்றி பெற்றுவிட்டதுபோல் தவறான பிரசாரத்தில் ஈட்டுபட்டு வருவதாக நம்பத்தகுந்த செய்தி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருச்செவிகளுக்கு எட்டியுள்ளது. இது விஷயத்தில் திராவிட சமய ஆய்வு இயக்கம் வெளியிட்டுள்ள 'இந்தியாவில் கிறிஸ்தவத்தின் தொன்மை' என்ற தங்களுடைய சிறு பிரசுரத்தில் சில தவறான செய்திகளை வெளியிட்டிருக்கின்றீர்கள். உங்களுடைய நண்பர் திரு. அய்யாசாமி நாடார் என்பவருக்கும் வெற்றியை நிலைநாட்டிவிட்டதாகச் செய்தி அனுப்பியிருக்கின்றீர்கள். இவை எல்லாம் முறையான செயல்கள் அல்ல. தங்களுடைய நூல் எந்தவகையிலும் ஏற்றுக் கொள்ளத்தக்கது அன்று என்பதை விளக்கி ஒரு மறுப்பு நூல் தயாராகிக் கொண்டிருக்கிறது. அந்நூலும் ஓரிரு திங்களில் முற்றுப்பெற்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மூலமாகவோ அல்லது இந்நிறுவனத்தின் மூலமாகவோ வெளியிடப்படும். இந்தச் சூழ்நிலையில் தாங்கள் எந்தவித தவறான பிரசாரத்திலும் ஈடுபடுதல் தக்கது அன்று என்று இதன்மூலம் அறிவிக்கப்படுகின்றீர்கள்.

திரு. இராமச்சந்திரன்<br>கௌரவ இயக்குநர்.

# தருமையாதீனத்திற்குப் பதில் கடிதம்

நாள் : 27-3-87

பெறுநர்

திரு. டி.என். இராமச்சந்திரன், பி.காம்.. பி.எல்.,

கௌரவ இயக்குநர்,

அனைத்துலகச் சைவசித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்.

அன்புடையீர்,

தங்களின் 21-3-87 நாளிட்ட கடிதம் நேற்று கிடைக்கப் பெற்றேன். தாங்கள் மறுப்பு நூல் ஒன்று உருவாக்குவது பற்றி மிக்க மகிழ்ச்சி.

மறுப்பு நூலுக்குப் பதில் கொடுக்க வேண்டியது எனது பொறுப்பு.

1. நூலின் வழியாக என்னுடைய கருத்துக்கள் நிலைநாட்டப்பட்டுள்ளன.
2. டிசம்பர் 6, 7 ஆகிய இரண்டு நாட்களில் நடைபெற்ற கருத்தரங்கங்களில் என்னிடத்தில் கேட்கப்பட்ட கேள்விகள் அத்தனைக்கும் ஏற்ற பதிலை ஏற்றவாறு கொடுத்து என்னுடைய கருத்தை நிலைநாட்டி உள்ளேன். இதைக் கருத்தரங்கிலும் தெரிவித்துள்ளேன்.

ஆகவே கருத்து நிலைநாட்டப்பட்டிருக்கிறது என்பதில் சிறிதளவும் கருத்து வேறுபாட்டிற்கு இடமில்லை என்பதை இதன்வழி தெரிவித்துக் கொள்கிறேன்.

உங்களுடைய நூல் வெளிவரும்போது அதிலுள்ள கேள்விகள் அனைத்திற்கும் பதில் கொடுத்து என்னுடைய கருத்தை நிலைநாட்ட ஆயத்தமாயிருக்கிறேன் என்பதை இதன் வழி தெரிவித்துக் கொள்கின்றேன்.

நான் கூறுவதெல்லாம் வரலாற்று உண்மை என்ற அடிப்படையில் 'நிலைநாட்டுதல்' என்ற வார்த்தையைப் பயன்படுத்துகிறேனே அன்றி ஆணவத்தாலோ செருக்காலோ இவ்வார்த்தையைப் பயன்படுத்தவில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

உங்களுடைய நூல் விரைவில் வெளிவருவதை மிக்க ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

தங்களன்புள்ள,

மு. தெய்வநாயகம்

# சைவ சித்தாந்தப் பெருமன்றத்திற்குப் பதிலுரை

நாள் : 12-5-1984

பெறுநர்,

தலைவர்
சைவ சித்தாந்தப் பெருமன்றம்,
சென்னை-4.

ஐயா,

தங்களின் 9-5-1984 நாளிட்டு, சென்னை மயிலைப் பேராயர் டாக்டர் இரா. அருளப்பா அவர்களுக்கு அனுப்பப்பட்ட கடிதம் காட்டப் பெற்றேன்.

தாங்கள் அக்கடிதத்தில், திராவிட சமய ஆய்வு இயக்கத்தின் சார்பாக மார்த்தாண்டத்தில் என்னால் நடத்தப்பட்ட வகுப்புகள் பற்றியும், அதன் கருத்தோட்டம் பற்றியும் குறிப்பிட்டு அத்துடன் வகுப்புக்கான அறிவிப்பு இதழின் நகலையும் இணைத்து இவைகளுக்கு, சென்னை கத்தோலிக்கத் திருச்சபையின் அங்கீகாரம் உண்டா? எனக் கேட்டுள்ளீர்கள்.

தங்கள் தலைமையின் கீழுள்ள சைவ சித்தாந்தப் பெருமன்றம் கடந்த 68 ஆண்டுகளாக சைவ சித்தாந்தப் பணியாற்றி வருவது மிகுந்த பாராட்டுக்குரியதாகும்.

என்னை ஒரு சைவ சித்தாந்த மாணவனாக உங்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளுவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன். எம்.ஏ., விருப்பப்பாடத்தில் சைவ சித்தாந்தம் எடுத்து சென்னைப் பல்கலைக் கழகத்தில் தேர்வு பெற்றவன். பிஎச்.டி., ஆய்விலும், "விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்த சாத்திரம் பதினான்கு ஓர் ஒப்பாய்வு" என்ற தலைப்பில் ஆறு ஆண்டுகள் ஆய்வு செய்து 1983 ஏப்ரலில் ஆய்வுக் கட்டுரையை சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஒப்படைத்துள்ளவன். பட்டத்தைப் பற்றிய கவலை கொள்ளாதவன்.

பிறப்பால் சைவன், இனத்தால் திராவிடன். தற்போது சமயத்தால் திராவிட சமயத்தான். திராவிட இனத்திலிருந்து தோன்றிய யூதம், வைதிகம், சமணம், பௌத்தம், கிறிஸ்தவம், சைவம், வைணவம் யாவும் எனது சமயத்தின் கிளைகள் என்பதை உணர்ந்திருக்கின்ற காரணத்தால் இவை யாவும் எனது திராவிட சமயத்தின் கிளைகள் என உரிமை பாராட்டுபவன். இவை யாவற்றின் வழியாகவும் செயல்படும் இறைவனால் ஆட்டுவிக்கப்படுபவன் என்ற உறுதிப்பாடுடையவன்.

அடிமைப்பட்டுக் கிடக்கும் திராவிட இனத்தின் விடுதலைக்காக இறைவனால் நியமிக்கப்பட்டிருக்கின்ற 'பலிகடா' என்ற வெளிப்பாட்டை 1968இல் பெற்றவன். ஆகவே 'அஞ்ச வருவது ஒன்றுமில்லை', 'நாமார்க்கும் குடியல்லோம்' என்பனவற்றின் பொருளை வாழ்க்கையில் கொண்டவன். 'என்னைப் பெலப்படுத்துகின்ற இறைவனாலே எல்லாவற்றையும் செய்ய எனக்குப் பெலன் உண்டு', 'ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே' என்ற திருவடியார்களின் அனுபவ உண்மைகளை ஓரளவு அனுபவிக்கும் வாய்ப்புப் பெற்றவன்.

ஆகவே, என்னுடைய கருத்தை நான் வெளியிடுவதற்கு யாருடைய அனுமதியையும் பெற்றாக வேண்டிய நிலையில் கடவுள் என்னை வைக்கவில்லை.

சென்னை மயிலைப் பேராயர் அவர்களுக்கும் எனக்கும் உள்ள உறவு தனிப்பட்ட நண்பர்கள் என்ற வகையைச் சார்ந்ததேயன்றி திருச்சபைத் தொடர்பு அற்றது. அவர் சார்ந்துள்ள சபை வேறு, நான் சார்ந்துள்ள சபை வேறு. அவர் கத்தோலிக்கத் திருச்சபையின் தலைவர். நான் தென் இந்தியத் திருச்சபையின் எளிய உறுப்பினன். தென் இந்தியத் திருச்சபைக்கும், எனக்கும் எனது கருத்துக்களைப் பொறுத்த அளவில் எந்த உறவும் இல்லை.

ஆகவே, என்னால் வெளியிடப்படும் கருத்துகள் தனிப்பட்ட ஒரு மனிதனாகிய (Individual) தெய்வநாயகத்தின் கருத்துகளேயன்றி வேறு எவரிடத்திலும் அடிமைப்படாதவை. அதனால்தான் மார்த்தாண்டம் வகுப்பு, எந்தத் திருச்சபையின் ஆதரவிலும் நடக்காமல், தனிப்பட்ட அன்பர் ஒருவரின் அழைப்பின் பேரில் நடத்தப்பட்டது.

என்னைப் பற்றி நானே சொல்ல வேண்டிய நிலைக்காக வருந்துகின்றேன். ஆயினும் என்னுடைய கருத்துகளால் உங்கள் உள்ளங்கள் புண்படுவதாகத் தாங்கள் குறிப்பிட்டுள்ளமையாலும், எனக்கு நேரடியாகத் தாங்கள் எழுத வேண்டிய கருத்தைப் பேராயர் அருளப்பா அவர்களுக்கு நீங்கள் எழுதியுள்ளமையாலும், என்னைப் பற்றிய விளக்கம் கொடுத்தாக வேண்டிய இன்றியமையாமை எனக்கு ஏற்பட்டுவிட்டது.

நான் கூறும் கருத்துகள், என்னுடைய 16 ஆண்டுகால ஆய்வின் பயனாகக் கிடைத்தவை. வரலாற்று உண்மையை அடிப்படையாகக் கொண்டவை. முதலில் கேள்விப்படுபவர்கள் இக்கருத்துகளை இகழ்வது இயல்பே.

பல்வேறு சமய உண்மைகளையும் சமய வரலாறுகளையும் சிறப்பாக, யூத, கிறிஸ்தவ சமய வரலாற்றுண்மைகளையும் பற்றி அரியாதவர்களுக்கு இது விளங்குவது மிகவும் கடினம்.

ஆகையால்தான், நான் பொதுக்கூட்டம் என்றோ, கருத்தரங்கம் என்றோ அமைக்காமல் பெரும்பாலும் வகுப்புகளாக நடத்தி வருகின்றேன். உண்மையிலேயே ஆர்வமுள்ளவர்கள், கட்டணம் கட்டிக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலைக்கு வருகின்றவர்களுக்கு மட்டுமே வகுப்புகள் நடத்தப்படுகின்றன. கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வமுடையவர்களின் ஐயங்கள் அத்தனையும் அகற்றப்படும்.

> என்னை ஒரு சைவ சித்தாந்த மாணவனாக உங்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளுவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன். பிறப்பால் சைவன், இனத்தால் திராவிடன். தற்போது சமயத்தால் திராவிட சமயத்தான். அடிமைப்பட்டுக் கிடக்கும் திராவிட இனத்தின் விடுதலைக்காக இறைவனால் நியமிக்கப்பட்டிருக்கின்ற 'பலிகடா' என்ற வெளிப்பாட்டை 1968இல் பெற்றவன்.
>
> - டாக்டர் தெய்வநாயகம்

தமிழகம் முழுவதிலும் தற்போது மாணவர்கள் பலர் உள்ளனர். அவர்களுக்கு என்று திங்கள் இதழ் ஒன்று வெளிவருகின்றது. அதன் இதழ்கள் இத்துடன் இணைக்கப் பெற்றுள்ளன. அவற்றைப் பற்றிய தங்கள் பெருமன்றத்தின் கருத்துகள் வரவேற்கப்படுகின்றன. அவை வருகின்ற இதழ்களில் வெளியிடப்படும் என்ற உறுதியைத் தருகின்றேன்.

68 ஆண்டுகளாக நடந்து வரும் தங்கள் சைவ சித்தாந்தப் பெருமன்றம், ஒன்றை எண்ணிப்பார்க்க வேண்டுகிறேன். நீங்கள் இத்தகைய கடிதம் எழுதுவதற்கு முன்

1. புதிய கோணத்தில் வகுப்பு நடப்பதாக அறிவிக்கப்பட்டுள்ள செய்தியை நீங்கள் அறிந்தவுடன், அவ்வகுப்பின் போக்கு யாது? அங்கு கூறப்படும் கருத்துகளுக்கு ஆதாரம் உண்டா? என்பதை அறிய நம்பிக்கையான, திறமையான ஒருவரை அனுப்பி அதைப் பற்றி அறிய முற்பட்டிருக்கலாம்.
2. உங்களுக்கு மாறுபட்ட கருத்தாக நான் கூறும் கருத்துகள் காணப்படின் என்னிடமே ஒருவரை அனுப்பி நேராகப் பேசிக் கருத்தை அறிந்து கொள்ள முயன்றிருக்கலாம்.
3. 1969 முதல் இதுவரை நான் எழுதியுள்ள பல்வேறு புத்தகங்களையும் பத்திரிக்கைகளையும் வாசித்து கருத்தை அறிய முற்பட்டிருக்கலாம்.

4. என்னை நேரடியாகவே உங்கள் பெருமன்றத்திற்கு அழைத்துப் பேச முற்பட்டிருக்கலாம்.

இவைகளில் எந்த முயற்சியையும் மேற்கொள்ளாமல், கருத்தை இகழ்ந்து கூறுவதும், அடக்க நினைப்பதும், எச்சரிக்கைத் தொனியைக் கையாள்வதும் மெய்ப்பொருளைக் காண நினைக்கும் நமக்கு ஏற்றவைதாமா? சென்னையில் வகுப்புகள் ஜூலையில் தொடங்குகின்றன.

தங்கள் அன்புள்ள,
மு. தெய்வநாயகம்.

# இணைப்பு - II

# 'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூலு'க்குப் பதிலுரையும் கருத்தரங்கும்

## அழைப்பிதழ்

காலம் : 24-1-92 வெள்ளிக்கிழமை மாலை 5-30

இடம் : தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகம்,
அண்ணாசாலை, சென்னை.

தலைமை : பேராசிரியர் டாக்டர் மு. தெய்வநாயகம், எம்.ஏ., பிஎச்.டி.,

## கருத்தரங்கத் தலைப்புகள்

1. மறுப்புநூல் வெளியீட்டார்கள் ஒப்பாய்வு நூலாசிரியரைக் கொலை செய்யத் துடிப்பது ஏன்?
   – **K. சந்திரன்,** செயலாளர், தேவேந்திரர் பேரவை.
2. மறுப்பு நூல் ஓர் ஆராய்ச்சி நூலா?
   – **செல்வி தெ. தேவகலா, M.A., M.Phil., Ph.D.,**
3. மறுப்பு நூல் வெளிப்படுத்தும் சாதி வெறி
   – டாக்டர் **சேப்பன், M.B.B.S., D.G.O.,** தலைவர், இந்தியக் குடியரசுக் கட்சி
4. தமிழர்களை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்
   – பேராசிரியர் **கலைமணி, M.A., M.Lit.,** துணைத் தலைவர் - யாதவர் மகா சங்கம்
5. திராவிட இனத்தை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்
   – **சக்திதாசன்,** தலைவர் - செட்டியூல்டு இன விடுதலை இயக்கம்
6. திராவிட இயக்கங்களை அவமதிக்கும் மறுப்பு நூல்
   – டாக்டர் **இராமகிருஷ்ணன்,** நிறுவனர், தேவர் பேரவை
7. திருக்குறளை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்
   – **தமிழ்மறையான்,** ஆசிரியர், புத்தர் அறிவுலகம்
8. திராவிட சமயத்தை விளங்கிக் கொண்ட பிறகும் அதை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்
   – **சா. சல்மான் பாசு, M.A.,** (ஒப்பாய்வு நூலாசிரியரின் மாணவர்)

9. சைவ சமயத்தை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்
- **சா. சுப்பிரமணியம், I.A.S.,** தலைவர், வன்னியர் சங்கம்

10. சைவ சித்தாந்தத்தை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்
- **யா.தா. பாசுகரதாசு, M.A., M.A., M.Ed., M.Phil.,**

11. மறுப்பு நூலின் கேள்விகளுக்குப் பதில்
- **இராசசேகரன், M.A.,**

அனைவரையும் அன்புடன் அழைக்கின்றோம்.
திராவிட சமய ஆய்வு இயக்கம், சென்னை - 23.

## குறிப்புகள்

1. கூட்டம் சரியாக மாலை 5-30க்கு தொடங்கப்படும்.
2. மறுப்பு நூல் எழுப்பியிருக்கும் கேள்விகளைக் கேட்க விரும்பும் அன்பர்கள், கேள்விகளைத் தங்கள் முகவரியுடன் மறுப்பு நூல் பக்கமிட்டு, 5-30 மணிமுதல் 6-00 மணிக்குள் எழுதிக் கொடுக்க வேண்டும்.
3. மகா வித்துவான் டாக்டர் சி. அருணை வடிவேல் முதலியார் அவர்களால் எழுதப்பட்டுள்ள மறுப்பு நூலிலிருந்து கேட்கப்படும் எல்லாக் கேள்விகளுக்கும், ஒப்பாய்வு நூலாசிரியரின் மாணவரும், திராவிட சமய ஆய்வு இயக்கத்தின் உறுப்பினரும், தருமபுர ஆதீனத்தில் ஒப்பாய்வு நூலின்மேல் 1986 திசம்பர் 6, 7 நாட்களில் நடத்தப்பட்ட கருத்தரங்கில் கலந்து கொண்டு பதில் கூறியவரும், திராவிட சமயத்தின் கிளைச் சமயங்களில் ஒன்றான சைவ சமயத்தைச் சேர்ந்தவரும், சிவனடி சேர்ந்த இரணியசித்தி ஆறுமுகம் முதலியார் அவர்களின் மகனுமான திரு. இராசசேகரன் அவர்கள் பதில் கொடுப்பார்கள்.
4. மறுப்பு நூலுக்குப் பதில் நூல் அச்சாகிவிட்டால் கருத்தரங்கில் வெளியிடப்படும். அல்லது 25-4-92இல் நடைபெற இருக்கும் திராவிட சமய மாநாட்டில் வெளியிடப்படும்.

மறுப்பு நூல் கிடைக்கும் இடம் :-

1. அனைத்துலக சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம் தருமை ஆதீனம், தருமபுரம், மயிலாடுதுறை.
2. தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமாஜ பிரச்சார நிலையம், 158, உஸ்மான் ரோடு, சென்னை - 17.

விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு நூல் கிடைக்கும் இடம் :-

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,
டி.டி.டி.ஐ. தரமணி, சென்னை - 600 113.
(Bus Stop : Central Polytechnic Campus, Near Adayar Bus Stand)

# இணைப்பு - III

24-01-1992 அன்று நடத்தப்பட்ட
'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின்'
மறுப்பு நூலுக்குப் பதிலுரையும் கருத்தரங்கமும் நிகழ்ச்சி பற்றிய

## சிற்றறிக்கை

"விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஓர் ஒப்பாய்வு என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பிஎச்.டி., பட்டத்திற்கு ஆய்வேடு அளிக்கப்பட்டு, 1985ஆம் ஆண்டு அப்பட்டத்திற்குத் தகுதியுடையதென அறிவிக்கப்பட்டது. அதனை எழுதியவர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள். இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அறக்கட்டளைச் சொற்பொழிவாக 1985ஆம் ஆண்டு வெளிவந்தது.

இந்நூலை மறுத்து இரண்டாம் சொற்பொழிவும், அதற்குப் பதில் நூல் மூன்றாம் சொற்பொழிவும் என்று இவ்வாறாக, ஒப்பாய்வு நூல் சார்ந்த மொத்தம் ஐந்து நூல்களும், மறுப்பாக ஐந்து நூல்களும் அந்த அறக்கட்டளை வாயிலாக வெளிவர வேண்டும். மறுப்பு நூல் எழுதுவோருக்குப் பரிவுத் தொகையும் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

மேற்படி ஒப்பாய்வின்மீது 1986 டிசம்பர் 6, 7 ஆகிய இரு நாட்களிலும் தருமபுர ஆதீனத்தில் பதினேழு சைவ சித்தாந்த அறிஞர்களின் தலைமையில் கருத்தரங்கம் நடைபெற்றது. தருமபுர ஆதீனம், ஒப்பாய்வு நூலுக்கு மறுப்பு நூல் ஒன்று எழுதி ஆறு மாதங்களில் வெளியிடுவதாக அறிவித்தது. ஆனால், ஏறத்தாழ ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர், தருமபுர ஆதீனப் புலவர் மகாவித்துவான் டாக்டர் சி. அருணை வடிவேல் முதலியார் 'விவிலியம் திருக்குறள், சைவ சித்தாந்தம் ஒப்பாய்வின் மறுப்பு நூல்' என்னும் தலைப்பில் எழுதினார். அதனைத் தருமபுர ஆதீனமும் மயிலாப்பூர் சைவ சித்தாந்தப் பெருமன்றமும் இணைந்து 24-10-1991இல் வெளியிட்டது.

திராவிட சமய ஆய்வு இயக்கம், அந்நூல் வெளியிடப்படுவதற்கு முன்னரே, மறுப்பு நூலை வாழ்த்தி வரவேற்று ஓர் அறிக்கையை அச்சிட்டு வெளியிட்டதோடு, மறுப்பு நூலுக்குப் பதில் நூல் 24-1-92 அன்று வெளியிடப்படும் என்றும் குறிப்பிட்டிருந்தது. அதற்கேற்ப, 24-1-92இல் சென்னை, தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகத்தில் மறுப்பு நூலுக்குப் பதிலுரையும் கருத்தரங்கும் நடைபெற்றன.

திராவிட சமய ஆய்வு இயக்கத் தலைவர் டாக்டர் மு. தெய்வநாயகம் கருத்தரங்கிற்குத் தலைமை வகித்தார். கூட்டம் கடவுள் வாழ்த்துடன் மாலை 5-30 மணிக்குத் தொடங்கியது. டாக்டர் மு. தெய்வநாயகத்தின் மாணவர் திரு. யா.தா. பாசுகரதாசு வரவேற்புரை நிகழ்த்தினார். அப்போது மறுப்பு நூல் எழுந்த வரலாற்றை விளக்கிக் கூறினார்.

மறுப்பு நூலின் உட்பொருளைப் பல்வேறு தலைப்புகளில் அறிஞர்களும் சமுதாயத் தலைவர்களும் எடுத்து விளக்கினார்கள். தேவேந்திரர் பேரவைச் செயலாளர் திரு. K. சந்திரன், "மறுப்பு நூல் வெளியீட்டார்கள் ஒப்பாய்வு நூலாசிரியரைக் கொலை செய்யத் துடிப்பது ஏன்?" என்னும் தலைப்பில் பேசியபோது, மறுப்பு நூல் வெளியீட்டு விழாவில் திரு. மீ.ப. சோமு,

**'டாக்டர் தெய்வநாயகத்தை வெளியில் தெரியாமல் கொன்றுவிட வேண்டும்'**

என்று பேசியதை எடுத்துக் காட்டி, இதுபோன்ற அநாகரிகமான பேச்சுகளும் எழுத்துகளும் தவிர்க்கப்பட வேண்டும் என்று கூறினார்.

டாக்டர் தெய்வநாயகத்தின் மாணவராகிய செல்வி தெ. தேவகலா, "மறுப்பு நூல் ஓர் ஆராய்ச்சி நூலா?" என்னும் தலைப்பில் பேசி, மறுப்பு நூலில் காணப்படும் குறைகள், ஆய்வு நோக்கமும் நெறிமுறைகளும் இல்லாமை, இலக்கண வழுக்கள், முரண்பாடுகள், ஏச்சுகள் முதலியவற்றை எடுத்துரைத்தார். இந்தியக் குடியரசுக் கட்சித் தலைவர் டாக்டர் சேப்பன், "மறுப்பு நூல் வெளிப்படுத்தும் சாதி வெறி" என்னும் தலைப்பில், அந்நூல் முழுக்க முழுக்கச் சாதி உயர்வு, தாழ்வை நிலைநாட்டுவதற்காகவே எழுதப்பட்டது என்பதையும், பிராமணர்களிடம் திராவிடரை அடிமைப்படுத்துவதற்குச் சமயத்தைக் கருவியாக்கியுள்ளனர் என்றும் விளக்கினார்.

யாதவர் மகா சங்கத்தின் துணைத் தலைவர் பேராசிரியர் கலைமணி, "தமிழர்களை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்" என்னும் தலைப்பில் உரையாற்றினார். திருக்குறள், சைவ சமய இலக்கியங்கள் முதலிய தமிழ் நூல்களையும் தமிழ்ப் பெரியவர்களையும் இழிவுபடுத்துவதாக மறுப்பு நூல் எழுதப்பட்டுள்ளதென விளக்கினார். தேவர் பேரவையின் நிறுவனர் டாக்டர் இராமகிருஷ்ணன், "திராவிட இயக்கங்களை அவமதிக்கும் மறுப்பு நூல்" என்னும் தலைப்பில், தந்தை பெரியார் முதலான தலைவர்களையும் திராவிட இயக்கங்களையும் அவமதித்து மறுப்பு நூல் எழுதப்பட்டுள்ளது என்று விளக்கினார்.

'புத்தர் அறிவுலகம்' ஆசிரியர் திரு. தமிழ் மறையான், "திருக்குறளை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்" என்னும் தலைப்பில், பரிமேலழகர் போன்றோர் பிராமணர்களுக்கு உயர்வு கற்பிக்கும் உரை எழுதியது போன்று, மறுப்பு நூலாசிரியரும் ஆரிய விளக்கங்களை மனம் போனபோக்கில் எழுதி, உலகப் பொதுமறையையும் ஆரியருக்கு அடிமைப்படுத்துகிறார் என்று உரையாற்றினார். வன்னியர் சங்கத் தலைவர் திரு. சுப்பிரமணியம், I.A.S., "சைவ சமயத்தை ஆரியர்களுக்கு அடிமைப்படுத்தும் மறுப்பு நூல்" என்னும் தலைப்பில் பேசினார். திருஞானசம்பந்தரைக் காப்பாற்றுவதற்கு சைவத் திருமுறைகளை ஆரிய மயமாக்கிய கருத்துகளையும் எடுத்து விளக்கினார்.

டாக்டர் தெய்வநாயகத்தின் மாணவராகிய திரு. யா.தா. பாசுகரதாசு, 'பெரியபுராணம்' ஆரியர்களின் சாதி உயர்வைக் காப்பாற்ற எழுதப்பட்டது. சித்தாந்த சாத்திரங்கள் எதுவுமே எழுதாத மறைஞான சம்பந்தரை சந்தானகுரவர்களில் ஒருவராகச் சேர்த்துவிட்டனர்; முதல் சாத்திரம் எழுதிய திருவியலூர் உய்யவந்ததேவ நாயனாரைப் பஞ்சமர் என்றும் மெய்கண்டாரைச் சூத்திரர் என்றும் எழுதி வைத்துள்ளனர்; ஒப்பாய்வு நூலாசிரியர் நிறுவியுள்ள கருத்துகளை மறுக்க இயலாமற்போன காரணத்தால், டாக்டர் மு. தெய்வநாயகத்தைக் கொலை செய்யத் திட்டமிடுகின்றனர் என விளக்கினார்.

டாக்டர் தெய்வநாயகத்தின் மாணவராகிய திரு. ஆ. இராசசேகரன், மறுப்பு நூலிருந்து கேட்கப்பட்ட கேள்விகட்கு விடையளித்தார். ஞானசம்பந்தரின் வேத வேள்வி, சமணரைக் கழுவேற்றியமை, 'கற்பு' என்னும் சொல் விளக்கம், சைவ சமயத் தோற்றம், மறைஞான சம்பந்தர், பிறப்பு பற்றித் திருக்குறள், சைவம் முதலிய வினாக்களுக்குத் தகுந்த விடையளித்தார்.

ஆரியர் காலங்காலமாகத் திராவிடரை எவ்வாறெல்லாம் அடிமைப்படுத்தி வருகின்றனர் என்பது பற்றியும், ஒப்பாய்வு நூலாசிரியரைத் தீண்டத்தகாதவர் என்றும் பழித்துக் கூறுபவரின் உள்நோக்கங்களையும் தருமபுர ஆதீனத்தைப் பின்னிருந்து தூண்டிவரும் பிராமண இயக்குநர் திரு. தி.ந. இராமச்சந்திரன் எவ்வாறு, நம்மவரைக் கொண்டே நம்மை அழிக்கத் திட்டம் வகுக்கிறார் என்பது பற்றியும் தெளிவாக விளக்கினார்.

திராவிட சமய ஆய்வு இயக்கத் தலைவர் டாக்டர் மு. தெய்வநாயகம் கருத்தரங்கிற்கு வந்திருந்தோருக்கு நன்றி கூறினார். கூட்டம் இரவு 9-30 மணிக்கு நிறைவடைந்தது.

பொதுச் செயலாளர்
திராவிட சமய ஆய்வு இயக்கம்

# திராவிட இன விடுதலை - கடவுளின் வெளிப்பாடும் கட்டளையும்

திராவிட இன விடுதலை என்பது டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்குக் கடவுள் காட்டிய வெளிப்பாடாகவும் திராவிட இன விடுதலைப் பணி என்பது கடவுள் அவருக்குக் கொடுத்த கட்டளையாகவும் இருப்பதால், இந்தியாவை, சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையால் சீரழித்துக் கொண்டிருக்கும் சங்கர மடத்தோடு டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் தொடர்ந்து போராடிக் கொண்டு வருகின்றார்கள். அடுத்த சங்கராச்சாரியாக இந்தியாவிலேயே கடைசி சாதி என்று முத்திரை குத்தப்பட்ட பிரிவிலிருந்து 5 வயது சிறியவர் ஒருவரை நியமிக்க வேண்டும் எனும் கோரிக்கையை அடிப்படையாக வைத்து, பல போராட்டங்களைப் போராடிக் கொண்டு வருகின்றார்கள்.

கடந்த ஓராண்டு காலமாக இந்தியா சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து விடுதலை பெற, கடவுளை நோக்கி முழு இரவு பிரார்த்தனை 09.05.2003 முதல் ஒவ்வொரு மாதமும் இரண்டாம் வெள்ளிக்கிழமை இரவு 10 முதல் காலை 5 வரை தொடர்ந்து நடத்தினார்கள்.

24.04.2004 அன்று ஓராண்டு முழு இரவு பிரார்த்தனையின் நிறைவு விழா நடைபெற்றது. அன்று மாலை 3.30 முதல் 6.00 வரை திருவள்ளுவர் கோவிலில் தியான உரை நடைபெற்றது.

திராவிட இன விடுதலை என்பது கடவுளின் திட்டம் என்பதால் நம்முடைய ஓராண்டு பிரார்த்தனைக்கு நல்ல பலன் கிடைத்துள்ளது. திருவள்ளுவர் கோவிலில் நடத்தப்பட்ட தியான உரையில், பிராமண வகுப்பைச் சேர்ந்த திருப்பெரும்புதூர் தவத்திரு. வரத எத்திராஜ் ஜீயர் சுவாமிகள், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை உடைத்து எறிந்து, தமக்குப் பின்னர், மடாதிபதியாக திருக்குலத்தார் (கீழ்சாதி என்று முத்திரை குத்தப்பட்டவர்) உட்பட சாதி ஏற்றத்தாழ்வு இல்லாமல் வைணவத்தில் தகுதியானவர் வரவேண்டும் என்று அறிவித்துள்ளார்கள்.

**ஆன்மீக விடுதலைக்கான**
**திராவிட சமயப் பயிற்சி வகுப்புகள் :**

திராவிடர்களின் ஆன்மீகக் கருத்துகளை சமுதாயத்தில் எடுத்துக்கூறி, சமுதாயம் ஆரிய அடிமைத்தளையிலிருந்து விடுபட்டு, அன்பும் ஐக்கியமுமாய் வாழ்வதற்காக, டாக்டர் தெய்வநாயகம், திராவிட சமயப் பயிற்சி வகுப்புகள் பல நடத்தி வருகின்றார்கள். தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் குறித்த 6 மாத டிப்ளமோ பயிற்சி வகுப்புகள் இறையருளால் இனிதே நடைபெற்றன.

06.01.1996 அன்று நடந்த திராவிட சமயப் பயிற்சி வகுப்புகள் தொடக்க விழாவில் முன்னாள் ஆளுநர் மேதகு ஆ. பத்மநாபன் I.A.S.,(Rtd.,) அவர்கள் ஆற்றிய உரையின் பகுதிகள் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

“டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் ‘திராவிட சமய ஆய்வு இயக்கம்’ என்ற நிறுவனத்தைப் பல ஆண்டுகளாக நடத்தி வருகிறார்கள். அவர்களது குடும்பமே இந்த இயக்கத்தில் முழு மூச்சோடு ஈடுபட்டு இருப்பதைக் காண்கிறோம். அவர்களுடைய தொண்டு ஓர் அரிய தொண்டாகும். இன்று மதத்தின் பெயராலே நடக்கின்ற அநீதிகளையும் அக்கிரமங்களையும் களைந்து மக்கள் மனதிலே சிந்தனையையும், சீரிய கருத்துகளையும் எடுத்துச் சொல்ல ஏதுவாக இந்தப் பயிற்சி வகுப்புகளை நடத்த வேண்டுமென்ற முக்கியக் குறிக்கோளைக் கொண்டு டாக்டர் தெய்வநாயகம் அவர்களும், அவர்களது இயக்கத்தாரும் நன்முறையில் ஆக்கப்பணி செய்து வருகிறார்கள். அவர்களுக்கு எனது பாராட்டுதல்கள்; பயிற்சி வகுப்புகள் நல்ல பயன் தர வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

‘திராவிட சமயம்’ என்று கூறுவது மனித நேயம், சமய ஒருமைப்பாடு, சகோதரத்துவம் ஆகிய முக்கியப் பண்பாட்டையும், கலாச்சாரத்தையும் தான் குறிக்கிறது என்று நான் நினைக்கிறேன். தென்னிந்திய அல்லது திராவிடக் கலாச்சாரமும், வரலாறும் தொன்மை வாய்ந்தவை. இன்று, உலகம் பூராவிலும் ஆராய்ச்சியாளர்கள் இவை மக்கள் முன்னேற்றம், மனிதநேயம், வேறுபாடற்ற நல்ல சமுதாயம் ஆகியவற்றைக் கொண்டதாக இருக்கின்றன என்பதை ஏற்றுக் கொண்டு உள்ளார்கள். ‘சைவசித்தாந்தம்’ திராவிடம் உலகிற்குக் கொடுத்த அரிய தத்துவம் என்று டாக்டர் G.U. போப் கூறியிருக்கிறார்’.

‘எனது எண்ண அலைகள்’ ஆ. பத்மநாபன், I.A.S., (Rtd.,) சுரா புக்ஸ் (பிரைவேட்) லிமிடெட் - முதற்பதிப்பு - நவம்பர், 2003 - பக். 97, 98,101.

## (i) சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து இந்தியாவை விடுவிக்க நடத்தப்பட்ட போராட்டங்கள்

***சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து***
***இந்தியாவை விடுவித்து,***
***சமத்துவத்தையும்***
***சகோதரத்துவத்தையும்***

சமுதாயத்தில் கொண்டு வருவதற்காக, பேராசிரியர் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள், சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையின் ஊற்றுக் கண்ணாகிய சங்கரமடத்துடன் பல்வேறு போராட்டங்களை நடத்தி வருகின்றார்கள்.

அவற்றின் தொகுப்பை,

**'சங்கரமடத்திற்கு ஒரு சவால்'**

எனும் தலைப்பில், டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் ஒரு நூலாக வெளியிட்டுள்ளார்கள்.

இந்நூலின் சுருக்கக் கருத்து இங்கே கொடுக்கப்பட்டுள்ளது.

"சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையாகிய புற்றுநோயிலிருந்து (Cancer) இந்திய மக்களை விடுவிக்க வேண்டுமானால், அந்தப் புற்றுநோயை உருவாக்கிப் பாதுகாக்கும் சங்கர மடங்களுடன் போராடியே ஆக வேண்டும்.

அதனால் சங்கரமடத்துடன் நம்முடைய போராட்டம் 1994-இல் தொடங்கியது.

① 1994 ஜுலை 'திராவிட சமயம்' இதழில் 'சங்கராச்சாரிகளின் மறுபக்கம்' - என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று வெளியிட்டு, நம்முடைய கடிதத்துடன் அவ்விதழ் அனுப்பி வைக்கப்பட்டது.

② நம் வெளியீட்டுக்கு, சங்கரமடம், அதனால் உருவாக்கப் பட்ட 'இந்து திராவிட இளைஞர் இயக்கத்தின்' மாநில அமைப்பாளரான திரு. வே.குகரமணன் என்பவர் வழியாக மறுப்பு எழுதியது.

③ சங்கர மடத்தின் மறுப்பும் அதற்கு நாம் எழுதிய பதிலும் 1994 செப்டம்பர் திராவிட சமயம் இதழில், 'சங்கர மடத்து மறுப்புக் கடிதமும், நம் பதிலும்' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டு அதுவும் அவர்களுக்கு அனுப்பப்பட்டது.

④ மறுப்பு எழுதினால் மறைந்து கிடக்கும் உண்மை வெளி வந்து விடுகிறது என்பதைப் புரிந்து கொண்ட சங்கர மடம் அதன் பின்பு மௌனம்

காக்கத் தொடங்கியது.

⑤ 1996 மார்ச் மாதத்தில், 'சங்கர மடத்தோடு போராட வேண்டியது ஏன்?' என்னும் தலைப்பில் நூல் ஒன்றுவெளியிடப்பட்டு, அது சங்கர மடத்தின் பதிலுக்காக அனுப்பி வைக்கப்பட்டது.

⑥ 'சங்கர மடம்' - என்பது பிராமண சாதி மடமே தவிர, அது இந்து மத மடம் இல்லை என்பதைப் பொது மக்களுக்குப் புரிய வைப்பதற்காக, சங்கரமடத்தின் இளைய பெரியவராக இந்தியாவின் கடைசி சாதியைச் சேர்ந்த 5 வயதுக் குழந்தை ஒன்றை நியமிக்குமாறு கோரிக்கை வைத்து, சங்கர மடத்திற்கு எதிரே உண்ணா நோன்புப் போராட்டம் 14.04.1996இல் நம்மால் நடத்தப்பட்டது.

⑦ 14.07.1996இல், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து விடுதலை பெற, பிராமணர் மனம் திருந்த வேண்டும் என்று, பிராமணர் நிறைந்திருக்கும் மயிலாப்பூரிலுள்ள கபாலீஸ்வரர் கோவிலில் 'பிராமணர் மனம் திருந்த பிரார்த்தனை' என்ற தலைப்பில் பிரார்த்தனைப் போராட்டம் நம்மால் நடத்தப்பட்டது.

⑧ 14.10.1996இல், சங்கர மடத்திற்கு, 'சங்கரமடம் ஒரு கொள்ளைக் கூட்டத்தின் தலைமை இடம்' என்பதை நிரூபித்துக் கேள்விகள் அனுப்பப்பட்டு, பின்னர் அக்கேள்விகள், 'சங்கரமடத்திற்கு 108 கேள்விகள்' என்ற தலைப்பில் நூலாக, தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடப்பட்டு, தமிழக முதல்வர் மற்றும் சட்டமன்ற உறுப்பினர்கள், இந்தியப் பிரதமர், மற்றும் நாடாளுமன்ற உறுப்பினர்கள், ஐக்கிய நாட்டு சபை, இவற்றுடன் மற்ற நான்கு சங்கரமடங்களுக்கும் அனுப்பப்பட்டன.

⑨ 'சங்கர மடத்திற்கு 108 கேள்விகள் என்ற தலைப்பில் வெளியிடப்பட்ட நூலில், குறிப்பிட்டிருந்தபடி,

1. ***சங்கரமடத்தில், இந்தியாவின் கடைசி சாதியைச் சேர்ந்தவர் 'பால சங்கராச்சாரியாராக' நியமிக்கப்பட வேண்டும் அல்லது***
2. ***சங்கரமடம் ஒரு கொள்ளைக் கூட்டத்தின் தலைமை இடம் என்பதை நிரூபித்து எழுதப்பட்டுள்ள எங்கள் 108 கேள்விகளுக்கு விடை கொடுக்க வேண்டும் அல்லது***
3. ***கொள்ளைக் கூட்டத்தின் தலைமை இடமாக விளங்கும் சங்கர மடத்தின் மீது அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.***

என்று சங்கர மடத்திற்கும் தமிழக அரசுக்கும் வேண்டுகோள் விடப்பட்டது.

இந்த வேண்டுகோளுக்கு, கொள்ளைக் கூட்டத்தின் தலைமை இடமாக விளங்கும் சங்கர மடம் செவிசாய்க்காமல் இருப்பது இயல்பு. ஆனால் தமிழக அரசு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்கு, தமிழக அரசு ஓர் அறிஞர் குழுவை நியமிக்க வேண்டும்.

★ 'சங்கரமடம்' - என்பது பிராமண சாதி மடமே தவிர, அது இந்து மத மடம் இல்லை.

நியமிக்காவிட்டால், அது சங்கர மடமாகிய, கொள்ளைக் கூட்டத்திற்கு ஆதரவான செயலாகும் என்றும், அதைக் கண்டித்து, இந்தியாவின் 50 ஆண்டு விடுதலை நிறைவு நாளைக் கொண்டாடும் விழாவின்போது, இந்தியா பிராமணர்களிடமிருந்து விடுதலை அடையாத நிலையை உலகம் அறிந்து கொள்ளும் முறையில், தம் விரலைத் தாமே வெட்டிக் கொள்ளும் 'விரல் வெட்டும் போராட்டம்' 14.08.1998இல் நடைபெறும் என்றும் அறிவிக்கப்பட்டது.

இப்போராட்டம், காவல்துறை இணை ஆணையராயிருந்த சிவனாண்டியின் நம்பிக்கை மோசடியின் காரணமாக நடத்தப்பட இயலாமல் தடுக்கப்பட்ட விவரம் திராவிட சமயம் அக்டோபர் 1998 இதழில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

⑩ 29 ஆகஸ்டு முதல் 7 செப்படம்பர் 2001 வரை ஐக்கிய நாட்டு சபையால், தென் ஆப்பிரிக்கா, டர்பனில் நடத்தப்பட்ட "Conference on International Racism' என்னும் அனைத்துலக மாநாட்டில் நம்முடைய இயக்கத்தின் சார்பாக

**"International Racism is the child of India's Casteism - A Historical Prespective and an Appeal to "UNO'**

என்ற தலைப்பில் நூல் ஒன்றும்,

**"Who are the Indian Dalits?'**

என்ற தலைப்பில் துண்டு வெளியீடு ஒன்றும் அச்சடித்து, மாநாட்டில் கலந்து கொண்டதுடன், நம் வெளியீடுகளையும் வழங்கினோம்.

"U.N.O. Human Rights High Commission' நடத்திய தனி ஆய்வுக் கூட்டத்தில் கலந்து கொண்டு மேலே குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு வெளியீடுகளையும் வழங்கி, உலகிலுள்ள நிற, இன, சாதி வெறிகளுக்கு, ஊற்றுக் கண்களாக இருப்பவை இந்தியாவிலுள்ள சங்கர மடங்களே என்பதை விளக்கி, உலகிலுள்ள நிற, இன, சாதி வெறி

நீங்க வேண்டுமானால், சங்கர மடங்களின் மீது ஒரு 'Commission'ஐ நியமித்து, தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டோம். நாம் (டாக்டர் மு. தெய்வநாயகம், டாக்டர் தெ. தேவகலா) பேசிய அக்கூட்டத்தில் தமிழகத்திலிருந்து கலந்து கொண்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் கருப்பன், I.A.S.(Rtd) ஆவார்.

நம்முடைய வேண்டுகோளைச் செவி மடுத்த 'Human Rights High Commissioner' தக்க நடவடிக்கை எடுப்பதாக வாக்களித்தார். அதன்படியே, நடவடிக்கை எடுத்து, அது வரை இந்தியாவில் சாதி ஏற்றத்தாழ்வு இல்லை என்று மறுத்துக் கொண்டிருந்த இந்திய அரசின் கூற்றை நம்பி வந்த U.N.O. இந்தியாவில் மனித சமுதாயத்திற்கும், மனித உரிமைக்கும் எதிரான சாதி ஏற்றத்தாழ்வு இருக்கிறது என்பதை அறிவித்தது.

(11) சங்கராச்சாரியின் தூண்டுதலால் மதமாற்றத் தடைச் சட்டம் கொண்டு வரப்பட்டதைப் பாராட்டி, மெரினா கடற்கரையில் சங்கராச்சாரியாரால் கூட்டம் நடத்தப்பட்டது. அதனால் சங்கராச்சாரியாருக்கு, சவால் விட வேண்டிய கட்டாயம் மீண்டும் நமக்கு ஏற்பட்டது. 'இந்தியா ஓர் இந்து மத நாடு' – எனக் கூறும் சங்கராச்சாரியாரால்

'இந்து மதம் என்பது தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமாகிய சைவ, வைணவம்' என்பதையும் 'இந்தியா தோமா வழிக் கிறிஸ்தவ நாடு' என்பதையும் மறுக்க இயலுமா? என்று கேட்டு, துண்டு வெளியீடு ஏராளமாக, தமிழ்நாடு முழுவதும் வழங்கப்பட்டதுடன் சங்கர மடத்திற்கும் உரிய கடிதத்துடன் அத்துண்டு வெளியீடு அனுப்பப்பட்டு அவர்களால் பெற்றுக் கொள்ளப்பட்டது.

(12) இரண்டாம் கடிதம், உண்மையை மறைப்பதற்காக, சங்கர மடம் நடந்து கொள்ளும் முறையை வெளிப்படுத்தியதுடன், சங்கர மடத்தை எதிர்த்த ராஜாராம் என்பவர் 26.03.2003 அன்று கொல்லப் பட்டதைச் சுட்டிக் காட்டியதுடன்,

சங்கரமடத்தை எதிர்த்து நாங்கள் நடத்திய போராட்டங்களை நடத்தத் துணையாகவும், சென்னை உயர் நீதிமன்றத்தில் வழக்கறிஞராகவும், திராவிட ஆன்மீக இயக்கத்தின் இளைஞர் அணிச் செயலாளராகவும் செயல்பட்ட, என் மகன் (டாக்டர் மு. தெய்வநாயகத்தின் மகன்) கொலை செய்யப்பட சங்கரமடத்தின் பங்கு பற்றியும், என் மகனைக் கொன்று விட்டு, பின்னர் என் மகள் (டாக்டர் மு. தெய்வநாயகத்தின் மகள்) டாக்டர் தேவகலாவையும் பின்னர் என்னையும் (டாக்டர் மு. தெய்வநாயகம்) கொலை

செய்வதற்குச் சங்கரமடம் திட்டமிட்டிருப்பதாக வெளிப்படுத்தியவரின் கூற்றுகளும், திராவிட சமயம் ஆகஸ்டு 1999 பத்திரிக்கையில் வெளியிடப்பட்டிருந்தவையும், இணைக்கப்பட்டு, சங்கர மடத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டன.

அவை யாவும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன". (டாக்டர் மு. தெய்வநாயகம், சங்கரமடத்திற்கு ஒரு சவால், பக். 1-5)

அதனால் சங்கர மடத்துப் பிராமணர் மனம் திருந்தவும், இந்தியாவிலிருந்து சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை நீங்கவும் ஒவ்வொரு மாதமும் இரண்டாம் வெள்ளிக்கிழமை இரவு 10.00 முதல் காலை 5.00 வரை முழு இரவு பிரார்த்தனை நடத்தப்பட்டு வருகிறது. இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே என்று வகுப்புகளும் நடத்தப்பட்டு வருகின்றன.

24.04.2004 அன்று ஓராண்டு முழு இரவு பிரார்த்தனையின் நிறைவு விழா நடைபெற்றது. அன்று - மாலை 3.30 முதல் 6.00 வரை திருவள்ளுவர் கோவிலில் தியான உரை நடைபெற்றது.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்ற கருத்தை வெளிப்படுத்தியுள்ள திருவள்ளுவர் பிறந்த இடமான மயிலாப்பூர் திருவள்ளுவர் கோவிலில் அன்று மாலை 3.30 மணியிலிருந்து 6.00 மணி வரை கூட்டம் நடத்தப்பட்டது.

டாக்டர் தெய்வநாயகம் திருவள்ளுவர் கோவிலிலும் தூய தோமையர் அடக்கம் செய்யப்பட்ட சாந்தோம் பேராலய வளாகத்திலும் இக்கூட்டங்கள் நடத்தப்படுவதற்கான காரணத்தை விளக்கி, கூட்டத்தைத் தொடங்கி வைத்தார்கள். டாக்டர் தேவகலாவின் வரவேற்புரையுடன் கூட்டம் தொடங்கியது.

அம்பேத்கார் அகாடமி தலைவரும் முன்னாள் ஆளுநருமான மேதகு ஆ. பத்மநாபன் I.A.S. (Rtd.,) தலைமையுரை ஆற்றினார். (தலைவர் அவர்களின் மேலான தூண்டுதலால் மிசோ மொழியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள திருக்குறள் நூல் கூட்டத்தில் வெளியிடப்பட்டது.)

இதைக் குறித்து உரையாற்றியோர், சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை உடைத்து, 'வாழும் இராமானுஜர்' என்ற பட்டத்தைப் பெற்றுள்ள தவத்திரு திருப்பெரும்புதூர் வரத எதிராஜ் ஜீயர் சுவாமிகள், பழனி நவ பாஷாண மூலவர் திரு உருவப் பாதுகாப்புக் குழுத் தலைவர் தவத்திரு வடபழனிச் சித்தர் சுவாமிகள், 1200க்கும் மேற்பட்ட சைவக் கோவில்களில் தமிழில் குடமுழுக்கு செய்துள்ள செந்தமிழ் வேள்விச்சதுரர் சத்தியவேல் முருகனார் அவர்கள், 'வைணவம்' –

பத்திரிகையின் ஆசிரியர் பேராசிரியர் டாக்டர் பார்த்தசாரதி அவர்கள், ஆகியோர் சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கைக்கும் சைவ, வைணவ சமயங்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதை ஆணித்தரமாக, ஆதாரப்பூர்வமாக எடுத்துரைத்தனர். சாதி ஏற்றத் தாழ்வுக் கொள்கையை உருவாக்கிய ஆரியருக்கும் நம் சைவ, வைணவ சமயங்களுக்கும் எந்தத் தொடர்புமில்லை என்பதை விளக்கியமை அங்கு குழுமியிருந்தோர் மத்தியிலே நல்லதோர் சிந்தையையும் விழிப்புணர்வையும் ஏற்படுத்துவதாய் இருந்தமை குறிப்பிடற்குரியது.

குறிப்பாக, ஜீயர் சுவாமிகள், தமக்குப் பின்னர், மடாதிபதியாக திருக்குலத்தார் உட்பட சாதி ஏற்றத்தாழ்வு இல்லாமல் வைணவத்தில் தகுதியானவர் வரவேண்டும் என்று அறிவித்து உரையாற்றியபோது எழும்பிய பலத்த கரவொலி திராவிட இன விடுதலை துளிர் விடத் தொடங்கியதையும் மீண்டும் ஒளி பெறத் தொடங்கியதையும் காட்டும் மகிழ்ச்சிப் பேரொலியாய் திருவள்ளுவர் பிறந்த இடமான அந்த திருவள்ளுவர் மண்டபம் முழுவதும் பரவியது. சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையிலிருந்து இந்தியா விடுதலை பெறுவதற்காக சிறந்த சமயப் பணிபுரியும் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆன்மீகப் பணிகளைப் பாராட்டிய ஜீயர் சுவாமிகள், டாக்டர் தெய்வநாயகத்திற்கு, 'சமுதாயத் தென்றல்' எனும் பட்டம் வழங்க வேண்டும் என்று கூறியதும் குறிப்பிடற்குரியது. மொத்தத்தில் நாம் அனைவரும் நண்பர்கள், உறவினர்களாக - ஒன்றாக வாழ்ந்து வளம் பெற வேண்டியவர்கள் எனும் உண்மையை உணர்ந்து சாதி வேற்றுமை இன்றி நன்றாக வாழ்வோம் என்று வலியுறுத்தினார்.

# (ii) அதிர்ச்சி தரும் உண்மைகள்

இந்தியாவில் மிகவும் செல்வாக்கு உடையதாக விளங்கும் காஞ்சி சங்கரமடத்தின் சங்கராச்சாரியார் ஜெயேந்திரர், 2004 நவம்பர் 11ஆம் தேதி இரவு கைது செய்யப்பட்ட செய்தி அனைவரையுமே ஓர் உலுக்கு உலுக்கி அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

## ஏன் கைது செய்யப்பட்டார்?

காஞ்சிபுரத்திலுள்ள வரதராஜ பெருமாள் கோவில் மேலாளர் சங்கரராமன் என்பவர், சங்கராச்சாரியாரின் நெறிபிறழ்ந்த செயல்களைச் சமூகத்திற்கு வெளிப்படுத்தியதால், 2004 செப்டம்பர் 3ஆம் தேதி அன்று, அக் கோவில் அலுவலகத்திலேயே கூலிப்படை* ஜெயேந்திரர் காரணமாயிருந்துள்ளார் என்று கூறி காவல்துறையினர் அவரைக் கைது செய்து, வேலூர் மத்திய சிறையில் அடைத்திருப்பது மிகுந்த வேதனைக்குரிய ஒன்றாக உள்ளது.

(*கூலிப்படை என்பது கொலைகாரர்களுக்குப் பணம் கொடுத்து, தமக்கு வேண்டாதவரைக் கொலை செய்வது)

சங்கராச்சாரியார் கைது பற்றி 'தினமணி' நாளிதழில் வந்த செய்திகளின் பகுதிகள் கீழே கொடுக்கப்படுகின்றன:

> *'காஞ்சிபுரம் வரதராஜ பெருமாள் கோயில் மேலாளர் சங்கரராமன் கொலை வழக்கில் வியாழக்கிழமை இரவு (11:11:2004) கைது செய்யப்பட்ட ஜயேந்திரர் வெள்ளிக்கிழமை வேலூர் மத்திய சிறையில் அடைக்கப்பட்டார்.........*
>
> *சின்னகாஞ்சிபுரம் தெற்கு மாட வீதியைச் சேர்ந்த ஆனந்த சர்மா மகன் சங்கரராமன். இவர் காஞ்சி வரதராஜ பெருமாள் கோயில் மேலாளராகப் பணிபுரிந்து வந்தார். கடந்த செப்டம்பர் 3–ஆம் தேதி மாலை கோயில் அலுவலகத்தில் இருந்த சங்கரராமனை அங்கு வந்த அடையாளம் தெரியாத இருவர் சரமாரியாக வெட்டிக் கொலை செய்துவிட்டு தப்பி ஓடிவிட்டனர். கோயில் வளாகத்திலேயே நடைபெற்ற இக்கொலை சம்பவம் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.......*
>
> *கொலை செய்யப்படுவதற்கு 2 நாட்களுக்கு முன்னர் ஜயேந்திரருக்கு இறுதி எச்சரிக்கை விடுத்து சங்கரராமன் ஒரு கடிதம் அனுப்பியுள்ளார். உங்களைப் பற்றிய எல்லா விஷயத்தையும் வெளியில் சொல்லி விடுவேன் என்று அவர் அக் கடிதத்தில் ஜயேந்திரை மிரட்டியுள்ளார். அதன் பிறகே அவர் கொலை செய்யப்பட்டிருக்கிறார்........*

*காலை 6.15 மணிக் போலீஸ் வாகனத்தில் காஞ்சிபுரம் குற்றவியல் நடுவர் மன்றத்திற்கு (எண்.1) ஜயேந்திரர் அழைத்து வரப்பட்டு நீதிபதி ஜி. உத்தமராஜ் முன்னிலையில் ஆஜர் செய்யப்பட்டார்..... அவரை 15 நாள் காவலில் வைக்க நீதிபதி உத்தரவிட்டார். பின்னர் காலை 7.15 மணிக்கு வேலூர் மத்திய சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.*

*குற்றப்பிரிவு 302, 120-பி, 34, 201 ஆகிய பிரிவுகள்*

- கொலை செய்யத் தூண்டுதல்
- கூட்டுச் சதி
- பொய்யான சாட்சிகளைச் சமர்ப்பித்தல்
- கொலை

*உள்ளிட்ட குற்றச்சாட்டுகளைப் போலீசார் ஜயேந்திரர் மீது பதிவு செய்துள்ளனர்.'*

*(தினமணி, 13 நவம்பர் 2004, சனிக்கிழமை, சென்னை.)*

## மேலும் திடுக்கிடும் தகவல்கள் :
## கொடூரத் தாக்குதல்கள் :

ஒரு கொலை வழக்கில் கைது செய்யப்பட்ட காஞ்சி சங்கராச்சாரியார் மேலும் இன்னொரு வழக்கில் கைது செய்யப்பட்டுள்ளது இன்னும் அதிர்ச்சியைத் தந்துள்ளது.

இதைக் குறித்து 'The Hindu' நாளிதழில் வந்த செய்தியின் பகுதிகள் சில......

*"The Kanchi Sankaracharya, Sri Jeyendra Saraswathi, who is in the Central Prison here (Vellore) in connection with a murder case, was today formally arrested in the case of attack on S. Radhakrishnan, a former associate of the Sankara Mutt, Kancheepuram, in Chennai, two years ago........*

*On September 20, 2002, Mr. Radhakrishnan, his wife and an attendant were attacked by two persons at their house on Norton First Street at Mandaveli, Chennai. Armed with knives, the two attacked the family but fled after the victims raised an alarm. Neighbours rushed to their rescue.*

*Police had said that two of those arrested in connection with the temple murder were involved in the Mandaveli attack also.*

*(The Hindu, Nov. 24, 2004, Chennai.)*

"ராதாகிருஷ்ணனை ஒழித்துக் கட்ட ஜயேந்திரர் தன் கையாட்களோடும், கூட்டாளிகளோடும் சதி செய்தார் என்பதும் புலனாகிறது. இவ்வழக்கும் சங்கரராமன் கொலை வழக்கு போன்றதே என்பதால் அதே குழுவால் விசாரணை மேற்கொள்ளப்பட்டு வருகிறது" என்று தமிழக முதல்வர் தெரிவித்தார்.

சங்கர மடங்கள் ஆன்மீக வேடம் பூண்டுள்ளன. உண்மையில் சங்கரமடங்கள் ஆன்மீக மடங்கள் அல்ல.

- டாக்டர் தெய்வநாயகம்

இது குறித்து 'தினமணி' நாளிதழில் வந்த செய்தி:

*.......ஜயேந்திரர் கைது தொடர்பாக சட்டப் பேரவையில் கடந்த 17-ஆம் தேதி தமிழக முதல்வர் ஜெயலலிதா அறிக்கை தாக்கல் செய்தார்.*

*அதில், 'போலீசார் நடத்திய விசாரணையில் ராதாகிருஷ்ணன், அவரது மனைவி, பணியாளர் மீதான தாக்குதல் வழக்கில் ஜயேந்திரருக்குத் தொடர்பு உள்ளது தெரியவந்தது........*

*ராதாகிருஷ்ணனை ஒழித்துக் கட்ட ஜயேந்திரர் தன் கையாட்களோடும், கூட்டாளிகளோடும் சதி செய்தார் என்பதும் புலனாகிறது.*

*இவ்வழக்கும் சங்கர்ராமன் கொலை வழக்கு போன்றதே என்பதால் அதே குழுவால் விசாரணை மேற்கொள்ளப்பட்டு வருகிறது' என்று முதல்வர் தெரிவித்தார்.*

*(தினமணி, 24-11-2004, சென்னை.)*

இதைப் போன்றே மாதவன் என்பவர் கொடூரமாகத் தாக்கப்பட்டதற்கும் சங்கராச்சாரியார் காரணமாயிருந்தமை 'நக்கீரன்' பத்திரிக்கையில் வெளியிடப்பட்டுள்ளது.

*'.....பைக்கில் வந்த கொலைகாரர்களின் கொடுவாள் வெட்டில் சிக்கி, மிகுந்த போராட்டத்திற்குப்பின் உயிர்தப்பிய அந்த நபர், திருக்கோட்டியூர் மாதவன். வைணவரான இவர், திருப்பதி கோயிலை சங்கரமடத்தின் கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வருவதற்காக ஜெயேந்திரர் எடுத்த முயற்சிகளை கடுமையாக எதிர்த்தவர். சங்கரராமன் போலவே, மாதவனும் ஜெயேந்திரரின் இந்த செயல்பாடுகள் குறித்து கேள்விகள் எழுப்பியதோடு, திருப்பதி கோயில் விவகாரத்தில் ஜெயேந்திரர் தலையிடுவதை எதிர்த்து வழக்குத் தொடர்வதற்கான நடவடிக்கைகளிலும் முனைப்பு காட்டினார்........*

*வழக்கு விஷயமாக வக்கீலைச் சந்திப்பதற்கு அவர் சென்ற நேரத்தில்தான் பைக் ஆசாமிகள் அவர் மீது கொலை வெறித் தாக்குதல் நடத்தினர்.*

*சென்னை க்ரீம்ஸ் சாலையில், பரபரப்பான காலை நேரத்தில் திருக்கோட்டியூர் மாதவனைக் கொல்ல முயற்சி நடந்தபோதும், தற்போதைய சென்னை போலீஸ் கமிஷனர் நடராஜ் என்பவர்தான் கமிஷனராக இருந்தார். மாதவன் வெட்டப்பட்டதைப் பொதுமக்கள் பார்த்திருந்தும், அவரை அப்பல்லோவில் அனுமதித்திருந்தும், வெட்டுக் காயங்களுக்காக 15 நாள் ஐ.சி.யூ.வில் சிகிச்சை அளிக்கப்பட்டிருந்தும் காஞ்சி மட நெருக்கடியால் போலீஸ் தரப்பில் எந்த வழக்கு பதிவு செய்யப்படவில்லை.*

*சங்கராச்சாரியார் கைதாவதற்கு நான்கு நாட்கள் முன்புதான், ஜெ உத்தரவுப்படி மாதவன் மீதான கொலை முயற்சி தாக்குதல் தொடர்பாக வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.'*

*(நக்கீரன், 24 நவம்பர் 2004, பக். 4-6)*

## சங்கரமடத்தில் மாணவர்கள் மர்மச் சாவு:

சங்கரமடத்தின் வேத பாடசாலையில் பயின்று வந்த கேரள மாணவர் இருவரின் மர்மச் சாவிற்கும் சங்கரமடத்திற்கும் உள்ள தொடர்பு இப்போது பெரும் பிரச்சனையை எழுப்பியுள்ளது.

இதுகுறித்து சென்னை, 'முரசொலி' நாளிதழில் வந்த செய்தி:

*'காஞ்சி சங்கர மடத்துக்குச் சொந்தமான வேத பாடசாலையில் கேரளாவைச் சேர்ந்த இரண்டு மாணவர்கள் மர்மமான முறையில் இறந்ததாகப் புகார் கூறியதை அடுத்து தமிழக போலீசார் விசாரணை மேற்கொண்டுள்ளனர்.*

*கேசவ நம்பூதிரி, சங்கரன் என்ற 2 மாணவர்கள் கடந்த 1985ஆம் ஆண்டு மரணமடைந்தனர். இது குறித்து அப்போது விசாரணை நடத்தப்படவில்லை. தற்போது காஞ்சி ஜெயேந்திரர் கைது செய்யப்பட்டுள்ளதையடுத்து கேரள மாணவர்களின் மரணம் பற்றியும் விசாரணை நடத்தக் கோரி அவரது குடும்பத்தினர் கேரள மற்றும் தமிழக முதலமைச்சர்களுக்கு மனு அளித்தனர்.*

*இதனை அடுத்து, தமிழகப் போலீசார், மாணவர்களின் மரணம் குறித்து விசாரணையை 20 ஆண்டுகள் கடந்த பிறகு நேற்று துவக்கினர்.*

*(முரசொலி, 26 நவம்பர் 2004, சென்னை.)*

சதி, கொலை, கொள்ளையோடு சம்மந்தப்பட்டது சங்கரமடம் என்பதை அண்மையில் வெளிவரும் தகவல்கள் தெளிவாகக் காட்டிக் கொண்டிருக்கின்றன. இது ஒருபுறம் இருக்க, மறுபுறம் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் 'சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்' எனும் தலைப்பிட்ட துண்டு வெளியீட்டுடன்

31:03:2003 அன்று சங்கரமடத்திற்கு அனுப்பிய கடிதத்தின் பகுதிகள் சில இங்கே ஆழ்ந்த கவனத்திற்குரியன.

சங்கரமடத்தோடு மிக நெருங்கிய தொடர்புடையவன் நான். உங்கள் தம்பி இறக்கவில்லை; கொல்லப்பட்டார். 'உங்களைக் கொன்றபிறகு உங்கள் தந்தையும் கொலை செய்யப்படுவார். எச்சரிக்கை!
- டாக்டர் சீனிவாச பட்டாச்சாரியார்

*'சங்கர மடங்கள் ஆன்மீக வேடம் பூண்டுள்ளன. உண்மையில் சங்கரமடங்கள் ஆன்மீக மடங்கள் அல்ல. ஆன்மீக வேடத்தில், அரசியல் சூழ்ச்சி செய்து, அரசியல் அதிகாரத்தைத் தம் கீழ் கொண்டு வந்து, அதன்வழி சாதி ஏற்றத்தாழ்வு அல்லது வருணாசிரமம் அல்லது பிராமணீயம் அல்லது இந்துத்துவத்தை, அழியாமல் பாதுகாப்பதே அவற்றின் கொள்கை ஆகும். இந்துத்துவம் வேறு; இந்து மதம் வேறு. இந்துத்துவம் என்பது ஆரியர்கள் திராவிடர்களை அடிமைப்படுத்தி அவர்களைக் கொள்ளையடித்து வாழும் வாழ்க்கை முறை.'*

*(டாக்டர் மு. தெய்வநாயகம், சங்கரமடத்திற்கு ஒரு சவால், ஜனவரி 2004, திராவிட சமய அறக்கட்டளை, சென்னை-23, ப.6)*

திராவிட இன ஆன்மீக விடுதலையை மையமாகக் கொண்ட திராவிட ஆன்மீக இயக்கம் தொடர்ந்து சங்கரமடத்தோடு போராடி, சவால்விட்டு வருவதை அறிஞர் உலகம் அறியும்.

### என் தம்பியின் மர்மச் சாவு:

திராவிட ஆன்மீக இயக்க இளைஞரணி செயலாளரும் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் இளைய மகனும் என் தம்பியுமான வழக்கறிஞர் தெ. தேவ இரக்கம் சாமுவேல், சங்கரமடத்திற்கு எதிராக நாங்கள் நடத்திய போராட்டங்களில் முன்னணியில் நின்றவர் 28:06:1998 அன்று தண்ணீரில் மூழ்கி இறந்தது இயற்கையாக நடந்தது என்று வெகுநாட்களாக எண்ணிக் கொண்டிருந்தோம்.

25:06:1999 ஞாயிற்றுக்கிழமை மாலை 5.30 மணியளவில் எங்கள் வீட்டிற்கு வந்த டாக்டர் சீனிவாச பட்டாச்சாரியார் என்பவர், (தான் ஒரு ஸ்ரீரங்கம் பட்டாச்சாரியார் குடும்பத்தில் பிறந்த பிராமணர் என்று கூறிக் கொள்பவர்) என்னைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்.

*'சங்கரமடத்தோடு மிக நெருங்கிய தொடர்புடையவன் நான். உங்கள் தம்பி இறக்கவில்லை; கொல்லப்பட்டார். அப்போது நானும் உடன் இருந்தேன். இது சங்கரமடமும் நானும் சேர்ந்து செய்ததே.'*

*'உங்கள் தம்பி இறக்கும்போது நானும் பக்கத்தில் இருந்தேன்......'*

*'உங்கள் எழுத்துகளில் ஜாதி பற்றியும் இனம் பற்றியும் எழுதுகின்றீர்கள். அதைப் பற்றி இனிமேல் எழுதக்கூடாது. ஜாதி, இன ஏற்றத்தாழ்வு இல்லை என்பதெல்லாம் வெறும் கட்டுக்கதை. இனியும் தொடர்ந்து இப்படி எழுதினால் நீங்கள் தீர்த்துக் கட்டப்படுவீர்கள்.'*

*'உங்களைக் கொன்றபிறகு உங்கள் தந்தையும் கொலை செய்யப்படுவார். எச்சரிக்கை! என்று கூறினார்.'*

*(டாக்டர் மு. தெய்வநாயகம் சங்கரமடத்திற்கு ஒரு சவால், ஜனவரி 2004, திராவிட சமய அறக்கட்டளை, சென்னை - 23, பக். 27-29)*

அப்பொழுது அவரைப் பார்த்து, நான் பின்வருமாறு கூறினேன்.

'நான் Challenge பண்ணுகிறேன். யார் நினைத்தாலும் யாரையும் தீர்த்துக் கட்ட முடியாது; எல்லாவற்றிற்கும் மேலாக கடவுள் இருக்கின்றார். அவர் திட்டப்படிதான் எதுவுமே நடக்கும். எனவே, நீங்கள் ஒரு கற்பனை செய்து கொண்டு கனவுலகில் மிதக்கிறீர்கள்' என்று கூறினேன்.

சங்கரமடம்தான் என் தம்பியைக் கொலை செய்தது என்று அவர் கூறியதை, அப்போது எங்களால் நம்ப முடியவில்லை. காரணம், கூலிப்படையின் மூலம் தம்பியைக் கொலை செய்யும் அளவிற்கு, சங்கரமடம் அவ்வளவு கீழ் இறங்கிச் செயல்படும் என்று நாங்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

எங்கள் குடும்ப நண்பர் திரு. இராமசுப்பு ஐயர் என்பவர் வீட்டிற்குச் சென்ற சீனிவாச பட்டாச்சாரியார் அவரிடம், என் தம்பியின் கொலையைக் குறித்துக் கூறியுள்ளார். திரு. இராமசுப்பு ஐயர் எங்கள் வீட்டிற்கு வந்தபோது இதை எங்களிடம் தெரிவித்தார். அந்த நேரத்தில் என் தந்தையார் வீட்டில் இல்லை. பின்னர் வீட்டிற்கு வந்த என் தந்தையாரிடம் பட்டாச்சாரியார் திரு. இராமசுப்பு ஐயரிடம் கூறியவை குறித்து எடுத்துச் சொல்லப்பட்டது. இவற்றைக் குறித்து தந்தையார் டாக்டர் தெய்வநாயகம் விளக்கியமை வருமாறு:

***"....திரு. பாஸ்கர் அவர்களுடைய வீட்டிற்குச் சென்று, பின்பு மயானத்திற்கு அஸ்தி சேகரிக்கும் நிகழ்ச்சியில் கலந்து கொண்டு, அவருடைய தந்தைக்கும், அண்ணனுக்கும் ஆறுதல் சொல்லி திரும்பிவந்தேன்.***

***வீட்டிற்கு நான் வந்தபோது, என்னுடைய நண்பர் இராமசுப்பு ஐயர், என் வீட்டிற்கு வந்து என் வீட்டாரிடம் கூறிச் சென்றவைகளை எனக்குத் தெரிவித்தார்கள். அது என்னுடைய சந்தேகத்தை மேலும் அதிகப்படுத்தியது. நான் வீட்டிற்கு வந்த பின்னர், என் நண்பர்***

*இராமசுப்பு ஐயர் என் வீட்டிற்கு வந்திருந்தார். அவரிடமே நேரில் விசாரித்தேன்.*

*அவர், "சீனிவாச பட்டாச்சாரி என் வீட்டிற்கு வந்து சில நாட்கள் தங்கியிருந்தார். உங்களைப் பற்றி கேட்டுக் கொண்டார். உங்கள் மகன் இறந்த இடத்தில் அவர் இருந்தாராம். அவரும், சங்கரமடமும் சேர்ந்துதான் உங்கள் மகனைக் கொன்றார்களாம். ஆனால் நீங்கள் அதை நம்ப மறுக்கின்றீர்களாம். நான் உங்களிடத்தில் சொல்லுகின்ற இந்தக் காரியத்தை அவர் எங்கள் வீட்டில் சொன்னார். இதை எந்த இடத்திலும், யார் முன்னாலும் நான் தெரிவிக்க ஆயத்தமாய் இருக்கின்றேன் என்று கூறினார்."*

*(சங்கரமடத்திற்கு ஒரு சவால், பக். 38-39)*

நண்பர்களுடன் குளிக்கச் சென்ற இடத்தில் 'மூழ்கி இறப்பது' என்பது அப்போதுதான், ஒரு கேள்விக்குறியை எழுப்பியது. ஒரே மாதிரியாக நடந்த இந்தக் கொலைகளின் பின்னணி என்ன?

## ஒரே மாதிரியில் கொலைகள்:

28:06:1998 ஞாயிற்றுக்கிழமை அன்று காலை 7 மணியளவில், தன் நண்பர்களுடன் ஆந்திர மாநில எல்லையருகே, 'தடா' எனுமிடத்தில் உள்ள 'உப்புரிமுடுகு' எனும் இடத்திற்கு உல்லாசப் பயணம் சென்றார் தம்பி.

அந்த இடத்தில் அருவியிலிருந்து வரும் தண்ணீர், தேங்கி ஒரு குளம் போல உள்ளது. அங்குதான் உல்லாசப் பயணம் செல்வோர் குளிப்பர். பிற்பகல் ஏறக்குறைய 2 மணிக்கு, தம்பியுடன் சென்ற நண்பர்களில் ஒருவர் தொலைபேசியில், 'அக்கா, உங்கள் தம்பி ஆழமான இடத்தில் மூழ்கி இறந்து போனார்' என்று தெரிவித்தார்.

அதைக் கேட்டு, மிகவும் அதிர்ச்சியுற்ற நாங்கள், சங்கரமடத்திற்கும் இந்த இறப்பிற்கும் தொடர்பு இருக்கும் என்று அப்போது கொஞ்சம்கூட சந்தேகப்படவில்லை. இதற்குப் பின்பு, சில மாதங்கள் கழித்து, திருச்சியில் நடந்த சம்பவம் அதிர்ச்சியையும் கேள்வியையும் எழுப்பியது. இந்துத்துவாவாதிகளின் விருப்பத்திற்கு மாறாக, திரு. பாஸ்கர் என்பவர் கைகளில் பிறை, சிலுவையுடன் சமத்துவப் பிள்ளையார் அமைத்தார். அனைத்துச் சமயத்தினரும் கலந்து கொண்டு, மகிழ்ச்சியோடு செல்லும்வண்ணமாகச் சமத்துவப் பிள்ளையார் ஊர்வலம் நடத்தினார். ஊர்வலம் நடந்த சில நாட்களுக்குள் திடீரென்று வந்த திரு. பாஸ்கரனின் இறப்புச் செய்தி எங்களை மிகவும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

என் தம்பியைப் போலவே, திரு. பாஸ்கரும், தன் நண்பர்களுடன் குளிக்கச் சென்ற இடத்தில்தான் தண்ணீரில் மூழ்கி இறந்ததாகச் செய்தி வந்தது. நண்பர்களுடன் குளிக்கச் சென்ற இடத்தில் 'மூழ்கி இறப்பது' என்பது அப்போதுதான், ஒரு கேள்விக்குறியை எழுப்பியது.

ஒ்ரே மாதிரியாக நடந்த இந்தக் கொலைகளின் பின்னணி என்ன?

**இங்கு அண்மையில் செய்தித்தாளில் வெளிவந்த செய்தி ஆழ்ந்து கவனிக்கப்பட வேண்டும் :**

*திருச்சி சோமரசன்பேட்டையில் பார்வதி – ஈஸ்வரன் கோவில் உள்ளது. இந்தக் கோவிலில் பரம்பரை அறங்காவலராக இருப்பவர் குணசேகரன். இவர் நேற்று மாலை போலீஸ் சூப்பிரண்டு பிரேம்குமாரைச் சந்தித்து ஒரு புகார் மனு கொடுத்தார். அந்தப் புகாரில் கூறி இருப்பதாவது:–*

*எனது தங்கை கவுரியின் மகன் நாகசுப்பிரமணியன் (வயது 15) 94–ஆம் ஆண்டு சங்கர மடத்தில் வேதம் பயின்று வந்தான். 26–3–94 அன்று அவன் தண்ணீரில் மூழ்கி இறந்து போனதாக எங்களுக்குத் தகவல் சொன்னார்கள்.*

*ஆனால் அவனது பிணத்தைக் கூட எங்களிடம் ஒப்படைக்கவில்லை. அவன் கொலை செய்யப்பட்டிருக்கலாம் என்று அஞ்சுகிறோம். அதுபற்றி விசாரித்து உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும். இவ்வாறு குணசேகரன் தனது மனுவில் குறிப்பிட்டு இருந்தார்.*

*(தினத்தந்தி, சென்னை 2-12-2004)*

- இப்படிப்பட்ட கொலைகளின் பின்னணி என்ன?
- சதியில் யார், யார் பயன்படுத்தப்பட்டனர்?

என்பன ஆழ்ந்து நோக்க வேண்டியதாயுள்ளன.

என் தம்பி, குளிக்க இறங்கியவுடனேயே காலைப் பிடித்து இழுத்துக் கொல்லப்பட்டுள்ளார். அவர், தவறுதலாகத் தண்ணீரில் மூழ்கி இறந்திருந்தால், 3 முறை மேலே வந்திருப்பார். ஆனால், அவருடைய நண்பர்கள் தம்பியின் இறப்பைப் பற்றிக் கூறும்போது,

- சாம் கையசைத்துக் கொண்டே இருந்தார். ஆனால் மேலே வருவதற்குப் பதிலாக கீழேயே போய்க் கொண்டு இருந்தார். மேலே வரவே இல்லை என்று கூறினர்.

தற்போது செய்தித்தாள்களிலும், பத்திரிக்கைகளிலும், தொலைக் காட்சிகளிலும் தொடர்ந்து வெளியிடப்பட்டு வரும் சங்கராச்சாரியார் பற்றிய அதிர்ச்சியான தகவல்களும் பெண்களுடன் அவருக்குள்ள நெறியற்ற தொடர்புகள் பற்றிய செய்திகளும், பிற மர்மச் செய்திகளும், தம்பியின் இறப்பைக் குறித்து பட்டாச்சாரியார் கூறியவற்றை உண்மையாக்குகின்ற நிலையிலுள்ளமை மிகுந்த வேதனை அளிப்பதாய் உள்ளன.

திராவிட இன விடுதலை என்பது டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்குக் கடவுள் காட்டிய வெளிப்பாடாய் இருப்பதால், ஓராண்டு நடத்திய முழு இரவு பிரார்த்தனைக்கும் இப்பொழுது நடத்தி வரும் முன் இரவு பிரார்த்தனைக்கும் கடவுள் நல்ல பலன் கொடுத்து வருகின்றார்.

## ஏன் இந்த மௌனம்?......

முக்கியமாக இங்கு கூர்ந்து கவனிக்க வேண்டியது என்னவென்றால், 31:03:2003 அன்று டாக்டர் தெய்வநாயகம் அவர்கள், சங்கரமடத்தின் தூண்டுதலால் நடத்தப்பட்டதாகச் சொல்லப்பட்ட இந்தக் கொலை பற்றிய செய்தியையும், அதன் தொடர்பான வெளியீடுகளையும் சங்கராச்சாரியாருக்கு அனுப்பியபோதிலும், சங்கராச்சாரியார் நமது குற்றச்சாட்டிற்கு மறுப்பு ஏதும் தெரிவிக்காமல், 'மௌனம் சம்மதத்திற்கு அடையாளமாக', அமைதியாக இருந்தமை ஆழ்ந்து கவனிக்கப்பட வேண்டியவையாகும்.

31:03:2003இல் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களால் அனுப்பப்பட்ட அந்தக் கடிதத்தின் பகுதிகள் வருமாறு:

> *"சங்கரமடத்தை, வரும் தமிழ்ப் புத்தாண்டு அன்று குண்டு வைத்துத் தகர்ப்போம்" என்று அறிவித்த ராஜாராம் என்பவர் சுட்டுக் கொல்லப்பட்டார் என்று இன்று (26:03:2003) நாளிதழ்களில் செய்தி வெளிவந்திருக்கிறது. ராஜாராமின் குண்டு வைத்துத் தகர்க்கும் முறை எங்களுக்கு உடன்பாடானதன்று; தவறான முறையாகும். ஆனால் அவ்வாறு கூறிய அவர் சுட்டுக் கொல்லப்பட்டுள்ளார்; அதுவும், காவல் துறையின் கட்டுப்பாட்டில் அவர் இருக்கும்பொழுது, என்னும் செய்தி கூர்ந்து கவனிக்கப்பட வேண்டிய ஒன்று ஆகிறது. இன்றைய இந்து நாளிதழ் அந்நிகழ்ச்சியைப் பற்றிப் பல ஐயங்களை எழுப்பியுள்ளது.*

இந்த நேரத்தில்

1. 1996-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் திராவிட சமயம் இதழில் வெளியிடப்பட்டிருந்த ஆசிரியர் உரையின் ஒரு பகுதியும்

2. 1999-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் திராவிட சமயம் இதழில் வெளியிடப்பட்டிருந்த "உங்களைக் கொன்றுவிட்டு உங்கள் தந்தையைக் கொல்ல சதித் திட்டம்" என்ற பகுதியும்
3. 1999-ஆம் ஆண்டு நவம்பர் திராவிட சமயம் இதழில் வெளியிடப்பட்டிருந்த "கைகளில் பிறை, சிலுவையுடன் ஆன்மீகப் பிள்ளையார்" என்ற பகுதியும் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.

இந்த மூன்று பகுதிகளில் முதல் பகுதி 'சங்கரமடத்தோடு போராட வேண்டியது ஏன்?' என்ற நூலை எழுதி வெளியிட்டு, 25:05:1996இல் ஈரோட்டில் அதைப் பற்றி நடத்தப்பட்ட கருத்தரங்கில் உண்மையை நிலைநாட்டிய காரணத்தால் என்னைக் கொலை செய்ய நடந்த சதி விளக்கப்பட்டுள்ளது.

இரண்டாம் பகுதியில் சங்கரமடத்தை எதிர்த்து நாங்கள் குடும்பமாகப் போராடி வருகின்ற காரணத்தால், சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞராக இருந்த என் மகனை, சங்கரமடமும் தாமும் சேர்ந்து கொலை செய்ததாக டாக்டர் சீனிவாச பட்டாச்சாரியார் என்பவர் கூறிய கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன.

மூன்றாம் பகுதியில், சமத்துவப் பிள்ளையாரை உருவாக்கிய பாஸ்கரனின் இறப்பு நிகழ்ச்சி. சங்கரமடம் என் மகனைக் கொன்றிருக்கலாமோ என்ற ஐயத்தை எனக்கு எழுப்பியமை வெளியிடப்பட்டுள்ளது.

முதலில் என் மகனையும், பின்னர் என் மகளையும், (டாக்டர் தெ. தேவகலா) அதன் பின்னர் என்னையும் கொலை செய்ய வேண்டும் என்னும் சங்கர மடத்தின் கொலைத் திட்டம் என்பது பற்றிய செய்தி இரண்டாம் மூன்றாம் பகுதிகளில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. 12:02:2003 அன்று நாங்கள் உங்களுக்கு அனுப்பிய எங்கள் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தபடி, இறைவனுடைய அனுமதியில்லாமல் எங்களை உங்களால் ஒன்றும் செய்ய இயலாது என்பதை நாங்கள் அறிவோம்.

இறைவன் உங்களை அனுமதித்தால் அது சங்கரமடம் ஆரிய பிராமணக் கொள்ளைக் கூட்டத்தின் தலைமையிடம் என்பதை உலகம் புரிந்துகொள்ள வழிவகுப்பதாக அமையும். அந்த நிலையில் சங்கரமடங்கள் தொடர்ந்து செயல்பட இயலுமா என்பது கேள்விக்குரிய ஒன்றாகிவிடும்.

*('சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்' தொடர்பாக எழுதப்பட்ட இரண்டாம் கடிதம், சங்கரமடத்திற்குச் சவால், பக். 20-22)*

இவ்வாறு டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் எழுதி அனுப்பினார்கள். இந்த இடத்தில் ஒன்றைக் கூர்ந்து நோக்க வேண்டும். இதுவரை டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் சங்கரமடத்துக்கு அனுப்பிய கடிதங்களிலிருந்து 31-03-2003இல் அனுப்பப்பட்ட மேற்படி கடிதம் வேறுபட்டது.

இந்த உலக அரசுகளை
உங்கள் காலடியில் நீங்கள்
வைத்துக் கொண்டு,
எவ்வளவுதான் நீங்கள்
செயல்பட்டபோதிலும்,
இப்பேரண்டத்தை ஆளும்
இறைவன் தம்முடைய நாசியின்
சுவாசத்தால் அழிக்க
வல்லவராய் இருக்கின்றார்,
என்பதை உங்களால்
மறுக்க இயலாது.

*1995 ஜூலை 'திராவிட சமயம்' இதழில் 'சங்கராச்சாரிகளின் மறுபக்கம்' என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று வெளியிட்டு, நம்முடைய கடிதத்துடன் அவ்விதழ் அனுப்பி வைக்கப்பட்டது.*

*நம் வெளியீட்டுக்கு, சங்கரமடம், அதனால் உருவாக்கப்பட்ட 'இந்து திராவிட இளைஞர் இயக்கத்தின்' மாநில அமைப்பாளரான திரு. வே. குகரமணன் என்பவர் வழியாக மறுப்பு எழுதியது.*

*சங்கரமடத்தின் மறுப்பும் அதற்கு நாம் எழுதிய பதிலும் 1994 செப்டம்பர் திராவிட சமயம் இதழில், 'சங்கரமடத்து மறுப்புக் கடிதமும், நம் பதிலும்' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டு அதுவும் அவர்களுக்கு அனுப்பப்பட்டது.*

*மறுப்பு எழுதினால் மறைந்து கிடக்கும் உண்மை வெளிவந்து விடுகிறது என்பதைப் புரிந்து கொண்ட சங்கரமடம் அதன் பின்பு மௌனம் காக்கத் தொடங்கியது.*

*(சங்கரமடத்திற்குச் சவால், பக். 1-2)*

31:03:2003இல் அனுப்பப்பட்ட மேற்படி கடிதத்தில் கொலை குற்றம் சாட்டப்பட்டிருக்கின்றது. எனவே, மற்றக் கடிதங்களிலிருந்து வேறுபட்ட, கொலைக்குற்றம் சாட்டப்பட்ட இந்தக் கடிதத்திற்கு மறுப்போ, பதிலோ சொல்லாமல் சங்கராச்சாரியார் அமைதியாக இருந்தமை எளிதில் தள்ளிவிடக்கூடிய ஒன்றல்ல.

திராவிட ஆன்மீக இயக்க நிறுவனர் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆராய்ச்சிக் கருத்துகளை ஆராய்ச்சி அடிப்படையில் எதிர்க்க முயலாமல்

- சதி செய்வதும்,
- கொலை செய்யத் துடிப்பதும்,
- கொலை செய்வதும்,

சங்கரமடத்தின் இயல்பாய் உள்ளதை மேற்கண்ட செய்திகள் காட்டுகின்றன.

## சங்கரமடத்தின் சதி:

திராவிட ஆன்மீக விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருக்கும் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் இளைய மகன் இறப்பு இங்கே எண்ணிப் பார்க்கத்தக்கது.

இதைக் குறித்து 21:11:2004 நாளிட்ட ஜுனியர் விகடன் இதழில் வெளிவந்த செய்தி:

> *"இன்னும் சில சோதனைகள் ஜெயேந்திரருக்குக் காத்திருக்கின்றன. "திராவிட ஆன்மீக இயக்கம்" என்ற அமைப்பின் நிறுவனரான டாக்டர் மு. தெய்வநாயகம் ஒரு திடுக்கிடும் புகாருடன் நீதிமன்றப் படியேறிப் போகிறாராம். 94-ஆம் வருடத்திலிருந்தே, சங்கரராமன் ஸ்டைலில் காஞ்சி சங்கராச்சாரியாரை விமர்சித்து குரல் கொடுத்து வருபவர் இவர். "சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்.....", "சங்கர மடத்துக்கு 108 கேள்விகள்" என்றெல்லாம் தொடர்ந்து கையேடுகள் வெளியிட்டு வருபவர். "திராவிட சமயம்" என்ற பத்திரிகையிலும் தொடர்ந்து தாக்குதல் கணை விடுபவர். 98-இல் தன் மகன் தேவஇரக்கம் சாமுவேல் (சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர்) ஆந்திர பார்டரில் இருக்கும் தடா என்னும் நீர்வீழ்ச்சிக்கு சென்றவர், அங்கே மூழ்கி மர்மமாக இறந்த விஷயத்தை இப்போது கோர்ட்டில் கிளறத் தயாராகிறார் தெய்வநாயகம். 'சங்கர்ராமன் கொலையை வைத்து பார்க்கும்போது, என் மகன் மரணத்தையும் ஏன் கூலிப்படையை வைத்து சிலர் நிகழ்த்தியிருக்கக் கூடாது என்று சந்தேகம் வருகிறது' என்பதுதான் தெய்வநாயகம் கோர்ட்டில் போடப்போகும் மனுவின் சாரம். இத்துடன் கல்லணையில் மூழ்கி மர்மமான முறையில் இறந்துபோன பாஸ்கர் என்பவர் தொடர்பான விவகாரத்தையும் கிளறுகிறார் இந்த தெய்வநாயகம். அந்த பாஸ்கர், எம்மதமும் சம்மதம் என்று சொல்வது போல ஒரு பிள்ளையார் சிலையை உருவாக்கியவராம்."*

மறைக்கப்பட்ட உண்மைகளை வெளிக்கொணரும் ஆய்வுகளை

- ஆய்வு அடிப்படையில் மறுக்க இயலாமல்,
- உண்மைகளை அழிக்க நினைப்பதும்
- உண்மைகளை வெளிக்கொணரும் ஆராய்ச்சியாளரை அழிக்க நினைப்பதும் எதுவரை நீடிக்கும்!

நீதியரசனுக்கு முன் அனைவரும் பதில் சொல்லியே ஆக வேண்டும்.

"பத்து நிமிஷம்...... பத்து நிமிஷத்தில் என் வாழ்க்கையே இப்படி ஆயிடுத்து. கோபுரத்திலே தங்க கலசமா ஜொலிச்சிண்டிருந்தேன். இன்னைக்கு சாக்கடையிலே கிடக்குறேன். பத்தே பத்து நிமிஷந்தான். என் வாழ்க்கையே பறிபோயிடுத்து.

- சங்கராச்சாரியார் (நக்கீரன் 27-11-2004)

## மன்னிப்பு கேட்டு வாழ்வடையுங்கள் :

'சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்' எனும் தலைப்பில் டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் சங்கராச்சாரியாருக்கு 31:03:2003 அன்று அனுப்பிய கடிதத்தின் பகுதிகள் சில, இங்கே கொடுக்கப்படுகின்றன.

1. "சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்" என்ற தலைப்பில் எங்களால் வெளியிடப்பட்ட துண்டு வெளியீட்டில் கூறப்பட்டுள்ள வரலாற்று உண்மைகள் உங்களால் மறுக்க இயலாமல் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றன.
2. சங்கரமடம் ஆரிய பிராமணக் கொள்ளைக் கூட்டத்தின் தலைமை இடம் என்பது 1996 முதல் எங்களால் நடத்தப்பட்ட பல்வேறு போராட்டங்கள், மற்றும் "சங்கரமடத்துக்கு 108 கேள்விகள்" முதலியவற்றின் வழியாகவும் நிலைநாட்டப்பட்டுள்ளன.
3. ஆன்மீக வேடத்தில் நீங்கள் இருந்தபோதிலும் கொள்ளைக் கூட்டம் வழக்கமாகக் கையாளும் முறைகளை, கையாளும் நடைமுறையை உடையவர்கள் நீங்கள் என்பது உங்களால் மறுக்க முடியாத உண்மையாகிறது.
4. இந்த உலக அரசுகளை உங்கள் காலடியில் நீங்கள் வைத்துக் கொண்டு, எவ்வளவுதான் நீங்கள் செயல்பட்டபோதிலும், இப்பேரண்டத்தை ஆளும் இறைவனுடைய ஆட்சிக்கு எதிராக "நானே கடவுள்" என்ற கொள்கையில் செயல்படும் உங்கள் மடங்களை, இறைவன் தம்முடைய நாசியின் சுவாசத்தால் அழிக்க வல்லவராய் இருக்கின்றார், என்பதை உங்களால் மறுக்க இயலாது என்பதே இப்பொழுது நாங்கள் உங்கள் முன் வைக்கும் சவாலாகும்.
5. இந்த சவாலின் முன் உங்களால் நிற்க இயலாது என்பதை நாங்கள் அறிவோம். அதனால் இந்திய திராவிட மக்களை, சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையால் இழிவுபடுத்தி, சீரழித்து, கொள்ளையடிக்கும் உங்கள் தவறான வழியிலிருந்து சைவ சித்தாந்தம் கூறுகின்றபடி மனம் திருந்தி, இறைவனிடம் மன்னிப்புக் கேட்டு, வாழ்வடையுங்கள் என்பதே

இப்பொழுது உங்கள் முன் நாங்கள் வைக்கும் வேண்டுகோள் ஆகும்.

இந்த வேண்டுகோளில் உங்களுக்குச் சந்தேகம் இருந்தால், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தால் பாராட்டப்படும் திருநீற்றை நெற்றியில் அணிந்திருக்கும் நீங்கள், தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ இலக்கிய நூலாகிய திருவிளையாடற்புராணத்திலுள்ள "மாபாதகம் தீர்த்த படலத்தை"ப் படிக்கவும்.

இப்படிக்கு,
(ஒப்பம் மு. தெய்வநாயகம்)

*(டாக்டர் மு. தெய்வநாயகம், சங்கரமடத்திற்கு ஒரு சவால், ஜனவரி 2004, திராவிட சமய அறக்கட்டளை, சென்னை-23, பக். 23, 24)*

(குறிப்பு : இக்கடிதம் 2-4-2003 அன்று சங்கரமடத்தால் பெற்றுக் கொள்ளப்பட்டது.)

இவ்வாறு டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள்,

- கடவுளுக்கு எதிராக, 'நானே கடவுள்' என்ற அத்வைதக் கொள்கையில் செயல்படும் சங்கரமடங்களை, இறைவன் தம்முடைய நாசியின் சுவாசத்தால் அழிக்க வல்லவராய் இருக்கின்றார் என்றும்,
- இந்த சவாலின் முன் சங்கரமடங்களால் நிற்க இயலாது என்றும்,
- எனவே, சைவ சித்தாந்தம் கூறுகின்றபடி, மனந்திருந்தி, இறைவனிடம் மன்னிப்பு கேட்டு வாழ்வடையுங்கள் என்பதே அவர்கள் முன் வைக்கும் வேண்டுகோள் என்றும்,

31:03:2003 அன்றே அனுப்பிய கடிதத்தில் கூறியபடி, செயல்பாடுகள் நடைபெறுவதை ஆழ்ந்து நோக்குவோர் அறிய முடியும்.

திராவிட இன விடுதலை என்பது டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்குக் கடவுள் காட்டிய வெளிப்பாடாய் இருப்பதால், ஓராண்டு நடத்திய முழு இரவு பிரார்த்தனைக்கும் இப்பொழுது நடத்தி வரும் முன் இரவு பிரார்த்தனைக்கும் கடவுள் நல்ல பலன் கொடுத்து வருகின்றார். இந்தியரை அடிமைப்படுத்துவதற்காகவே உருவாக்கப்பட்ட சங்கரமடத்தின் செயல்பாடுகளை மக்கள் உணர்ந்து கொள்ளவும் மிக உயர்ந்தவராகப் போற்றப்பட்டவரின் செயல்பாடுகள் வெளிப்படவும் அவர்தம் நிலையில் மாற்றங்கள் ஏற்படவும் கடவுள் வழிவகுத்துள்ளமையை மேற்கண்ட நிகழ்ச்சிகளும் பின்வரும் பகுதிகளும் காட்டுகின்றன.

# "தங்கக் கலசமா...... சாக்கடையா......."

இப்பொழுது, காவல்துறையினரின் விசாரணையில் சங்கராச்சாரியார் கூறிய வாக்குமூலம் இங்கு குறிப்பிடற்குரியது. அவருடைய வாக்குமூலம் கீழே கொடுக்கப்படுகின்றது.

*"ஜெயேந்திரருக்கு மூன்று நாள் போலீஸ் கஸ்டடி முடிந்தபோது விசாரணை நடத்தி முடித்த காவல்துறை உயரதிகாரிகளின் முகத்தில் திருப்திகரம் பளிச்செனத் தெரிந்தது. காஞ்சிபுரம் எஸ்.பி. அலுவலகத்தில் உள்ள அனைத்து மகளிர் காவல் நிலையத்தின் தரையில் மெத்தை போடப்பட்டு, அதன் மீது கம்பளியும் போர்வையும் விரிக்கப்பட்டு, அதில் உட்கார வைத்துதான் ஜெயேந்திரரைப் போலீசார் விசாரித்தனர்.*

*"பத்து நிமிஷம்...... பத்து நிமிஷத்தில் என் வாழ்க்கையே இப்படி ஆயிடுத்து. கோபுரத்திலே தங்க கலசமா ஜொலிச்சிண்டிருந்தேன். இன்னைக்கு சாக்கடையிலே கிடக்குறேன். பத்தே பத்து நிமிஷந்தான். என் வாழ்க்கையே பறிபோயிடுத்து.*

*சங்கரராமன் கடைசியா எழுதியிருந்தானே அந்த லெட்டரைப் படிச்சு முடிக்கிறச்சே, பக்கத்திலே ஆர்.எஸ். நின்னுண்டிருந்தான். 'இதற்கெல்லாம் முடிவேகிடையாதாடா..... இனிமே அவன்கிட்டேயிருந்து லெட்டரே வரப்படாது'ன்னு சொன்னேன்.*

*அவன், பெரியவா உத்தரவு கொடுத்தேள்னா லெட்டரே வராதபடி பண்ணிடுறேன்னான். நீ என்ன வேணும்னாலும் பண்ணிக்கோ. ஆனா, இனிமே அவன் லெட்டரே வரக்கூடாதுன்னு சொன்னேன். தான் எல்லாத்தையும் பார்த்துக்கிறதாவும், செலவுக்குத்தான் பணம் ஜாஸ்தியாகும்னும் சொன்னான். எவ்வளவு பணம் ஆனாலும் பரவாயில்லை.*

*'சுந்தரேசா...... இவா கேட்குற பணத்தை கொடுத்தனுப்பு'ன்னு சொன்னேன். எல்லாம் முடிஞ்சு போயிடுத்து' என்றவரின் அழுகை அதிகமாகத் தொடங்கியது.*

*கேவி, கேவி அழுதவர், திடீரென 'ஓ.....'வெனக் கதறியபடி, 'கோபுரக் கலசமா இருந்துண்டிருந்தேன். இப்படி வந்து கிடக்குறேனே' என முகத்தைப் பொத்திக்கொண்டு குலுங்க ஆரம்பித்துவிட்டார். போலீஸ் அதிகாரிகள் அவரை மெல்ல சமாதானப்படுத்தி ஆசுவாசம் கொள்ள வைத்தனர்.*

*அதன்பிறகு தொடர்ந்தார் ஜெயேந்திரர். "கடைசி லெட்டர் வந்த அன்னைக்கு சாயங்காலமே அப்பு பேசினான். ஆர்.எஸ். சொன்னதை செய்திடலாமான்னு கேட்டான். சங்கரராமன் இனிமே தொல்லை பண்ணக்கூடாதுன்னு அவன்கிட்டேயும் நான் சொன்னேன். சங்கரராமன் கொலைக்கு அப்புறமும் அப்பு போன் பண்ணினான். கதிரவனும் போன் பண்ணி பேசினான்.*

*அவா கேட்ட பணத்தையெல்லாம் கொடுத்தேன். அதற்கப்புறமும், இன்னும் பணம் கொடுங்கோன்னு சொல்லி பிளாக் மெயில் பண்ண ஆரம்பிச்சுட்டா.*

*பணம் கொடுத்துண்டே இருந்தேன். பத்து நிமிஷ தடுமாற்றம்..... எங்கோ இருந்த என்னை இப்ப இருட்டறையில் கொண்டு வந்து தள்ளிடுத்து" என்றவர், அதன்பின் போலீஸ் அதிகாரிகளிடம் பரிதாபக் குரலில் பேசத் தொடங்கிவிட்டார்.*

*(நக்கீரன், 27-11-2004)*

**நீதியரசனுக்குமுன் அனைவரும் பதில் சொல்லியே ஆக வேண்டிய நிலை இருப்பதைக் காட்டுவதாய் இது விளங்குகிறது.**

# சங்கரமடத்தின் தொடர் சதி.....

டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆராய்ச்சிக் கருத்துகளை ஆராய்ச்சி அடிப்படையில் எதிர்க்க முயலாமல்

- சதி செய்வதும்,
- கொலை செய்யத் துடிப்பதும்,
- கொலை செய்வதும்

சங்கரமடத்தின் இயல்பாய் உள்ளதற்கு மேலும் ஓர் எடுத்துக்காட்டாய் அண்மையில், காஞ்சி சங்கராச்சாரியாரின் ஆசியுடனும் பொருளாதார உதவியுடனும் அவரது விருப்பத்திற்கிணங்கவும் வெளியிடப்பட்ட 'தமிழக அந்தணர் வரலாறு' எனும் தலைப்பிலுள்ள 2 பாகங்கள் விளங்குகின்றன.

*(தமிழக அந்தணர் வரலாறு, தொகுதி-I, II அக்டோபர் 2004, கே.சி. லட்சுமிநாராயணன் (பிரதம ஆசிரியர்) எல்.கே.எம். பப்ளிகேஷன், தியாகராய நகர், சென்னை-17.)*

இப்புத்தகங்களில் நம்மைப் பற்றியும் நம் ஆய்வைப் பற்றியும் வந்த செய்திகள் வருமாறு:

[ உண்மையிலேயே 'அந்தணர்' என்பது தமிழ்ப் பெரியவர்களை / தமிழ்த் தலைவர்களைக் குறிக்கும் பெயரே தவிர, ஆரிய பிராமணர்களைக் குறிப்பது இல்லை. ஆனால், மிகவும் பிற்காலத்தில் ஆரிய பிராமணர் இப்பெயரைத் தமதாக்கிக் கொண்டனர். ]

## கிறித்துவத்தின் கிளைகளாம்!

*எனும் தலைப்பில் அந்த நூலில் நம்மைப் பற்றிக் கூறப்பட்டவை வருமாறு:*

*"1947-ஆம் ஆண்டில் இந்தியா விடுதலை பெற்ற பிறகும் கிறித்துவ மதத்தினரின் இந்தத் "திருவிளையாடல்கள்" தொடர்ந்து நீடிக்கின்றன – சரியாகக் குறிப்பிட வேண்டும் என்றால், இரட்டிப்பு வேகத்துடன் இவை நீடிக்கின்றன.*

*"திராவிட சமயம்" என்ற பெயரில் ஒரு தமிழ் இதழ் சென்னையிலிருந்து வெளியிடப்படுகிறது. "திராவிட ஆன்மீக இயக்கம்" என்ற கிறித்தவ அமைப்பு இதைப் பிரசுரித்து வருகிறது.*

*2003-ஆம் வருட ஜூலை மாத "திராவிட சமயம்" இதழில் கீழ்க்கண்டவாறு எழுதப்பட்டுள்ளது.*

*இயேசு கிறிஸ்துவின் மாணவர் பன்னிருவரில் தூய தோமா கி.பி.52 முதல் 72 வரை இருபது ஆண்டுகள் தமிழகத்தில் நற்செய்திப் பணியாற்றி, மயிலாப்பூரில் கொலை செய்யப்பட்டு அடக்கம் பண்ணப்பட்டார் என்பது இந்தியத் திருச்சபை வரலாற்றின் ஒரு பகுதி. சைவ, வைணவ சமயங்கள் தூய தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவக் கிளைகள். ஆகவே சைவ, வைணவ சமயங்களைப் பிராமணர்களின் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டியது, இந்தியக் கிறிஸ்தவர்களுடைய கடமை ஆகும்."*

*(திராவிட சமயம், ஜூலை 2003, 278, கொன்னூர் நெடுஞ்சாலை, அயன்புரம், சென்னை-600 023.)*

*சைவமும், வைணவமும் கிறித்துவ மதத்தின் கிளைகளாம்! சிறிதுகூடக் கூச்சம் இல்லாமல் – தயக்கம் கொள்ளாமல் – எழுதுகிறது, "திராவிட சமயம்" என்ற இந்தக் கிறித்தவ இதழ்.*

*(செயின்ட் தாமஸ் என்ற பெயரையே தூய தோமா என்று இந்த இதழ் குறிப்பிட்டுள்ளது.)*

*(தமிழக அந்தணர் வரலாறு, தொகுதி-1, அக்டோபர் 2004, பக்.91, 92)*

## மிகப் பெரும் பொய்

*எனும் தலைப்பில் அந்த நூலில் நம்மைப் பற்றிக் கூறியவை வருமாறு:*

*"தொன்மையும், மேன்மையும் மிக்க சைவம், கிறித்தவ மதத்தின் கிளையாம்!*

*ஈடு இணையற்ற ஆசாரிய பரம்பரையுடன் பொலியும் வைணவம், கிறித்தவ மதத்தின் கிளையாம்!*

*ஒரு பெரும் பொய்யை ஜமக்காளத்தில் வடிகட்டிய பொய் என்பார்கள். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதைப் போல என்றும், நம்பவியலாத பொய்யை விவரிப்பார்கள்.*

*அத்தகைய பொய்களை எல்லாம் தூக்கி அடித்துவிடும், பொய்களின் வரலாற்றிலேயே மிகப்பெரும் பொய் – சைவமும், வைணவமும் கிறித்தவ மதத்தின் கிளைகள் என்ற படு பாதகமான பொய்.*

*கொடுமனம் கொண்ட தீயவர்களால்தான் இத்தகைய பொய்யைக் கூற முடியும்."*

*(தமிழக அந்தணர் வரலாறு, தொகுதி-1, அக்டோபர் 2004, பக். 92, 93)*

என மறைக்கப்பட்ட உண்மைகளை வெளிக்கொண்டு வரும் நமது ஆராய்ச்சியைப் பொறுத்துக் கொள்ள முடியாத ஆரிய பிராமணர்கள்,

- "படு பாதகமான பொய்"
- "கொடு மனம் கொண்ட தீயவர்களால்தான் இத்தகைய பொய்யைக் கூற முடியும்"

என்று நம்மைத் தாக்கியும் இழிவுபடுத்தியும் எழுதியுள்ளனர்.

## சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால் :

இந்த நேரத்தில் ஒன்றை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். நமது ஆய்வு தொடர்பாக 12-02-2003 அன்று டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் காஞ்சி சங்கராச்சாரியாருக்கு எழுதிய கடிதம் இங்கு குறிப்பிடற்குரியது.

அக்கடிதத்தை, தமது ஆராய்ச்சிக் கருத்துகளைச் சுருக்கி வெளியிட்டுள்ள "சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்" எனும் துண்டு வெளியீட்டுடன் பதிவு அஞ்சலில் அனுப்பி வைத்தார்.

அக்கடிதத்தின் பகுதிகள் சில இங்கே கொடுக்கப்படுகின்றன.

நாள் 12 : 02 : 2003

பெறுநர்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அவர்களுக்கு,

வணக்கம்!

இத்துடன்

**"சங்கராச்சாரியாருக்கு ஒரு சவால்"**

என்னும் தலைப்பில் எங்களால் வெளியிடப்பட்டுள்ள துண்டு வெளியீடு ஒன்று இணைக்கப்பட்டுள்ளது.

உண்மையிலேயே 'அந்தணர்' என்பது தமிழ்ப் பெரியவர்களை / தமிழ்த் தலைவர்களைக் குறிக்கும் பெயரே தவிர, ஆரிய பிராமணர்களைக் குறிப்பது இல்லை. ஆனால், மிகவும் பிற்காலத்தில் ஆரிய பிராமணர் இப்பெயரைத் தமதாக்கிக் கொண்டனர்.

## மூன்று முறைகள்

இந்தத் துண்டு வெளியீட்டின்மேல் நீங்கள் மூன்று முறைகளில் நடவடிக்கை எடுக்கலாம். வரலாற்று உண்மைகளை வெளியே கொண்டு வரவேண்டுமானால் முதல் இரண்டு முறைகளில் நடவடிக்கை எடுக்கலாம். வரலாற்று உண்மைகளை அழிக்க வேண்டுமானால் மூன்றாவது முறையில் செயல்படலாம்.

1. இத்துண்டு வெளியீட்டில் கூறப்பட்டிருப்பவை வரலாற்று உண்மைகளா? என்பதை ஆய்ந்து மறைந்து கிடக்கும் வரலாற்று உண்மைகள் வெளிவர உதவலாம். எவ்வாறு?

   பல்கலைக் கழகங்களில் டாக்டர் (Ph.D.,) பட்டம் பெற்ற ஐந்து ஆராய்ச்சியாளர்களை உங்கள் சார்பாக நியமித்தால், எங்கள் சார்பாக நாங்களும் பல்கலைக் கழகங்களில், ஆராய்ச்சியில் டாக்டர் (Ph.D.,) பட்டம் பெற்ற ஐந்து ஆராய்ச்சியாளர்களை நியமிக்கின்றோம்.

   இருபிரிவினரும், எழுத்து மூலமாக ஒருவரோடொருவர் கருத்துகளைப் பறிமாறிக் கொண்டு ஓர் ஆண்டுக்குள் உண்மை வரலாற்றை நாம் அறிந்து கொள்ளுமாறு அவர்கள் செயல்பட ஒழுங்கு செய்யலாம்.

   இரண்டு பிரிவினரும் சேர்ந்து, இத்துண்டு வெளியீட்டிலுள்ள செய்தி தவறு என நிலைநாட்டினால், அவர்கள் பரிந்துரைக்கும் சட்டப்படியான தண்டனையை நாங்கள் ஏற்றுக் கொள்ள ஆயத்தமாக இருக்கின்றோம். வரலாற்று உண்மை என நிரூபித்தால் தாங்கள் உண்மையை ஏற்றுக் கொள்ள முன்வர வேண்டும்.

2. இத்துண்டு வெளியீட்டில் கூறப்பட்டிருப்பவை வரலாற்று உண்மையாக இருக்குமோ – என்று, நீங்கள் ஐயுற்றால், நாங்கள் வகுப்பில் எவ்வாறு கற்றுக் கொடுக்கின்றோம் என்பதையும், உங்கள் அறிஞர்களின்

கேள்விகளுக்கு நாங்கள் எவ்வாறு பதில் கொடுக்கின்றோம் என்பதையும், அறிந்து கொள்ளுவதற்கு ஏதுவாக, உங்கள் அறிஞர்களை எங்கள் வகுப்புகளுக்கு அனுப்பி, வரலாற்று உண்மைகளை உணர்ந்து கொள்ளலாம்.

3. வரலாற்று உண்மைகளை மறைத்து அழிக்க வேண்டும் என்று கருதினால், தாங்கள் இம்மாதம் 8, 9 ஆகிய நாட்களில் திருச்சியில் கலந்து கொண்ட "ஹிந்து இளைஞர் மாநில மாநாட்டில்" வெளியிட்டிருக்கும் வன்முறையைத் தூண்டும் கருத்துகளைப் போன்று, தாங்கள் எங்கள் மீதும் வன்முறையைக் கட்டவிழ்த்து விடலாம்; அதையும் நாங்கள் மகிழ்ச்சியோடு வரவேற்கின்றோம்.

ஏனெனில், ஊராட்சி, வட்ட ஆட்சி, மாவட்ட ஆட்சி, மாநில ஆட்சி, இந்தியாவின் மைய ஆட்சி, ஐக்கிய நாடுகள் மன்ற ஆட்சி என்று இவ்வுலக ஆட்சிகள் இருப்பனபோன்று, இப்பேரண்டத்தை ஆளும் இறைவனுடைய ஆட்சியும் இருக்கிறது. இவ்வுலக ஆட்சிகளுக்கு மட்டுமே உட்பட்டவர்கள் நாங்கள் என்ற நிலையைத் தாண்டி, இறைவனுடைய ஆட்சிக்கு உட்பட்டவர்கள் என்பது எங்களுக்கு நன்றாகத் தெரியும். உலகிலுள்ள எல்லா ஆட்சிகளுக்கும் மேலான ஆட்சியே இறைவனுடைய ஆட்சி ஆகும்.

ஆகவே, நீங்கள் வன்முறையைக் கட்டவிழ்த்துவிட நினைத்தால் அதற்கும் இறைவனுடைய அனுமதியில்லாமல் உங்களால் ஒன்றும் செய்ய இயலாது என்பதை நாங்கள் அறிவோம்.

இறைவனுடைய அனுமதியோடு வரும் எதையும் தாங்கிக் கொள்ள, நாங்கள் பழக்குவிக்கப்பட்டிருக்கின்றோம். ஏனென்றால் அவற்றைத் தாங்கிக்கொள்ள இறைவன் எங்களுக்குச் சக்தியைக் கொடுக்கின்றார் என்பதை உங்களுக்குத் தெரிவிப்பதில் நாங்கள் மகிழ்ச்சி அடைகின்றோம். அந்த நிலையில் சங்கரமடம் ஒரு கொள்ளைக் கூட்டத்தின் தலைமையிடம் என்பதை, உலகம் தெளிவாக அறிந்து கொள்ள அது பயன்படும்.

இவ்வாறு ஆய்வு அடிப்படையில் கருத்துகளை மறுக்கலாம் என, டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் மிகத் தெளிவாக எழுதி, 12:02:2003 அன்றே அனுப்பியிருந்தபோதிலும், இதற்குப் பின்னர் அக்டோபர் 2004இல் இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ள 'தமிழக அந்தணர் வரலாறு' எனும் நூலில், ஆய்வு அடிப்படையில் மறுக்காமல் திரித்துக் கூறுவதும் இழித்துக் கூறுவதும், பழித்துக் கூறுவதும் சங்கரமடத்தின் இயல்பாயுள்ளமையை, 'தமிழக அந்தணர் வரலாறு'

என்னும் நூல் காட்டுகிறது. இவற்றை ஆழ்ந்து நோக்குவோர் அறிந்து கொள்ள முடியும்.

சங்கரமடத்திற்கென்றே ஏனாத்தூரில் பல்கலைக் கழகம் இருக்கும்போது, ஏன் அவர்களது அறிஞர்களை அழைத்து நம் கருத்துகளை மறுக்க முடியவில்லை?"

சங்கரமடத்திற்கென்றே ஏனாத்தூரில் பல்கலைக் கழகம் இருக்கும்போது, ஏன் அவர்களது அறிஞர்களை அழைத்து நம் கருத்துகளை மறுக்க முடியவில்லை?" ஏன் வரலாற்று அடிப்படையில், ஆராய்ச்சி அடிப்படையில் இக்கருத்துகள் 'பொய்' என நிலைநாட்டுவதற்குத் தயங்குகின்றனர்?

## ஏன் இந்தத் தயக்கம்?

ஏன் வரலாற்று அடிப்படையில், ஆராய்ச்சி அடிப்படையில் இக்கருத்துகள் 'பொய்' என நிலைநாட்டுவதற்குத் தயங்குகின்றனர்?

மேலும், அந்தப் புத்தகங்களில்,

**'இயேசு பிள்ளையாராம்!'**

*எனும் தலைப்பில் நம் ஆய்வைப் பற்றி அந்நூலில் கூறப்பட்டவை வருமாறு:*

*"இயேசு கிறிஸ்துவே பிள்ளையார் என்று மனம் கூசாமல் மற்றொரு மாபெரும் பொய்யையும் "திராவிட சமயம்" இதழ் பிரசுரித்திருக்கிறது. (மேற்படி இதழ், பக். 8 – 10)*

*"திராவிடர் சிந்தனையில் பிள்ளையார்" என்ற தலைப்பில் வெளியாகியுள்ள அந்தக் கட்டுரை இந்து சமயத்தினர் வழிபடும் முழுமுதற் கடவுளாம் பிள்ளையார் இயேசு கிறிஸ்துவே என்று சாதிக்க முனைகிறது.*

*"கடவுள் – மனிதனாக வந்த கடவுள் – உலகம் அனைத்திற்குமே கடவுளாக இருப்பதால், மனிதனாக அவதரித்த கடவுளை வரலாற்று நோக்கில் கிறிஸ்துவாகக் கண்டனர் கிறிஸ்தவர். புராண நோக்கில் பிள்ளையாராகக் கண்டனர், தூய தோமா வழி தமிழ்க் கிறிஸ்துவராகிய சைவர்" என்று "முடிவு" செய்கிறது அந்தக் கட்டுரை.*

*பிள்ளையாரை இயேசு கிறிஸ்து என்று குறிப்பிடும் இந்தக் கொடுமையைக் கண்டிக்க ஓர் ஔவையார் இன்று இல்லையே?"*

*(தமிழக அந்தணர் வரலாறு, தொகுதி-1, அக்டோபர் 2004, பக். 93, 94)*

ஔவையார் இன்று இல்லையே என்று தவிக்கும் இவர்களிடம் மறுப்பு எழுத ஆராய்ச்சியாளர்கள் யாரும் இல்லையோ?

மேலும் திராவிட சமயம் இதழில் வெளிவரும் கருத்துகளை 'விஷம்' எனவும், திராவிட சமயம் ஆசிரியர் ஒழிக்கப்பட வேண்டும் எனவும் சதி நிறைந்த மொழியில் தமிழக அந்தணர் வரலாற்றின் வழி சங்கரமடம்.

## 'விஷத்தை நீக்குக'

*என்ற தலைப்பில் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.*

*ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்தாபித்து அருளிய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் மீதும் "திராவிட சமயம்" இதழ் பாய்ந்திருக்கிறது.*

*"சங்கர மடங்கள் இந்திய திராவிட மதங்களான பௌத்தம், சமணம், சைவம், வைணவம், சீக்கியம் ஆகிய ஐந்து மதங்களுக்கும் எதிரானவை, இந்திய மக்களுக்கும் எதிரானவை. ஆரிய பிராமணர்களின் நன்மை ஒன்றே அதன் குறிக்கோள். அது ஆரிய பிராமணிய மடமே தவிர, ஆன்மீக மடம் அல்ல" என்றும் அந்த இதழ் எழுதியுள்ளது.*

*(திராவிட சமயம், ஏப்ரல் 2003)*

*ஹென்றி ஃபோர்டு குறிப்பிட்ட Bunk வகைக்கு இந்தக் குப்பைக் கூளம் மற்றொரு உதாரணம்.*

*குப்பைக் கூளம் என்று, இதனை அலட்சியமாக ஒதுக்கிவிடக் கூடாது. இது விஷம் கொண்டது; விஷத்தை அகற்ற வேண்டும், உண்மையான புறநிலை நோக்குக் கொண்ட வரலாற்றை எழுதுவதன் மூலம்."*

*(தமிழக அந்தணர் வரலாறு, தொகுதி-1, அக்டோபர் 2004, ப. 94)*

உண்மையான புறநிலை நோக்குக் கொண்ட வரலாற்றை எழுத முன்வராத சங்கரமடம் மறைக்கப்பட்ட உண்மைகளை வெளிக்கொண்டு வரும் டாக்டர் தெய்வநாயகத்தை அகற்ற (கொல்ல) வேண்டுமென சதி நிறைந்த மொழியில் தமிழக அந்தணர் வரலாற்றின் வழி குறிப்பிட்டிருப்பது 12:02:2003 நாளிட்டு டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் சங்கராச்சாரியாருக்கு அனுப்பிய கடிதத்தில், எண்.3இல் குறிப்பிட்டுள்ளவாறே உள்ளது.

எனவேதான், 12:02:2003க்குப் பிறகு இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ள 'தமிழக அந்தணர் வரலாறு' வழி ஆய்வுக் கருத்துகளை ஆய்வு அடிப்படையில் மறுக்க முயலாமல், ஆய்வாளரை அழிக்கத் துடிக்கின்ற நிலையை வழக்கமாக, சங்கரமடம் கையாளும் சதித் திட்டத்தை வெளிப்படுத்துவதாய் உள்ளதை, கூர்ந்து நோக்குவோர் உணர முடியும்.

# இந்திய ஆன்மீக விடுதலைக்காக 24.04.2004 அன்று நடத்தப்பட்ட ஓராண்டு முழுஇரவு பிரார்த்தனை நிறைவு விழாவில் தலைவர்கள் பேசிய கருத்துகளின் சுருக்கம்

## நிகழ்வு - I

### *திருவள்ளுவர் ஆலயம்*
### *(திருவள்ளுவர் பிறந்த இடம்)*
### *திருமயிலை, சென்னை.*

(மாலை 3.30 முதல் 6.20 வரை)

திருவள்ளுவர் பிறந்த இடமான மயிலாப்பூர் திருவள்ளுவர் கோவிலில் 24.4.2004 மாலை 3.30 மணியிலிருந்து 6.00 மணி வரை 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற திருக்குறள் கருத்தின் அடிப்படையில் சைவமும் வைணவமும் அமைந்துள்ள பெருமையை விளக்கி, சைவ வைணவப் பெருமக்களின் தியான உரை நடைபெற்றது.

| | | |
|---|---|---|
| வரவேற்புரை | – | டாக்டர் தெ. தேவகலா. |
| முன்னுரை | – | டாக்டர் மு. தெய்வநாயகம். |

**பேராசிரியர் டாக்டர் பார்த்தசாரதி :**

('வைணவம்' – பத்திரிக்கையின் ஆசிரியரான டாக்டர் பார்த்தசாரதி அவர்கள், உரையாற்றுகையில்.....)

- ❖ வைணவத்திற்கும் சாதி ஏற்றத்தாழ்விற்கும் எவ்விதத் தொடர்புமில்லை.
- ❖ வைணவத்தில் சாதி வேறுபாட்டிற்கு இடமில்லாததால், வைணவன் ஒருவன் சாதி ஏற்றத்தாழ்வை ஏற்றுக் கொள்ள மாட்டான்.
- ❖ ஸ்ரீபெரும்புதூர் ஜீயர் சுவாமிகள் (வைணவ மடாதிபதி) தனக்குப் பிறகு எதிர்கால ஜீயராக, சாதி வேறுபாடு இல்லாமல் இந்தியாவில் தாழ்ந்த சாதி என்று சொல்லப்படுகின்ற திருக்குலத்தார் (தூய சாதி என்று பொருள்) உட்பட, நன்கு தகுதி படைத்த எவர் வேண்டுமானாலும் வரலாம் என்று அறிவித்திருக்கின்றார்.

- ❖ தனக்குப் பிறகு எதிர்கால ஜீயராக, சுதர்சன ஆச்சாரியாரை ஜீயர் சுவாமிகள் அழைத்தார்; ஆனால் அவர் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.
- ❖ 'எனது மரணத்திற்குப்பின், எனது சரீர அடக்கத்திற்கான அனைத்துச் சடங்குகளையும் திருக்குலத்தார் ஒருவரே செய்ய வேண்டும்' என்று ஜீயர் சுவாமிகள் உயில் எழுதி வைத்துள்ளார்.

> "சைவம் ஓர் அன்புச் சமயமாகும்."
>
> "ஒரே கடவுளை நாம் பல்வேறு பெயர்களில் வணங்குகிறோம்."
>
> - செந்தமிழ் வேள்விச் சதுரர்

- ❖ எனவே, வைணவத்தில் சாதி வேறுபாடு இல்லை என்பதும், ஜீயர் சுவாமிகள் சாதி வேறுபாட்டைக் கடைபிடிப்பதில்லை என்பதும் வெளிப்படையாகின்றன.

முனைவர் மு. தெய்வநாயகம் அவர்களின் வற்புறுத்தலுக்குப்பின், சுதர்சன ஆச்சாரியார் எதிர்கால ஜீயர் சுவாமிகளாக, பதவி வகிக்க ஒப்புக் கொண்டுள்ளார் என்பதை இங்கே மகிழ்வுடன் குறிப்பிடுகின்றோம்.

## செந்தமிழ் வேள்விச் சதுரர் சத்தியவேல் முருகனார் :

(1200க்கும் மேற்பட்ட கோவில்களில் தமிழில் குடமுழுக்கு நிகழ்த்திய செந்தமிழ் வேள்விச் சதுரர் சத்தியவேல் முருகனார் உரையாற்றுகையில்.....)

- ❖ இக்கூட்டம் உண்மையிலேயே சவால் நிறைந்த கூட்டம் ஆகும்.
- ❖ முனைவர் தெய்வநாயகம் அவர்கள் ஒவ்வொரு மாதமும் இரவு 10 மணி முதல் காலை 5 மணி வரை முழு இரவு பிரார்த்தனைக் கூட்டம் ஓராண்டு காலம் நடத்தியதன் விளைவாகவே இவைகளெல்லாம் நிகழ்கின்றன.
- ❖ சைவத்தில் சாதி ஏற்றத்தாழ்விற்கு இடமில்லை.
- ❖ சைவம் ஓர் அன்புச் சமயமாகும்.
- ❖ ஒரே கடவுளை நாம் பல்வேறு பெயர்களில் வணங்குகிறோம்.
- ❖ சாதி ஏற்றத்தாழ்வை அகற்றுவதற்கு இக்கூட்டத்தைப் பெருமுயற்சியுடன் ஏற்பாடு செய்துள்ள டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களை நாம் பாராட்டுகிறோம்.
- ❖ 'திருக்குலம்' என்ற அற்புதமான சொல்லை வைணவர்கள் உருவாக்கி உள்ளனர்.

## தவத்திரு. வடபழனிச் சித்தர் சுவாமிகள் :

(பிராமணப் பிடியிலிருந்து 'நவபாஷாணத்தால் செய்யப்பட்ட முருகன் திருவுருவத்தைப் பாதுகாப்பதற்காகப் போராடிக் கொண்டிருக்கும் தவத்திரு. வடபழனி சித்தர் சுவாமிகள்' கூறியவை.....)

- சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையைப் பரப்புவதற்கும், நிலைநிறுத்துவதற்கும் சிலர் திட்டமிட்டே 'கோவிலைக் கட்ட வேண்டும்' என்று சொல்லி மதக் கலவரத்தை உருவாக்குகின்றனர்.
- பிராமணரான இராமானுஜர் சாதி ஏற்றத்தாழ்விற்கு எதிராக, பறையர் ஒருவரைப் பூசாரியாக ஏற்படுத்தினார்.
- சாதி ஏற்றத்தாழ்வு காரணமாக திராவிடப் பூசாரிகள் சிலர் கொல்லப்பட்டனர்; எரிக்கப்பட்டனர்.
- சாதி ஏற்றத்தாழ்வை நீக்குவதற்கு, கலப்புத் திருமணம் செய்துகொள்வதை ஊக்கப்படுத்த வேண்டும்.
- 'பழங்காலச் சித்தர் ஒருவரால் நவ பாஷாணத்தால் (மூலிகை மருந்துகள்) உருவாக்கப்பட்ட முருகன் திருவுருவத்தைப் பிராமண ஆதிக்கத்தின் கைகளிலிருந்து பாதுகாப்பதற்குப் போராடிக் கொண்டிருப்பதால் நான் அச்சுறுத்தப்பட்டேன்; குற்றஞ் சாட்டப்பட்டேன்'
- 'பிராமணனாக இருந்து கொண்டு, மற்றொரு பிராமணனுடன் போராடுவது ஏன்' என்று அவர்கள் என்னைக் கேட்டனர்.
- தமிழ் மொழியையும் கலாச்சாரத்தையும் இழிவு படுத்தும் எவரையும் – அவர்கள் பிராமணர்களோ, இல்லையோ- நான் எதிர்ப்பேன் என்றேன்.
- பிராமணர்களின் ஆதிக்கம் தமிழகத்தில் தொடர்ந்தால், அமைதிக்குப் பதிலாக, தமிழகம் கொந்தளிக்கும்.
- 'என்னுடைய நோக்கம் நிறைவேறும் வரை, பிராமண சக்திகளுக்கு எதிராக நான் உறுதியாகப் போராடுவேன்; அதனால் ஒத்துழைப்பு தேவை' .

## மேதகு. பத்மநாபன் I.A.S. (Rtd) :

(அம்பேத்கார் அகாடமி தலைவரும், முன்னாள் ஆளுநருமான மேதகு. பத்பநாபன் I.A.S., (Rtd) உரையாற்றுகையில்....)

- பிறப்பால் எல்லோரும் சமம் என்று முழங்கிய திருவள்ளுவரின் ஆலயத்திற்கு அருகில் இக்கூட்டம் நடைபெறுவது சிறப்பானதாகும்.

> "எங்களின் சொந்தக் கோவிலுக்குள் நுழைவதற்கு நாங்கள் ஏன் அனுமதிக்கப்படவில்லை" என்று சாதி ஏற்றத்தாழ்விற்கு எதிராகப் போராடியவர்தான் தூய நந்தனார்.
>
> - மேதகு. பத்மநாபன், I.A.S.

❖ எல்லாருக்கும் பொதுவான சிறப்பான வேதம் திருக்குறள்.

❖ சமுதாயத்தில் சமத்துவத்தைக் கொண்டு வரப் போராடிய சிறந்த சீர்திருத்தவாதி இராமானுஜர்.

❖ தன் மரணத்திற்குப் பிறகு, தன் சரீர அடக்கத்திற்கான இறுதிச் சடங்குகளைத் திருக்குலத்தார் ஒருவரே செய்ய வேண்டும் என்றும், அப்படி இல்லையாயின் தன் ஆத்துமா சாந்தி அடையாது என்றும் உயில் எழுதி வைத்துள்ள ஓர் உயர்ந்த ஆத்மாதான் ஜீயர் சுவாமிகள்.

❖ "எங்களின் சொந்தக் கோவிலுக்குள் நுழைவதற்கு நாங்கள் ஏன் அனுமதிக்கப்படவில்லை" என்று சாதி ஏற்றத்தாழ்விற்கு எதிராகப் போராடியவர்தான் தூய நந்தனார்.

❖ சில கோயில்களுக்குள் நுழைவதற்குத் திருக்குலத்தார் இன்று வரை அனுமதிக்கப்படுவதில்லை.

❖ சாதி ஏற்றத்தாழ்வை அகற்றுவதற்கு டாக்டர் தெய்வநாயகம், அவரது மகள் டாக்டர் தேவகலா மற்றும் அவரது குழுவினர் தொடர்ந்து போராடி வருகின்றனர்.

❖ சைவ சித்தாந்தத்தை G.U. போப் மிகவும் பாராட்டினார்.

❖ சமயத் தலைவர்களையும் அறிஞர் பெருமக்களையும் ஒன்று சேர்ப்பது கடினமான பணி ஆகும். ஆனால் நம் Dr. தெய்வநாயகம் அவர்கள் நம்மையெல்லாம் இங்கு ஒன்று சேர்த்திருக்கின்றார்கள்.

❖ மலேசியாவில் உள்ள திராவிடர் கழகமும் மற்ற அமைப்புகளும் நம்முடைய நண்பர் டாக்டர் தெய்வநாயகம் அவர்களைப் பாராட்டி, "திராவிடச் செம்மல்" என்னும் பட்டத்தை அளித்துள்ளனர் என்று அறிவதில் நாம் மகிழ்கிறோம், நாமும் கூட அவருக்குப் பட்டமளித்துக் கனப்படுத்த வேண்டும்.

❖ மனிதன் மனிதனாக இருக்க வேண்டும். மனிதன் சுயமரியாதையுடன் வாழ வேண்டும். சாதி ஏற்றத்தாழ்வு இருக்கக் கூடாது.

❖ நம் நாடு செழித்து, மலர வேண்டுமென்றால், நம் சமுதாயத்தைவிட்டு, சாதி ஏற்றத்தாழ்வானது அடியோடு அகற்றப்பட வேண்டும். வன்முறை என்பதே இருக்கக் கூடாது.

- திருவள்ளுவர் மண்டபத்தில் எல்லா அறிஞர் பெருமக்களும் கூடியுள்ளனர். தூய உள்ளம் அடக்கம் பண்ணப்பட்ட இடமான தூய தோமா பேராலயத்தில் மற்ற அறிஞர் பெருமக்கள் ஒன்று கூடுவார்கள்.
- ஊர்வலத்திலும், கூட்டத்திலும் பங்குபெறுவது மட்டும் போதுமானதல்ல; ஊர்வலம் மற்றும் கூட்டத்தின் நோக்கத்தை நம் வாழ்க்கையில் நடைமுறையில் கைக்கொள்வது மிக அவசியமாகும்.

## தவத்திரு. ஸ்ரீபெரும்புதூர் வரத எத்திராஜ ஜீயர் சுவாமிகள் :

(சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை உடைத்து 'வாழும் இராமானுஜர்' - என்ற பட்டத்தைப் பெற்றுள்ள தவத்திரு. ஸ்ரீபெரும்புதூர் வரத எத்திராஜ ஜீயர் சுவாமிகள் உரையாற்றுகையில்.....)

- மதங்கள் வணிக நோக்கில் பயன்படுத்தப்படுகின்றன.
- வைணவத்தில் சாதி ஏற்றத்தாழ்விற்கு இடமில்லை.
- திருக்குலத்தார் இனத்திலோ, மற்ற எந்த இனத்திலோ வைணவத்தில் நன்கு தகுதிபெற்ற ஒருவர், எனக்கு அடுத்தபடி, எதிர்கால ஜீயராக வரவேண்டுமென்று ஏற்கனவே அறிவித்திருக்கிறேன்.
- வைணவத்தில் சாதி ஏற்றத்தாழ்விற்கு எவ்வித இடமும் அளிக்கப்படக் கூடாது.
- டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்கு, 'சமுதாயத் தென்றல்' என்ற பட்டமளிக்கப்பட வேண்டும்.
- இத்தகைய கூட்டங்கள் நடத்தப்படுவதன் நோக்கம் செயலில் கொண்டுவரப்பட வேண்டும்.
- எழுச்சி பரவ வேண்டும்.
- வைணவம் என்பது தனியார் உடைமை அல்ல; அது அனைவரின் சமயமாகும்.
- சாதி ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராக, சமுதாயத்தில் ஒற்றுமையைக் கொண்டு வர இராமானுஜர் அயராது பாடுபட்டார்.
- ஆதிநாதர் என்றும் ஆதிபகவன் என்றும் ஆதிப்பிதா என்றும் பல்வேறு பெயர்களில் வணங்கப்படுபவர் ஒரே கடவுள் ஆவார்.
- முழுமுதற்கடவுளான மணிவண்ணன் அருளால் நாம் அனைவரும் நல்ல நண்பர்களாக ஒற்றுமையுடன் வாழ வேண்டும்.

## டாக்டர் மு. தெய்வநாயகம் :

(முனைவர் மு. தெய்வநாயகம் அவர்களின் முடிவுரையில் கூறியவை......)

> முனைவர் மு. தெய்வநாயகத்தை ஒரு தீர்க்கதரிசியாகக் கடவுள் எடுத்துப் பயன்படுத்துகிறார். ஆராய்ச்சிக் களத்தில் அவர் துணிவான நிலைகளை எடுத்திருக்கிறார்.
>
> - துணை பேராயர் டாக்டர் லாரன்ஸ் பயஸ்

❖ சைவத்திலும், வைணவத்திலும் சாதி ஏற்றத்தாழ்விற்கு இடமே இல்லை என்று இங்கு பேசிய அனைவரும் விளக்கியுள்ளனர்.

❖ சாதி ஏற்றத்தாழ்வு என்பது ஸ்மார்த்த பிராமணர்களின் கோட்பாடு ஆகும்.

❖ சாதி ஏற்றத்தாழ்விற்கு எதிராக இராமானுஜர் போரிட்டு, சமத்துவத்தை நடைமுறையில் கொண்டு வந்தார்.

❖ இராமானுஜரின் வழியைப் பின்பற்றி, ஜீயர் சுவாமிகள் தன்னுடைய மடத்தில் சமத்துவத்தை நடைமுறைப்படுத்தி வருகின்றார்.

❖ திருக்குறளில் சாதி ஏற்றத்தாழ்விற்கு இடமில்லையாதலால், நம்முடைய தொடக்கவிழாவைத் திருவள்ளுவர் மண்டபத்தில் தொடங்கியிருக்கிறோம். திருவள்ளுவர் மண்டபத்திலிருந்து தொடங்கும் இந்த ஊர்வலத்தின் இறுதியில், சமத்துவம், அன்பு, ஐக்கியத்தின் செய்தியைப் பரப்பிய தூய தோமா அடக்கம் பண்ணப்பட்ட, தூய தோமா பேராலயத்தை நாம் சென்றடைவோம்.

❖ தூய தோமா வழித் திராவிடக் கிறிஸ்தவ நூல்தான் திருக்குறள் என்றும், சைவ, வைணவ சமயங்கள் இரண்டும் தூய தோமா வழித் திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைகளே என்பதும் முன்னமே விளக்கப்பட்டுள்ளன.

❖ ஆதி சங்கரரின் அத்வைதக் கோட்பாட்டினால் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் சைவம், வைணவம் இரண்டும் பிராமணீயத்திற்கு அடிமைப்பட்டுப் போயின.

❖ இதனால் சாதிவேறுபாட்டுக் கொள்கை இல்லாத உண்மையான சைவ, வைணவ சமயங்களை மீண்டும் கொண்டுவர, சைவ, வைணவ குருமார்கள் காலம் தோறும் சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையை எதிர்த்துப் போராடிக் கொண்டிருக்கிறார்கள்.

## நிகழ்வு - II

## ஊர்வலம்

மயிலாப்பூரிலுள்ள திருவள்ளுவர் பிறந்த இடத்தில் அமைக்கப்பட்டுள்ள திருவள்ளுவர் கோவிலில் இருந்து திருவள்ளுவர் கோவில் தெரு, முண்டகக்கண்ணியம்மன் கோவில் தெரு – கச்சேரி சாலை வழியாக, தூய தோமா அடக்கம் செய்யப்பட்டுள்ள சாந்தோம் பேராலய வளாகத்திற்கு, திராவிட ஆன்மீக இயக்கத்தால் நடத்தப்பட்ட ஊர்வலத்தில் பதாகைகளில் (Banners) எழுதப்பட்டிருந்த முழக்கங்கள்:

*(குறிப்பு : இந்த முழக்கங்கள் துண்டு வெளியீடாக அச்சிடப்பட்டு, மௌன ஊர்வலம் சென்று கொண்டிருந்தபோது மக்களுக்கு அளிக்கப்பட்டது.)*

(6.30 முதல் 7.00 வரை)

**ஊர்வல முழக்கங்கள் :**

❖ யார் மேல் சாதி?
இந்தியாவின் மீது படையெடுத்த அந்நியப் பரம்பரை

❖ யார் கீழ் சாதி?
அந்நியர்களை எதிர்த்த தியாகப் பரம்பரை

❖ யார் இடைப்பட்ட சாதி?
அந்நியருக்கு அடிபணிந்த அடிமைப் பரம்பரை

❖ மேல் சாதி என்று சொல்ல வேண்டாம்!
அந்நியராகி நிற்க வேண்டாம்!

❖ கீழ் சாதி என்று தயங்க வேண்டாம்!
தியாகப் பரம்பரை அது தானே!

❖ இடைப்பட்ட சாதியாக எண்ண வேண்டாம்!
அடிமைப் பரம்பரை அது தானே.

❖ இந்தியராக ஒன்றிணைவோம்!
இனி நமக்குள் சாதி வேண்டாம்!

❖ சாதியை நீக்கி வாழ்ந்திடுவோம்!
சமமாகி ஒன்றாய்ச் சேர்ந்திடுவோம்!

❖ இனி நம் முழக்கம்
'ஒன்றே குலம்' , 'ஒருவனே தேவன்'

❖ இனி நம் கொள்கை
'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

# நிகழ்வு - III

# தூய தோமையார் பேராலயம்

## திருமயிலை, சென்னை.

இந்தியா சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கையின் பிடியிலிருந்து விடுதலை பெற இந்தியக் கிறிஸ்தவர்கள் எடுக்க வேண்டிய முயற்சிகள் யாவை? என்ற தலைப்பில் கிறிஸ்தவத் தலைவர்களின் தியான உரை மாலை 7.00 மணி முதல் நடைபெற்றது.

தூய தோமையர் அடக்கம் செய்யப்பட்ட சாந்தோம் பேராலய வளாகத்தில் கூட்டம் நடத்தப்படுவதற்கான காரணத்தை டாக்டர் தெய்வநாயகம் விளக்கி, கூட்டத்தைத் தொடங்கி வைத்தார்.

(7.00 முதல்)

| | |
|---|---|
| தொடக்க ஜெபம் | - போதகர் சம்பத், (ஆதி இந்தியக் கிறிஸ்தவ ஆன்மீகத் திருச்சபை, இராயபுரம்.) |
| தொடக்க ஜெபப் பாடல் | - சகோ. ஜெயக்குமார் |
| வரவேற்புரை | - டாக்டர் தெ. தேவகலா. |
| முன்னுரை | - டாக்டர் மு. தெய்வநாயகம். |

### துணைப் பேராயர் டாக்டர் லாரன்ஸ் பயஸ் :

(கத்தோலிக்கத் திருச்சபை சார்பாக, மயிலை துணைப் பேராயர் டாக்டர் லாரன்ஸ் பயஸ் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம்..)

❖ டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள், தூய தோமா வழி இந்தியக் கிறிஸ்தவம் பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். தூய தோமா அடக்கம் பண்ணப்பட்ட இடமான இங்கு இக்கூட்டத்தை நடத்துகிறார்கள்.

❖ கடந்த 22 ஆண்டுகளாக இவரை எனக்குத் தெரியும்; இந்தியாவில் உள்ள தூய தோமா கிறிஸ்தவம் தான் சைவ, வைணவ சமயங்களாக வளர்ந்துள்ளது என்று யாராலும் மறுக்க முடியாதபடி, வரலாற்றுச் சான்றுகளுடன் நிறுவியுள்ளார்.

❖ முனைவர் மு. தெய்வநாயகத்தை ஒரு தீர்க்கதரிசியாகக் கடவுள் எடுத்துப் பயன்படுத்துகிறார். வரலாற்றுச் சான்றுகளின் அடிப்படையிலான அவருடைய புதிய கண்டுபிடிப்புகளைப் பற்றி விளக்கிவரும் அவருடைய வெளியீடுகளை நான் படித்து வருகிறேன். இதுவரை யாருமே செய்திராதபடி, இந்த ஆராய்ச்சிக் களத்தில் அவர் துணிவான நிலைகளை எடுத்திருக்கிறார்.

❖ சாதி ஏற்றத்தாழ்வை அகற்றுவதற்காக மாதாந்திர முழு இரவு ஜெபக்கூட்டத்தை ஓராண்டு நடத்திய பின்பு, அதன் ஆண்டுவிழாவைக் கொண்டாடுவதற்காக இக்கூட்டத்தை நடத்துகிறார். உண்மையாகவே இது ஒரு மகத்தான சாதனை ஆகும். அவருடைய பெரும் முயற்சியை நாம் பாராட்ட வேண்டும்.

❖ நம் தேச ஒற்றுமைக்காக நாம் இடையறாது ஜெபிப்போம்.

❖ தூய தோமாவின் தியாகமான ஊழியங்களை இந்தியா உணர்ந்து கொள்ளும்படிச் செய்வதற்காக, திராவிட ஆன்மீக இயக்கத்தை வெற்றிகரமாக நடத்திவரும் டாக்டர் மு.தெய்வநாயகம், அவருடைய மகள் டாக்டர் தேவகலா மற்றும் அவரது குழுவினர் பாராட்டப்படத்தக்கவர்கள்.

## போதகர் R. விக்டர் தர்மராஜ் :

(பெந்தேகோஸ்தே திருச்சபை, உலகக் கிறிஸ்தவ தமிழ்ப் போதகர் கவுன்சில் தலைவர் பாஸ்டர் R. விக்டர் தர்மராஜ் உரையாற்றியதன் சுருக்கம்.....)

❖ நம் நாட்டில் சாதி ஏற்றத்தாழ்வு இருக்கிறது.

❖ சாதி ஏற்றத்தாழ்வை அகற்றுவதற்காக ஒவ்வொரு மாதமும் முழு இரவு ஜெபக்கூட்டத்தை நடத்தி வரும் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் முயற்சியை முதலில் நாம் பாராட்ட வேண்டும்; அவரை நாம் ஆதரிக்க வேண்டும். நம் சமுதாயம் சாதி ஏற்றத்தாழ்விலிருந்து விடுதலை அடைவதற்காக இது போன்ற கூட்டங்களை ஒவ்வொரு மாநிலத்திலும், ஒவ்வொரு மாநகரத்திலும் நாம் நடத்த வேண்டும்.

❖ மூடநம்பிக்கையிலிருந்து நம்முடைய தேசத்தை விடுவிப்பதற்காக, இந்தியாவிற்கு வெகுதூரத்திலிருந்து வந்த அருட்பணியாளர்கள் தங்கள் இன்னுயிரைத் தியாகமாய்க் கொடுத்தார்கள்.

❖ சாதி ஏற்றத்தாழ்வின் பிடியிலிருந்து நம் தேசத்தை விடுவிப்பதற்கு நாமும் அப்படிப்பட்ட வைராக்கியம் கொள்ள வேண்டும்.

❖ இந்தியாவில் தூய தோமா வழி கிறிஸ்தவம் பற்றி டாக்டர் தெய்வநாயகம் அவர்கள் ஆழ்ந்த ஆராய்ச்சி செய்துள்ளார்கள். முழு இந்தியாவையும்

கிறிஸ்துவிற்குள் கொண்டு வர, அவருடைய ஆராய்ச்சி முடிவுகளை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

❖ டாக்டர் தெய்வநாயகம், அவரின் மகள் மற்றும் அவருடைய குழுவினர்க்கு நாம் ஆதரவு கொடுத்தால், சாதி ஏற்றத்தாழ்வின் பிடியிலிருந்து இந்தியாவை விடுவித்து, முழு இந்தியாவையும் கிறிஸ்துவிற்குள் கொண்டுவர முடியும்.

சாதி ஏற்றத்தாழ்வு இந்தியாவைவிட்டு அகற்றப்பட வேண்டுமானால் சங்கர மடங்களும், சாதி ஏற்றத் தாழ்வை நியாயப்படுத்தும் மதப் புத்தகங்களும் வேரோடு அகற்றப்பட வேண்டும்.

- பேராயர் டாக்டர் M. எஸ்றா சற்குணம்

## பேராயர் டாக்டர் M. எஸ்றா சற்குணம் :

(E.C.I திருச்சபை சார்பாக, பேராயர் டாக்டர் M. எஸ்றா சற்குணம் உரையாற்றுகையில்.....)

❖ மாதாந்திர முழு இரவு ஜெபக்கூட்டங்களை ஓராண்டு நடத்தி முடித்த பிறகு, அதன் ஆண்டுவிழாவை, தூய தோமா பேராலயத்தில் நாம் கொண்டாடிக் கொண்டு இருக்கிறோம்.

❖ டாக்டர் தெய்வநாயகம் மற்றும் அவரது குழுவினர் "இந்தியாவில் தூய தோமா வழிக் கிறிஸ்தவம்" பற்றி ஆராய்ச்சி செய்துள்ளனர். அவர்களது ஆராய்ச்சிகளுக்கு சென்னைப் பல்கலைக் கழகம் முனைவர்ப் பட்டங்களை வழங்கியுள்ளது.

❖ சாதி ஏற்றத்தாழ்வு இந்தியாவைவிட்டு அகற்றப்பட வேண்டுமானால் சங்கர மடங்களும், சாதி ஏற்றத் தாழ்வை நியாயப்படுத்தும் மதப் புத்தகங்களும் வேரோடு அகற்றப்பட வேண்டும்.

## டாக்டர் ரெட்டி, போதகர் வண்ணை பீட்டர் :

(டாக்டர் ரெட்டி, போதகர் வண்ணை பீட்டர் ஆகிய இருவருடைய சொற்பொழிவின் சுருக்கம்....)

❖ சமுதாயத்தில் சாதி ஏற்றத்தாழ்வுகள் நீங்க, கிறிஸ்தவர்கள் ஆற்ற வேண்டிய கடமைகளைச் சுட்டிக் காட்டினார்.

❖ டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் ஆற்றி வருகின்ற பணிகளைப் பாராட்டினார்கள்.

## டாக்டர் மு. தெய்வநாயகம் :

(டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் முடிவுரையில் கூறியவை........)

❖ தூய தோமா வழி இந்தியக் கிறிஸ்தவத்தின் கிளைகளே சைவ, வைணவ சமயங்கள்.

❖ ஆரியப் பிராமணர்களால் கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிறகு சாதி ஏற்றத்தாழ்வுக் கொள்கை உருவாக்கப்பட்டது.

❖ சைவ, வைணவ சமயங்கள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் ஆதிசங்கரரால் திரிக்கப்பட்டு, சிதைக்கப்பட்டன.

❖ தூய தோமா வழி இந்தியக் கிறிஸ்தவமான சைவ, வைணவத்தில் சாதி ஏற்றத்தாழ்வுக் கோட்பாட்டை ஆதிசங்கரர் புகுத்தினார்.

அத்வைதக் கோட்பாடு மூலமாக சைவ, வைணவத்தின் அடிப்படைக் கோட்பாடுகளின் தரத்தைக் குறைத்து, சிதைத்தார்.

❖ சாதி ஏற்றத்தாழ்வைப் பரப்புவதற்கும், நிலை நிறுத்துவதற்கும் ஆதிசங்கரர் இந்தியாவில் சங்கர மடங்களை நிறுவினார்.

❖ ஐரோப்பியக் கிறிஸ்தவமும், தூய தோமா வழி இந்தியக் கிறிஸ்தவமும் சாதி, இன ஏற்றத்தாழ்வுகளில் இருந்து விடுவிக்கப்பட வேண்டும்.

❖ சாதி, இன ஏற்றத்தாழ்வை அகற்றுவதற்கான கிரயத்தைச் செலுத்த வேண்டியவர்கள் கிறிஸ்தவர்களே.

❖ இக்கூட்டத்தில் அறிவிக்கப்பட்டவைகளை நாம் செயல் முறைப்படுத்த வேண்டும்.

இந்தியச் சமுதாயத்தில் சாதி ஏற்றத்தாழ்வுகளை அகற்ற, மாதந்தோறும் ஜெபக்கூட்டங்கள் நடைபெற்று வருகின்றன. இந்த ஜெபக்கூட்டங்களில் பங்குகொண்டு, பிரார்த்தனையில் ஈடுபட உங்களை அன்புடன் அழைக்கின்றோம்.

– டாக்டர் தெ. தேவகலா.

(24 ஆம் தேதி கூட்ட அறிக்கை

தமிழில் மொழிபெயர்ப்பு திரு. சி. சந்திரசேகரன்)

# மதமாற்றத் தடைச் சட்டக் காலத்தில் - சவால் வகுப்புகள்.

டாக்டர் மு. தெய்வநாயகம், தாம் கண்ட ஆய்வு உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு, 'தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்' என்ற தலைப்பில் ஆறு மாத டிப்ளமோ பயிற்சி வகுப்புகள் சென்னை குருகுலம் இறையியல் கல்லூரியில் 16.09.2003 முதல் நடத்தி வந்தார்கள்.

இப்பயிற்சி வகுப்பில் படித்து வந்த மாணவர்கள், பயிற்சி வகுப்புகளை நடத்திவந்த டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆராய்ச்சிகளின் மையப்பொருள்

**"திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே"**

**"இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே"**

எனும் உண்மைகளை ஆய்வு அடிப்படையில் அறிந்தவுடன், இவ்வுண்மைகளை மக்களுக்கு வெளிப்படுத்த வேண்டும் என மிகவும் வாஞ்சை கொண்டனர்.

எனவே, மத்தியில் பாரதீய ஜனதா கட்சி ஆட்சியில் இருக்க, தமிழக அரசால் மதமாற்றத் தடைச் சட்டம் கொண்டு வரப்பட்டு, அச்சட்டம் நடைமுறையில் இருக்கும்போதே,

**மறைந்து கிடக்கும் மறுக்க முடியாத மாபெரும் வரலாற்று உண்மைகள்!**

எனும் பெயரில்,

திருவள்ளுவர் தினமான 16.01.2004 அன்று காலை 9.00 மணிமுதல் மாலை 5.00 மணிவரை

**"திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே"**

எனும் தலைப்பிலும்

இந்தியக் குடியரசு தினமான 26-01-2004 அன்று காலை 9.00 மணிமுதல் மாலை 5.00 மணிவரை

## "இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே"

எனும் தலைப்பிலும், துண்டு வெளியீடும், சுவரொட்டியும் அச்சிட்டு, டாக்டர் தெய்வநாயகம் அவர்களை அழைத்து, சவால் வகுப்புகள் மெமோரியல் ஹாலில் (சென்னை) நடத்தினர். வகுப்புகளில் ஏறக்குறைய 500க்கும் மேற்பட்டோர் பதிவு கட்டணம் செலுத்திப் பயின்றனர். வகுப்புகளில் பி.எச்டி., பட்டம் பெற்ற இந்து சமய அறிஞர்களும் கலந்து கொண்டனர். பிஎச்.டி. பட்டம் பெற்ற இந்து அறிஞர்கள் மற்றும் பிற அறிஞர்களின் கேள்விகள் உட்பட வகுப்பில் எழுப்பப்பட்ட ஐயங்கள் அனைத்தையும் டாக்டர் தெய்வநாயகம் அகற்றினார்கள். இறுதியில் இக்கருத்துகளைப் புரிந்து கொண்ட அன்பர்கள், டாக்டர் தெய்வநாயகம் அவர்களிடம் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துச் சென்றனர்.

இறையருளால் வகுப்புகள் இனிது நிறைவு பெற்றன.

# துணை நூற்பட்டியல்


அந்தனி ஜான் — வள்ளுவரும் விவிலியமும் ஓர் ஒப்பாய்வு
சென்னைப் பல்கலைக்கழகம், 1979

இராகவன், அ.இ — கோ நகர் கொற்கை - க.நூ.ப.
திருநெல்வேலி- 2, திசம்பர் 1971

இராசமாணிக்கனார். மா. — தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்
தனலட்சுமி பதிப்பகம், மதுரை, 1974

துரைசாமி பிள்ளை, ஔவை சு. — சைவ இலக்கிய வரலாறு
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1958

கனகசபை, வி. — ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்
கழகம், சென்னை, 1973

காமாட்சி சீனிவாசன் — திருக்குறளும் விவிலியமும்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், 1979

காரட், தோ.சா. — திருமறைச் சொற்பொருள்
கிறித்தவ இலக்கியச் சங்கம், 1963

கைலாசபதி, க. — பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்
மக்கள் வெளியீடு, 1978

சிரில் புருஷ்பெர்த் — இந்தியத் திருச்சபை வரலாறு
கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1962

சுப்பிரமணியபிள்ளை, கா. — தமிழர் சமயம்
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971

சுவீரா ஜெயஸ்வால் — வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்
கி. அனுமந்தன் (மொ.பெ.)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
முதற்பதிப்பு, டிசம்பர் 1991

தெய்வநாயகம், மு.

**அம்மன் வரலாறு (சிறுகுறிப்பு)**
முதல் வெளியீடு, 24 ஜனவரி, 1999
திராவிட சமய அறக்கட்டளை,
சென்னை-23.

**இந்துத்துவாவின் பிடியிலிருந்து இந்து மதத்தை விடுவிப்பது எவ்வாறு?,**
இரண்டாம் வெளியீடு, ஜனவரி, 2004,
திராவிட சமய அறக்கட்டளை, சென்னை-23.

**விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வு,**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை,
இரண்டாம் பதிப்பு, செப்டம்பர், 1997.

**சிவஞானபோதம் - உரை**
திராவிட சமய அறக்கட்டளை, சென்னை,
ஜனவரி 2004.

**திருவள்ளுவர் கிறிஸ்தவரா?**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
இரண்டாம் பதிப்பு, ஏப்ரல் 1970.

**மூவர் யார்?**
தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி-620 001,
பிப்ரவரி 1974.

**ஐந்தவித்தான் யார்?**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
மூன்றாம் பதிப்பு, அக்டோபர் 1975.

**நீத்தார் யார்?**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
இரண்டாம் பதிப்பு, அக்டோபர் 1975.

**எழுபிறப்பு?**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
மறு பதிப்பு, அக்டோபர் 1975.

**சான்றோர் யார்?**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
முதற் பதிப்பு, அக்டோபர் 1975.

**பைபிள் கூறும் சைவ உணவின் வரலாறு**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
முதற் பதிப்பு, ஜனவரி 2004.

**திருநீறா? சிலுவையா?**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
இரண்டாம் பதிப்பு, ஏப்ரல் 2003.

**திராவிட சமயம் (மாத இதழ்)**
மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-23,
ஜுன் 2004.

**சங்கரமடத்திற்கு ஒரு சவால்!**
திராவிட சமய அறக்கட்டளை, சென்னை-23,
முதற் பதிப்பு, ஜனவரி 2004.

தேவகலா, தெ. — **திராவிடர் சிந்தனையில் பிள்ளையார்!**
திராவிட சமய அறக்கட்டளை, சென்னை-23,
முதற் பதிப்பு, ஜனவரி 2004.

பசாம், A.L. — **வியத்தகு இந்தியா**
செ. வேலாயுத பிள்ளை, மகேசுவரி
பாலகிருட்டிணன் (மொ.பெ.)
அரச கரும மொழித் திணைக்கள
வெளியீட்டுப் பிரிவு பிரசுரம்,
இலங்கை, 1956

பத்மநாபன், ஆ. — **எனது எண்ண அலைகள்**
சுரா புக்ஸ் (பிரைவேட்) லிமிடெட்,
முதற்பதிப்பு, நவம்பர் 2003

பிள்ளை, கே.கே. — **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்**
தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, 1972

| | |
|---|---|
| பூரணசந்திர ஜீவா | **சிந்துவெளியில் முந்து தமிழ்**<br>தய்யல் பதிப்பகம், பொன்னேரி,<br>ஜனவரி 2004 |
| வெள்ளைவாரணன், க. | **பன்னிரு திருமுறை வரலாறு**<br>இரண்டாம் பகுதி,<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம் |
| உரோலின்சன், எச்.சி. | **இந்தியா ஒரு பண்பாட்டு வரலாற்றுச் சுருக்கம்** - ஞானகலாம்பிகை இரத்தினம் (மொ.பெ.) அரசகரும மொழித்திணைக்கள வெளியீட்டுப் பிரிவுப் பிரசுரம், இலங்கை, 1961 |
| வேங்கடசாமி, மயிலை சீனி | **சமணமும் தமிழும்**<br>முதற்பகுதி, கழகம், 1954<br>பழங்காலத்துத் தமிழர் வாணிபம்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிட்டெட்<br>சென்னை, 1978 |
| வேலுப்பிள்ளை, ஆ. | **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்**<br>தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1969 |
| ஜான் சாமுவேல்.ஜி | **தமிழகம் வந்த தூய தோமா**<br>ஹோம்லாண்ட் பதிப்பகம்<br>சென்னை - 96, மு.ப. நவம்பர் 2001 |
| தேவாரம் | **திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம் (தலமுறை)**<br>ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் 612 504<br>நான்காம் பதிப்பு, 1988 |
| | **திருநாவுக்கரசர் தேவாரம்**<br>திருவாரூர் திருப்பதிகம் பண்முறை - அரங்கசாமி முதலியார் அண்டு சன்ஸ், 1928 |
| | **திருநாவுக்கரசர் பன்னிரு திருமுறை**<br>முதற்பதிப்பு, ஸ்ரீ காமகோடி ஆய்வு<br>மைய வெளியீடு எண் - 12, 1988 |

திருநாவுக்கரசு நாயனார்
அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள்
நாலாந்திருமுறை,
முத்து சு. மாணிக்கவாசக முதலியார் (உரை)
ஞான சம்பந்தம் அச்சகம், தருமபுரம், 1957

**கட்டுரைகள் :**

இலாசரசு, பொன் — சைவ சித்தாந்தமும் திருமறையும்
திராவிட சமயம், இதழ் 5,
மெய்ப்பொருள் அச்சகம், சென்னை-23,
டிசம்பர் 1984

தெய்வநாயகம், மு. — சிந்தனைக்கு விருந்து - 1 வாயில்
மெய்ப்பொருள் அச்சகம், சென்னை-23
சூன் 1976

மதிவாணன், இரா. — சிந்துவெளியில் சிவலிங்கம்
திராவிட சமயம், மெய்ப்பொருள் அச்சகம்
சென்னை-23, ஜுன் 1984

**இலக்கிய இலக்கணங்கள் :**

தொல்காப்பியம்
சங்க இலக்கியங்கள்
திருக்குறள்
சிலப்பதிகாரம்
மணிமேகலை
பன்னிருதிருமுறை
பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்
பகவத் கீதை
நாலாயிர திவ்வியப் பிரபந்தம்
சைவ சித்தாந்த சாத்திரங்கள்
விநாயகர் அகவல்

**ஆய்வேடுகள் :**

சத்தியம், தி.சு. — இருபதாம் நூற்றாண்டில் திருக்குறள்
ஆராய்ச்சியின் வளர்ச்சி
(பி.எச்.டி.ஆய்வேடு)
சென்னைப் பல்கலைக்கழகம், 1979

திருஞான சம்பந்தம், கே.ஏ. **சங்க காலப் பண்டமாற்று நெறியும் காசுகளின் புழக்கமும்**
(எம்.ஃபில். ஆய்வேடு)
சென்னைப் பல்கலைக் கழகம், 1980

தெய்வநாயகம், மு. **விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் ஒப்பாய்வு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,** சென்னைப் பல்கலைக் கழக பிஎச்.டி. ஆய்வுநூல் சென்னை-600 113, முதற்பதிப்பு, மார்ச்சு 1985

தேவகலா, தெ. **தமிழ் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், (விவிலிய ஒளியில்),**
சென்னைப் பல்கலைக் கழக பிஎச்.டி.
ஆய்வேடு, மெய்ப்பொருள் பதிப்பகம்,
சென்னை-23,
முதல் பதிப்பு, செப்டம்பர், 1997.

**வரலாற்று நோக்கில் திருவழுதீசுவரர் கோவில் (பெருங்குளம்)**
சென்னைப் பல்கலைக் கழக எம்.ஃபில்., பட்டத்திற்காக அளிக்கப்பட்ட ஆய்வேடு, தமிழ்த்துறை இராணி மேரி கல்லூரி, சென்னை -4 , திசம்பர் 1987.

ஜான்சன் தங்கையா, ஏ. **தமிழ் இலக்கியங்களில் மூவொருமைக் கோட்பாடு**
சென்னைப் பல்கலைக் கழக பிஎச்.டி.
ஆய்வேடு, சென்னைக் கிறித்தவக் கல்லூரி, (தன்னாட்சி), டிசம்பர் 2003.

ஜெசிந்தா எபிநேசர், இரா. **நினைவுக்கல் வழிபாடும் விவிலியமும்**
(எம்.ஃபில். ஆய்வேடு)
கிறித்தவத் தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்,
டிசம்பர் 1989.

**அகர முதலிகள் :**

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி — க்ரியா
268, இராயப்பேட்டை நெடுஞ்சாலை
சென்னை 14, முதற்பதிப்பு, 1992

சுருக்கத் தமிழ் அகராதி — (சென்னைப் பல்கலைக் கழகத்தின் இசைவு பெற்றது)
மதராஸ் லாஜர்னல் அச்சுக்கூடம்
சென்னை 4, முதற்பதிப்பு, 1955

மதுரைத் தமிழ்ப் பேரகராதி இரண்டாம் பாகம் — மதுரை எக்ஸெல்ஸியப் பவர் பிரஸ்
இரண்டாம் பதிப்பு, 1956

*Encyclopaedia Britannica,*
Vol.5, Micropaedia, 15th Ed., 1982.

**Tamil Lexicon**
**Vol.II and Vol.IV** — University of Madras, 1982
The Oxford Universal Dictionary

**New Bible Dictionary** — Intervarsity Press, USA,
Second Edition, 1996.

**English Books**

Agarwala, P.K. — ***Mother Goddesses in Ancient India***
Shakti Malik Abhinav Publications,
New Delhi - 110 016, First Edition, 1984

Alexander Harris, — ***The Development of Civilization and Religion in India and its Influence on the World Society,***
10A, Ritherdon Road, Chennai -7.
First Edition, 2001.

*Holes in Vedic Valley Theory,*
The Week , August 9, 1998.

Websites:

(http://www.geocities.com/appiusforum/book.pdf),(http://www.geocities.com/appiusforum(Website)

Arthur Osborne — ***Buddhism and Christianity in the Light of Hinduism***
Rider and Company, London,
First Published 1959

Asco Parpola, — ***Review-An Encyclopaedia of the Indus Script,***
Internation Journal of Dravidian linguistics, Vol.XXVI number 1, January 1997.

Bhandarkar, R.G. — ***Vaisnavism Saivism and Minor Religious Systems***
Asian Educational Services,
New Delhi, 1983

Cooper,J.C., — ***"An Illustrated Encyclopaedia of Traditional Symbols' ,***
Thames & Hudson, London,
UK, 1979.

Chhanda Chakrabarty — ***Common Life in the Rg Veda and Adtharva Veda***
An Account of the Folklore in the Vedic Period, 1977

Deivanayagam. M., & Devakala. D., — ***Christianity in Hinduism,***
Dravidian Religion Trust, F.Ed.,
15th August, 1997.

*Hindu Religion is the offshoot of St. Thomas Dravidian Christianity*
Dravidian Religion Trust,
Chennai - 23.

Ernest Mackay — *Early Indus Civilization*
Indological Book Corporation,
New Delhi, 1976

Geoffrey Parrinder — *Avatar and Incarnation*
Oxford University Press, New York,
First Published, 1970

George Foot Moore — *History of Religion Vol. I*
Edinburg, T.G.T.Clark, 38, George St.,
New York, 1914

Ghosh, A. (Editor) — *Jaina Art and Architecture Vol. I, Vol. II and Vol.* III
Bharatiya Jnanpith, New Delhi -110 001,
1974

*Nalanda*
No.1-152, Pp.40

Har Dayal — *The Bodhisattva Doctrine in Buddhism*
Sanskrit Literature Motilal Banarsidass
Indological Publishers and Book Sellers,
Delhi -7, Reprint, 1978

Heras.H — *Studies in Proto - Indo - Mediterranean Culture Vol.I,*
Indian Historical Research Institute,
Bombay, 1953.

Jack Finegan — *The Archaeology of World Religions*
Princeton, New Jersey,
Princeton University Press, 1952

| | |
|---|---|
| Jitendra Nath Banerjea | ***The Development of Hindu Iconography*** Munshiram Manoharlal Publishers Pvt.Ltd., Delhi - 110 006, Third Edition, January 1974 |
| John Marshall, Sir. | ***Mohenjodaro and the Indus Civilization - Vol. I & Vol. III*** Arthur Probsthin, London, 1931 |
| Joytiprasad Jain | ***Religion and Culture of the Jains*** Bharatiya Jnanpith, New Delhi - 1, Feb. 1944 |
| Kauffman, D.T. | ***Ed. "Baker's Concise Dictionary of Religion'*** , Baker Book House, (Grand Rapids MI, ·198) |
| Krishna Sharma | ***Bhakti and the Bhakti Movement*** A New Perspective Munshiram Manoharlal Publishers, Pvt. Ltd., New Delhi - 110 055, First Published, 1987 |
| Macdonell, A.A. | ***India's Past*** At the Clarendon Press Oxford, 1927 |
| Mackintosh, H.R. | ***The Doctrine of the Person of Jesus Christ*** Edinburg, T.G.T. Clark, 38 George Street New York, Reprint, May 1956 |
| Mahadevan, I. , | ***Indian Express,*** Madras, August - 5, 1994. |
| Malkani K.R. | ***Why a separate Sindh*** Indian Express, Madras, Sunday, February 2, 1992. |

| | |
|---|---|
| Mukherjee, B.N. | ***Studies in the Aramaic Edicts of Asoka***<br>Indian Museum, Calcutta, 1984 |
| Nirad C. Chaudhuri, | ***Hinduism,***<br>Oxford University Press, 1979 |
| Pope G.U. | ***The Thiruvasagam***<br>Oxford, at the Clarendon Press, 1900 |
| Ramachandran, M.<br>Madhivanan, R | ***The Spring of the Indus Civilisation***<br>Prasanna Pathippagam, Madras - 10,<br>First Edition, August 1991 |
| Sudhakar<br>Chattopadhyaya | ***Evolution of Hindu Sects Up to the time of Samkaracarya***<br>Munshiram Manoharlal Oriental Publishers, New Delhi - 55,<br>First Published, June 1970 |
| Susmita Pande | ***Birth of Bhakti in Indian Religions and Art, Books and Books Publishers and Distributors***<br>C-4A/20A, Janakpuri,<br>New Delhi - 110 058<br>First Published, 1982 |
| Suzuki. B.L., | ***Mahayana Buddhism, A brief outline.*** |
| Upendra Thakur | ***Some Aspects of Ancient Indian History and Culture***<br>Abhinav Publication,<br>New Delhi - 110 016<br>First Published, 1974 |
| Other Websites | http://www.csn.net/advent/fathers/0304.htm<br>***1999-DEC-28, Author: B.A. Robinson*** |

# அனைத்துலக மாநாடும்

# திராவிட ஆன்மீக இயக்கமும்

## (அமெரிக்கா. கனடாவில் திராவிட ஆன்மீக இயக்கத்தின் பணிகள்)

## சிற்றறிக்கை

- Dr. D. தேவகலா, M.A., M.Phil., Ph.D.,

(தமிழில் மொழிபெயர்ப்பு : திரு. S. சந்திரசேகரன்)

**பகுதி - I**

*அனைத்துலக மாநாடு*

1. திராவிட ஆன்மீக இயக்கமும் நியூயார்க் அனைத்துலக மாநாடும்
2. மாநாட்டில் அளிக்கப்பட்ட நம் ஆய்வுக் கட்டுரைகளின் கருத்துச் சுருக்கம்
3. பரிந்துரை – தீர்மானம் – கிறிஸ்தவம் பற்றிய கல்வியில் தமிழ் ஒரு பாடமாகச் சேர்க்கப்படல் வேண்டும்.

**பகுதி - II**

நமது ஆய்வு பற்றி அறிஞர்களின் கருத்துகள்

**பகுதி - III**

கனடாவில் கூட்டங்களும் வகுப்புகளும்

*வகுப்புகள் :-*

1. கிறிஸ்தவர்கள், இந்துக்களுக்கான வகுப்புகள்
2. போதகர்கள், மிஷனரிகளுக்கான வகுப்புகள்
3. சிவஞானபோதம் பற்றிய ஆய்வு விளக்கம்

*கூட்டங்கள் :-*

4. கனடாவில் கூட்டங்கள் – 'தமிழர்களின் விடுதலை'
5. கனடாவில் வானொலி பேச்சும் நேர் காணலும் (பேட்டிகள்)

**பகுதி - IV**

1. நியூயார்க்கில் கூட்டங்கள்
2. நியூயார்க் கிறிஸ்தவ தமிழ்க் கோயிலில் கூட்டம்

**பகுதி - V**

'உலகத் தமிழர் ஆன்மீக விழிப்புணர்வு இயக்கம்' – உருவாக்கப்படுதலும் அமைப்பாளர்களும்

**பகுதி - VI**

பின் தொடர் பணிகள்

**பகுதி - VII**

நன்றி நவிலல்

# அனைத்துலக மாநாடும் திராவிட ஆன்மீக இயக்கமும்

ஆதி இந்தியக் கிறிஸ்தவ வரலாறு (புனித தோமா முதல் வாஸ்கோடகாமா வரை) பற்றிய முதல் அனைத்துலக மாநாடு கி.பி.2005 ஆகஸ்டு 13 முதல் 16 வரை அமெரிக்காவிலுள்ள நியூயார்க்கில், கன்கார்டியா கல்லூரியில் நடைபெற்றது. திராவிட ஆன்மீக இயக்கம், ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மற்றும் நியூயார்க் கிறிஸ்தவத் தமிழ்க்கோயில் இணைந்து இம்மாநாட்டை நடத்தத் தீர்மானம் செய்திருந்தன.

- இந்த மாநாட்டின் மையப் பொருளான புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பற்றிய ஆய்வுக் கருத்துகள் பற்றிய பொறுப்புகளைத் திராவிட ஆன்மீக இயக்கம் எடுத்துக்கொண்டது.
- இந்த மாநாட்டை ஏற்பாடு செய்யும் பொறுப்பை ஆசியவியல் ஆய்வு நிறுவனம் ஏற்றுக் கொண்டது.
- மாநாட்டை நியூயார்க்கில் நடத்தும் பொறுப்பை நியூயார்க் கிறிஸ்தவத் தமிழ்க் கோயில் ஏற்றுக் கொண்டது.

திருச்சபை வரலாற்றாசிரியர்கள் சீரியக் கிறிஸ்தவம் பற்றி அறிந்திருந்தனரே தவிர, புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பற்றி அறிந்திருக்கவில்லை. இம்மாநாட்டின் மையப் பொருளான, மறைந்திருந்த புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பற்றிய புதிய ஆய்வுக் கருத்துகளை திராவிட ஆன்மீக இயக்க நிறுவனர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் 1968ஆம் ஆண்டு தொடங்கி. கடந்த 37 ஆண்டுகாலமாக ஆய்வுகள் செய்து வெளிக்கொண்டு வந்துள்ளார். (25க்கும் மேற்பட்ட நூல்களையும் இவர் எழுதியுள்ளார்.)

1. மாநாட்டில் ஆய்வுக் கட்டுரைகள் அளிப்பவர்கள் விளக்கம் பெறும் பொருட்டு, இதற்கென்றே ஒரு நாள் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் ஒதுக்கப்பட்டு, ஆய்வுக்கட்டுரை அளிப்பவர்களின் ஐயங்களை நாங்கள் ( திராவிட ஆன்மீக இயக்கம்) அகற்றி அவர்கள் ஆய்வுக் கட்டுரைகள் எழுத ஆலோசனைகளும் கருத்துகளும் வழங்கினோம்.

2. ஆய்வுக் கட்டுரைகள் அளிப்பவர்களை வழிநடத்தும் பொருட்டு. கட்டுரை அளிக்கும் அனைவருக்கும்"Hindu religion is the offshoot of St. Thomas Dravidian Christianity - A Brief Sketch" என்ற தலைப்பிலான சிறிய ஆங்கில நூல் ஒன்றையும் திராவிட ஆன்மீக இயக்கம் அனுப்பியது. மாநாட்டில் கட்டுரைகள் அளிப்பதற்கு

வழிகாட்டும் பயனுள்ள நூலாக அது இருந்தது என்று பலரும் தெரிவித்தனர்.

3. பலர் நேரடியாகவும், தொலைபேசி மூலமாகவும், மின்னஞ்சல் மூலமாகவும் எங்களோடு தொடர்பு கொண்டு, ஆய்வுக் கட்டுரை ஆயத்தப்படுத்தலுக்கான வழிகாட்டுதலைப் பெற்றார்கள்.

நியூயார்க்கில் கி.பி.2005 ஆகஸ்டு 13 முதல் 16 வரை நடைபெற்ற மாநாட்டில் புனித தோமா வழி தமிழ் / திராவிட கிறிஸ்தவம் பற்றிய எங்களது புதிய ஆய்வுக் கண்டுபிடிப்புகளை நாங்கள் அளித்தது மட்டுமல்லாமல் இந்தக் கருத்துகள் மேலும் ஆழமாக எடுத்துக் காட்டப்பட்டன. குறிப்பாக, கீழ்க்காணும் ஆய்வுக் கண்டுபிடிப்புகள் ஆழமாக விளக்கப்பட்டன.

"காலங்கள் நிறைவேறும்போது விளங்கும் நியமத்தின்படி பரலோகத்திலிருக்கிறவைகளும் பூலோகத்திலிருக்கிறவைகளுமாகிய சகலமும் கிறிஸ்துவுக்குள்ளே கூட்டப்பட வேண்டுமென்று, தமக்குள்ளே தீர்மானித்திருந்த தம்முடைய தயவுள்ள சித்தத்தின் இரகசியத்தை எங்களுக்கு அறிவித்தார்." எபேசியர் 1: 9.10

இவ்வுண்மை மாநாட்டில் நாம் அளித்த ஆய்வுக்கட்டுரைகளின் மையப் பொருளாக இருந்தது. கிறிஸ்துவிற்கு முன்னிருந்த இந்திய வழிபாடுகள் மற்றும் சமயங்களின் வரலாறு, "கிறிஸ்துவிற்குள் அவை நிறைவேறி இருக்கின்றன" என்று வெளிப்படுத்துகிறது என்பதும், "கிறிஸ்துவிற்குப் பின் தோன்றிய மதங்களின் அடிப்படை கிறிஸ்துவே" என்பதும் எமது ஆய்வுகளின் முடிவு ஆகும்.

8 ஆய்வுக் கட்டுரைகளையும். மற்றவர்களுடன் இணைந்து 4 கட்டுரைகளையும் அளிப்பதாக இருந்தோம்.

**டாக்டர் மு. தெய்வநாயகம் & டாக்டர் தெ. தேவகலா பின்வரும் தலைப்புகளிலும் :**

1. கிறிஸ்தவமும் சைவமும்
2. இந்துமதத்தில் மூவொருமைக் கோட்பாடு
3. திருக்குறளில் மூவொருமைக் கோட்பாடு
4. கிறிஸ்தவமும் சைவ சித்தாந்தமும்
5. சிவஞானபோதத்தில் மூவொருமைக் கோட்பாடு
6. ஆதி இந்தியக் கிறிஸ்தவ மீட்டுருவாக்கம்

**டாக்டர் தெ. தேவகலா பின்வரும் தலைப்புகளிலும் :**

7. புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் நாணயவியலும்
8. புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் சிற்பவியலும்

**மற்றவர்களுடன் இணைந்து பின்வரும் தலைப்புகளிலும் :**

9. புனித தோமா வழி திராவிட கிறிஸ்தவத்தின் கிளைகள் ( திருமதி. D. தேவமாலா கிறிஸ்டி & Dr. D. தேவகலா)
10. புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் வர்ணாசிரம தர்மமும் (திரு. இராகவன் சுப்பையா & Dr. D. தேவகலா)
11. புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தில் கடவுளின் பெயர்கள் (Fr. P. அமல்ராஜ் & Dr. D. தேவகலா)
12. கிறிஸ்தவமும் கௌமாரமும் (Dr. இயேசுபாதம் ஜான்சன் தங்கையா & Dr. D. தேவகலா)

முதலிய ஆய்வுக் கட்டுரைகள் அளிக்க இருந்தோம். ஆனால் மாநாட்டு நிகழ்ச்சிநிரலில் உண்டான சில மாற்றங்களினால் கீழ்க்காணும் கட்டுரைகளை மட்டுமே நாங்கள் அளித்தோம்.

- ❖ புனித தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவ தொன்மை இலக்கியமான திருக்குறள் குறித்து "Doctrine of Trinity in Thirukkural - Invocation of Trinity is a Creed" [ "திருக்குறளில் மூவொருமைக் கோட்பாடு" - திரித்துவ வாழ்த்து ஒரு விசுவாசப் பிரமாணம் ] - டாக்டர் மு. தெய்வநாயகம் & டாக்டர் தெ. தேவகலா
- ❖ "Christianity and Saiva Siddhantha - Sivagnanapotham, a Creed of St. Thomas Dravidian Christianity" (கிறிஸ்தவமும் சைவ சித்தாந்தமும் - சிவஞானபோதம் - புனித தோமா வழி தமிழ்க் கிறிஸ்தவ விசுவாசப் பிரமாணம்) - டாக்டர் மு. தெய்வநாயகம் & டாக்டர் தெ. தேவகலா
- ❖ "St. Thomas Dravidian Christianity and Numismatics"- (புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் நாணயவியலும்) - டாக்டர் தெ. தேவகலா
- ❖ "St. Thomas Dravidian Christianity and Iconography" - (புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் சிற்பவியலும்) - டாக்டர் தெ. தேவகலா
- ❖ "Restoration of Early Indian Christianity / St. Thomas Dravidian Christianity (ஆதி இந்தியக் கிறிஸ்தவம் / புனித தோமாவழி திராவிடக் கிறிஸ்தவத்தின் மீட்டுருவாக்கம்) - டாக்டர் மு. தெய்வநாயகம் & டாக்டர் தெ. தேவகலா)

# 2. மாநாட்டில் அளிக்கப்பட்ட நம் ஆய்வுக் கட்டுரைகளின்

## கருத்துச் சுருக்கம்

***நம் ஆய்வுக் கட்டுரைகளின் கருத்துச் சுருக்கம் வருமாறு:***

- எபிரேய மொழியில் ஆழ்ந்த அறிவு இல்லையென்றால் பழைய ஏற்பாட்டை முழுமையாகப் புரிந்துகொள்ளல் இயலாது; கிரேக்க மொழியில் ஆழ்ந்த அறிவு இல்லையென்றால் புதிய ஏற்பாட்டை முழுமையாகப் புரிந்து கொள்ளல் இயலாது. அதைப்போல் தமிழ்மொழியில் ஆழ்ந்த அறிவு இல்லையென்றால் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தை முழுமையாகப் புரிந்து கொள்ளுதலும் இயலாது.
- 'தமிழன்' என்ற தமிழ்ச் சொல்லின் சமஸ்கிருத வடிவம்தான் 'திராவிடன்' என்பது ஆகும்.
- கி.பி. முதல் நூற்றாண்டு முதல் இந்திய மண்ணில், இந்தியப் பண்பாட்டில், இந்திய மொழியில் உருவாகி வளர்ந்த புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவம் ஐரோப்பிய நோக்கில் அல்லாமல் இந்திய / திராவிட நோக்கில் புரிந்து கொள்ளப்படல் வேண்டும்.
- எண்பதுக்கும் மேற்பட்ட உலக மொழிகளில் மொழிப் பெயர்க்கப்பட்டுள்ள திருக்குறள் புனித தோமா வழி தமிழ்க் கிறித்தவத்தின் தொன்மையான இலக்கியமாகும்.
- திருக்குறளிலுள்ள திரித்துவ வாழ்த்து பகுதி, புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தின் தொன்மையான விசுவாசப் பிரமாணம் (Creed) ஆகும்.
- பழமையான சமஸ்கிருத இலக்கியங்கள் புனித தோமா வழி கிறிஸ்தவ இலக்கியங்களாக உள்ளன. முதல் சமஸ்கிருதக் கல்வெட்டு கி.பி.150இல் தான் காணப்படுவதால் சமஸ்கிருதத்தின் காலம் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலம் அல்ல. செம்மொழி சமஸ்கிருதம் (செப்பமான சமஸ்கிருதம்) கி.பி.5ஆம் நூற்றாண்டிலிருந்துதான் காணப்படுகிறது. மாறாக, தமிழ்க் கல்வெட்டிற்கான ஆதாரமோ கி.மு.8ஆம் நூற்றாண்டு முதலே காணப்படுகிறது.
- இந்து மதம் எனப்படும் சைவ, வைணவ சமயங்கள் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைகளாகும்.

- ❖ சைவ, வைணவ சமய ஆதார நூல்கள் அனைத்தும் (Source Materials) தமிழிலேயே உள்ளன. அவை அனைத்தும் கி.பி.5ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவையே ஆகும். சைவ, வைணவத்தின் தொன்மையான தலங்கள் தமிழ்நாட்டில்தான் பேரளவில் உள்ளன. (இந்தியாவில் உள்ள 270 தொன்மையான சைவக் கோயில்களில் 230ம், 108 வைணவத் திருப்பதிகளில் 96ம் தமிழ்நாட்டிலேயே உள்ளன.) 63 சைவ நாயன்மார்களும், 12 வைணவ ஆழ்வார்களும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களே.

- ❖ புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தின் இறையியல் நூல்களின் (சைவ சித்தாந்த சாத்திரங்கள் 14) அடிப்படை நூலான சிவஞான போதம், புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தின் விசுவாசப் பிரமாணமாகும் (Creed). இந்தப் பதினான்கு இறையியல் நூல்களுமே தமிழில் உள்ளன.

- ❖ புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளைகள் மகாயான பௌத்தம், சைவம், வைணவம் ஆகும். புத்தர் மற்றும் சைவ, வைணவ சமயக் கடவுளர் உருவங்கள் யாவும் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட காலத்தில் காணப்படுகின்றனவே தவிர, கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்தில் அல்ல. அதுபோல், இவ்வுருவங்களைத் தாங்கிய நாணயங்களும் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட காலத்திலேயே கிடைக்கின்றன.

- ❖ மகாயான பௌத்தம், சைவம் மற்றும் வைணவம் புனித தோமா வழி திராவிடக் கிறித்தவத்தின் கிளைகளே என்று இந்தியச் சமயங்களின் நாணயவியல் மற்றும் சிற்பவியல் வெளிப்படுத்துகின்றன.

- ❖ இச்சமயங்களின் தொடக்கக் காலங்களில் சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கைகளுக்கு இடமேயில்லை என்பதுதான் வரலாற்று உண்மை.

- ❖ இந்தியாவின் பெரும்பான்மையினரின் மதம் இந்து மதமாக உள்ளதால், 'இந்துமதம்' என்பது புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளையே என்பது வரலாற்று உண்மையாக உள்ளதால், இந்தியா தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நாடே என்பது இந்தியச் சமய வரலாறு காட்டும் உண்மையாக உள்ளது.

- ❖ கி.பி.ஏழாம் நூற்றாண்டிற்கு முன்னர் இந்தியப் பண்பாட்டில் சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கைகளுக்கு இடமில்லை. பழந்தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்களில் (ஏறக்குறைய கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.3ஆம் நூற்றாண்டு வரை ) தொழில் அடிப்படையிலான வேறுபாடுகள் காணப்படுகின்றனவே தவிர, சாதி

ஏற்றத்தாழ்வு காணப்படவில்லை. ஆனால் கி.பி.7ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் ஆரிய பிராமணர்கள் சாதி, இன ஏற்றத்தாழ்வுகளை உருவாக்கிக் கற்பித்து, அதன் அடிப்படையில் 'மனுநூல்' என்னும் சட்ட நூலை உருவாக்கினர். இந்தியத் திராவிடர்கள் கி.பி.9ஆம் நூற்றாண்டிலிருந்து, மதம் என்ற பெயரால் சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கைகளுக்கு அடிமைப்படுத்தப்பட்டனர்.

❖ புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவம் கி.பி. முதலாம் நூற்றாண்டு முதல் இந்தியாவில் உருவாகி வளர்ந்தாலும், ஆதி சங்கரர் என்னும் ஆரிய பிராமணரால் கி.பி.9ஆம் நூற்றாண்டு முதல் அதன் அடிப்படைக் கொள்கைகளின் தரம் குறைக்கப்பட்டு, களங்கப் படுத்தப்பட்டு, சைவ, வைணவ சமயங்களின் அடிப்படைக் கொள்கைகள் திரிக்கப்பட்டு, அவற்றுடன் சாதி, இன ஏற்றத் தாழ்வுகளைக் கலந்து, புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் கறைபடுத்தப்பட்டது. அவற்றிற்குத் தவறான விளக்கங்கள் கொடுக்கப்பட்டன. புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தின் பிரிவுகளான சைவ, வைணவத்தில் சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கைகள் பின்னர் இணைக்கப்பட்டன,

❖ எனவே, புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தின் கிளையான இந்துமதம் காலப்போக்கில் தன் மூல வடிவத்தை, தன்மையை இழந்து பிராமணக் கொள்கைகளுக்கு அடிமைப்படுத்தப்பட்டது.

❖ கி.பி.1794இல் சர். வில்லியம் ஜோன்ஸ் என்பவரால் மனு சட்டம் சமஸ்கிருதத்திலிருந்து ஆங்கிலத்திற்கு மொழிபெயர்க்கப்பட்ட உடனேயே, இன ஏற்றத்தாழ்வைக் கைக்கொண்டு, தாங்கி நிறுத்தும் ஐரோப்பிய ஆட்சியாளர்கள் மனு சட்ட நூலின் அடிப்படைக் கொள்கைகளை 'இந்துயிஸம்' ('இந்துத்துவம்') என்று குறித்து சிறப்பித்தார்கள். இந்திய மதங்களின் வரலாற்றில் கி.பி.18ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் 'இந்துயிஸம்', 'இந்துமதம்' என்ற பெயர்கள் காணப்படவில்லை.

❖ 'இந்துயிஸம்' அல்லது 'இந்துத்துவம்' என்பது இந்து மதத்திலிருந்து வேறுபட்டது. 'இந்துயிஸம்' என்பது ஆரிய பிராமணரின் சாதி, இன ஏற்றத்தாழ்வுக் கொள்கையைக் குறிக்கும். ஆனால் இந்துமதம் என்பது தமிழரின் சைவ, வைணவ சமயங்களைக் குறிக்கும். இந்தியச் சமயங்களின் வரலாற்றில் 'இந்துயிஸம்', 'இந்துமதம்' என்னும் பெயர்கள் கி.பி.1794க்குப் பின்னரே காணப்படுகின்றன.

- ❖ இந்துத்துவாவின் ( 'இந்துயிஸத்தின்' ) பிடியிலிருந்து இந்துமதம் விடுவிக்கப்பட வேண்டும்.
- ❖ ஆன்மீகம் என்பது மதத்திலிருந்து வேறுபட்டது.
- ❖ உண்மையான ஆன்மீக விடுதலையடைய, ஐரோப்பியச் சிந்தனையிலிருந்து கிறிஸ்தவர்களும், ஆரிய பிராமணக் கொள்கைகளிலிருந்து இந்துக்களும் விடுவிக்கப்பட வேண்டும்.
- ❖ புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தை ஐரோப்பியப் பிடியிலிருந்தும், பிராமணர் பிடியிலிருந்தும் மீட்டெடுத்தல் ஆன்மீக விடுதலைக்கான மிகப் பெரிய தொடக்கமாகும்.

மேலே கூறப்பட்ட கருத்துகளுக்கு,

**'விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் - ஒப்பாய்வு'.**

**'புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவத்தில் மூவொருமைக் கோட்பாடும் விசுவாசப் பிரமாணமும்'.**

**'கிறிஸ்தவமும் சைவமும்'.**

**'கிறிஸ்தவமும் சைவ சித்தாந்தமும்'.**

**'புனித தோமா வழி திராவிட கிறிஸ்தவமும் சிற்பவியலும்'........**

போன்ற 25க்கும் மேற்பட்ட எமது புத்தகங்களிலிருந்து விளக்கங்கள் பெறலாம்.

## 3. பரிந்துரை - தீர்மானம் - கிறிஸ்தவம் பற்றிய கல்வியில் தமிழ் ஒரு பாடமாகச் சேர்க்கப்படல் வேண்டும்

நம் ஆய்வுக் கட்டுரைகளை அளிப்பதற்கு முன்னர்,

> எபிரேய மொழியில் ஆழ்ந்த அறிவு இல்லையென்றால் பழைய ஏற்பாட்டை முழுமையாகப் புரிந்துகொள்ளல் இயலாது; கிரேக்க மொழியில் ஆழ்ந்த அறிவு இல்லையென்றால் புதிய ஏற்பாட்டை முழுமையாகப் புரிந்து கொள்ளல் இயலாது. அதைப்போல் தமிழ்மொழியில் ஆழ்ந்த அறிவு இல்லையென்றால் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவத்தை முழுமையாகப் புரிந்து கொள்ளுதலும் இயலாது.

என்று மீண்டும் மீண்டும் கூறினோம்.

"Did the Apostle Thomas Visit South India?" என்ற தலைப்பில் சிறப்பு வாய்ந்த ஆய்வுக் கட்டுரையை அளித்த அறிஞர் டாக்டர் பாஸில் டேவிஸ், நம்முடைய ஆய்வுக் கட்டுரைகள் அளிக்கப்பட்ட அரங்குகள் பலவற்றில் தொடர்ந்து கலந்துகொண்டு பல கேள்விகள் கேட்டு, நம்முடைய ஆய்வுகளைப் பாராட்டியதுடன், இறுதி நாள் நிகழ்ச்சியில் பின்வருமாறு பேசினார் :

> "இதுநாள் வரை எபிரேயமும். கிரேக்கமும் கிறிஸ்தவம் பற்றிய கல்வியில் இன்றியமையாத பங்கு வகிக்கின்றன. இனி, கிறிஸ்தவம் பற்றிய கல்வியில் "தமிழும்" சேர்த்துக் கொள்ளப்படல் வேண்டும். நிறைவேற்றப் போகும் தீர்மானங்களில் இதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று நான் பரிந்துரைக்கிறேன்".

இப்பரிந்துரையைக் கேட்டதில் நாங்கள் மிக மகிழ்ந்தோம்; ஏனெனில் தமிழ் வரலாற்றிலும், கிறிஸ்தவ வரலாற்றிலும் இது ஓர் புதிய 'சகாப்தம்' ஆகும்.

**பகுதி - II**

## நம்முடைய ஆய்வு பற்றி அறிஞர்களின் கருத்துகள்

### ❖ டாக்டர் ஜார்ஜ் மெனாசெரி :

புனித தோமா வழி சீரியக் கிறிஸ்தவத்தில் சிறந்த அறிஞரும், மாநாட்டில் ஆய்வுக் கட்டுரைகள் அளித்தவருமான டாக்டர் ஜார்ஜ் மெனாசெரி, நாம் ஆய்வுக் கட்டுரைகள் அளித்த அரங்குகள் சிலவற்றில் கலந்து கொண்டபின் பின்வருமாறு கூறினார்:

> *"புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவம் பற்றிய உங்களின் புதிய ஆய்வுக் கண்டுபிடிப்புகள் தனித்து உயர்ந்து நிற்பவையும் சான்றுகளின் அடிப்படையில் நன்கு பதிவு செய்யப்பட்டவைகளுமாகும்".*

### ❖ டாக்டர் ஜேக்கப் வெல்லியன் :

புனித தோமா வழி சீரியக் கிறிஸ்தவம் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் அளித்தவரும் எனது ஆய்வுக் கட்டுரையான "புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் சிற்ப இயலும்" எனும் ஆய்வுக் கட்டுரையை நான் அளித்தபோது, அக்கட்டுரைக்குத் தலைமை தாங்கியவருமான டாக்டர் ஜேக்கப் வெல்லியன் என்ற மகத்தான அறிஞர் பின்வருமாறு கூறினார்:

> *"ஆழ்ந்த ஆய்வுக் கட்டுரை, ஆய்வுக் கருத்துகள் மிகவும் சிறப்பான முறையில் விளக்கப்பட்டன......ஆய்வுக் கட்டுரை தக்க ஆதாரங்களுடன் இவ்வுண்மைகளை நிரூபிக்கின்றது".*

## ❖ டாக்டர் வினய் காமத் :

நம் ஆய்வரங்குகள் பலவற்றில் கலந்து கொண்டவரும், "Study and relevance of the Gospel of St. Thomas Today" என்ற தலைப்பில் ஆர்வத்தைத் தூண்டும் ஆராய்ச்சிக் கட்டுரை அளித்தவருமான டாக்டர் வினய் காமத் பின்வருமாறு கூறினார்:

> "மெய்யாகவே இது ஒரு புதிய சாதனை; கிறிஸ்தவ வரலாற்றில் உங்களின் இந்த ஆய்வு பெரிய மாற்றங்களை ஏற்படுத்தும்....... ஆய்வு அடிப்படையிலான நற்செய்திப் பணி வரலாற்றில் இது ஒரு வரலாற்று சாதனை ஆகும்........

இப்புதிய நோக்கில் நமக்கெல்லாம் விழிப்புணர்வு அளிப்பதன் மூலம் ஏற்றத்தாழ்வுகளை உடைத்தெறிந்து, சமுதாயத்தை சமத்துவத்திற்கும், சகோதரத்துவத்திற்கும் வழிநடத்துகின்ற இந்தப் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தம் பற்றிய புதிய ஆய்வைப் புரிந்து கொள்வது தற்காலத்தில் மிக மிகத் தேவையான ஒன்றாகும்.

## ❖ டாக்டர் P. லாசரஸ் சாம்ராஜ் :

"The influence of Bible on Thirukkural - an analysis" - என்ற தலைப்பில் சிந்தனையைத் தூண்டக்கூடிய ஆய்வுக் கட்டுரை அளித்தவரும் புதுச்சேரி பல்கலைக் கழகப் பேராசிரியரும் நம்முடைய ஆய்வரங்குகள் சிலவற்றில் கலந்து கொண்டவருமான டாக்டர் P. லாசரஸ் சாம்ராஜ் பின்வருமாறு கூறுகிறார்.

> "உங்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பற்றி எந்த வித விமர்சனமும் என்னால் தெரிவிக்க முடியாவிட்டாலும், உங்கள் கட்டுரைகளில் தருக்க முறையிலான (logic) தெளிவும், நீங்கள் அளித்த முறையில் முரண்பாடற்ற ஓர் இசைவும் உள்ளன".

## ❖ பேராசிரியர் நைனன் :

**"Hinduism"** - என்ற தலைப்பில் நூல் எழுதிய பேராசிரியர் நைனன் பின்வருமாறு கூறினார்.

> " இந்துமதம் குறித்த உங்களுடைய ஆராய்ச்சி கருத்துகள் புதிய நோக்கில் உள்ளன. நான் இந்துமதம் குறித்து நூல் எழுதுவதற்கு உங்களின் இந்தப் புதிய ஆய்வுக் கருத்துகள் மிகவும் பயனுடையவையாய் இருந்தன".

## ❖ மறைதிரு. டாக்டர் சுந்தர் தேவபிரசாத் :

நியூயார்க் கிறிஸ்தவத் தமிழ்க் கோவில் உறுப்பினர்களின் துணையுடன் இந்த மாநாட்டை நடத்திய மறைதிரு. டாக்டர் சுந்தர் தேவபிரசாத் அவர்கள் "ஆதி

இந்தியக் கிறிஸ்தவ மீட்டுருவாக்கம்" (புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்) எனும் தலைப்பில் நான் அளித்த கட்டுரையைக் கேட்டபின் பின்வருமாறு கூறினார்.

"உண்மையிலேயே இது மிகவும் அற்புதமான கட்டுரை ............ ஆய்வுக் கருத்துகளை சான்றுகளுடன் மிகவும் நன்றாக விளக்கினீர்கள்"

### ❖ டாக்டர் J. டேனியேல்

"ஆசியாவின் பிற பகுதிகளில் ஆதி கிறிஸ்தவ வரலாறு" - என்ற தலைப்பில் ஆய்வுக் கட்டுரையை மாநாட்டில் அளித்த இறையியலாளரான டாக்டர் J. டேனியேல் அவர்கள் பின்வருமாறு கூறினார்,

"டாக்டர் தேவகலா மற்றும் டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் ஆய்வுக் கருத்துகளின் அடிப்படையில். 'இந்தியாவில் ஆதி இந்தியக் கிறிஸ்தவம்' பற்றி உறுதியான சான்றுகள் அடிப்படையில் விளக்கப்பட்ட இவ்வாய்வு உண்மைகளைக் கண்டு மிகவும் வியப்புற்றேன். கிறிஸ்தவத்தின் விளைவே சைவம், வைணவம் மற்றும் மகாயான, பௌத்தம் எனும் ஆய்வு உண்மை பலரின் கண்களைத் திறப்பதாயும் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லாததாயும் உள்ளது."

நாம் ஆய்வுக் கட்டுரைகள் அளித்த கருத்தரங்குகளில் பங்கு பெற்ற அறிஞர்கள் பலரும் நம் ஆய்வு உண்மைகளைப் புரிந்து கொண்டு மிகவும் பாராட்டியதுடன், ஆய்வு உண்மைகளை ஏற்றுக் கொண்டனர்.

மேலும், மாநாட்டில் மற்றவர்களுடன் இணைந்து அளிக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரைகளின் விவரம் வருமாறு:

### ❖ திரு. இராகவன் சுப்பையா

மலேசிய அமைப்பாளரும் நம் ஆய்வுக் கருத்துகளை இறைபணிக்குப் பயன்படுத்துபவருமான திரு. இராகவன் சுப்பையா, 8 பேர் கொண்ட குழுவாக மலேசியாவிலிருந்து வந்து மாநாட்டில் பங்கு கொண்டதுடன் "புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவமும் வர்ணாசிரம தர்மமும்" ( திரு. இராகவன் சுப்பையா & Dr. தேவகலா) எனும் கட்டுரையை மாநாட்டில் சிறப்பாக வழங்கினார்.

### ❖ திரு. இராம. பழனியப்பன்

எம் இயக்கத்தைச் சார்ந்த திரு. பழனியப்பன் "கிறிஸ்தவமும் அத்வைதமும்" எனும் தலைப்பில் சிறப்பான கட்டுரை ஒன்றை அளித்தார்.

### ❖ டாக்டர். அலெக்சாண்டர் ஹாரீஸ்

டாக்டர். அலெக்சாண்டர் ஹாரீஸ் அவர்கள் "கிறிஸ்தவமும் சமஸ்கிருதத்தின்

தோற்றமும்" எனும் தலைப்பில் அளித்த கட்டுரையில் சமஸ்கிருதம் பற்றிய தமது புதிய ஆய்வுக் கருத்துக்களை எடுத்து விளக்கினார். சமஸ்கிருதத்தின் காலம் கிறிஸ்துவிற்குப் பிற்பட்ட நூற்றாண்டுகளைச் சார்ந்தது என்பதை ஆதாரங்களுடன் தெளிவாக விளக்கியமை குறிப்பிடற்குரியது. (appiusforum@alum.MIT.edu)

❖ **திருமதி. அல்போன்ஸா ஸ்டீபன்**

இதைப் போன்று எமது ஆய்வுக் கருத்துகளின் அடிப்படையில், "தமிழகத்தில ஆதிக் கிறிஸ்தவர்கள் – சிறப்பாக சான்றோர்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரையை அளித்தார். இதில், பிற்காலத்தில் 'கிறிஸ்தவர்கள்' என்று அறியப்பட்ட 'சாட்சிகள்' தொன்மையான கிறிஸ்தவ இலக்கியமான திருக்குறளில் 'சான்றோர்' எனக் குறிக்கப்பட்டுள்ளதை விளக்கியுள்ளனர். தற்சமயம் இக்கருத்தை அடிப் படையாகக் கொண்டே தமது முனைவர்ப் பட்ட ஆய்வுப் படிப்பை (Ph.D.,) செய்து கொண்டிருக்கின்றார்.......

இவ்வாறாக, மொத்தத்தில் இந்த அனைத்துலக மாநாட்டில் நம் புதிய ஆய்வுக் கருத்துகள் ஆழமாக எடுத்துரைக்கப்பட்டதுடன், அறிஞர்களின் பாராட்டையும் வரவேற்பையும் பெற்றமை குறிப்பிடற்குரியது.

**பகுதி - III**

## கனடாவில் கூட்டங்களும் வகுப்புகளும்

மாநாட்டிற்குப் பிறகு அமெரிக்காவிலிருந்து கனடாவிற்கு, வகுப்புகள், கூட்டங்கள் நடத்த நாங்கள் அழைக்கப்பட்டோம். அமெரிக்காவிலிருந்து ஆகஸ்டு 27ஆம் தேதி புறப்பட்டு கனடாவிற்குச் சென்றோம். அக்டோபர் 9ஆம் தேதிதான் மீண்டும் அமெரிக்காவிற்குத் திரும்பினோம். அதுவரை 43 நாட்கள் கனடாவில் வகுப்புகள் கூட்டங்கள் நடத்தினோம். பேருந்தில் கனடாவின் எல்லையோரப் பகுதியைக் கடக்கும்போது, எங்களை சுமார் 20 நிமிடங்கள் கேள்விகள் கேட்டார்கள். மற்ற பயணிகளிடம் 2 நிமிடங்கள்கூட கேள்விகள் கேட்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. எங்களைத் தீர விசாரித்தபின் எங்களுக்குக் கனடாவில் வகுப்புகள் எடுக்கவும், கருத்தரங்குகள் நடத்தவும், மாநாடு நடத்தவும் கனடா அரசாங்கத்தின் சிறப்பு அனுமதி அளித்தனர். அது மிகவும் ஆச்சரியமாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது. கடவுளின் திட்டத்தால்தான் கனடா அரசாங்கத்தின் சிறப்பு அனுமதியுடன் நாங்கள் கனடாவிற்கே அழைத்துச் செல்லப்பட்டோம் என்பதை அங்கு நாங்கள் நடத்திய வகுப்புகள், கூட்டங்களால் நன்கு அறிய முடிந்தது.

**வகுப்புகள் :**

**1. கிறிஸ்தவர்கள் மற்றும் இந்துக்கள் மத்தியில் வகுப்புகள்**

கனடாவில் கிறிஸ்தவர்களுக்கும் இந்துகளுக்கும் வகுப்புகள் நடத்தப்பட்டன.

# கிறிஸ்தவர்களுக்காக நடத்தப்பட்ட 10 நாள் வகுப்புகள்

## கால அட்டவணை

செப்டம்பர் - 5, 2005 முதல் செப்டம்பர் - 16, 2005 வரை. இடம் : மொன்டிரியல் - கனடா.

செப்டம்பர் - 18, 2005 முதல் செப்டம்பர் - 30, 2005 வரை. இடம் : டொரோண்டோ - கனடா.

## கனடாவில் தமிழர்கள் மத்தியில் நற்செய்திப்பணி

| நாள் | பொருள் |
|---|---|
| 1. முதல் நாள் | ♦ இயேசு கிறிஸ்துவின் ஒளியில் விவிலியத்தைப் புரிந்து கொள்ளுதல்<br>♦ விவிலிய முறையில் நற்செய்திப் பணி |
| 2. இரண்டாம் நாள் | ♦ வல்லமையான நற்செய்திப்பணிக்கு அடிப்படையானவற்றைப் புரிந்து கொள்ளுதல்<br>♦ உடல்-உயிர் (ஆவி) - ஆன்மா -கடவுள் இவற்றிற்கு இடையே உள்ள வேறுபாடுகளை அறிந்து கொள்ளுதல் |
| 3. மூன்றாம் நாள் | ♦ தமிழ் மண்ணில் புனித தோமாவின் நற்செய்திப் பணி<br>♦ புனித தோமா வழி கிறிஸ்தவமும் சமஸ்கிருதமும் |
| 4. நான்காம் நாள் | ♦ திருக்குறள் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவ இலக்கியம் - எவ்வாறு? |
| 5. ஐந்தாம் நாள் | ♦ இந்து மதம் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவக் கிளையே - எவ்வாறு? - I |
| 6. ஆறாம் நாள் | ♦ இந்து மதம் புனித தோமா வழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவக் கிளையே - எவ்வாறு? - II |
| 7. ஏழாம் நாள் | ♦ புனித தோமாவழி தமிழ் / திராவிடக் கிறிஸ்தவம் பிராமணீயத்தால் தரம் குறைக்கப்பட்டு, களங்கப்படுத்தப்பட்டமை - 'இந்துத்துவா', |
| 8. எட்டாம் நாள் | ♦ 'இந்துத்துவா'விலிருந்து ('பிராமணீயம்', 'Hinduism') இந்து மதத்தை (புனித தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம்) விடுவித்தல் |
| 9. ஒன்பதாம் நாள் | ♦ உலகளாவிய ஆன்மீகம் - இறையரசு நோக்கிய விடுதலை<br>♦ தேர்வு |
| 10. பத்தாம் நாள் | ♦ பரிசுகள்<br>♦ பங்கு பெற்றோரின் கருத்துக் கணிப்பு (பரிமாற்றம்) |

பங்கு பெற்றோர் கட்டணம் செலுத்தி வகுப்புகளில் கலந்து கொண்டனர். இவ்வகுப்புகளில் கலந்து கொண்ட பிறகு, பங்கு பெற்றோரில் சமுதாயம் பற்றிய பாரம் உடையவர்கள், சமுதாயத்தில் ஆன்மீக விழிப்புணர்வு கொண்டு வரும் நோக்கில், நம் ஆய்வுக் கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்தத் தொடங்கினர். அவர்களுடைய அனுபவங்களைக் கேட்ட நாம் பெருமகிழ்ச்சியடைந்தோம். தமிழர்களின் விடுதலை கடவுளுடைய திட்டமாக இருப்பதால், விதைக்கப்பட்ட விதைகள் முளைப்பதைக் கண்கூடாகக் கண்டோம்.

மொன்ட்ரியலில் இவ்வகுப்புகள் நடைபெற உறுதுணையாயிருந்த மறைதிரு. ஜெயராஜாவையும், டொரோண்டோவில் இவ்வகுப்புகள் நடைபெற உறுதுணையாயிருந்த திரு. ஜேக்கப் ஜீவரத்தினம் (நம் இயக்கப் பணிகளுக்காக பெரும் தியாகம் செய்தவர்) மறைதிரு. செல்வரத்தினம், மறைதிரு. அருளையா, திரு. செல்லதுரை ஆகியோரையும் நன்றியுடன் நினைவு கூர்கிறோம்.

## இந்துக்களுக்காக நடத்தப்பட்ட மூன்று நாள் வகுப்புகள்

### கால அட்டவணை

அக்டோபர் 3 - 2005 முதல் அக்டோபர் 5 - 2005 வரை.
இடம் : டொரோண்டோ, கனடா.

அக்டோபர் 6 - 2005 முதல் அக்டோபர் 8 - 2005 வரை.
இடம் : மொன்ட்ரியல், கனடா.

| | |
|---|---|
| 1. முதல் நாள் | தமிழர்களின் ஆன்மீகமே உலக மதங்களின் வளர்ச்சிக்கு அடிப்படை - எவ்வாறு? |
| 2. இரண்டாம் நாள் | 'இந்து மதம்' எனப்படும் சைவம், வைணவம் 'தமிழர் மதமே'....... எவ்வாறு? |
| 3. மூன்றாம் நாள் | சைவ, வைணவ சமயங்களின் அடிப்படைக் கோட்பாடுகள் ஐந்து. அவை யாவை? |

இவ்வகுப்புகளில் பயின்றோர் கட்டணம் செலுத்தி கலந்து கொண்டனர். இந்து மதத்தையும் தமிழர்களின் மகத்தான ஆன்மீகப் பாரம்பரியத்தையும் புரிந்து கொள்ள தங்கள் கண்களைத் திறந்த வகுப்புகளாக இவை இருந்தன என்று இந்துக்கள் - குறிப்பாக சைவர்கள் பலரும் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களிடம் தெரிவித்தனர். இதில் பங்கு பெற்றோர், சிறப்பாக இந்து / சைவ நிறுவனங்களின் தலைவர்கள் இந்த சிந்தனைகளை மற்றவர்களுக்கும் அறிவிக்க வேண்டும் என்று விரும்பியதால் டாக்டா மு. தெய்வநாயகம் அவர்களுடன் அதிக நேரம் கலந்துரையாடி இக்கருத்துகள் பற்றி மேலும் தெரிந்து

கொள்ள வேண்டும் என்று விரும்பி, சென்னை வந்து சந்திக்க இருப்பதாகக் கூறினர். இந்த வகுப்புகளில் கலந்து கொண்டவர்களில் சமூகச் சிந்தனையுடையோர், நாங்கள் மீண்டும் கனடா வரும்போது, தாங்களே பொறுப்பெடுத்து வகுப்புகள் நடத்த ஏற்பாடு செய்து அநேக இந்துக்களையும் அழைத்து வருவதாகக் கூறினார்கள்.

## 2. போதகர்கள் - மிஷனரிகளுக்கான வகுப்புகள் :

டாக்டர் லைமன் குலோத்துங்கன், போதகர்கள் - மிஷனரிகளுக்கான ஒருநாள் வகுப்பு ஏற்பாடு செய்தார். தோமா வழி திராவிடக் கிறிஸ்தவம் பற்றிய அறிவு, நற்செய்திப் பணிக்குப் பயன்படும் நிலை விளக்கப்பட்டது. மற்றும், தமிழ் மொழியின் மறைந்து கிடந்த சிறப்புகளையும், தமிழர், திராவிடரின் மறைந்து கிடந்த சிறப்புகளையும் வெளிக்கொண்டு வந்த ஐரோப்பிய மிஷனரிகளின் பணிகள் ஒருபுறம் இருக்க, ஐரோப்பிய அரசியல்வாதிகள் சமுதாயத்திற்கு இழைத்த கொடுமைகள் மறுபுறம் விளங்குகின்றமை எடுத்துரைக்கப்பட்டது. மற்றும் ஆன்மீக விடுதலையின் இன்றியமையாமை போதிக்கப்பட்டது.

இவ்வுண்மைகளை அறிந்தபின், மிஷனரிகளுக்கான 3 வார வகுப்புகள் நடத்த எங்களை அழைத்தனர். மிஷனரிகளுக்கான சிறப்புப் பயிற்சி கொடுப்பதற்காக மீண்டும் வருவோம் என்று நாங்கள் அறிவித்த உடன், 'இந்து மதம்' மற்றும் 'ஆன்மீகம்' பற்றி மேலும் அறிந்து கொள்ள சிறப்புப் பயிற்சி வகுப்புகள் நடத்தும்படி இந்துக்கள் - குறிப்பாக சைவர்கள் பலரும் நம்மை அழைத்தனர்.

## 3. சிவஞானபோதம் பற்றிய ஆய்வுரை:

டொரோண்டோ - ( 25 : 9 : 2005 )

உலக சைவ சித்தாந்தப் பேரவையின் கனடா தலைவர் டாக்டர் சண்முக வடிவேல் அவர்கள் செப்டம்பர் 25, 2005 அன்று சிவஞானபோதம் பற்றிய ஆய்வுரை வழங்குமாறு டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களை அழைத்தார். தமிழ்மொழி, தமிழர்களின் சிறப்பு, சைவ சித்தாந்த சாஸ்திரங்களின் அடிப்படை நூலான சிவஞானபோதம் பற்றிய விளக்கம், அதன் தனிச் சிறப்புகள் விளக்கப்பட்டன. சிவஞானபோதத்தில் விளக்கப்பட்டுள்ள உடல், உயிர் (ஆவி), ஆன்மா, கடவுள் இவற்றிற்கிடையே உள்ள வேறுபாடுகளை டாக்டர் தெய்வநாயகம் எடுத்து விளக்கக் கேட்டோர் வியப்புற்றனர். சிவஞானபோதம் வழியாகத் தமிழர்களின் சிறந்த ஆன்மீகப் பாரம்பரியத்தை உணர்ந்தபோது, மகிழ்வுற்றனர். இறுதியாக, தன்னுடைய முடிவுரையில் கனடா - சைவ சித்தாந்த பேரவைத் தலைவர் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டதுடன், தங்கள் அமைப்பின் சார்பாக டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்கும் டாக்டர் தேவகலாவிற்கும் பொன்னாடை அணிவித்துச் சிறப்பு செய்தனர்.

## கூட்டங்கள் :-

### 4. கனடாவில் கூட்டங்கள் :

தமிழர்களின் விடுதலை : 01-10-2005 மாலை

சமுதாயத்தைப் பற்றிய நல்ல கரிசனை உடையவரும், தமிழர் விடுதலைக்குப் பாடுபடுபவருமான திரு. தங்கவேல் தம்முடைய 'எழுத்தாளர் - சிந்தனையாளர் பேரவையில்' தமிழர் விடுதலையை மையமாகக் கொண்டு ஆய்வுரையை அளிக்கும்படி டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களை அழைத்தார். அந்தப் பேரவையில் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள்,

- ❖ தமிழர்களின் சிறந்த ஆன்மீகப் பாரம்பரியம்
- ❖ தமிழர்களின் ஆன்மீகத்தை அடிப்படையாகக் கொண்டு உருவான சமயங்கள்
- ❖ சமுதாயத்தை உருவாக்குவதில் நாத்திகத்தின் பங்கு
- ❖ காஞ்சி சங்கரமடம் - தமிழ்நாடு பிராமணர் சங்கம் இணைந்து வெளியிட்ட 'தமிழக அந்தணர் வரலாறு' என்ற தலைப்பிலான வெளியீட்டில் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கும் 'தமிழர் விடுதலைக்கு எதிரான பிராமணீய சதி செயல்கள் '
- ❖ தமிழர் விடுதலையில் தந்தை பெரியாரின் பங்கு
- ❖ தமிழர் விடுதலையில் நம் இயக்கத்தின் செயல்பாடுகள்

பற்றி விளக்கினார்கள்.

கனடா தமிழர்கள் மிகுந்த உணர்வுடையவர்கள். 'இந்துத்துவம்' என்ற பெயரில் காலங்கள் தோறும் தமிழர்களை இழிவுபடுத்தி, அடிமைப்படுத்தும் பிராமணீய சதியை வரலாற்று ரீதியில் நாம் விளக்கிக் காட்டிய போது, இந்த அடிமைத் தனத்திலிருந்து விடுபட்டு, முழு விடுதலை அடைய வேண்டும் என்ற எழுச்சியுடன் காணப்பட்டனர். தமிழ்நாட்டு தமிழர்களைப் போல், இலங்கைத் தமிழர்கள் எந்த அடிமைத்தனத்திற்கும் உட்பட்டதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், இந்தியச் சூழலில் தமிழர்கள்/ திராவிடர்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக ஆரியப் பிராமணர்களால் அடிமைப்படுத்தப்பட்டிருந்தும், அந்த அடிமைத்தனத்தில் சுகம் காண்பவர்களாக அவர்கள் இருப்பதால், தமிழ்நாட்டுத் தமிழர்களிடம் அப்படிப்பட்ட விடுதலை எழுச்சியை நாம் காண இயலவில்லை. இதனால்தான், சங்கரமடமும் தமிழ்நாடு பிராமணர் சங்கமும் இணைந்து வெளியிட்ட தமிழக அந்தணர் வரலாறு என்ற நூலில் ( இந்நூலில் ஆரிய பிராமணர்கள், தமிழ் இலக்கியங்களில் கூறப்படும் தமிழக அந்தணர்கள் தாங்கள்தான் என்று உரிமை பாராட்டுகின்றனர். ..... ஆனால் அப்படி அல்ல..... வரலாறு மாறாகக் கூறுகிறது. ) தமிழர்களைக் 'குரங்குகள்' என்றும், தாழ்த்தப்பட்டவர்களைக் 'கயவர்கள்' என்றும், கிறிஸ்தவ மிஷனரிகளையும்

கிறிஸ்துவையும் மிக மோசமாக எழுதியும்கூட, எவ்வித எதிர்ப்பும் தெரிவிக்காமல் அனைவரும் மௌனம் காக்கின்றனர். ( இப்படிப்பட்ட சூழ்நிலையில், பிராமணர்களின் இச்செயலுக்காக டாக்டர் தெய்வநாயகம் மட்டுமே அவர்களுக்கு வெளிப்படையாக சவால் விடுத்தார் என்பதைக் கூற விரும்புகிறேன். ஆனால் அவர்கள் இச்சவாலை சந்திக்க முடியாமல் ஓடி ஒளிந்தனர். )

டாக்டர் தெய்வநாயகத்திற்கும் பிராமண அமைப்பினருக்கும் இடையே நடைபெற்ற கடிதத் தொடர்புகளும், டாக்டர் தெய்வநாயகம் பிராமண அமைப்பினருக்கு இட்ட சவாலும் புத்தக வடிவில் **'தமிழர் இனம் என்னும் திராவிட இனத்தை இழிவுபடுத்திய பிராமணர் அமைப்புகளுக்கு எச்சரிக்கை'** எனும் தலைப்பில் வெளிவந்துள்ளது.

தமிழர்களில், தமிழர் விடுதலையில் நாத்திகர்களே அதிக வாஞ்சை உள்ளவர்களாய் இருக்கின்றனர். திரு. தங்கவேல் மற்றும் அவருடைய எழுத்தாளர்கள் - சிந்தனையாளர்கள் பேரவையினர் இவ்விடுதலைப் பணிக்குத் தங்கள் முழு ஆதரவைத் தெரிவித்ததுடன், பேரவை சார்பில் டாக்டர் தெய்வநாயகத்தைச் சிறப்பித்தனர்.

## 5. கனடாவில் வானொலிப் பேச்சுகளும் நேர்காணல்களும் (பேட்டிகள்) :-

வானொலியும் மற்ற தொடர்பு சாதனங்களும் டாக்டர் தெய்வநாயகம் அவர்களைப் பேட்டி கண்டன. அந்தப் பேட்டிகள் மூன்று முறை வானொலியில் ஒலிபரப்பப்பட்டன. அவருடைய பேச்சுகள் மற்றும் நேர்காணலின் கருத்துச் சுருக்கம்.

- ஆன்மீகம், மதம் இவற்றிற்கிடையே உள்ள வேறுபாடு
- தமிழர்களின் ஆன்மீகப் பாரம்பரியம்
- உடல், உயிர் (ஆவி), ஆன்மா, கடவுள் இடையே உள்ள வேறுபாடுகள்
- சிவஞானபோதத்தின் ஒப்புயர்வற்ற தன்மை
- தமிழர் ஆன்மீகத்தின் அடிப்படையில் உலகப் பெரும் சமயங்கள் உருவான வரலாறு
- சைவம், வைணவத்தின் தோற்றம், வளர்ச்சி
- தமிழ்ச் சமுதாயம், தமிழர் மதம் ஆகியவை ஆரிய பிராமண சக்திகளால் தூங்குறைக்கப்பட்டு, களங்கப்படுத்தப்பட்டமையும், தமிழர் ஆன்மீக விடுதலைக்கு நம் இயக்கம் நடத்திவரும் போராட்டங்களும்
- ஆன்மீக விழிப்புணர்வின் தேவை

பற்றி நன்கு விளக்கப்பட்டது.

இவை தவிர, கூட்டங்கள், கலந்துரையாடல்கள், இந்துக்கள் - கிறிஸ்தவர்களுக்கான ஒருநாள் வகுப்புகள் பல்வேறு இடங்களில் நடத்தப்பட்டன. கனடாவில் 45 நாள் பணிகளுக்குப் பிறகு, மீண்டும் நியூயார்க் சென்றோம். அங்கேயும் கூட்டங்கள் நடத்தப்பட்டன.

## பகுதி - IV

### 1. நியூயார்க்கில் கூட்டங்கள்

மாநாட்டிற்குப் பிறகு, அமெரிக்காவின் பல்வேறு இடங்களில் பேசும்படி நாங்கள் அழைக்கப்பட்டோம். இந்துக்களுக்கான கூட்டத்தை திரு. பென்சாம் ஏற்பாடு செய்தார்.

நியூயார்க்கில் நம் பணிக்கு மிகவும் உறுதுணையாயிருந்த திரு. ஜேக்கப் இம்மானுவேல் (ஏ) குளோரி அவர்களையும், திருமதி. சுலோச்சனா அவர்களையும் மிகவும் நன்றியுடன் நினைவு கூர்கிறோம்.

### 2. நியூயார்க் கிறிஸ்தவத் தமிழ்க் கோயிலில் கூட்டம்

நியூயார்க்கில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இம்மாநாட்டை நியூயார்க் கிறிஸ்தவத் தமிழ் கோயில் தலைவர் திரு. ஜெரேமியா, மற்றும் சபை உறுப்பினர்களின் ஆதரவுடன் நடத்திய மறைதிரு டாக்டர் சுந்தர்தேவ பிரசாத், மாநாட்டைப் பற்றிய 'பின் ஆய்வு'க்காக எங்களை அழைத்தார்.

- இம்மாநாட்டை நடத்தியதில் கிறிஸ்தவத் தமிழ் கோயிலின் முக்கிய பங்கு.
- நற்செய்திப் பணிக்கான மூல நூல்கள்.
- இந்தியாவில் புனித தோமாவின் வருகை, இறைபணி பற்றிய ஆய்வின் முக்கியத்துவம்
- இந்தியாவின் பெரும்பான்மையாளரின் சமயமான இந்துமதம் எனப்படும் சைவ, வைணவ சமயங்கள் (தோமா வழி தமிழ் / திராவிட கிறிஸ்தவக் கிளைகள்) பற்றி புரிந்து கொள்ளுதலின் முக்கியத்துவம்.
- தமிழ், தமிழர்களின் எழுச்சியில் மாநாட்டின் பங்கு.
- இறையரசை நோக்கிய புனித தோமா வழி தமிழ் கிறிஸ்தவம் மற்றும் இந்தியர்களின் விடுதலையில் நம் ஆராய்ச்சியின் பங்கு.

என மேலே கூறப்பட்ட கருத்துகள் விளக்கிக் காட்டப்பட்டபொழுது, திரு. ஜெரேமியா உட்பட திருச்சபை உறுப்பினர்கள் பலர் எங்களிடம் பின்வருமாறு கூறினர்.

"இந்த மாநாட்டின் சிறப்பை, முக்கியத்துவத்தை நாங்கள் இப்பொழுதுதான்

புரிந்து கொண்டோம்.... வல்லமையான நற்செய்திப் பணிக்கு இம்மாநாடு எப்படி பயனுடையதாய் இருக்கும் என்று நாங்கள் இப்போது புரிந்து கொண்டோம்..... மாநாட்டிற்கு முன்னரே இவ்வுண்மைகளை நாங்கள் தெரிந்திருக்க முடியும் என்றால், பலரின் ஆதரவுகளை நாம் அடைந்திருக்கக் கூடும்.... இத்தெளிவான விவரங்களை நாங்கள் அறியாதிருந்ததினால், ஓர் ஆராய்ச்சி மாநாட்டை எங்கள் சபையில் ஏன் நடத்துகிறீர்கள் என்று கேள்விகள் கேட்ட பலரின் எதிர்ப்பையும் பெற்றோம். கண்டிக்கப்பட்டோம்... இது முற்றிலுமாக ஆராய்ச்சி தொடர்புடைய-தானால், இது ஓர் இறையியல் கல்லூரி அல்லது பல்கலைக் கழகத்தினால் நடத்தப்பட வேண்டுமே தவிர சபையால் அல்ல எனக் குறை கூறினர். சரி.... இப்பொழுதாவது இதைப் பற்றிய தெளிவைப் பெற்றிருக்கிறோம்." என்றனர்.

இக்கூட்டத்திற்குப் பிறகு, இத்திருச்சபையின் உறுப்பினர் திரு. பென்சாம் நமது இயக்கத்தின் அமெரிக்க அமைப்பாளராக நியமிக்கப்பட்டார். கூட்டத்தில் கலந்துகொண்ட எல்லா உறுப்பினர்களும் மிக்க மகிழ்ச்சி அடைந்தது மட்டுமல்லாமல், அமைப்பாளரை அவர்கள் ஆதரிப்பதாகவும், நம்முடைய இயக்கத்திற்காகவும், நம் பணிகளுக்காகவும் இறைவேண்டல் செய்வதாகவும் உறுதியளித்தனர்.

அடுத்தநாள், ஞாயிறு ஆராதனையில் திரு. ஜெரேமியா எங்களுக்கு நன்றி தெரிவித்தார்; நமது இயக்கத்தின் அமைப்பாளராக திரு. பென்சாம் நியமிக்கப்பட்டதைச் சபையில் அறிவித்தார்; இப்பணிக்கு அனைவரும் இறைவேண்டல் செய்ய வேண்டினார். இக்கூட்டத்திற்குப் பிறகு மறைதிரு. டாக்டர் சுந்தர் தேவபிரசாத்,

> *"மாநாட்டுக்குப் பின்னர் நடத்தும் கூட்டத்தை 2006 ஜனவரி 21 இல் சென்னையில் நாம் இணைந்து நடத்துவோம்"*

என்று டாக்டர் தெய்வநாயகத்திடம் கூறினார்.

## பகுதி - V

## 'உலகத் தமிழர் ஆன்மீக விழிப்புணர்வு இயக்கம்' உருவாக்கமும் அமைப்பாளர்களும் (அமெரிக்கா, கனடா)

### இறை அரசு நோக்கி :

தமிழர்கள் ஆன்மீக விடுதலை அடையும் நோக்கில் 'உலகத் தமிழர் ஆன்மீக விழிப்புணர்வு இயக்கம்' உருவாக்கப்பட்டது. டொரோண்டோவில் இந்துக்களுக்கு 3 நாள் வகுப்பும், மாண்ட்ரியலில் 3 நாள் வகுப்பும், நியூயார்க்கில் இந்துக்களுக்கு ஒருநாள் கூட்டமும் இந்த இயக்கத்தின் சார்பாக நடத்தப்பட்டன.

தமிழர்களின் சிறப்பான ஆன்மீகப் பாரம்பரியத்தை அறிவதில் வகுப்பில் பங்கு பெற்றவர்கள் அதிக ஆர்வம் காட்டினர். சமுதாயத்தில் ஆன்மீக

விழிப்புணர்வையும், சகோதரத்துவத்தையும் கொண்டுவருவதில் ஈடுபாடு காட்டினர். இப்பணிக்காக மிகப் பெரிய தியாகம் செய்தவரும், கனடாவில் நம் பணிகளுக்கான மூல காரணமானவருமான திரு. ஆண்டனி பிலிப்ஸ் இவ்வியக்கத்தின் கனடாவிற்கான அமைப்பாளராக நியமிக்கப்பட்டார். இந்துக்களுக்குக் கூட்டங்கள் ஏற்பாடு செய்தவரும், சமுதாயத்தைப் பற்றிய பாரம் உடையவருமான திரு. பென்சாம் இவ்வியக்கத்தின் அமெரிக்காவிற்கான அமைப்பாளராக நியமிக்கப்பட்டார். "ஏற்றத்தாழ்வுகளை உடைத்தெறிந்து, இறை அரசை நோக்கி நடைபோடுவதே இவ்வியக்கத்தின் நோக்கம் ஆகும்" என்று சுருக்கமாகக் கூறலாம்.

## பகுதி - VI

### பின்தொடர் பணிகள் :

மாநாடு மற்றும் அமெரிக்கா, கனடா பயணத்தின் தொடர்ச்சியாக தமிழ்நாட்டின் பல்வேறு இடங்களில் இந்துக்கள், கிறிஸ்தவர்களுக்கான ஆன்மீக விடுதலைக் கூட்டங்கள் நடத்துவதில் இப்போது நாங்கள் ஈடுபட்டிருக்கின்றோம். சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, கனடா மற்றும் அமெரிக்காவில் இவ்வகுப்புகள் நடத்த நாங்கள் அழைக்கப்பட்டிருக்கிறோம் என்பதை மகிழ்வுடன் தெரிவிக்கின்றோம்.

## பகுதி - VII

### சிறப்பு நன்றி நவிலல் :

திராவிட ஆன்மீக இயக்க உறுப்பினர்களுக்கு

1. சென்னை - மயிலை கத்தோலிக்கப் பேராயம்
2. தென்னிந்திய திருச்சபை பேராயம் - சினாட் ( Synod )
   ஊக்க ஆதரவு (Sponsor) அளித்தனர்.

எனவே, இவ்விரண்டு மரியாதைக்குரிய நிறுவனங்களுக்கும் உளம்நிறை நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

நியூயார்க் கிறிஸ்தவத் தமிழ்க் கோயிலுக்கும் எங்கள் உளம்நிறை நன்றியை, கீழ்க்காணும் காரணங்களுக்காகத் தெரிவித்துக் கொள்கிறோம்.

1. வரலாற்று சிறப்புமிக்க மாநாட்டை ஏற்று நடத்தியதற்காக;
2. எங்கள் 'உலகத் தமிழர் ஆன்மீக விழிப்புணர்வு இயக்கத்திற்கு' உள்ளார்ந்த ஆதரவை நல்கியதற்காக;
3. எங்கள் இயக்கத்தின் அமெரிக்க அமைப்பாளராக எங்களால் நியமிக்கப்பட்ட திரு. பென்சாம் அவர்களை உற்சாகப்படுத்தி, ஆதரிப்பதற்காக.

திராவிட சமயக் கூட்டத்தில் உரை நிகழ்த்தும்
சென்னை மயிலை - கத்தோலிக்க முன்னாள் பேராயர்
டாக்டர் **இரா. அருளப்பா** அவர்கள்



திராவிட சமயப் பணிகளுக்காக
மிகுந்த பாரத்துடன் ஜெபித்து, உதவி, ஊக்கமளித்த,
இறையடி சேர்ந்த பேராயரை மிகுந்த
நன்றியுடன் நினைவு கூர்கின்றோம்.

இலங்கையில் திராவிட சமயப் பயிற்சி வகுப்புகள் நடத்துமாறு நம்மை அழைத்து இவ்வூழியம் அங்கு மேன்மேலும் வளரக் காரணமான, இயேசு ஜீவிக்கிறார் அனைத்துலக ஊழிய நிறுவனரும் வல்லமை நிறைந்த இறைவாக்கினருமான இறையடி சேர்ந்த டாக்டர் எஸ். இராஜேந்திரம் அவர்கள்



கனடாவிலிருந்து இந்தியா வந்து, திராவிட சமயப் பயிற்சி வகுப்புகளில் பங்கு பெற்று, இவ்வூழியம் உலகம் முழுவதும் பரவ, தியாகத்துடன் செயல்பட்ட இறைபணியாளர் திரு. ஜேக்கப் ஜீவரத்தினம் அவர்கள் துணைவியாருடன்



# ஆய்வாளர்கள் படிக்க வேண்டிய ஆய்வேடுகளும் நூல்களும்

## இந்நூல் தொடர்பான டாக்டர் பட்ட (பிஎச்.டி.,) ஆய்வேடுகள்

1. விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம் - ஒப்பாய்வு
   - டாக்டர் மு. தெய்வநாயகம் எம்.ஏ., பிஎச்.டி.,
   சென்னைப் பல்கலைக் கழகம், 1983

2. தமிழ்ப் பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும் - விவிலிய ஒளியில்
   - டாக்டர் தெ. தேவகலா எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
   சென்னைப் பல்கலைக் கழகம், 1993

## டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின் நூல்கள்

1. இந்துத்துவாவின் பிடியிலிருந்து இந்து மதத்தை விடுவிப்பது எவ்வாறு? (மு.ப. செப்டம்பர் 2003)
2. சரியான சின்னம் எது? திருநீறா? சிலுவையா? (மு.ப.2002) (சரியான சின்னம் சிலுவையன்று; திருநீறே. எவ்வாறு?)
3. பைபிள் கூறும் சைவ உணவின் வரலாறு (மு.ப. ஜனவரி 2004)
4. புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆரின் மதம் எது? (மு.ப. 1992)
5. சங்கரமடத்தோடு போராட வேண்டியது ஏன்? (மு.ப. ஏப்ரல் 1996)
6. சங்கரமடத்துக்கு 108 கேள்விகள் (மு.ப. மே 1996)
7. சங்கரமடத்திற்கு ஒரு சவால் (மு.ப. ஜனவரி 2004)
8. கடவுள் உண்டா? (மு.ப. செப்டம்பர் 1997)
9. புறஒளியும் அகஒளியும் (மு.ப. செப்டம்பர் 1997)
10. India in Third Millennium, (First Ed. May 2000)
11. சிவஞானபோதம் - விளக்கம் (மு.ப. 1982)
12. திராவிட அரசியல் கட்சிகள் கொள்கைகளைக் கைவிட்டது ஏன்? (மு.ப. மே 1999)

- A Historical Perspective and an Appeal to U.N.O.
(F.Ed. May 2001)

15. Who are the Indian Dalits? (F.Ed. 2002)
16. Christianity in Hinduism (F.Ed. 1997)
17. திராவிடர் சிந்தனையில் பிள்ளையார்
 - டாக்டர் தெ. தேவகலா (மு.ப. ஜனவரி 2004)

## "திருக்குறள் தோமா வழி திராவிடக் கிறிஸ்தவ நூலே"

என்னும் மையக் கருத்தை நிலைநாட்டி டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதிய பிற நூல்கள்

18. திருவள்ளுவர் கிறிஸ்தவரா? (மு.ப. ஏப்ரல் 1969)
19. வள்ளுவர் வாழ்த்தும் ஐந்தவித்தான் யார்? (மு.ப. 1970)
20. வள்ளுவர் வாழ்த்தும் நீத்தார் யார்? (மு.ப. அக்டோபர் 1971)
21. சான்றோர் யார்? (மு.ப. ஏப்ரல் 1972)
22. எழுபிறப்பு (மு.ப. அக்டோபர் 1972)
23. வள்ளுவர் வாழ்த்தும் இயல்புடைய மூவர் யார்? (மு.ப. ஏப்ரல் 1974)
24. அருட்செல்வம் யாது? (மு.ப. 1974)
25. பேரின்ப விளக்கம் (பொதுமறையும் பொருளிலக்கணமும்) (மு.ப. அக்டோபர் 1975)
26. திருக்குறளும் பைபிளும் (மு.ப. ஆகஸ்ட் 1980)

**தொடர்பு முகவரி**

*திராவிட ஆன்மீக இயக்கம்*

278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை - 600 023.
தொலைபேசி : 044 - 26449032
Email:dravida@eth.net
Website: http://www.geocities.com/dravidian_religion

பட்டம் பெற்று, மாத ஊதியம் பெறும் வேலை எதையும் மேற்கொள்ள[illegible] வாழ்க்கை மேற்கொண்டு, இறை பணிக்கென்று என்னோடு முழுநேர ஊழியத்தில் இணைந்து செயல்படுகின்ற காரணத்தால், என்னிடம் பயின்ற மற்ற மாணவர்களை விட அதிகநேரம் என்னோடு தங்கியிருப்பவராகிய என் மகள் டாக்டர் தெ. தேவகலா அவர்களால் இந்த நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

புதிய உண்மை எதுவுமே -

★ முதலில் இகழப்படும்;

★ பின்பு, எதிர்க்கப்படும்;

★ இறுதியில் ஏற்கப்படும்.

இந்த நியதியின்படி, மிக நீண்ட போராட்டத்திற்குப் பின்னர், இக்கருத்துகள் ஏற்கப்படும் நிலை இப்பொழுது உருவாகியுள்ளது.

பொருளாதார நெருக்கடியின் காரணமாக, நம்முடைய ஆய்வுகளை நாமே வெளியிட இயலாதிருந்த காலத்தில்

★ நம் அனுமதியுடன் ஊழிய நோக்கில் இக் கருத்துகளைப் பயன்படுத்தாமல்,

★ 36 ஆண்டுகால போராட்டத்திற்குப் பின், இக் கருத்துகள் பொது மக்களால் வரவேற்கப்படும் இக் காலகட்டத்தில்,

★ நம்மிடம் பயின்ற மாணவர்களில் சிலர், **வணிக நோக்கில்**

1) அரைகுறையாகவும்

2) தாங்களே ஆய்வு செய்து கண்டுபிடித்தது போன்றும்

வெளியிட்டு வருவது இங்கு குறிப்பிடத்தக்கது.

இத்தகையவர்களை இங்கு குறிப்பிடக் காரணம், மற்ற சமய அறிஞர் பெருமக்கள், இவர்களைக் கேள்விகள் கேட்கும்பொழுது, இவர்களால் தக்க பதில் கொடுக்க இயலா நிலை ஏற்பட்டு, கடவுளால் கொடுக்கப்பட்ட இந்த ஆராய்ச்சி உண்மைகள் **"இகழ்ச்சிக்குள்ளாகாமல் தடுக்கப்படுவதற்கே"** ஆகும்.

*"பிதாவே, இவர்களுக்கு மன்னியும். தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே"* *லூக்கா 23 : 34*

எனும் இறைமகன் இயேசு கிறிஸ்துவின் வேண்டுதலின்படி, இப்படிப்பட்டவர்கள் தங்கள் தவறை உணர்ந்து, மனந்திருந்த இறைவனிடம் பிரார்த்தனை செய்வோமாக!

**- டாக்டர் மு. தெய்வநாயகம்**

நிறுவனர், திராவிட ஆன்மீக இயக்கம்.



இறை பணியாளர்களுக்குக் கடவுளால் கொடுக்கப்படும் கட்டளைகளும் பணிகளும் வெவ்வேறு கோணங்களில் அமைவது இயல்பே. அவ்வகையில் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களுக்குக் கடவுள் கொடுத்த கட்டளை, இன விடுதலையோடு கூடிய ஆன்மீக விடுதலைப் பணி ஆகும். 1968இல் ஆன்மீகப் பணிக்கு இவர் கடவுளால் அழைக்கப்பட்டார்; 1972இல் 'மதங்களைக் கடந்தவர் கடவுள்' எனனும் இறையனுபவ உண்மை கடவுளால் இவருக்குக் கொடுக்கப்பட்டது. 1979இல் "தமிழ் இனம் எனும் திராவிட இனத்திற்குப் புத்துயிர் கொடுக்கப் போகின்றேன். இதைச் செயல்படுத்தும் கருவியாக நீ பயன்படுவாய். உடனே இதை எழுதி வைத்துக்கொள்" என்று டாக்டர் தெய்வநாயகத்திடம் கடவுள் தெளிவாகவே தம் திட்டத்தை வெளிப்படுத்தியுள்ளார். திராவிட இன விடுதலை என்பது டாக்டர் தெய்வநாயகம் அவர்களுக்கு அளிக்கப்பட்ட கடவுளின் திட்டவட்டமான வெளிப்பாடு என்பதால், திராவிடர்களின் ஆன்மீக விடுதலைப் பணியில் அவர் தொடர்ந்து ஈடுபட்டு வருகின்றார். திராவிட இன ஆன்மீக விடுதலைக்கு வழி வகுக்கும் நோக்குடன் ஏராளமான ஆய்வு நூல்களைப் படைத்திருப்பதுடன் பயிற்சி வகுப்புகளும் கருத்தரங்குகளும் இந்து சமய, கிறிஸ்தவ சமய அன்பர்களுக்குத் தொடர்ந்து நடத்தி வருகின்றார்.



அவருக்குக் கொடுக்கப்பட்ட ஆன்மீகப் பணி தொடர்ந்து நடைபெறும் வண்ணம், கடவுளால் தெரிந்து கொள்ளப்பட்டு, இறை அருளால் வாழ்க்கையையே இறைவனுக்கு அர்ப்பணித்து, இறை பணி செய்யும் அருளை அவருடைய மகளாகிய எனக்குக் கடவுள் கொடுத்து வழி நடத்தி வருகின்றார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்ற நான், திராவிட சமய மிஷனரியாக இறை தொண்டாற்றும்படி இறையருள் என்னை ஏந்தி, சுமந்து, வழிநடத்தி வருகின்றது.

எனவே, டாக்டர் தெய்வநாயகம் அவர்களின் டாக்டர் பட்ட ஆய்வேட்டின் சுருக்கம், அவரது பிற ஆய்வுகளின் சுருக்கம், வகுப்புகளில் நடத்திய பாடங்களின் சுருக்கம ஆகியவற்றோடு எனது டாக்டர் பட்ட ஆய்வேட்டின் சுருக்கமும் கொண்ட நூலாக இதை எழுத இறைவன் அருள் புரிந்தார். ஆன்மீகப் பணியில் ஈடுபட்டு, பயிற்சி வகுப்புகளில் பங்கு பெறும் இறை பணியாளருக்குப் பயன்படும் நோக்கில் மிகவும் எளிய நூலாக - கிறிஸ்தவ ஊழியருக்கான சுருக்கக் கையேடாக இந்நூல் வெளியிட உதவிய அன்பே உருவான எல்லாம் வல்ல கடவுளுக்கே மகிமை உண்டாகட்டும்.

–ஆசிரியர்



Design & Print : Meipporul, ✆: +91-44-2647 1526